# ஸ்ரீபாகவதம்.

## தமிழ் வசனம்.



OL. IV.

ஶ்ரீ:

# ஶ்ரீபாகவதம்.

## பஞ்சம ஷஷ்ட ஸ்கந்தங்கள்

## தமிழ் வசனம்.

இஃது

அ. வீ. நரஸிம்ஹாசார்யரால்

இயற்றப்பெற்று




---

சென்னை:

ஆர். வேங்கடேஶ்வர் கம்பெனியாரவர்களால்

ஆநந்த அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1916

28-3

## பஞ்சம ஷஷ்ட ஸ்கந்தங்கள்

# பொருளடக்கம்.

## ஷஷ்ட ஸ்கந்தம்.

| அத். | ஷஷ்ட ஸ்கந்தம். | பக்கம். |
|---|---|---|

பஞ்சம ஷஷ்ட ஸ்கந்தங்களிலுள்ள

# படங்களின் விவரம்.



ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய நம:

## பஞ்சம ஸ்கந்தம்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—ஸ்ரீசுக முனிவரே! ப்ரியவ்ரதன் பகவத்பக்தனென்றும் ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்த நிறைவாளனென்றும் மொழிந் தீர். புண்யபாபரூப கர்மபந்தத்திற்கும் அதனால் விளையும் ஜ்ஞான ஸங்கோசத்திற்கும் இடமான இல்லறவாழ்க் கையில் அவன் எப்படி மீளவும் விருப்புற்றான்? அந்தணர் தலைவரே! ஸம்ஸாரத்தில் பற்றைத் துறந்த அத்தகைய பெரியோர்களுக்கு இங்ஙனம் பாபிஷ்டமான இல்லற வாழ்க்கையில் அபிநிவேசம் உண்டாகாதே. இது நிச் சயம். ப்ரஹ்மர்ஷீ! பகவானுடைய பாதங்களின் நீழலில் ஒதுங்கி ஸம்ஸாரதாபங்களைத் துறந்து ஸுகித்திருக்கும் பெரியோர்களுக்குக் குடும்பத்தில் ப்ரீதி உண்டாகாதல் லவா? மற்றும், அம்மன்னவன் மனை மனைவி புதல்வன் முதலிய குடும்பத்தில் பற்றுடையவனாயிருப்பினும், அவ னுக்கு ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மாறாதபக்தியும் மோக்ஷ ஸித்தியும் உண்டாயினவென்கிறீர். இவ்விஷயத்தில் எனக் குப் பெரிய ஸந்தேஹமாயிருக்கின்றது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! நீ சொன்னது வாஸ்தவம். ஆயினும் பகவானுடைய பொன்னடிப் போதுகளில் மனம்வைத்த மானிடர் தன்னிடத்தில் பக்தி செய்யுந் தூயமனத்தர்க்கன்பனாகிய அப்பகவானுடைய

கதைகளைக் கேட்கையாகிற மங்களமார்க்கத்தில் நடப்பதற்குப் பலவகை இடையூறுகள் நேரினும் அதைப் பெரும்பாலும் துறக்கமாட்டார்கள். மனுவின் புதல்வனுகிய அந்தப்ரியவ்ரதன் நாரதருடைய பாதஸேவையால் தத்வஹித புருஷார்த்தங்களை அனுயாஸமாக அறிந்து பரமபாகவதனுகி ப்ரஹ்மஸத்ரத்திற்கு முயன்று வாஸுதேவனிடத்தில் மாருத ஸமாதியோகம் கைகூடும்பொருட்டு, செய்கிறவனும் செயப்படுபொருளும் செயற்குரிய கருவிகளும் செயல்களுமாகிய எல்லாவற்றையும் பகவானிடத்தில் அர்ப்பணம் செய்து வர்ணுஸ்ரமதர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டிருக்கையில் நீதிசாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட ராஜகுணங்களெல்லாம் அவனிடத்தில் மாருதிருந்ததனுல் தந்தையாகிய ஸ்வாயம்புவ மனுவால் இவன் ராஜ்யபரிபாலனம் செய்யும்படிவேண்டப் பெற்ருன். தந்தையின் வார்த்தையைத் தான் தடுக்கக் கூடாதாயினும் அந்த ராஜ்யாதிகாரத்தில்ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்ட ப்ராக்ருதியின் பரிணுமரூபமான தேஹத்தைப்பற்றியும் அதைத் தொடர்ந்த ராகத்வேஷாதிகளைப் பற்றியும் ஜ்ஞானஸங்கோசம் உண்டாகுமென்பதை ஆலோசித்து அதை அவன் அபிநந்திக்கவில்லை. அப்பால் தன்ஜ்ஞான சக்ஷுஸ்ஸினுல் ஜகத்திலுள்ள ஸமஸ்தப்ராணிகளுடைய அபிப்ராயத்தையும் அறியுந்திறமையுடைய தேவர்களில் தலைவனுன ப்ரஹ்மதேவன் இவனுடைய அபிப்ராயத்தை அறிந்து ஸமஸ்தவேதங்களோடும் மரீசிமுதலிய ரிஷிகணங்களோடும்கூடத் தனதுலோகத்தினின்று இறங்கினுன். வரும்பொழுது ஆகாயத்தில் சந்த்ரன்போல் திகழ்கின்ற அந்தப்பிரமன் ஆங்காங்கு விமான வரிசைகளில் வீற்றிருக்கின்ற தேவஸ்ரேஷ்டர்களால் அடிக்கடி பூஜிக்கப்பட்டு, வழிகள்தோறும் கூட்டங்கூட்டமா யிருக்கின்ற

ஸித்தர் கந்தர்வர் ஸாத்யர் சாரணர் முனிவர் கின்னரர் உரகர் இவர்களால் பாடப்பெற்றவனுகிக் கந்தமாதனபர்வதத்தின் தாழ்வரையைத் தன் தேஹகாந்தியால் விளங்கச்செய்துகொண்டு ஆங்கிருக்கின்ற ப்ரியவ்ரதனுடைய அருகுக்கு வந்தான். அப்பொழுது ப்ரியவ்ரதனுக்குத் தத்வோபதேசம் செய்வதற்காக அவ்விடம் வந்திருந்த நாரத முனிவர் ஹம்ஸவாஹனத்தைக் கண்டு தன் தந்தையாகிய ப்ரஹ்மதேவன் வருவதை அறிந்து விரைந்தெழுந்து பூஜாத்ரவ்யங்களுடன் பிதாபுத்ரர்களான ப்ரியவ்ரதன் ஸ்வாயம்புவமனு இவர்களும் தானுமாகக் கைகூப்பிக் கொண்டு ஸ்தோத்ரம் செய்தார். பரதவம்சாலங்காரனே! ப்ரஹ்மதேவனும் நாரதர் செய்த பூஜையை அங்கீகரித்து அவர்செய்த ஸ்தோத்ரத்தினுல் தன்குணங்களும் தான் ஸத்யலோகத்தினின்றிறங்கின நல்வரவும் மற்ற மேன்மைகளும் சொல்லப்பெற்று ஆதிபுருஷனுடைய அம்சாவதாரமாகிய அப்பிரமன் கருணைகூர்ந்த கண்ணேக்கத்துடன் ப்ரியவ்ரதனை நோக்கி 'அப்பா! உண்மையான ஒருவார்த்தை சொல்லுகிறேன். இதை உணர்வாயாக. இந்த்ரியங்களால் அறியமுடியாத பரம புருஷனுடைய கட்டளையே இது. நீ அவன்மேல் அஸூயையின்றி இவ்வசனத்தை ஏற்றுக்கொள்வாயாக. இந்தப்பகவானுடைய ஆஜ்ஞையை நீயும் உன்தந்தையாகிய இம்மனுவும் மஹர்ஷியாகிய இந்நாரதரும் நானும் ஆகிய நாம் அனைவரும் ஸ்வாதீனமற்று நடத்துகிறேம். நாம் இஷ்டப்படாதிருப்பினும் அவன் நம்மைக்கொண்டு தன்னிஷ்டப்படி நடத்திக்கொள்ளுந் திறமையுடையவன். எப்படிப்பட்டவனும் தவம் வித்யை யோகபலம் புத்திபலம் அர்த்தம் தர்மம் இவற்றில் எதனுலும் தானுகவாவது பிறர் மூலமாயாவது இப்பரமபுருஷனுடைய கட்டளையை வேறு

விதமாக்கவல்லனாகமாட்டான். அப்பா! ஜகத்திலுள்ள ஜந்துக்கள்யாவும் ஜன்மம் மரணம் சோகம் மோஹம் பயம் ஸுகம் துக்கம் இவற்றிற்காகவும் கர்மங்களைச் செய்வதற்காகவும் மோக்ஷத்திற்காகவும் பகவானுடைய ஸங்கல்பத்தினால் ஏற்பட்ட தேஹத்தைத் தரிக்கின்றன. குழந்தாய்! இப்பகவானுடைய வாக்காகிற தாமணியில் ஸத்வாதிகுணங்களும் வர்ணாஶ்ரம கர்மங்களுமாகிற அறுக்கமுடியாத பூட்டுக்கயிறுகளால் நாம் அனைவரும் கட்டுண்டு மூக்கில் கயிறுகோக்கப்பெற்ற நாற்கால் ஜந்துக்கள் மனுஷ்யனுக்கு வேலைசெய்வதுபோல், அந்தப் பகவானுக்குப் பூஜை செய்கின்றோம். ப்ரியவ்ரதனே! கண்ணில்லாதவர் கண்தெரிந்தவனால் நிழல் வெயில் முதலியவழிகளில் நடத்தப்பெறுவதுபோல், நாம் ஈஶ்வரனால் ஏற்படுத்தப்பட்ட தேவாதி சரீரங்களையும் வர்ணாஶ்ரமாதிகளையும் பெற்று ஸாத்விகம் ராஜஸம் தாமஸமென்று மூன்றுவகையான நமது கர்மங்களுக்குத் தகுந்தபடி அவனால் கொடுக்கப்பட்ட ஸுகத்தையாவது துக்கத்தையாவது அனுபவிக்கின்றோம். தேஹாத்மப்ரமம் முதலிய அஜ்ஞானங்கள் நீங்கப்பெற்றவன் அஜ்ஞான தசையில் போலவே ஸுகதுக்கங்களுக்கிடமான புண்யபாபகர்மங்களை அனுபவித்துக்கொண்டிருப்பினும் அந்த ஸுகதுக்கங்களால் விளைகிற தேஹத்தின் நிறைவு குறைவுகளைப் பற்றின அபிமானமின்றித் தன்தேஹயாத்ரையை நடத்திக்கொண்டு வரவேண்டும். அஜ்ஞானிக்கும் ஜ்ஞானிக்கும் தேஹயாத்ரை ஒத்திருப்பினும், ஜ்ஞானமுடையவன் வேறுதேஹத்திற் கிடமான ஸாத்விகாதிகர்மங்களெவற்றையும் செய்யமாட்டான். ஜனஸஞ்சாரமில்லாத வனத்தில் காய்கிழங்குகளைப் பக்ஷித்துக்கொண்டு வாஸஞ்செய்வானாயினும் ஊக்கமற்றிருப்பானாயின், பஞ்சேந்த்ரியங்க

ளும் மனமுமாகிற சத்ருக்களனைவரும் கூடவேயிருக்கின்றூர்களாகையால் அவனுக்குப் பயம் (ஸம்ஸாரம்) நேரவே நேரும். இந்த்ரியங்களைவென்று ப்ராக்ருதியைக்காட்டிலும் விலக்ஷணனுன ஆத்மாவை அனுபவிக்கையால் நிறைவாளனுன ப்ரஹ்மநிஷ்டனுக்கு இல்லறவாழ்க்கை என்னகெடுதியை விளைக்கும்? ஜ்ஞானநிஷ்டைக்கு விரோதிகளான இந்த்ரியங்களாகிற சத்ருக்களை வெல்லவிரும்புவானுயின் பலிஷ்டரான சத்ருக்களை ஜயிக்கவிரும்பும் மன்னவன் துர்க்கத்தில் இருந்து அவர்களை ஜயிப்பதுபோல், இவனும் க்ருஹஸ்தாஶ்ரமத்தில் இருந்துகொண்டே அதற்கு யத்னம் செய்யவேண்டும். சத்ருக்கள் க்ஷீணித்தபின்பு மன்னவனைப்போலவே ஜ்ஞானியும் இஷ்டப்படி வெளியில் திரியலாம். நீபகவானுடைய பாதாரவிந்தங்களாகிற துர்க்கத்தைப்பற்றியிருப்பவன். நீ இந்த்ரியங்களாகிற சத்ருக்களனைவரையும் நன்றாக வென்றவன். ஆயினும் பரமபுருஷனுல் கொடுக்கப்பட்ட இவ்வுலகபோகங்களைச் சிலகாலம் அனுபவிப்பாயாக. அப்பால் பற்றற்று மோக்ஷம் பெறுவாய்' என்று மொழிந்தான். இங்ஙனம் சொல்லப்பெற்ற மஹாபாகவதனுகிய அந்த ப்ரியவ்ரதன் மூன்றுலோகங்களுக்கும் ஹிதம் உபதேசிப்பவனுன அந்த ப்ரஹ்மதேவனுடைய கட்டளை [1]லகுவாயிருக்கையால் தலைவணங்கி அப்படியே ஆகட்டுமென்று பஹுமானத்துடன் அங்கீகரித்தான். நான்முகக்கடவுளும் விதிப்படி பூஜை செய்யப்பெற்று நாரதரும் ப்ரியவ்ரதனும் ப்ரீதியுடன் பார்த்துக்கொண்டிருக்கையில், பெருமஹிமையுடையதும் நெடுநாள் அழிவற்றிருப்பதுமான தன்னுடைய லோகத்திற்குப் போனுர். மனுவும் ப்ரஹ்மதேவனுல் தன்மனோரதம் நிறைவேறப் பெற்றுப் புதல்வனை ஸமஸ்த பூமண்ட

1. எளிதில் ஆசரிக்கக் கூடியதாயிருக்கையால்.

லத்தின் மர்யாதையைப் பாதுகாக்கும்படி ஏற்படுத்தி மிகவும் கொடிய சப்தாதி விஷயங்களாகிற விஷமடுவில் விளையும் விருப்பத்தினின்று மீண்டான். இங்ஙனம் ப்ரிய வ்ரதமன்னவன் முதலில் தன் விருப்பத்தின்படி பகவதா ராதன ரூபமான கர்மத்தில் அபிநிவேசங்கொண்டு ஸமஸ்த ஜகத்தின் பந்தத்தையும் போக்கும் ப்ரபாவமுடைய ஆதிபுருஷனான பகவானுடைய பாதாரவிந்தங்களை எப்பொழுதும் த்யானித்துக்கொண்டிருந்து அதனால் மலங்களெல்லாம் கழிந்து மனம் தெளிந்து நின்மலனாயிருப்பினும் பெருமைபொருந்திய ப்ரஹ்மாதிகளை வெகு மதிக்க விரும்பி அவர்களது கட்டளையை அங்கீகரித்துப் பூமண்டலத்தை ஆண்டுவந்தான். அப்பால் அவன் விஸ்வகர்மாவென்னும் ப்ரஜாபதியின் புதல்வியான பர்ஹிஷ்மதி யென்பவளை மணம்புரிந்து தன்னோடொத்த குணமும் சீலமும் செயலும் உருவமும் வீர்யமும் பொருந்தி உதாரர்களான பத்துப் புதல்வர்களையும் அவர்களுக்குத் தங்கையான ஊர்ஜஸ்வதியென்கிற ஓர் பெண்ணையும் பெற்றான். அப்புதல்வர்கள் பதின்மரும் ஆக்னீத்ரன் இத்மஜிஹ்வன் யஜ்ஞபாஹு மஹாவீரன் ஹிரண்யரேதஸ்ஸு அக்ருதப்ருஷ்டன் ஸவனன் மேதாதிதி வீதிஹோத்ரன் கவி என்று அக்னியின் பேருடையவர். இவர்களில் கவி மஹாவீரன் ஸவனன் என்கிற இம் மூவரும் இந்த்ரியங்களை வென்று பால்யம் முதல் ஆத்ம வித்யையில் பரிசயம் செய்து பரமஹம்ஸர்களின் ஆஸ்ரமத்தைக் கைப்பற்றினார்கள். அவ்வாஸ்ரமத்தில் நிலைநின்ற அவர்கள் இந்த்ரியங்களை அடக்கியாள்கையே தன்மையாகப் பெற்று ஸமஸ்த ஜீவஸமூஹத்தையும் சரீரமாகவுடையவனும் ஸம்ஸாரத்தில் பயந்தவர்களுக்கு ரக்ஷகனுமானவாஸுதேவனுடையதிருவடித்தாமரைகளையே

எப்பொழுதும் த்யானித்துக்கொண்டிருந்து அதனால் பரமபக்தியோகம் நழுவாமல் வளரப்பெற்று அதன் மஹிமையால் பரிசுத்தமான ஹ்ருதயத்தில் ஸகல சேதனாசேதனங்களையும் சரீரமாகவுடைய பகவான் தோற்றப்பெற்று அவனுக்குட்பட்டதான ஆத்மஸ்வரூபத்தையும்ஸாக்ஷாத் கரித்து எல்லோரும்மோக்ஷத்தைஅடைந்தார்கள். அந்த ப்ரியவ்ரதனுக்கு மற்றொரு பார்யையிடத்தில் உத்தமன் தாமஸன் ரைவதன் என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்கள் மன்வந்தராதிபதிகளானார்கள். அந்த ப்ரியவ்ரதமன்னவன் தன் புதல்வர்கள் இங்ஙனம் சாந்தி முதலிய நற்குணங்களெல்லாம் அமைந்திருக்கையில், தடைபடாத ஸமஸ்தபௌருஷங்களும் அமைந்த பலமுடைய தன் புஜதண்டங்களில் தரித்த வில்லின் நாணொலியால் தர்ம விரோதிகளனைவரும் தொலையப் பெற்றுத் தன் காதலியான பர்ஹிஷ்மதியுடன் கூடி அவளுக்கு நாள்தோறும் ஆநந்தத்தை வளர்த்து அவளால் எதிர் கொண்டு வெகுமதிக்கை முதலிய ஸத்காரங்களெல்லாம் பெற்றுப் பெண்களுக்கு இயற்கையில் ஏற்பட்ட ஶ்ருங்கார சேஷ்டைகளாலும் வெட்கத்தினால் குறுகின புன்னகை அமைந்த கண்ணோக்கங்களாலும் அழகிய பரிஹாஸ வாக்யங்களாலும் விவேகமற்றவன் போன்று காமக்கலவியிலாழ்ந்து ஆழ்ந்த மனமுடையவனாயினும் ஒன்று மறியாதவன்போல் காமபோகங்களை அனுபவித்து வந்தான். 'ஸூர்யன் மேரு பர்வதத்தைச் சுற்றிப் பூமண்டலத்தைப் பாதியே விளங்கச் செய்கிறான். பாதி மேருவின் நிழலால் மறைக்கப்பட்டு ஸூர்ய ப்ரகாசமின்றியே யிருக்கின்றது' என்னும் மனக்குறையினால் அம்மன்னவன் இப்பூமண்டலம் முழுவதையும் விளங்கச் செய்ய விரும்பி பகவானை ஆராதித்து மிகுந்த ப்ரபாவமுடைய

வனுக்கி ஸூர்யனேடொத்த வேகமுடையதும் அவனைப் போல் பேரொளியுடன் திகழ்வதுமான தேரின் மேல் ஏறி இரவையும் பகலாக்கி விடுகிறேனென்று மற்றொரு ஸூர்யன் போன்று அந்த ஸூர்யனைப் பின்றொடர்ந்து ஸூர்ய ப்ரகாசமில்லாததேசத்தையும் விளங்கச் செய்து கொண்டு ஏழுதடவைகள் மேருபர்வதத்தின் நாற்புறத்தி லும் சுற்றினன். அங்ஙனம் அம்மன்னவன் சுற்றும்பொ ழுது அவனுடைய ரதத்தின் சக்கரக்கட்டு ஊன்றின விடங்களில் அகழிகள்போல் ஆழ்ந்த ஏழு பள்ளங்கள் ஏற்பட்டன. அவையே ஏழு ஸமுத்ரங்களாயின. அவற் றிற்கிடையிலுள்ள பூமியின் பாகங்கள் ஏழு த்வீபங்க ளாயின. அவை ஜம்பூத்வீபம் ப்லக்ஷத்வீபம் சால்மலித் வீபம் குசத்வீபம் க்ரௌஞ்சத்வீபம் சாகத்வீபம் புஷ்க ரத்வீபம் என்னும் பேருடையவை. அவை ஒன்றைவிட ஒன்று இருமடங்கதிகமான அளவுடையவை. ஒன்றை ஒன்று சுற்றிக்கொண்டு ஒன்றுக்கு வெளியிலொன்ருக ஏற்பட்டிருப்பவை. லவணஸமுத்ரம் இக்ஷுஸமுத்ரம் ஸுராஸமுத்ரம் க்ருதஸமுத்ரம் க்ஷீரஸமுத்ரம் ததிஸமு த்ரம் சுத்தஸமுத்ரம் என்னும் இவையே அவ்வேழு ஸமுத்ரங்கள். இவை முன்சொன்ன ஏழு த்வீபங்களுக் கும் அகழிகள்போன்றிருக்கும். ஒவ்வொரு ஸமுத்ரமும் தன்னல் சூழப்பட்ட த்வீபத்தோடொத்த அளவுடைய வை. இவ்வேழு ஸமுத்ரங்களும் க்ரமத்தில் முன்சொன்ன ஏழு த்வீபங்களுக்கு வெளியில் தனித்தனியே ஏற்பட் டிருக்கின்றன. ப்ரியவ்ரதன் தன் புதல்வர்களில் துறவறம் பெற்றவர்போகத் தன்னைத் தொடர்ந்திருக்கிற ஆக்னீத் ரன் இத்மஜிஹ்வன் யஜ்ஞபாஹு ஹிரண்யரேதஸ்ஸு க்ருதப்ருஷ்டன் மேதாதிதி வீதிஹோத்ரனென்கிற ஏழு பிள்ளைகளையும் ஜம்பூத்வீபம் முதலிய அவ்வேழு த்வீபங்

களில் ஒவ்வொன்றுக்கு ஒருவனாக அவற்றிற்கு அதிபதிகளாக ஏற்படுத்தினான். தன் புதல்வியான ஊர்ஜஸ்வதியைச் சுக்ராசார்யனுக்குக் கொடுத்தான். தேவயானியென்பவள் சுக்ரனுக்கு அவ்வூர்ஜஸ்வதியிடத்தில் பிறந்தவள். த்ரிவிக்ரமாவதாரம் செய்த பகவானுடைய பக்தர்களும் அவனுடைய பாதாரவிந்தபராகத்தினால் பசி தாஹம் முதலிய ஆறு குணங்களையும் வென்றவருமான பெரியோர்களுக்கு இத்தகைய புருஷச்செயல் நேருவது ஒராச்சர்யமன்று. நல்வழியினின்று நீங்கின பரமபாபிஷ்டனும் இந்தப்பகவானுடைய நாமத்தை ஒருகால் உரைப்பானாயினும், அந்த க்ஷணமே அவன் ஸம்ஸார பந்தத்தைத் துறப்பான். (அவனுடைய நாமத்தின் ப்ரபாவமே இத்தகையதானால் அவனுடைய பாதாரவிந்தங்களின் ப்ரபாவம் எப்படியிருக்குமென்பதை ஆலோசிப்பாயாக.) இங்ஙனம் அளவில்லாத பலமும் பராக்ரமமுமுடைய அந்த ப்ரியவ்ரதமன்னவன் நாரதமுனிவருடைய பாதங்களைவிட்டுப் பிரிந்த வுடனே தான் ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் விழுந்து அதனால் வருந்தினாற்போலிருப்பதை நினைத்து மனத்தில் வெறுப்புற்று 'ஆ! நான் தப்பு செய்தேன். நான் இந்த்ரியங்களால் இழுக்கப்பட்டு, ப்ரக்ருதியின் பரிணாமங்களும் அஜ்ஞானத்தினால் இவையே போக்யங்களென்று ஸம்பாதிக்கப்பட்டவைகளும் கடைசியில் விஷம்போன்றவைகளுமான சப்தாதிவிஷயங்களாகிற பாழுங்கிணற்றில் தள்ளுண்டேன். இதைவிட மதிகேடு மற்றென்ன வேண்டும்? இது வரையில் அனுபவித்ததுபோதும். இப்பெண்மணிக்கு விளையாட்டு ம்ருகம்போன்ற என்னைச் சுடவேண்டுமல்லவா?' என்று தன்னைப் பழித்துக்கொண்டான். பிறகு பகவானுடைய அனுக்ரஹத்தினால் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மை

யான ஸ்வரூபத்தை ஆராய்ந்தறியப்பெற்று ஸம்ஸார தாபங்களற்றுக் களிப்புற்றுத் தன்னை அனுஸரித்திருக்கின்ற புதல்வர்களுக்கு ஏழுத்வீபங்களையுடைய பூமண்டலத்தை க்ரமப்படி பங்கிட்டுக்கொடுத்துத் தனக்குப் பல வகைப் போகங்களை அளித்த தன் மனைவியைப் பிணம் போல் நினைத்து மஹத்தான ஐஸ்வர்யத்தையும் துறந்து வெறுப்புற்று மனத்தில் பகவானுடைய இனிய லீலைகளையும் அற்புதச் செயல்களையும் சிந்தித்துக்கொண்டு மீளவும் நாரதருடைய பதவியைத் தேடிக்கொண்டு சென்றான். அவன் புகழை இங்ஙனம் பாடுகிறார்கள். ப்ரியவ்ரதன் செய்த கார்யத்தை ஈஸ்வரன் தவிர மற்ற எவன் தான் செய்ய வல்லனாவான்? இவன் பூமண்டலத்தின் இருட்டைப் போக்கிக்கொண்டு தேர் சக்கரக்கட்டுகள் பாய்ந்தமையாலேற்பட்ட பள்ளங்களால் ஏழு ஸமுத்ரங்களைக் கற்பித்தான். இவன் ஜம்பூத்வீபம் முதலிய த்வீபங்களை ஏற்படுத்திப் பூமியைப் பாகம் பாகமாய்ப் பிரித்தான். அந்தத்வீபங்களில் ஒவ்வொன்றிலும் ப்ராணிகளின் ஸௌக்யத்திற்காக நதி மலை வனம் இவை முதலியவற்றால் தனித்தனியே எல்லைகளையும் ஏற்படுத்தினான். பகவானுடைய பக்தர்களுக்கு நண்பனாகிய இந்த ப்ரியவ்ரத மன்னவன், பாதாளம் ஸ்வர்க்கம் பூமி இவற்றிலுள்ள பலவகையான போகங்களையும் யோகமஹிமையால் விளையக்கூடிய அணிமாதி மஹிமைகளையும் நரகம் போல் நினைதான். முதலாவது அத்யாயம் முற்றிற்று.

---

## { ஆக்னீத்ரனுடைய வ்ருத்தாந்தத்தைக் கூறுதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—இங்ஙனம் தந்தையாகிய ப்ரியவ்ரதன் மோக்ஷம் அடைகையில், அவனுடைய ஆஜ்ஞையில் நிலைநின்றிருக்கிற ஆக்னீத்ரன் தர்மத்தில்

கண்வைத்து ஜம்பூத்வீபத்திலுள்ள ப்ரஜைகளைத் தன் புதல்வர்களைப் போல் பாதுகாத்து வந்தான். அவன் ஒருகால் ஸந்தானத்தை விரும்பி மந்தர பர்வதத்தின் தாழ்வரையில்பூஜைக்குவேண்டிய வஸ்துக்களையெல்லாம் ஸித்தப்படுத்திக் கொண்டு மனவூக்கமாகிற தவத்தினுல் ப்ரஹ்மதேவனை ஆராதித்தான். அவனும், அதை அறிந்து தன் ஸபையில் பாடுகின்ற பூர்வசித்தியென்னும் அப்ஸரமடந்தையை அவனுடைய இஷ்டத்தை நிறைவேற்றுவதற்காக அனுப்பினுன். அவளும் அம்மன்னவனுடைய ஆஶ்ரமத்திற்கருகாமையில் வந்து உலாவிக்கொண்டிருந்தாள். அவ்வாஶ்ரமம் பல வ்ருக்ஷங்களடர்ந்து அவற்றின் கிளைகளில் அழகிய பொற்கொடிகள் பிணைந்து ரமணீயமாயிருந்தது. அக்கொடிகளில் மயில்முதலிய நிலப்பறவைகள் இணையிணையாய்க் கலந்து ஷட்ஜாதிஸ்வரங்களைக் கூவிக்கொண்டிருந்தன. அங்குள்ள மடுக்களிலும் தாமரை யோடைகளிலும் நீர்க்கோழி நீர்க்காகம் கொக்கு கலஹம்ஸம் முதலிய நீர்ப்பறவைகள் அந்நிலப்பறவைகளின் ஸ்வரங்களைக் கேட்டுவிழித்து விசித்ரமாய் ஒலித்துக்கொண்டிருந்தன. இப்படிப்பட்ட ஆஶ்ரமத்தினருகில் மிகவும் அழகாக அடியிட்டு விலாஸத்துடன் நடக்கிற அவ்வப்ஸர மடைந்தையின் பாதங்களில்அடிக்கடிஒலிக்கின்ற சிலம்புத்தண்டைகளின் சப்தத்தை அந்த ராஜகுமாரன் கேட்டு ஸமாதியோகத்தினுல் மூடப்பட்டகண் கமலத்தைச்சிறிது விழித்துப்பார்த்தான். அருகில் பெண் வண்டுபோல்புஷ்பத்தைமோந்துகொண்டுதேவதையென்றும் மனுஷ்யனென்றும் பேதமின்றிஅனைவருடையமனங்களையும் கண்களையும் ஆநந்தஸாகரத்தில் ஆழ்த்தவல்ல நடையழகாலும் விளையாடல்களாலும் வெட்கம்வழிகிற கண்ணோக்கங்களாலும் இனிய உரைகளாலும் அழகான

அங்கங்களாலும் ஸமஸ்தப்ராணிகளுடைய மனத்திலும் மன்மதனுக்கு நுழைய இடங்கொடுக்குந் திறமை அமைந்து, அம்ருதம்போல் இனியதும் மத்யம்போல் மதிமயக்கத்தை விளைப்பதுமான புன்னகையோடு கூடின பேச்சைப் பேசும்பொழுது வெளியாகின்ற மூச்சின் வாஸனையை மோந்து மதிமயங்கி மேல்விழுகின்ற வண்டுகளின் உபத்ரவத்தினால் விரைந்தடியிட்டுச் செல்லுகையால் அழகாயசைகின்ற கொங்கைகளும் குழற்கற்றையும் அரைநாண் மாலையுமுடைய அவ்வப்ஸர மடந்தையை அம்மன்னவன் பார்த்துக்கொண்டிருக்கையில் மன்மதன் இது ஸமயமென்று நுழைந்து அவனைத் தன்வசமாக்கினான். அங்ஙனம் காமனுக்காளான அவ்வரசன் ஸ்த்ரீகளை என்று மறியாதவன்போல் அம்மடந்தையை நோக்கி இங்ஙனம் மொழிந்தான். 'முனிவர்களில் சிறந்தவனே! நீயார்? இம்மலையில் என்செய்ய விரும்புகின்றனை? நீ பரதேவதையான பகவானுடைய மாயையாய்த் தோற்றுகின்றனை. [1]நாணில்லாத இரண்டு தனுஸ்ஸுக்களைத் தரிக்கின்றனையே. இதுவென்? உனது நண்பனாகிய என்னைப் போன்றவனுக்காவது உனக்காவது இவற்றால் ஆகவேண்டிய ப்ரயோஜனமேதேனும் உண்டா? அல்லது அரண்யத்தில் மனவூக்கமற்றிருக்கிற மான்களை அடிக்கத் தேடுகின்றனையா? [2]இதோ புலப்படுகிற உனது பாணங்கள் தாமரையிதழ்களையே இறகுகளாகப் பெற்று ஒய்ந்தாற்போலிருக்கின்றன. அவை பிடியில்லாதவையாயினும் அழகாயிருக்கின்றன. மிகவும் கூரான நுனியுடையவை. இவ்வனத்தில் உலாவுகின்ற நீ இப்பாணங்களை எவர்மேல் தொடுக்க விரும்புகின்றனையோ, தெரிய

1. புருவங்களைப் பார்த்துச் சொல்லுகிறான்.
2. கடைக்கண்ணோக்கத்தைச் சொல்லுகிறான்.



1174 ஆக்னீத்ரன் பூர்வசித்தியைப் பார்த்து மோஹித்தல்.

வில்லை. ஆகையால் நாங்கள் பயந்து உன்னை வேண்டு கிறோம். உன்னுடைய இப்பராக்ரமம் மூடபுத்திகளான எங்களுக்கு க்ஷேமத்தை விளைக்குமாக. [1] உன் சிஷ்யர்கள் இதோ நாற்புறத்திலும் உன்னைத் தொடர்ந்து ரஹஸ்யத் தோடுகூடின ஸாமவேதத்தைப் படிக்கின்றார்கள். ப்ரபூ! ரிஷிகள் வேதசாகைகளைப் பற்றுவதுபோல், உன் குழற் கற்றையினின்று நழுவின புஷ்பவர்ஷங்களை உன் சிஷ்யர் கள் பற்றுகிறார்கள். [2] உன் பாதங்களிலுள்ள கூடுகளில் விளங்குகிற இத்தித்திரிப் பறவைகளின் ஒலியைமாத்ரம் கேட்கின்றோம். அங்ஙனம் ஒலிக்கின்ற பறவைகள் மாத் ரம் புலப்படவில்லை. [3] உன்னரையிலும் நிதம்பத்திலுங் கடம்பப் பூவின் ஒளி திகழ்கின்றது. இது உனக்கு எங் கிருந்து கிடைத்தது? அவ்வொளியின்மேல் [4] குறைக்கொ ள்ளியின் வட்டம் புலப்படுகின்றது. உன் மரவுரி எங்கே? அந்தணனே! [5] உன் மார்பில் இரண்டு கொம்புகள் அழகா யிருக்கின்றன. இவற்றுள் என்ன நிறைத்திருக்கின் றனை? ஏதோ ஒரு இனிய வஸ்து இருக்கவேண்டுமென்று தெரிகின்றது. ஆனால் அது இன்னதென்று தெரிய வில்லை. நீ இடையில் இளைத்திருக்கின்றனை. ஆயினும் வருத்தத்துடன் இவ்விரண்டு கொம்புகளை ஏந்திக்கொண் டிருக்கின்றனை. மற்றும், இவற்றில் என்கண்கள் பற்றியி ருக்கின்றன. உன் கொம்புகளில் [6] சிவந்த சேற்றை இங்

---

1. வண்டுகளைச் சிஷ்யர்களாகவும், அவற்றின் த்வனியை ஸாமவேதமாகவும் சொல்லுகிறான்.

2. சிலம்புத்தண்டைகளையும் அவற்றிலுள்ள ரத்னங்களையும் அவற்றினொளியையும் சொல்லுகிறான்.

3. அரையிலாடையைச் சொல்லுகிறான்.

4. அரைநாண் மாலையைச் சொல்லுகிறான்

5. கொங்கைகளைச் சொல்லுகிறான்

6. குங்குமக்குழம்பைச் சேறென்கிறான்.

னம் பூசியிருக்கின்றனே. அழகனே! இதனால் எனது ஆஸ்ரமம் முழுவதும் நன்மணம்வீசும்படி செய்கின்றனே? எனது சிறந்த நண்பனே! உனது இருப்பிடத்தை எனக்குக் காட்டுவாயாக. அவ்விடத்திலிருக்கும் ஜனங்கள் என்னைப்போன்றவருடைய மனத்தைக் கலக்கும்படி ஆச்சர்யமான இத்தகைய அவயவங்களை மார்பினால் தரித்துக் கொண்டிருப்பார்களல்லவா? மற்றும், இனிய உரையோடும் விலாஸங்களோடுங்கூடி மிகவும் அற்புதமான அம்ருதம் முதலியதும் அவரது வாயில் கிடைக்குமல்லவா? உன்னுடைய லோகத்தில் தேஹத்தை வளர்க்கும்படியான ஆஹாரம் யாது? நண்பனே! நீ ஆஹாரம் புசிக்காமலே ஜீவிப்பதுபோல் தோற்றுகிறது. நீ விஷ்ணுவின் அம்சமாயிருக்கின்றனே. நீ விஷ்ணுவைப் போல் காதுகளில் மகாகுண்டலங்களை அணிந்திருக்கின்றனே. அசைகின்ற கண்களாகிற இரண்டு மீன்களும் பற்களின் வரிசையாகிற பக்ஷிகளின் வரிசையும் தொங்குகின்ற முன் நெற்றி மயிர்களாகிற வண்டினங்களும் அமைந்த உன் முகம் தாமரை யோடைபோல் திகழ்கின்றது. உன் தாமரைக்கையினாலடியுண்ட இப்பந்து நாற்றிசைகளிலும் சுழன்று மதிமயங்கின என் கண்களை அலையச்செய்கின்றது. உன்நெற்றியில் ஜடைகளின் பாரம்அவிழ்ந்தலைவதை நீ நினையாதிருக்கின்றனே யேன்? துஷ்டத்தனமுடைய இக்காற்று மனவிருப்பங் கொண்டு உன்னரையாடையின் முடிச்சை அவிழ்க்கின்றதே. இதையும் நீ பாராதிருக்கின்றனையேன்? தவத்தையே தனமாகவுடையவனே! தவஞ்செய்கிறவர்களின் தவத்திற்கு விக்னம் செய்யும்படியான இவ்வுருவத்தை நீ எத்தவத்தினால் பெற்றனை? நண்பனே! நீ என்னுடன் இங்குத் தவஞ்செய்வாயாக. உலகங்களையெல்லாம் படைப்பவனாகிய அந்த ப்ரஹ்மதேவன்

என்னிடத்தில் அருள்புரிகின்றானோ? அந்தணனே! நீ ப்ரஹ்மதேவனால் எனக்குக் கொடுக்கப்பட்டனை. ஆகையால் உன்னை நான் விடமாட்டேன். எனக்கு நீ அன்பிற்கிடமாயிருக்கின்றனை. என் மனமும் கண்ணும் உன்னிடத்தில் படிந்து நீங்காதிருக்கின்றன. அழகான கொம்புடையவளே! உன் ஸ்வாதீனமான என்னை உன் மனவிருப்பத்தின்படி அழைத்துக் கொண்டுபோகலாம். உன்னுடைய ஸகிகளும் அனுகூலராகி என்னை அனுவர்த்திப்பார்களாக':—என்றான். இங்ஙனம் ஸ்த்ரீகளை நல்வார்த்தை சொல்லுவதில் மிகவும் ஸமர்த்தனாகிய அம்மன்னவன் மதிமயங்கி க்ராம்யங்களில் திறமையை வெளியிடுகின்ற பேச்சுக்களை மொழிந்து அவ்வப்ஸர மடந்தையை வெகு மதித்துத் தனக்கு அனுகூலையாக்கிக்கொண்டான். அவளும் வீரக்கூட்டங்களின் தலைவனாகிய அவ்வாக்னீத்ரனுடைய புத்தி உருவம் சீலம் வித்யை வயது செல்வம் மேன்மை இவைகளைக் கண்டு மனம் பறியுண்டு பற்பலவாண்டுகளடங்கின பலகாலம் வரையிலும் ஜம்பூத்வீபத்திற்கெல்லாம் நாதனாகிய அம்மன்னவனுடன் பூமியிலுள்ள போகங்களையும் ஸ்வர்க்கலோகத்துப் போகங்களையும் அனுபவித்தாள். அவளிடத்தில் அவ்வரசன், நாபி கிம்புருஷன் ஹரிவர்ஷன் இலாவ்ருதன் ரம்யகன் ஹிரண்மயன் குரு பத்ராஸ்வன் கேதுமாலன் என்னும் பேருடைய ஒன்பது பிள்ளைகளைப்பெற்றான். அவ்வப்ஸரமடந்தை வர்ஷம் ஒன்றுக்கு ஒரு பிள்ளையாக ஒன்பது பிள்ளைகளைப் பெற்று அம்மன்னவனுடைய வீட்டிலேயே விட்டு மீளவும் ப்ரஹ்மதேவனிடம் சென்றாள். அவ்வாக்னீத்ரனுடைய பிள்ளைகள் ஒன்பதின்மரும் மாதாவின் அனுக்ரஹத்தினால் இயற்கையாகவே தேஹ உறுதியும் பலமும் அமைந்து, தந்தையால் தமது நாமங்களையே இட்டுப் பங்கிட்டுக் கொடுக்

கப்பட்ட ஜம்பூத்வீபத்தின் கண்டங்களைப் பெற்று அனு பவித்து வந்தார்கள். ஆக்னீத்ரன் காமபோகத்தில் த்ருப்தி உண்டாகப் பெருமல் அவ்வப்ஸர மடந்தையையே மனத்தில் நினைத்துவேதோக்தமான கர்மங்களைச்செய்து எங்கு வந்தவனைப் பித்ரு தேவதைகள் களிக்கச்செய்கின்ருர்களோ அப்படிப்பட்ட அவளுடைய லோகத்தை அடைந்தான். தந்தை லோகாந்தரம் சென்றபின்பு அவன் பிள்ளைகளான ப்ராதாக்கள் ஒன்பதின்மரும் மேருதேவி ப்ரதிரூபை உதக்ரதம்ஷ்ட்ரி லதை ரம்யை ஶ்யாமை நாரி பத்ரை தேவவீதி என்னும் பேருடைய மேருவின் பெண்கள் ஒன்பதின்மரையும் மணம் புரிந்தார்கள். இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

 நாபியின் சரித்ரம். 

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—ஆக்னீத்ரனுடையபிள்ளைகளில் முதல்வனுகிய நாபியென்பவன் ஸந்தானமில்லாத மேருதேவியென்னுந் தன் பார்யையுடன் ஸந்தானத்திற்காகப் பரமபுருஷனை யாகங்களால் ஆராதித்தான். ஶ்ரத்தையோடும் மனத்தூய்மையோடும் யாகம்செய்கின்ற அம்மன்னவன் ப்ரவர்க்யமென்னும் யாகங்களை நடத்திக் கொண்டிருக்கையில், த்ரவ்யம் தேசம் காலம் மந்த்ரம் ருத்விக்குகள் தக்ஷிணை செயல் இவ்வுபாயங்களின் நிறைவினுல் பகவான் பெற அரியனுயினும் தன் பக்தர்களிடத்தில் வாத்ஸல்யமுடையவனுகையால் தன் பக்தருடைய விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுமென்னும் கருத்து நெஞ்சில் குடிகொண்டு அதனுல் தூண்டப்பெற்று அழகிய அவயவங்கள் அமைந்திருப்பதும் கர்மத்திற்குட்படாததும் மனத்திற் கினியதும் மனத்தையும் கண்ணை

யும் ஆநந்தவெள்ளத்தில் அழுத்தவல்ல அவயவங்களால் அழகியதுமான தன் திருமேனியை அம்மன்னவனுக்குக் காட்டினான். சதுர்ப்புஜனும் கோடிஸூர்ய ப்ரகாசனும் பட்டுவஸ்த்ரந் தரித்தவனும் மார்பில் திகழ்கின்ற ஸ்ரீவத்ஸமென்னும் அடையாள முடையவனும், சங்கம் பத்மம் சக்ரம் கௌஸ்துபம் கதை இவையுடையவனும் பேரொளி அமைந்த ரத்னங்கள் இழைக்கப்பெற்ற கிரீடம் குண்டலம் கைவளை அரை நாண்மாலை முத்துமாலை தோள்வளை முதலிய ஆபரணங்கள் அணிந்தவனுமாய்த் தோற்றுகிற அப்புருஷோத்தமனை ருத்விக்குக்களும் ஸபையிலுள்ளவர்களும் யஜமானனும், பணமில்லாதவர்கள் சிறந்த பணத்தைக் காண்பதுபோல், கண்டு மிக்க வெகுமதியுடன் பூஜித்து வணங்கின தலையுடன் அவனை ஸ்தோத்ரஞ்செய்தார்கள்: நீ பூஜிக்கத் தகுந்தவர்களில் தலைமையுடையவன். நீ நிறைவாளனாயினும் உன் ப்ருத்யர்களான எமது பூஜையை நீயே அங்கீகரிப்பாயாக. 'நமோ நம:' என்றிவ்வளவு மாத்ரமே எங்களுக்குப் பெரியோர்கள் கற்பித்துக் கொடுத்திருக்கிறார்கள். ப்ரக்ருதியின் பரிணாமமான சப்தாதி விஷயங்களில் சென்ற மதியுடையவனும் கர்மத்திற்குட்பட்டுச் சக்தியற்றவனும் அந்த ப்ரக்ருதியின் கார்யமான நாமம் ரூபம் ஜாதி இவையுடையவனுமாகிய எவன் தான் ப்ரக்ருதி புருஷவிலக்ஷணனும் ஸர்வேச்வரனுமாகிய உன் ஸ்வரூபத்தை நிரூபித்துச் சொல்லவல்லனாவான்? உன் குணங்கள் மிகவும் மங்கலமானவை; ஸமஸ்த ப்ராணிகளுடைய பாபத்தையும் போக்குந் திறமையுடையவை. அப்படிப்பட்ட மேன்மை அமைந்த உன் குணங்களில் சிறிது மாத்ரம் சொல்லாமன்றி அவற்றையெல்லாம் எவனால் சொல்லமுடியும்? பரமனே! உன் பக்தர்கள் ப்ரீதியினால் எழுத்துக்கள் தழதழக்

கப்பெற்ற துதிகளைச் செய்து ஜலம், பொருக்கின நெல் கதிர், தளிர், துழாய், அருகன்புல், மூளை, இவைகளைக் கொண்டு நடத்தும் பூஜையாலும் நீ ஸந்தோஷம் அடைகின்றனையல்லவா? பலவகைக் கருவிகள் நிறைந்த இப் பூஜையாலும் உனக்கு ஆகவேண்டிய இஷ்டமான ப்ரயோஜனம் ஒன்றும் எங்களுக்குத் தெரியவில்லை. ஸர்வகாலத்திலும் நீயே நேராக ஸமஸ்த புருஷார்த்த ஸ்வரூபனுயிருக்கின்றனை. ஆகையால் புருஷார்த்தங்களைப் பெற விரும்பி நாங்கள் செய்கிற இந்த யாகம் உன்னுடைய ஆராதன மாத்ரமேயாமன்றி, இதனால் உனக்கு ஆகவேண்டிய ப்ரயோஜனம் ஒன்றுமில்லை. பரமபுருஷனே! நாங்கள் செய்யும் ஆராதனமும் உன் பெருமைக்கிடான ஆராதனமாகமாட்டாது. ஆகையால் நாங்கள் எவ்வளவு ஆராதிக்கினும் நீ ஆராதிக்கப் படாதவனே. ஆயினும் நீ உன் பெருங்கருணையால் உன் மஹிமையான மோக்ஷ புருஷார்த்தத்தையும் நாங்கள் விரும்பும் பலனையும் நிறைவேற்றமுயன்று நிறைவாளனுயினும் நிறைவற்றவன்போல் மேலான புருஷார்த்தத்தை அறியாத மூடர்களான எங்களுக்கு இந்த யாகத்தில் புலப்பட்டனை. பூஜிக்கத் தகுந்தவர்களில் தலைவனே! நீ இம்மன்னவன் விரும்பும் வரங்களைக் கொடுக்கும் பொருட்டுத் தோற்றினை. ஆயினும், இந்த ராஜர்ஷியின் யஜ்ஞத்தில் வரத ஸ்ரேஷ்டனுகிய நீ உன் பக்தர்களான எங்களுக்குப் புலப்பட்டமையே பெரிய வரமாயிற்று. வைராக்யத்தினால் கூரிய அறிவாகிற காற்றினால் மனமலங்களையெல்லாம் பறக்கடித்துப் பகவானை ஆராதிக்கையாகிற பரம தர்மத்தில் ஊக்கமுற்று ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணனுன ஆத்மாவின் ஸ்வரூபத்தை அனுஸந்திக்கையால் மனக்களிப்புற்ற முனிவர்களால் எப்பொழுதும் பரிசீலிக்கப்பட்ட

குணகுணங்களை யுடையவனே! உன் குணங்களைப் பேசுகையில் ஸமஸ்த நன்மைகளும் கைகூடும். ஸ்வாமீ! தடுக்குதல் தும்பல் விழுதல் கொட்டாவி விடுதல் துக்கதசை முதலிய ஸமயங்களிலும் ஜ்வரத்திலும் மரணகாலத்திலும் நாங்கள் மெய்ம்மறந்திருப்பினும் செல்வப்பெருக்கனாகிய உன்னை நினைக்க நேரும்படி ஸமஸ்த பாபங்களையும் போக்கவல்லவைகளும் உன் கல்யாண குணங்களைப் பற்றி ஏற்பட்டவைகளுமான உன் திருநாமங்களைச் சொல்லும்படி எங்களுக்கு அருள்புரிவாயாக. அன்றியும், இந்த ராஜரிஷி ஸந்தானத்தை விரும்புகிறான். அதிலும் உன்னைப் போன்ற ஒரு பிள்ளை பிறக்கவேண்டுமென்று ஆசைப்படுகிறான். இவன் ஸந்தானத்தையே பெரிய புருஷார்த்தமாக நினைத்திருக்கின்றான். ஆகையால், பணமில்லாதவன் உமி நொய் நூக்கு முதலிய அற்பங்களை விரும்பிக் குபேரனிடம் போவதுபோல், இவன் இவ்வுலகத்திலுள்ள புருஷார்த்தங்களையும் ஸ்வர்க்கத்தையும் மோக்ஷத்தையும் கொடுக்கவல்லவனும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய உன்னை இதற்காக அனுவர்த்திக்கிறான். இந்த ஸம்ஸாரத்தில் பெரியோர்களின் பாதங்களைப் பணியாத எந்த மனிதன்தான், கர்மவஸ்யர்களால் வெல்ல முடியாததும் நல்வழியில் போகவொட்டாமல் மறைப்பதுமாகிய உன் மாயையால் மதிமயங்காதவன்? எவன்தான் சப்தாதிவிஷயங்களாகிற விஷத்தின் வேகத்தினால் தன்னியற்கை மாறப்பெறாதவன்? ஆகையால் இவன் உன் மாயையால் மதிமயங்கி ஸந்ததியை வேண்டுகிறான். கம்பீரமான கார்யங்களைச் செய்பவனே! தேவர்க்குந் தேவனே! ஸர்வர்க்கும் அந்தராத்மாவாயிருப்பவனே! மூடபுத்திகளான நாங்கள் ஸந்ததியை ஒரு புருஷார்த்தமாக நினைத்து இந்த அற்ப ப்ரயோஜனத்திற்காக உன்னை

அழைத்து அவமதித்தோம். எங்களுடைய இவ்வ பராதத்தை நீ பொறுத்தருளவேண்டும். நீ எல்லோரிடத்திலும் ஸமமாயிருக்குந்தன்மையனல்லவா ?'' என்று ஸ்தோத்ரம் செய்தார்கள். இங்ஙனம் பொருளடக்க முடைய மொழிகளால் துதிக்கப் பெற்ற தேவஸ்ரேஷ்டனாகிய பகவான் பாரதவர்ஷத்தை ஆளும் ப்ரபுவாகிய நாபி மன்னவனாலும் அவனுடைய ருத்விக்குக்களாலும் வணங்கப்பெற்று இரக்கத்துடன் இதை மொழிந்தான்:—'' ஓ ரிஷிகளே! உண்மையே பேசுந்தன்மையரான உங்களால் கிடைக்க அரிதான வரத்தைப்பற்றி வேண்டப்பட்டேன். இம்மன்னவனுக்கு என்னைப்போன்ற புதல்வன் வேண்டுமென்றல்லவோ நீங்கள் வேண்டினீர்கள்? எனக்கு நானே நிகரன்றி மற்றொருவனுமில்லை. நான் ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணனாயிருப்பவன். ஆகையால் இவ்வரம் துர்லபமே. ஆயினும் தவம் வித்யை முதலியவற்றால் ப்ரகாசிக்குந் தன்மையரான அந்தணர்கள் எனக்கு முகமாகையால் அவ்வந்தணர்களின் வார்த்தை பொய்யாகலாகாது. அதற்காக எனக்கு நிகரானவன் மற்றொருவனும் அகப்படாமையால் நானே எனது அம்சத்தினால் இந்த நாபியின் பத்னியாகிய மேருதேவியிடத்தில் அவதரிக்கிறேன்'' என்றான். மேருதேவி கேட்டுக்கொண்டிருக்கையில் அவளுடைய பர்த்தாவான அம்மன்னவனுக்கு பகவான் இங்ஙனம் மொழிந்து அந்தர்த்தானம் அடைந்தான். விஷ்ணுராதனே! இங்ஙனம் பகவான் இந்த யாகத்தில் மஹர்ஷிகளால் ஆராதிக்கப்பட்டு நாபியின் இஷ்டத்தை நிறைவேற்ற முயன்று பெருந்தவத்தரும் ஞானிகளுமான நைஷ்டிகருடைய தர்மங்களை வெளியிடுவதற்குச் சுத்தஸத்வமயமான உருவத்துடன் அவனது பார்யையாகிய மேருதேவியிடத்தில் அவதரித்தான். மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

ருஷபனுடைய சரித்ரத்தைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறூர்:—பிறகு பிறக்கும் பொழுதே பகவானுடைய லக்ஷணங்களெல்லாம் தோன்றப் பெற்று ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் ஸமமாயிருக்கை இந்த்ரிய நிக்ரஹம் சப்தாதி விஷயங்களில் ப்ரீதியில்லாமையாகிற வைராக்யம் எல்லோரையும் அடக்கி யாள்கையாகிற ஐஸ்வர்யம் எல்லாம் நிறைந்திருக்கையாகிற மஹாவிபூதி இவை முதலிய குணங்களுடன் தினந்தோறும் வளர்கின்ற வைபவமுடைய அப் புதல்வனைக் கண்டு மந்த்ரி முதலிய ராஜாங்கத்தவர்களும் ப்ரஜைகளும் ப்ராஹ்மணர்களும் இவன் பூமண்டலத்தை ஆளவேண்டுமென்று மிகவும் ஆசைப்பட்டார்கள். அப்புதல்வன் இப்படி ஸத்வம் தலையெடுத்து மேன்மைக்கிடமான தேஹம் பெரிய குணப் பெருக்கு இந்த்ரியபலம் தேஹபலம் செல்வம் மிகப் பெரிய நடத்தைகளால் விளையும் ப்ரஸித்தி வீர்யம் சௌர்யம் இவைகளால் மிகுந்த ப்ரபாவமுடையவனுயிருந்ததைப் பற்றியும் சீர்மையைப் பற்றியும் அவனுக்கு அவன் பிதாவான நாபிமன்னவன் ருஷபனென்று பேரிட்டான். இந்த்ரன் இந்த ருஷபனிடம் பொறாமையால் விரோதித்து இவனுடைய ராஜ்யத்தில் மழை பெய்யாதிருந்தான். யோகேஸ்வரனுகிய அம்மன்னவன் அதை அறிந்து சிரித்துத் தன் விசித்ர சக்தியால் அஜநாபமென்கிற தன் ராஜ்யத்தில் மழை பொழியும்படி செய்தான். நாபிமன்னவன் தான் ஆசைப்பட்டபடி நற்பிள்ளையைப் பெற்றுப் பகவானுடைய மாயையால் மதிமயங்கி அவனுடைய அம்சாவதாரமான அம்மஹானுபாவனைத் தன் புதல்வனுகப் பாவித்துப் பெரிய ஸந்தோஷத்தினுல் உரைகள் தழதழத்துத் தன் ஸங்கல்பத்தினுல் மானிட உருவங் கொண்டவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய அப்பரம

புருஷனைக் குழந்தாயென்றழைத்து மஹாநந்தத்தை அடைந்தான். பட்டணத்து ஜனங்களும் ப்ரக்ருதிகளும் நாட்டார்களும் தன் புதல்வனிடத்தில் அனுராகத்துட னிருப்பதை அறிந்து நாபிமன்னவன் வர்ணாஶ்ரமதர்ம மர்யாதைகளைப் பாதுகாக்கும்படி அவனுக்குப் பட்டாபி ஷேகம் செய்து ப்ராஹ்மணர்களிடம் ஒப்புவித்து மேரு தேவியுடன் பதரிகாஶ்ரமம் சென்று, பிறர்க்கு மனவருத் தம் விளைக்காமல் விக்னங்களால் தடைபடாது வளர்கின்ற தவத்தினாலும் அங்கங்களோடு கூடின பக்தியோகத்தி னாலும் நரநாராயணனென்னும் பேருடைய வாஸுதேவ பகவானை ஆராதித்து ப்ராரப்தாவஸானகாலம் நேரப் பெற்று முத்தி அடைந்தான். விதுரனே! இந்நாபியின் புகழை இங்ஙனம் பாடுகிறார்கள்:—"ராஜர்ஷியாகிய நாபி யின் சரித்ரம் ப்ரஸித்திபெற்றது: அவ்வாறு மற்றெவ னும் செய்யவல்லவனல்லன். பகவான் இவனுடைய பரி சுத்தமான கர்மத்தினால் ஸந்தோஷம் அடைந்து இவனு க்குப் பிள்ளையாகப் பிறந்தான். இந்த நாபிமன்னவனைத் தவிர ப்ராஹ்மணர்களைப் பாதுகாத்து அவர்களிடத் தில் விஶ்வாஸத்தோடிருப்பவன் மற்றெவனும் இல்லை; இந்த மன்னவனுடைய யாகத்தில் ப்ராஹ்மணர்கள் மங் களமான வஸ்துக்களால் பூஜிக்கப்பட்டுத் தமது மந்த்ர பலத்தினால் யஜ்ஞேஶ்வரனான பரமபுருஷனைக் கண்க ளால் கண்டனுபவிக்கும்படி காட்டினார்கள்." ருஷபதே வன் ராஜ்யாபிஷேகம் பெற்றபின்பு தன்னுடைய ராஜ்ய மாகிய அஜநாபவர்ஷம் ஸ்வர்க்கமோக்ஷங்களை நிறைவேற் றிக்கொடுக்கும்படி கர்மங்களை அனுஷ்டிப்பதற்குரிய இடமென்று நினைத்துப் பிறரும் இங்ஙனமே செய்ய வேண்டுமென்பதற்காகத் தான் ஸர்வஜ்ஞனாயினும் சில நாள் குருகுலவாஸம் செய்து வரங்களைப் பெற்று அக்

குருக்களால் அனுமதி கொடுக்கப்பெற்று, இல்லறவாழ்க்கையிலிருப்பவர் இங்ஙனம் தர்மங்களை அனுஷ்டிக்க வேண்டுமென்பதை அறிவிக்கும் பொருட்டுச் சாஸ்த்ரங்களில் ப்ரவ்ருத்தி கர்மமென்றும் நிவ்ருத்திகர்ம மென்றும் விதிக்கப்பட்ட இருவகைக் கர்மங்களையும் அனுஷ்டித்துக் கொண்டு இந்த்ரன் கொடுத்த ஜயந்தியென்னும் பார்யையிடத்தில் நூறு பிள்ளைகளைப் பெற்றான். அவர்களில் முதல்வன் பரதனென்னும் பேருடையவன்; புகழத்தகுந்த குணங்களுடையவன். அவன் முதற்கொண்டே இந்த அஜநாபவர்ஷத்தை அவன் பேரால் பாரதவர்ஷமென்று வழங்கி வருகிறார்கள். அவன் தம்பிகளான குசாவர்த்தன் இலாவர்த்தன் ப்ரஹ்மாவர்த்தன் ஆர்யாவர்த்தன் மலயகேது பத்ரஸேனன் இந்த்ரஸ்ப்ருக் விதர்ப்பன் கீகடன் என்னும் இவ்வொன்பதின்மரும் மற்ற தொண்ணூறு பேர்களைக் காட்டிலும் ப்ரதானராயிருந்தார்கள். மற்ற தொண்ணூறு பேர்களில் கவி ஹரி அந்தரிக்ஷன் ப்ரபுத்தன் பிப்பலாயனன் ஆவிர்ஹோத்ரன் த்ரமிடன் சமஸன் கரபாஜனன் என்னும் இவ்வொன்பதின்மர் பாகவததர்மத்தை வெளியிட்டுக்கொண்டு மஹாபாகவதர்களாயிருந்தார்கள். அவர்களின் சரித்ரம் பகவானுடைய மஹிமைகள் உள்ளடங்கப்பெற்று வளர்ந்திருக்கும்; சித்த சாந்தியை விளைக்கும். அதை மேல் வஸுதேவநாரத ஸம்வாதத்தில் சொல்லப்போகிறோம். அவர்க்குத் தம்பிகளான மற்ற எண்பத்தோரு பேர்களும் தந்தையின் ஆஜ்ஞையை அனுஸரித்து க்ருஹஸ்தாஶ்ரம ஸம்பத்தெல்லாம் நிறைந்து ஸாங்கவேதாத்யயனஞ் செய்தவர்களும் யஜ்ஞானுஷ்டான சீலர்களும் ஸதாசாரத்தினால் பரிசுத்தர்களுமா யிருந்தமைபற்றி ப்ராஹ்மணர்களாய் விட்டார்கள். ருஷபனென்னும்பேர்

பூண்டு அவதரித்த பகவான் கர்மத்திற்குட்படாமல் ஸ்வ தந்த்ரனாய் அக்கர்மத்தினால் விளையும் அனர்த்த பரம் பரைகள் எவையும் தீண்டப்பெறாமல் கேவலாநந்தமய மான ஸ்வரூபத்தை அனுபவிக்கும் தன்மையுள்ள ஸர் வேஸ்வரனாயிருந்தும், தர்மமார்க்கத்தை அறியாதவர்க் குக் கால வசத்தினால் பாழான தர்மத்தைத் தனது ஆசா ரத்தினால் அறிவிக்க முயன்று தர்மம் அர்த்தம் புகழ் ஸந் தானார்த்தமான போகம் மோக்ஷம் ஆகிய இந்நன்மைகள் ஸித்திக்குமாறு ப்ராக்ருதன்போல் வர்ணாஸ்ரம தர்மங் களை அனுஷ்டித்துக்கொண்டு ஸமஸ்த ப்ராணிகளிடத்தி லும் ஸமனாயிருக்கை ராகாதி தோஷங்களால் மனங் கலங்கப் பெறாமை தாழ்ந்தவரையும் தன்னோடொக்க நினைக்கை பிறர்துக்கம் கண்டு வருந்துகை முதலிய குணங்களெல்லாம் அமைந்து க்ருஹஸ்தாஸ்ரமத்தில் ஜனங்களை நியமித்துக் கொண்டிருந்தான். மேன்மை யுடையவர் ஏதேது செய்வார்களோ அதையெல்லாம் உலகத்திலுள்ளவர் அனுஸரிப்பார்களாகையால் அம் மன்னவன் மேன்மையுடைய தனது அனுஷ்டானத்தி னால் உலகங்களைத் திருத்தப் பார்த்தான். அவன் ஸகல தர்மங்களும் உள்ளடங்கின வேதரஹஸ்யத்தையெல்லாம் தானே அறிந்தவனாயினும் ப்ராஹ்மணர்களைக் கேட்டு அவர்கள் காட்டின வழியின்படி ஸாமம் முதலிய உபாயங் களால் ப்ரஜைகளைப் பாதுகாத்து வந்தான். த்ரவ்யம் தேசம் காலம் வயது ஸ்ரத்தை ருத்விக்குக்கள் பலவகை அங்கங்கள் இவையெல்லாம் அமைத்துக்கொண்டு ஸம ஸ்த யாகங்களையும் சாஸ்த்ரங்களில் விதித்தபடி ஒவ் வொன்றையும் நாறு நாறு தடவைகள் அனுஷ்டித்தான். ருஷபதேவன் இந்தப் பாரதவர்ஷத்தைப் பாதுகாத்து வருகையில், தமது நாதனாகிய அந்த ருஷபனிடத்தில்

தமக்கு நாள்தோறும் மேன்மேலும் ஸ்னேஹம் வளரவேண்டுமென்பதைத் தவிர எவனும் தனக்கில்லாத மற்ற புருஷார்த்தத்தை எதையும் மற்றொருவனிடத்தில் ஒருகாலும் சிறிதும் எந்தக்காரணத்தைப்பற்றியும் அபேக்ஷிக்கவில்லை. அந்த ருஷபன் ஒருகால் திரிந்துகொண்டே சென்று ப்ரஹ்மாவர்த்த தேசத்திற்குப் போனான். அங்கு ப்ரஹ்ம ரிஷிகள் பலரும் ஸபைசேர்ந்திருந்தார்கள். அம்மன்னவன் அந்த ஸபையில் சென்று ப்ரஜைகள் கேட்டுக்கொண்டிருக்கையில் மனவூக்கமுடையவரும் வணக்கம் ஸ்நேஹம் ஸந்தோஷம் இவற்றின் மிகுதியால் தனக்கு ஸ்வாதீனர்களுமான தன் புதல்வர்களை நோக்கி அவர்களுக்குக் கற்பித்துக்கொண்டு இங்ஙனம் மொழிந்தான்.

நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

{ பரதன் தன் பிள்ளைகளுக்கு மோக்ஷ தர்மத்தை உபதேசித்தலும், தான் பரமஹம்ஸர்களின் தர்மத்தை அனுஷ்டித்தலும். }

ருஷபதேவன் சொல்லுகிறான்:—பிள்ளைகளே! இவ்வுலகத்தில் ப்ராணிகளுடைய தேஹங்களுக்குள் இம்மனுஷ்யதேஹம் வருந்தி ஸம்பாதிக்கத் தக்கவைகளும் கடைசியில் துக்கரூபங்களுமான சப்தாதி விஷயங்களை அனுபவிப்பதற்காக ஏற்பட்டதன்று. அவை அமேத்யத்தைப் புசிக்கிற பன்றி முதலிய ஜந்துக்களுக்கும் உள்ளவைகள். ஆகையால் கர்மங்களைத் துறந்து ஸம்ஸாரத்தினின்று விடுபட்டு அளவிறந்த ப்ரஹ்மாநந்தத்தை அனுபவிக்கும்படி பகவதாராதன ரூபமான தவத்தை அனுஷ்டிக்கும் பொருட்டே ஏற்பட்டது. பெரியோர்களைப் பணிதல் மோக்ஷத்திற்கு ஹேதுவென்றும், பெண்டிர்களிடத்தில் மனப்பற்றுடையவரோடு ஸஹவாஸம்

நேரினும் அது ஸம்ஸாரத்திற்கு ஹேதுவாமென்றும் சொல்லுகிறார்கள். ஸுகம் துக்கம் முதலியவற்றில் மனவிகாரமற்று மனத்தையும் மற்ற இந்த்ரியங்களையும் வென்று பொறுமையும் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஹிதஞ் செய்யுந் தன்மையும் அமைந்து பரோபகாரத்தில் மன ஆக்கமுற்று ஸர்வேஶ்வரனாகிய என்னிடத்தில் ஸ்நே ஹத்தையே புருஷார்த்தமாக நினைத்து, தேஹயாத்ரை யே பொழுது போக்காயிருக்கும் ப்ராக்ருத ஜனங்களி டத்திலும் பெண்டிர் புதல்வர் நண்பர் முதலிய பல பற் றுக்களுக்கிடமான க்ருஹஸ்தாஶ்ரமத்திலும் ப்ரீதியின்றி உலகத்தில் தேஹயாத்ரைக்கு வேண்டியவற்றை யொழிய மற்ற எதையும் விரும்பாதிருப்பவர்களே பெரியோர்க ளாவார்கள். ஜீவன் தேஹத்தையே ஆத்மாவாக ப்ர மித்து இந்த்ரியங்களின் ப்ரீதிக்காக முயன்று பலவகைக் கார்யங்களைச் செய்கின்றான். இது நிச்சயம். பூர்வஜன் மத்தில் இந்த்ரியங்களின் த்ருப்திக்காகச் செய்த கர்மத் தினாலல்லவோ இப்பொழுது பல வருத்தங்களுக்கிடமா யிருப்பதும் நிலையற்றதுமாகிய இத்தேஹத்தைப் பெற் றான். மீளவும் அங்ஙனமே செய்வானாயின், ஜன்மாந்த ரத்தைப் பெற்று வருந்தவேண்டுமல்லவா? ஆகையால் அங்ஙனம் இந்த்ரியங்களின் ப்ரீதிக்காகப் பல கர்மங்க ளைச் செய்வது எனக்கு நலமாகத் தோற்றவில்லை. ஆத் மஸ்வரூபத்தை அறியவேண்டுமென்னும் விருப்பம் உண் டாகாத வரையிலும் அவ்வஜ்ஞானத்தினால் ஆத்மஸ்வ ரூபம் மறைந்து தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமிக்கும் புத்தி தொடர்ந்து வரும். இந்த்ரியங்களின் த்ருப்திக் காகக் காமங்களைச் செய்யும் வரையில் மனம் மேன்மே லும் சரீரஸம்பந்தம் விளையுமாறு கர்மங்களில் தாழ்வுற் றிருக்கும். இங்ஙனம் கர்மஸம்பந்தத்திற்கிடமான அவித்

யையால் தீண்டப்பட்டிருப்பது பற்றி மனம் ஜீவனைக் கர்மங்களில் தூண்டுகிறது. அதனுல் தேஹபந்தத்தைப் பெறுகிறுன். ஆகையால் ஸர்வாந்தராத்மாவான என்னிடத்தில் ப்ரீதிரூபமான பக்தி உண்டாகாத வரையில் தேஹபந்தத்தினின்று விடுபடமாட்டான். தனக்குப் புருஷார்த்தமான ஆத்மபரமாத்மாக்களின் உண்மையை அனுஸந்திப்பதில் ஊக்கந்தவறுதலின்றி 'சப்தாதிவிஷயங்களில் இந்த்ரியங்களுக்குள்ள விருப்பம் ஆத்மாவுக்கு இயற்கையில் ஏற்பட்டதன்று. தேஹஸம்பந்தத்தைப் பற்றினது' என்பதை விவேகத்துடன் ஆராய்ந்தறியாதிருக்கும் வரையில் ஜீவன் ஆத்மபரமாத்மாக்களின் ஸ்வரூபத்தை மறந்து அறிவழிந்து ஸத்ரீபுருஷர்களின் புணர்ச்சியையே முக்யமாகப்பெற்ற இல்லறவாழ்க்கையில் இறங்கி அதில் பலவகையான தாபங்களை அனுபவிக்கிறுன். ஸத்ரீபுருஷர்கள் ஒருவரையொருவர் புணரும் புணர்ச்சியே அவ்விருவர்க்கும் மனத்தில் முடிச்சுபோல் அவிழ்க்கமுடியாத கர்மவாஸனைக்கிடமென்று சொல்லுகிறுர்கள். இக்கர்மவாஸனையே ஜீவனுக்கு தேஹத்தில் நானென்னும் புத்தியும் மனை கழனி புதல்வன் நண்பன் பணம் முதலியவற்றில் என்னுடையதென்னும் புத்தியுமாகிற பெரிய மோஹத்திற்கிடமாகின்றது. போக்கமுடியாமல் உறுதியாயிருப்பதும் நெடுநாள் கர்மங்களை ஓயாமல் செய்தமையால் ஏற்பட்டதும் மேன்மேலும் கர்மங்களைச் செய்வதற்கு ஹேதுவுமாகிய ஹ்ருதய க்ரந்தியென்கிற வாஸனை தீரும்பொழுதுதான் ஜீவன் இந்த ஸம்ஸாரத்தினின்று விடுபட்டுப் புண்ய பாபங்களைத் துறந்து பரமபுருஷனைப் பெறுவான். பரிசுத்தனும் குருவுமாகிய என்னிடத்தில் பக்தியும் அனுவ்ருத்தியும் சப்தாதி விஷயங்களில் ப்ரீதியில்லாமையும் குளிர் வெயில் முதலியவற்

றைப் பொறுக்கையும் இஹலோகம் பரலோகம் ஆகிய எல்லா இடங்களிலும் ஜந்துவுக்கு வ்யஸனம் தொடர்ந்தே வருமென்கிற அனுஸந்தானமும் நன்மை தீமைகளை அறியவேண்டுமென்னும் விருப்பமும் உபவாஸரூபமான தவமும் வினைசை தீரப்பெறுகையும் என்னுடைய ஆராதன ரூபமான வர்ணாஸ்ரம கர்மங்களைச் செய்கையும் என் கதைகளைக் கேட்கையும் என்னையே தெய்வமாக நினைத்திருக்கும் பாகவதர்களோடு ஸஹவாஸமும் என் குணங்களைக் கீர்த்தனம் செய்கையும் வைரமில்லாமையும் எல்லாவற்றையும் ஸமமாக நினைக்கையும் இந்த்ரிய நிக்ரஹமும் தேஹத்தில் நானென்னும் புத்தி வீடு வாசல் முதலியவற்றில் என்னுடையதென்னும் புத்தி இவற்றைத் துறக்கையும் ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் ஸ்வரூபத்தை அனுபவிக்கையும் பரிசுத்தமான ஆஹாரத்தை உட்கொள்கையும் ப்ராணன் இந்த்ரியம் மனம் இவற்றை வெல்லுகையும் ஸதுபாயத்தில் ஶ்ரத்தையும் ஸ்த்ரீஸம்போகமில்லாமை முதலிய ப்ரஹ்மசர்யமும் எப்பொழுதும் செய்யவேண்டிய செயல்களில் மனவூக்கம் தவறாமையும் வாக்கை அடக்குகையும் எல்லாம் பரப்ரஹ்மஸ்வரூபமே யென்கிற நினைவும் சாஸ்த்ரஜ்ஞானத்தினால் கிளர்கின்ற த்யானரூபமான ஜ்ஞானமும் ஸமாதியோகமும் ஆகிய இவற்றையெல்லாம் தைர்யம் ப்ரயத்னம் நிச்சயம் இவற்றோடு நடத்திக்கொண்டு வருவானாயின் ஹ்ருதயக்ரந்தி யென்கிற வாஸனையை அழித்து அஹம்புத்திக்கு விஷயமான தேஹத்தைத் துறப்பான். பெரியோர்கள் உபதேசித்தபடி இந்த யோகத்தை அனுஷ்டித்துக் கர்மங்களுக்கு வழிகாட்டுகிற அஹங்கார மமகாரங்களாகிற அவித்யையால் ஏற்பட்ட வாஸனை யென்னும் ஹ்ருதயக்ரந்தியை மனவூக்கத்துடன் நன்று

கப் போக்கிக்கொண்டு அப்பால் இதினின்று மீள வேண்டுமன்றி இடையில் இதைக் கைவிடலாகாது. என்னுடைய ஸாருப்யத்தை விரும்பி என் அனுக்ர ஹத்தையே ப்ரயோஜனமாக நினைப்பவன் தந்தையாயின் இதை அறியாத புதல்வர்களுக்கும், ஆசார்யனாயின் இதை அறியாத சிஷ்யர்களுககும், அரசனாயின் இதை அறியாத ப்ரஜைகளுக்கும், இதைக் கற்பிக்கவேண்டும். கர்மங்களில் மதிமயங்கின அவர்களை மீளவும் அக் கர்மங்களிலேயே மூட்டலாகாது. இந்த யோகத்தைச் சொல்லியும் அவர்கள் கர்மவாஸனையால் இதை அங்கீ கரிக்காமற்போயினும் அவர்கள்மேல் கோபம் கொள் ளாமல் மேன்மேலும் தொடர்ந்து அவர்களுக்கு இதில் ருசியை விளைவிக்கவேண்டும். உலகத்திலுள்ள ஜனங்கள் அறிவற்றவர்கள். அவர்கள் பெரிய ஆவலுடன் சப்தாதி விஷயங்களைப் பெறுதற்காகவே பல யத்னங்களைச் செய் யுந்தன்மையுடையவர்கள், அவர்கள் மதிமயங்கி அற்ப ஸுகங்களுக்கிடமான சப்தாதி விஷயங்களுக்காக ஒரு வர்மேலொருவர் த்வேஷத்தையும் ஏற்றுக்கொள்கிறார் கள்; மேலே தங்களுக்கு மஹத்தான துக்கம் வரப் போகிறதென்பதை அறியவேமாட்டார்கள். நன்மை தீமைகளை உணர்ந்து மன இரக்கமுடைய எந்த விவேகி தான் இங்ஙனம் அஜ்ஞான ஸாகரத்தில் மூழ்கிக் கிடக் கின்ற அத்தகைய ஜந்துக்களைக் கண்டும் கெடுமதி யரான அவர்களை மீளவும் அக்கர்ம மார்க்கத்திலேயே தூண்டுவான்? தப்புவழியில் நடக்கிற குருடனைக் கண் டும் வழிதெரிந்தவர் மீளவும் அதே வழியில் நடக்கும்படி சொல்லுவார்களோ? ஸம்ஸாரத்தில் விழுந்துழல்கின்ற புருஷனுக்கு இந்த யோகத்தை உபதேசித்து அவனை அதினின்று விடுவிக்க யத்னம் செய்யாத ஆசார்யன்

ஆசார்யனேயல்லன். அத்தகைய பந்து பந்துவல்லன். தந்தையும் தந்தையல்லன். தாயும் தாயாகமாட்டாள். தெய்வமும் தெய்வமன்று. கணவனும் கணவனல்லன். இந்த என் சரீரம் மற்ற சரீரங்களோடு நிகர்த்து நிரூபிக்கத் தக்கதன்று. என்னுடைய ஹ்ருதயம் ஸத்வகுணம் நிறைந்திருக்கும். ஸத்வகுணத்தில் தர்மம் முன் நின்றிருக்கும். அதர்மம் பின்னே தள்ளுண்டிருக்கும். இங்ஙனம் என் சரீரம் ஸத்வகுணப்ரசுரமானதுபற்றியே பெரியோர்கள் என்னுடைய மேன்மையைக் கருதி என்னை ருஷபனென்று சொல்லுகிறார்கள். ஸத்வப்சுரமான ஹ்ருதயத்தையுடைய அச்சரீரத்தினின்றுண்டான நீங்களெல்லோரும் ஸத்வம் தலையெடுத்தவர்களே. ஆகையால் உங்கள் ஸஹோதரனும் பூஜ்யனுமாகிய இந்தப் பரதனைக் கபடமின்றிப் பணிந்து வருவீர்களாக. அதுவே எனக்குச் செய்யும் சுச்ரூஷையும் ப்ரஜைகளைப் பாதுகாக்கையுமாம். உலகத்திலுள்ள பூதங்களுக்குள் ஸ்தாவரங்களைக் காட்டிலும் ஜங்கமங்களும், அவற்றில் அறிவில்லாத பூச்சிப் புழு முதலியவற்றைக் காட்டிலும் அறிவுடைய பசு பக்ஷி முதலியவைகளும் சிறப்புடையவை. அவற்றைக் காட்டிலும் மனுஷ்யர்களும் அவர்களைக்காட்டிலும் ப்ரமதகணங்களும், அவர்களைக் காட்டிலும் கந்தர்வர்களும், அவர்களைக் காட்டிலும் ஸித்தர்களும், அவர்களைக் காட்டிலும் கின்னராதிகளும், அவர்களைக் காட்டிலும் அஸுரர்களும்,அவர்களைக்காட்டிலும் இந்த்ரன் முதலிய தேவர்களும், அவர்களைக்காட்டிலும் தக்ஷர் முதலிய ப்ரஹ்மபுத்ரர்களும் சிறப்புடையவர். அவர்களைக்காட்டிலும் ருத்ரன் மேலானவன். அவனைக்காட்டிலும். ப்ரஹ்மதேவன் மேற்பட்டவன். அவனைக்காட்டிலும் நான் மேற்பட்டவன். நான் ப்ராஹ்மணர்களையே தெய்வமாக

வுடையவன். ஆகையால் ப்ராஹ்மணர்கள் எல்லோரி லும் மேன்மையுடையவர்கள். ஓ ப்ராஹ்மணர்களே! நான் மற்ற எந்த ப்ராணியையும் ப்ராஹ்மணர்களு க்கு ஈடாக நினைக்கமாட்டேன். அந்த ப்ராஹ்மண னாகிற அக்னியில் ஹோமம் செய்த அன்னாதிகளை நான் ப்ரீதியுடன் புசிக்கின்றேன். வைதிகமான யாகாதி கர்மங்களில் அக்னியில் ஹோமம் செய்த அன்னாதி களை நான் அங்ஙனம் புசிக்கிறதில்லை. அனாதியான வேத மாகிற என் சரீரத்தை இவ்வுலகில் ப்ராஹ்மணர்கள் தரித் துக்கொண்டிருக்கிறார்கள். மிகவும் பரிசுத்தமான ஸத்வ குணம் இவர்களிடத்தில் நிலைநின்றிருக்கின்றது. இந்த ப்ராஹ்மணர்களிடத்தில் சமம் தமம் ஸத்யம் அனுக்ரஹம் தவம் பொறுமை ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையைப் பற்றின அனுபவம் ஆகிய இவையெல்லாம் நிலைநின்றிருக் கின்றன. உலகத்தில் மேன்மையுடையவர்களான ப்ரஹ் மாதி தேவதைகளைக் காட்டிலும் மேலாகி ஸ்வர்க்கமோ க்ஷங்களைக் கொடுக்கும் ப்ரபுவாகிய என்னிடத்திலும் அவர்களுக்கு வேண்டிப்பெறவேண்டியது ஒன்றுமே இல்லை. அவர்கள் கைம்முதலொன்றுமில்லாத ஏழைகள். என்னிடத்தில் பக்தியைச் செய்யுந்தன்மையரான அவர்க ளுக்கு மற்ற ஐஹிகபுருஷார்த்தத்தினால் ஆகவேண்டியது என்னிருக்கின்றது? (இங்ஙனம் என்னிடத்தில் பக்தி யைத் தவிர மற்றொன்றையும் விரும்பாத மஹானுபாவ களான ப்ராஹ்மணர்களை அன்புடன் பணிந்து வருவீர்க ளாக). புதல்வர்களே! ப்ரக்ருதி புருஷன் ஈச்வரன் என் கிற இம்மூன்று தத்வங்களும் ஒன்றுக்கொன்று விலக்ஷண மாயிருப்பவையென்னும் புத்தியுடைய நீங்கள் ஜங்கமஸ் தாவரரூபமான ஸமஸ்தபூதங்களும் என்னுடைய சரீரங் களே யென்று பாவித்து அவற்றை அடிக்கடிவெகுமதிக்க

வேண்டும். அதுவே என்னுடைய ஆராதனமாம். மனம் வாக்கு கண் மற்ற இந்த்ரியங்கள் ஆகிய இவற்றின் வ்யாபாரத்திற்கு ப்ரத்யக்ஷமான பலன் என்னை ஆராதிக்கையே. என்னை ஆராதிக்காத புருஷன் காலபாசத்தில் மூட்டுவிக்கவல்ல மஹா மோஹத்தினின்று தன்னை விடுவித்துக்கொள்ள எவ்விதத்திலும் வல்லவனாகமாட்டான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—மஹானுபாவனும் ஸமஸ்த பூதங்களுக்கும் நண்பனுமாகிய ருஷபனென்னும் பேருடைய பகவான் தன் புதல்வர்களுக்கு நன்மை தீமைகள் நன்றாகத் தெரியுமாயினும் அதை அறியாத உலகத்திற்குக் கற்பிக்கும் பொருட்டுத் தன் பிள்ளைகளுக்கு அதை விரிவாக உபதேசித்து,ப்ரவ்ருத்தி கர்மத்தினின்று நீங்கி இந்த்ரியங்களை அடக்கியாளுந்தன்மையரும் பகவானுடைய திவ்ய மங்கல விக்ரஹத்தை த்யானிக்குந் தன்மையருமான பெரியோர்களுக்குப் பரமஹம்ஸர்கள் ஆசரிக்குந் தர்மமாகிய பக்தி ஜ்ஞான வைராக்யங்களைக் கற்பிக்க விரும்பித் தன் புதல்வர்களில் தலைவனும் பாகவதர்களையே முக்யமாகப் பணியுந் தன்மையனும் பாகவத ஸ்ரேஷ்டனுமாகிய பரதனென்னும் புதல்வனைப் பூமண்டலத்தை ஆளும்படி அபிஷேகஞ்செய்து ஆடையாபரணம் முதலிய சரீர பரிக்ரஹங்களையெல்லாம் வீட்டிலேயே துறந்து ஆகாயத்தையே ஆடையாகக்கொண்டு தலைமயிர்களை விரித்துப் பித்தம் பிடித்தவன் போன்று வைதிகாக்னியை ஆத்மஸமாரோபணம்செய்து ப்ரஹ்மாவர்த்தத்தினின்று புறப்பட்டுப் போனான். பிறரால்பேசப்பெற்றும் ஜனங்களினிடையில் மூடன் குருடன் செவிடன் ஊமை பிசாசம் பித்தம் பிடித்தவன் இவர்களைப் போன்று எல்லோரும் அவமதிக்கும்படியான வேஷம் பூண்டு மௌன வ்ரதத்தை ஏற்றுக்கொண்டு அதுமுதல்

பேசாதிருந்தான். அவன் வழிகள்தோறும் ஆங்காங்குள்ள பட்டணம், க்ராமம், பொன் வெள்ளி முதலியன விளையுமிடம், பயிர்செய்பவர் வஸிக்கும் க்ராமம், வேடர் முதலியவர் வஸிக்குமிடம், பூந்தோட்டம் முதலிய இடம், ஸேனை இறங்குமிடம், பசுக்கள்கட்டுமிடம், இடைச்சேரி, யாத்ரை செய்பவர்களின் கூட்டம், பர்வதம், ரிஷிகளின் ஆஶ்ரமம் முதலிய இடங்களில் மூடஜனங்களால் விரட்டுதல் அடித்தல் மூத்ரம் பெய்தல் காறிஉமிழ்தல் கல்லெடுத்தடித்தல் மண்ணைவாரி இறைத்தல் அபானம் விடுதல் துர்ப்பாஷையாக வைதல் ஆகிய இவற்ருல் ஈக்களால் காட்டானைபோல் அவமதிக்கப் பெறினும் அவற்றைப் பொருள் செய்யாமல் ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அனுபவிக்கையாகிற தன் மஹிமையில் தான் நிலைநின்றிருக்கையால், அசேதனமான ப்ரக்ருதியின் பரிணாமமும் அஜ்ஞானிகள் ஆத்மாவென்று ப்ரமிப்பதற்கிடமுமாகிய தேஹத்திலும் அதைத்தொடர்ந்த மற்றவையிலும் அஹங்காரமமகாரங்களை ஏற்றுக்கொள்ளாமல் ஸர்வஸ்வரூபியான பரப்ரஹ்மத்தின் ஸாக்ஷாத்காரத்தினுல் ஒருவாருன மதியுடையவனுகித் தனியனுகவே பூமி முழுவதும் சுற்றினுன். அவனுடைய கை கால் மார்பு புஜம் தோள் கழுத்து முகம் முதலிய அவயவங்களெல்லாம் மிகவும் மென்மைக்கிடமாகி அழகாயமைந்திருக்கும். அவன் இயற்கையாகவே அழகாயிருப்பான். ஸ்வபாவ ஸித்தமான புன்னகையினுல் அழகான முகமுடையவன்; அப்போதலர்ந்த செந்தாமரை மலர்போன்று குளிர்ந்த கருவிழிகள் அமைந்து சிவந்து நீண்ட கண்களால் அழகாயிருப்பான். ஏற்றக்குறைவின்றி அழகான கபோலம் காது கழுத்து மூக்கு இவைகளையுடையவன். புன்னகை உள்ளடங்கின முகவிகாஸமாகிற மஹோத்ஸவத்தினுல்

பட்டணத்துப் பெண்களின் மனத்தில் மன்மதனை எழுப் புந்திறமையுடையவன். அவன் இத்தகையனாயினும் பொன் னிறமுடைய தன் சுரும்பார்ந்த குழற்கற்றையைப் பின் னே விரித்து அழுக்கடைந்த சரீரத்துடன் பேய் பிசாசு முதலியவற்றால் பிடியுண்டவன்போல ஜனங்களுக்குத் தோற்றினன். அவன் உலகத்திலுள்ள ஜனங்களெல்லோ ரும் யோகத்திற்கு நேரே விபரீதமாக நடப்பதைக் கண்டு அதற்கு ப்ரதிகாரம் செய்வது சிந்தைக்கிடமென்று நினை த்து மலைப்பாம்புபோல் ஒரே இடத்தில் இருந்து ப்ராரப்த கர்மத்தை அனுபவிக்கையாகிற அஜகரவ்ரதத்தை அனு ஷ்டிக்கமுயன்று ஓரிடத்தில் படுத்து அன்னம் முதலியவற் றைப் புசிப்பதும் அவல் முதலியவற்றை மெல்லுவதும் ஜலம் முதலியவற்றைப் பருகுவதும் அதே இடத்தில் படுத் திருந்தே மல மூத்ரங்களை விடுவதுமாகி மலத்தின்மேல் புரண்டு உடம்பெல்லாம் அந்தமலத்தையே பூசிக்கொண் டிருந்தான். அவனுடைய மலம் நல்லமணம் வீசிக்கொண் டிருந்தது. அம்மலத்தின் மேல் பட்டு வீசுங்காற்று நாற் புறத்திலும் பத்து யோஜனை தூரம் வரையில் நன்மணம் கமழ்ந்தது. இங்ஙனம் பசு ம்ருகம் காக்கை இவற் றைப்போல் நடப்பதும் நிற்பதும் இருப்பதும் படுப்பது மாயிருந்தான். மற்றும் காக்கை ம்ருகம் பசு இவற்றைப் போல் புசிப்பதும் பருகுவதும் மலமூத்ரங்களை விடுவது மாயிருந்தான். விதுரனே! ஓயாமல் மஹாநந்தத்தை அனுபவிப்பவனும் மோக்ஷத்தைக் கொடுக்கும் ப்ரபுவு மாகிய அந்த ருஷபனென்னும் பகவான் இவ்வாறு பல விதமான யோகவ்ரதங்களை அனுஷ்டித்துக்கொண்டு தன்னைச் சரீரமாகவுடையவனும் ஸமஸ்த பூதங்களுக்கும் அந்தராத்மாவுமான வாஸுதேவ பகவானுடைய ஸ்வரூ பத்தைத் தனக்குத் தெரியாதபடி மறைக்கும் கர்மங்க

ளெல்லாம் தொலையப்பெற்று எல்லாம் பரப்ரஹ்மஸ்வரூப மே யென்னும் நினைவு நிலைநின்று பரப்ரஹ்மத்திற்கு உட்படாத ஸ்வதந்த்ரவஸ்து உண்டென்கிற பேதபுத்தி சிறிதும் இல்லாமல் ஸமஸ்த புருஷார்த்தங்களும் கைகூடப் பெற்று நிறைவாளனாயிருந்தான். ஆனதுபற்றி, யோக மஹிமையால் [1]வைஹாயஸம் மனோஜவம் அந்தர்த்தானம் பரகாய ப்ரவேசம் தூரதர்சனம் தூரஶ்ரவணம் முதலிய யோகைஶ்வர்யங்கள் தானே உண்டாயினும் ஸம்ஸார வர்த்தகங்களென்றும் மோக்ஷவிரோதிகளென்றும் அவற்றை அவன் மனத்தினாலும் அபிநந்திக்கவில்லை. ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ருஷபதேவன் சரீரத்தைத் துறந்த வரலாறு.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—மஹானுபாவரே! ஆத்மஸ்வரூபத்தை அறிந்து அதனால் மனக்களிப்புற்றவர்களும் யோகத்தினால் கிளர்ந்த ஜ்ஞானமாகிற அக்னியில் கர்மபீஜங்களை அழித்தவர்களுமான யோகிகளுக்கு யோகமஹிமையால் தானே ஏற்பட்ட வைஹாயஸம் முதலிய ஐஶ்வர்யங்கள் ஜன்மஜராமரணாதிவருத்தங்களுக்கிடமான ஸம்ஸாரத்தை மீளவும் விளைக்க வல்லவையாகமாட்டாவல்லவா? அப்படியிருக்க அம்மன்னவன் யோகம் கைகூடினவனாயிருந்தும் அவற்றை ஏன் பாராட்டாமல் பயந்தான்?

---

1. வைஹாயஸம்-ஆகாயத்தில் ஸஞ்சரிக்கை. மனோஜவம்-மனோவேகம்போன்ற தேஹவேகம் உண்டாகப்பெறுகை. அந்தர்த்தானம்-இருந்த இடத்திலேயே இருந்து பிறர்கண்ணுக்குத் தெரியாமல் மறைகை. பரகாயப்ரவேசம்-தன் சரீரத்தைவிட்டுப் பிறர்சரீரத்தில் ப்ரவேசித்தல். தூரதர்சனம்-வெகுதூரத்திலிருப்பதையும் பார்க்குந்திறமை. தூரஶ்ரவணம்-வெகுதூரத்திலுள்ளதையும் கேட்குந்திறமை.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:-மன்னவனே! நீ சொன்னது வாஸ்தவம். ஆயினும், இவ்வுலகத்தில் சிலர் மனத்தை வென்றிருப்பினும் நின்றபடி நில்லாதிருக்குந்தன்மையுடைய அம்மனத்தை நம்புகிறதில்லை. துர்ப்புத்தியுள்ள வேடன் ம்ருகங்களை நம்பச்செய்து இனியன்போலிருந்து அவை நம்பினபின்பு அவற்றை வதிப்பதுபோல், மனமும் படிந்தாற்போலிருந்து நம்பவைத்துத் திடீரென்று ஏமாற்றி ஸம்ஸாரத்தில் கொண்டுபோய் மூட்டிவிடும். ஆகையால் அதை எப்பொழுதும் நம்பாமல் ஊக்கமாகவே அடக்கிக்கொண்டு வரவேண்டும். இங்ஙனமே பெரியோர்கள் சொல்லுகிறார்கள்:-"மனம் நிலையற்றிருக்கையில் ஒருநாளும் ஒரு விஷயத்திலும் பற்றுசெய்யலாகாது. நாம் மனத்தை வென்றுவிட்டோமென்று நம்பி அதைப் போனவழியே விடுவானாயின் நெடுநாள் ஸம்பாதித்த பகவதுபாஸனரூபமான ஜ்ஞானமெல்லாம் அழிந்துபோய்விடும். யோக மஹிமையால் விளையும் ஐச்வர்யங்கள் காமத்திற்கு இடங்கொடுப்பவை. அத்தகைய யோகைச்வர்யங்களை மனம் நமக்கு ஸ்வாதீனமென்று விரும்புவானாயின், காமத்திற்கு இடங்கொடுத்தாற்போலாகும். பிறகு காமத்தைத் தொடர்ந்து வருமவைகளான க்ரோதம் லோபம் முதலிய சத்ருக்களும் வந்து புகுவார்கள். பரபுருஷனை விரும்பும்பெண் நம்பின கணவனை வஞ்சித்துக் கள்ளபுருஷனைக் கைப்பற்றிக் கணவனை முடிப்பதுபோல், மனத்தை நம்புவானாயின் அது அவனை வஞ்சித்துக் காமம் க்ரோதம்முதலிய சத்ருக்களுக்கு இடங்கொடுத்து அவர்கள் மூலமாய் அவனை அழித்துவிடும். ஆகையால் மனத்தை நம்பலாகாது. யோகைச்வர்யங்களை அனுபவிக்க விரும்புவானாயின், காமம் க்ரோதம் லோபம் மதம் மோஹம் பயம் முதலியவைகளும் கர்மபந்தமும் மேல் விழுந்துவரும். இங்ஙனம் பல அனர்த்

தங்களுக்கிடமான அந்த யோகைச்வர்யத்தை மதியுடையவன் எவன் விரும்புவான்?''. அப்பால் அம்மன்னவன் ஸமஸ்த லோகபாலர்களுக்கும் சிரோபூஷணம் போன்றவனாயினும் அவமதிக்கும்படியான பலவகை வேஷம் பாஷை நடத்தை இவைகளால் மூடன்போல் தோற்றி யோகிகள் தேஹத்தை விடவேண்டியவகை இத்தகையதென்பதை அறிவிக்கமுயன்று தன் தேஹத்தை விட விரும்பி அஜ்ஞானமாகிற மறைவற்றமையால் ஆத்மாவைப் பரமாத்மாவிடத்தில் அபேதமாக ஸாக்ஷாத்கரித்துத் தேஹத்தில் என்னுடையதென்னும் நினைவுமாறப்பெற்று அத்தேஹத்தினின்றும் நீங்கினன். இங்ஙனம் அம்மன்னவன் தேஹாபிமானத்தைத் துறந்தவனாயினும் ப்ரக்ருதி வாஸனையின் தொடர்ச்சியால் அபிமானமுடையவன் போல் பூமி முழுவதும் திரிந்துகொண்டுவரும்பொழுது ஒரு கால் தெய்வாதீனமாய்க் கொங்கணவங்கவடகுடகங்களென்கிற தக்ஷிண கர்ணாடதேசங்களைச் சேர்ந்து குடகாசலத்தின் உபவனத்தில் வாயில் கற்களைக் கபளம் போல் போகட்டுத் தலைமயிர்களை விரித்து அரையில் ஆடையின்றிப் பித்தம் பிடித்தவன்போல் உலாவினன். பிறகு காற்றுவேகத்தினால் ஒன்றோடொன்று உறைகின்ற மூங்கிற் புதரிலுண்டான காட்டுத்தீ அவ்வனம் முழுவதும் பரந்து எரியத்தொடங்கி அந்தருஷபனுடைய தேஹத்துடன் அவ்வனத்தைத் தஹித்துவிட்டது. கொங்கண வங்க வடகுடகங்களென்னும் தேசங்களுக்கரசனாகிய அர்ஹனென்பவன் அந்த ருஷபனுடைய நடத்தையைக் கேட்டுத் தெய்வச் செயலால் கலியுகத்தில் அதர்மம் தலையெடுக்கையில் மதிகெட்டு எவ்விதத்திலும் பயமின்றிய தன் தர்மத்தைத் துறந்து ருஷபனுடைய வ்ரதத்தை ஆசரிக்க முயன்று அதன் உட்கருத்தை அறியாமல்

அஸம்பத்தமான பாஷண்டமென்னும் ஆபாஸதர்மத்தை ஜனங்களெல்லோரும் அனுஷ்டிக்கும்படி நடத்தப்போகிறான். முன்னமே பகவானுடைய மாயையால் மதிமயங்கிப் பாக்யமற்ற மனிதர்கள் இந்த அர்ஹனுடைய உபதேசத்தினால் நிரம்பவும் மயங்கித் தமது வர்ணாஶ்ரம விதியின்படி ஏற்பட்ட நியமங்களான ஸ்நானாதி ஆசாரங்களையும் ஸந்த்யாவந்தனாதி கர்மங்களையும் துறந்து தேவதைகளின் அவமதிப்புக்கிடமான ஸ்நானம் செய்யாமை ஆசமனம் செய்யாமை தலைமொட்டையடிக்கை முதலிய ஆபாஸவ்ரதங்களை மனம் போனபடி அங்கிகரித்து அதர்மம் நிறைந்த கலிகாலத்தினால் விவேகமற்றுப் பெரும்பாலும் ப்ராஹ்மணர்களையும் யஜ்ஞபுருஷனான பகவானையும் அவனுடைய பக்தர்களையும் நிந்தித்துக் கொண்டிருக்கப் போகிறார்கள். அவர்கள் வேதத்தில் சொல்லப்படாததும் அந்தபரம்பரையால் ஏற்பட்டதுமான பாபமார்க்கத்தில் இழிந்து மனம்போனபடி தேஹயாத்ரையை நடத்தி அவ்வர்ஹனுடைய உபதேசத்தையே நம்பித் தாமே தமக்குச் சத்ருக்களாய் அந்ததாமிஸ்ரமென்னும் நரகத்தில் விழப் போகிறார்கள். இந்த ருஷபனுடைய அவதாரம் ரஜோகுணத்தினால் வருந்தும் ஜனங்களுக்கு மோக்ஷமார்க்கத்தை அறிவிப்பதற்காக ஏற்பட்டது. அவனுடைய புகழை இங்ஙனம் பாடுகிறார்கள்:—“இந்தப் பூமியில் ஏழு ஸமுத்ரங்களும் ஏழு த்வீபங்களும் ஏற்பட்டிருக்கின்றன. அந்த த்வீபங்களில் ஜம்பூத்வீபம் சிறப்புடையது. அதில் ஒன்பது கண்டங்கள் உண்டு. அவையே வர்ஷங்களென்று கூறப்படுகின்றன. அவற்றில் பாரதவர்ஷம் மிகவும் புண்யமானது. ஆ! என்ன ஆச்சர்யம்? இந்தப் பாரதவர்ஷத்திலுள்ள ஜனங்கள் ருஷபாதி ரூபமாய் அவதரித்த பகவானுடைய மங்களசரித்ரங்களைப் பாடுகிறார்களல்லவா?

ப்ரியவ்ரதனுடைய வம்சம் பரிசுத்தமான பெரும்புகழுடையது. இந்த வம்சத்திலல்லவோ புராணபுருஷன் ருஷபனுய் அவதரித்து மோக்ஷஹேதுவான தர்மத்தை அனுஷ்டித்துக் காட்டினுன். இந்த ருஷபனுடைய நிஷ்டையை மற்ற எந்த யோகிதான் மனேரதத்தினுலாவது அனுஸரிக்கவல்லனுவான்? இந்த ருஷபன் மனேஜவம் முதலிய யோக சக்திகள் மேல்விழுந்து வரினும் இவை த்யாஜ்யங்களென்று அவற்றை ஆதரிக்காதிருந்தான். மற்ற யோகிகள் அவற்றைப் பெறவிரும்புகிருர்கள்." ஸமஸ்தலோகங்களுக்கும் வேதங்களுக்கும் தேவதைகளுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் பசுக்களுக்கும் குருவாகிய ருஷபதேவனுடைய சரித்ரம் இத்தகையது. இதைச் சொன்னுல் ஸமஸ்த பாபங்களும் போம். இது ஸமஸ்த மங்களங்களுக்கும் இருப்பிடம். நாள்தோறும் ஸ்ரத்தை வளரப்பெற்று இதைக் கேட்கிறவனுக்கும் கேட்பிக்கிறவனுக்கும் ஷாட்குண்ய பூர்ணனுன வாஸுதேவனிடத்தில் மாருத பக்தி யோகம் தொடர்ந்துவரும். விவேகிகள் பலவகைப் பாபங்களுக்கிடமான ஸம்ஸாரத்தில் விளைகின்ற துக்கங்களால் பரிதபிக்கின்ற ஆத்மாவை இந்தப் பகவத்பக்தியாகிற அம்ருதஸாகரத்தில் ஸ்நானம் செய்வித்து அந்தப் பகவதனுபவத்தினுல் மஹாநந்தத்தைப் பெற்றுத் தானே நேர்ந்திருக்கிற பரமபுருஷார்த்தரூபமான மோக்ஷத்தையுங் கூட இம்மியும் ஆதரிக்கிறதில்லை. அவர்கள் எல்லாம் பகவானுடையதென்னும் நினைவினுல் ஸமஸ்த புருஷார்த்தங்களும் கைகூடப் பெற்றவர்கள். ராஜனே! பாண்டவர்களான உங்களுக்கும் யாதவர்களுக்கும் பகவான் தானே நேராக ரக்ஷகனும் குருவும் தெய்வமும் நண்பனும் குலபதியுமாயிருப்பவன். பல படச் சொல்லியென்? ஒருகால் தூதுபோவது முதலிய கார்யங்களில் உங்க

ளுக்குக் கிங்கரனுமாயிருக்கின்றான். இதெல்லாம் இருக்கட்டும். மன்னனே! மற்றவர் ஓயாது பணியினும் மோக்ஷம் கொடுப்பானன்றிப் பக்தியோகத்தைக் கொடுக்கிறதில்லை. பரப்ரஹ்மஸ்வரூபமான ஆத்ம ஸ்வரூபத்தை நித்யம் அனுபவிக்கையாகிற லாபத்தினால் மற்ற புருஷார்த்தங்களில் விருப்பற்று நெடுநாளாய்ப் பாபகர்மங்களைச் செய்து வந்தமையால் நன்மையில் நுழையாமல் உறங்கும் புத்தியுடைய உலகத்தின்மேல் கருணை கூர்ந்து எவ்விதத்திலும் பயத்திற்கிடமில்லாத ஆத்மஸ்வரூபத்தை மொழிந்த ருஷபரூபியான பரமபுருஷனுக்கு நமஸ்காரம்.
ஆறாவது அத்யாயம் முற்றிற்று.

---

பரதனுடைய வ்ருத்தாந்தத்தைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:--மஹாபாகவதனாகிய பரதன் ருஷபதேவனால் பூமண்டலத்தை ஆளும்படி நியோகிக்கப்பெற்று அப்படியே அதைப் பாதுகாத்துக் கொண்டு வருகையில், விஸ்வரூபனது புதல்வியாகிய பஞ்சஜனியென்பவளை மணம்புரிந்தான். தாமஸாஹங்காரம் பூதஸூக்ஷமங்களைப் படைப்பதுபோல், அம்மன்னவன் தன் பார்யையான பஞ்சஜனியிடத்தில் எல்லாவிதத்திலும் தனக்கு அனுரூபர்களான ஸுமதி ராஷ்ட்ரப்ருத் ஸுதர்சனன் ஆசரணன் தூம்ரகேது என்னும் பேருடைய ஐந்து புதல்வர்களைப் பெற்றான். முன்பு அஜநாபமென்னும் பேருடைய இவ்வர்ஷத்தை இப்பரதமன்னவன் ஆளத்தொடங்கினது முதல் பாரதவர்ஷமென்று வழங்குகிறார்கள். பலவும் அறிந்த அப்பரத மஹீபதி தான் தர்மத்தில் நிலைநின்று தமது வர்ணாஸ்ரமங்களுக்குரிய தர்மங்களைத் தவறாது நடத்தும் ப்ரஜைகளைத் தன் தந்

தை பாட்டன்மார்களைப்போல் மிகுந்த வாத்ஸல்யத்துடன் பாதுகாத்து வந்தான். அவன் அக்னிஹோத்ரம் தர்சபூர்ணமாஸம் சாதுர்மாஸ்யம் பசு ஸோமம் என்னும் யாகங்களின் ப்ரக்ருதிகளும் விக்ருதிகளுமான பலவகை யாகங்களால் ஶ்ரத்தையுடன் பகவானை ஆராதித்தான். மூன்று காலங்களிலும் சாதுர்ஹோத்ர விதியின்படி அங்கங்களோடுகூடின பலவகை யாகங்கள் நடந்துகொண்டிருக்கையில், தர்மமென்றும் அபூர்வமென்றும் வழங்கி வருகிற யாகாதி கர்மங்களின் பலன்களெல்லாம் ஸமஸ்த தேவதைகளின் அடையாளங்களும் அமைந்த மந்த்ரங்களின் பொருளான இந்த்ராதி தேவதைகளுக்கு அந்தர்யாமியாய் நியாமகனுகையால் ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிப்பவனும் யஜ்ஞபுருஷன் வாஸுதேவன் பரப்ரஹ்மமென்று கூறப்படுகின்றவனும் பரதேவதையுமாகிய பகவானுடைய அனுக்ரஹமேயென்று பாவித்து அங்ஙனம் பாவிக்கையாகிற தனது வல்லமையால் ராகாதிதோஷங்களெல்லாம் தொலையப்பெற்று, அத்வர்யுக்கள் ஹோமத்தின் பொருட்டுப் புரோடாசம்முதலிய ஹவிஸ்ஸுக்களைக் கையில் ஏந்திக்கொண்டிருக்கையில், யஜ்ஞங்களால் ஆராதிக்கப்படும் தேவதைகளான இந்த்ரன் முதலியவர்களை அப்பரமபுருஷனுடைய அவயவங்களில் த்யானித்தான். இங்ஙனம் கர்மசுத்தியால் பரிசுத்தமான மனமுடைய அந்தப்பாத மன்னவனுக்குச் சரீரத்திற்குள் புண்டரீகம்போன்ற ஹ்ருதயத்தின் ஆகாசத்தைச் சரீரமாகவுடையவனும் அளவிறந்த ஸ்வரூபமும் குணங்களுமுடையவனும் ஷாட்குண்ய பூர்ணனும் ஸர்வாந்தராத்மாவும் மஹாபுருஷனென்பதை அறிவிக்கும் அடையாளங்களான ஸ்ரீவத்ஸம் கௌஸ்துபம் வனமாலை சக்ரம் சங்கம் கதை கத்தி இவை அமைந்தவனும் தன் பக்தர்களுடைய ஹ்ருதயத்

தில் எழுதினாற்போல் அசையாதிருப்பவனும் அங்ஙனமே தன் மனத்தில் தோற்றுகின்றவனுமாகிய பரமபுருஷனிடத்தில் க்ஷணந்தோறும் வளர்கின்றவேகமுடைய மேலானபக்தி உண்டாயிற்று. இங்ஙனம் அநேகமாயிரமாண்டுகள் கழிந்தபின்பு கடைசியில் கர்மாவஸானம் நேரப்பெற்றுத் தான் அனுபவித்து வருவதும் தந்தை பாட்டன் முதலிய பரம்பரையில் வந்ததுமான தனத்தைப் புதல்வர்களுக்கு க்ரமப்படி பங்கிட்டுக்கொடுத்து ஸமஸ்த ஸம்பத்துக்களும் நிறைந்த தன்க்ருஹத்தினின்றும் புறப்பட்டுப் புலஹருடைய ஆஶ்ரமத்திற்குப்போனான். அவ்விடத்தில் ஷாட்குண்ய பூர்ணனான ஸர்வேஶ்வரன் தன் பக்தர்களிடத்தில் வாத்ஸல்யத்தினால் அவர்கள் விரும்பினபடி உருவங்களைக்கொண்டு ஸந்நிதானம் செய்கிறான். கீழும்மேலும் சக்ரங்களையுடைய சிலைகள் அமைந்திருக்கையால் சக்ரநதியென்னும் பேருடைய மேன்மையுள்ள ஓர்நதி அவ்விடத்திலுள்ள ஆஶ்ரமங்களையெல்லாம் பாவனம் செய்கின்றது. அவ்விடத்தில் புலஹாஶ்ரமத்திற்கு அருகாமையிலுள்ள ஒரு வனத்தில் அம்மன்னவன் பலவகைப் புஷ்பங்கள் தளிர்கள் துலஸி ஜலம் இவைகளாலும்கிழங்கு வேர் பழம் இவையாகிற உபஹாரங்களாலும் பகவானை ஆராதித்துக்கொண்டு பரிசுத்தமான ஆஹாரத்தைப் புசித்துச் சப்தாதி விஷயங்களில் விருப்பமற்று இந்த்ரிய நிக்ரஹம் கைகூடப்பெற்று ஆநந்தரூபமான பரபக்தி உண்டாகப்பெற்றான். இங்ஙனம் பரம புருஷனுக்கு ஓயாது நடத்திக்கொண்டு வருகிற ஆராதனத்தினால் பகவானிடத்தில் நாள்தோறும் வளர்கின்ற ப்ரீதியின் மிகுதியால் மனம் உருகி உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் உண்டாகப்பெற்று ப்ரீதியினால் ஆநந்தநீர் பெருகிக் கண் பார்வையற்றுத் தனதன்பனாகிய பகவானுடைய சேவ

டித் தாமரைகளின் த்யானத்தினுல் பக்தியோகம் தலையெடுத்து அதனுல் முழுவதும் நிறைந்த பரமாநந்தமாகிற பெருமடுவில் ஆழ்ந்த மதியுடையவனுகித் தினந்தோறும் நடத்துகிற பகவானுடைய பூஜையையும் மறந்திருந்தான். இவ்வாறு பகவதாராதன ரூபமான பற்பல வ்ரதங்களை அனுஷ்டிப்பவனும் மான்தோலை உடுத்திருப்பவனும் மூன்று காலங்களிலும் ஸ்நானம் செய்கையால் நனைந்து பொன்னிறமேறிச் சுரும்பார்ந்த ஜடைகளின் பாரத்தினுல் திகழ்பவனுமாகிய அம்மன்னவன் ஸூர்யோதய காலத்தில் ஸூர்யமண்டலத்தினிடையிலிருக்கும் பொன்னிறமுடைய புண்டரீகாக்ஷனை ஸூர்ய மந்த்ரத்தினுல் உபஸ்தானஞ் செய்யமுயன்று எழுந்து நின்றுகொண்டு 'தனது ஸங்கல்பரூப ஜ்ஞானத்தினுல் சேதன அசேதன ரூபமான ஜகத்தையெல்லாம் படைத்து அதில் தனக்குச் சரீரமாகிய ஜீவன் மூலமாகவும் நேராகவும் உட்புகுந்து ஜீவன் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கவிரும்பி அவற்றில் கொண்டு மூட்டுகிற புத்தியின் வ்யாபாரத்தினுல் கர்மபலன்களை அனுபவிக்கையில் பக்கத்திலிருந்து வெறுமனே பார்த்துக்கொண்டிருக்குந்தன்மையனுன பரம புருஷனுடைய தேஜோமயமான திவ்யமங்கள விக்ரஹத்தைச் சரணம் அடைகிறேன். அது லோக விலக்ஷணமாய் நித்யஜ்ஞான மயமாயிருக்கும். அதை த்யானம்செய்கிறேன்' என்று மொழிந்து பணிந்தான். ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

——————

அம்மன்னவன் மான்குட்டியை ரக்ஷிக்க முயன்று கடைசியில் மானுகப் பிறத்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர் :—அப்பரத மன்னவன் ஒரு கால் சக்ரநதியில் ஸ்நானம்செய்து அவஶ்யமாய் அனுஷ்டிக்கவேண்டிய நித்ய நைமித்திகங்களை முடித்து ப்ரணவத்தை ஜபித்துக்கொண்டு மூன்று முஹூர்த்தம் வரையில் நதிக்கரையில் உட்கார்ந்திருந்தான். மன்னவனே! அப்பொழுது அந்நதியில் ஒரு பெண்மான் தண்ணீர் குடிக்க விரும்பித் தனியாய் ஜலத்திற்கருகாமையில் வந்தது. அது ஜலம் குடித்துக் கொண்டிருக்கையில் ஸமீபத்தில் உலகமெல்லாம் பயந்து நடுங்கும்படி ஸிம்ஹகர்ஜனை உண்டாயிற்று. இயற்கையாகவே தழதழப்புற்ற அந்த மான் பேடு ஸிம்ஹகர்ஜனத்தைக் கேட்டுக் கண்பார்வை அடிபட்டு ஸிம்ஹம் வருகிறதேயென்னும் பயத்தினுல் மனம் கலங்கிக் கண்கள் நடுங்கித் தண்ணீர் தாஹம் தீராமலே பயத்தினுல் திடீரென்று போகக்கிளம்பிற்று. அது பூர்ண கர்ப்பமுடையது. அங்ஙனம் வேகத்துடன் கிளம்பும்பொழுது பயத்தின் மிகுதியால் அதன் மலமூத்ரத்வாரத்தின் வழியாய் கர்ப்பம் நழுவி நதியின் ப்ரவாஹத்தில் விழுந்தது. தன்னினத்தினின்று பிரிந்தமையால் வருந்தின அப்பெண்மான் கர்ப்பம் நழுவினதாலும் வேகத்துடன் கிளம்பினமையாலும் பயத்தினுலும் இளைப்புற்று மிகவும் வருந்தி ஒரு பர்வத குஹையில் விழுந்து மாண்டது. மனஇரக்கத்திற்கிடமான அந்த மான்குட்டி நதியின் வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகக் கண்ட அம்மன்னவன் தாயில்லாத அம்மான் குட்டியை ஆபத்திலாழ்ந்த பந்துவைப்போல் தன்னுஶ்ரமத்திற்கு எடுத்து கொண்டு போனுன். அம்மன்னவன் அந்த மான் குட்டி



1206. நதிக்கரையில் ஸிம்ஹகர்ஜனத்தைக் கேட்டு மானுடைய கர்ப்பம் நழுவுதல். பரதன் அதை எடுத்துக்கொள்ளல்.

யிடத்தில் பெரிய அபிமானம் வைத்து அதை நாள்தோறும் போஷிப்பதும் பாதுகாப்பதும் ப்ரீதிக்கிடமான கார்யங்களைச் செய்வதும் சீராட்டுவதும் அதையே நெஞ்சில் நினைப்பதுமாயிருந்தானாகையால் ஸ்நானாதி நியமங்களும் பரமபுருஷாராதனம் முதலிய ஸகலதர்மங்களும் நாளுக்கொன்றாகச் சில நாள்களுக்குள் எல்லாம் தொலைந்தன. அவன் அந்த மான்குட்டியிடத்திலுள்ள மனப்பற்றினால் 'ஆ! இந்த மான்குட்டி காலவசத்தினால் தன்னினத்தையும் நண்பர்களையும் பந்துக்களையும் இழந்து மன இரக்கத்திற்கிடமாகி என்னையே தாயாகவும் தந்தையாகவும் உடன் பிறந்தவராகவும் பந்துக்களாகவும் ஜ்ஞாதிகளாகவும் தன்னினத்தினராகவும் நினைத்து என்னைச் சரணம் அடைந்தது. இது என்னைத்தவிர மற்றொரு ரக்ஷகனையும் அறியாது. என்னிடத்தில் மிகுந்த விஸ்வாஸமுடையது. ஆகையால் என்னையே சரணமாகப் பற்றின இம்மான் குட்டிக்கு ஆஹாரங்கொடுத்துப் போஷிப்பதும் புலி முதலிய துஷ்ட ம்ருகங்களிடத்தினின்று பாதுகாப்பதும் தினவுசொரிகை முதலிய ப்ரீதிக்கிடமான கார்யங்களைச்செய்வதும் கையால் தடவிக்கொடுக்கை முத்தமிடுகை முதலிய சீராட்டல்களுமாகிய இவற்றையெல்லாம் நான் அவஸ்யம் செய்யவேண்டும். இதனால் என் ப்ரயோஜனமெல்லாம் பாழாய்விடுகிறதேயென்று நான் இதன்மேல் அஸூயைப் படலாகாது. சரணம் அடைந்தவர்களை உபேக்ஷிப்பது அறிஞர்களுக்குத் தோஷமல்லவா? ஆனதுபற்றியே பரோபகார சீலர்களும் ஜிதேந்த்ரியர்களும் மன இரக்கத்திற்கிடமுள்ளவரிடத்தில் ஸ்னேஹமுடையவருமாகிய பெரியோர்கள் இத்தகைய சரணாகதரக்ஷணத்திற்காக மிகவும் பெரிய தமது ப்ரயோஜனங்களையும் உபேக்ஷிக்கின்றார்கள்' என்று தனக்குள் தானே சொல்லிக்

கொண்டு இருத்தல் படுத்தல் திரிதல் புசித்தல் ஸ்நானம் செய்தல் முதலிய எல்லா ஸமயங்களிலும் அதைக் கை விடாமல் அதினிடத்தில் மிகுந்த ஸ்நேஹமுடையவனு யிருந்தான். தர்ப்பம் புஷ்பம் ஸமித்து இலை பழம் வேர் ஜலம் முதலியவற்றைக் கொண்டுவரப் போகும்பொழுது அதை இங்கு விட்டுப்போனேமாயின் காட்டுநாய் செந் நாய் முதலியவை பக்ஷித்து விடுமென்று நினைத்து அந்த மான்குட்டியைக்கூடவே கொண்டு போவான். போகும் பொழுது வழிகளில் அது இளமையினால் நடக்கமுடியா மல் பின் தங்குமாயின், ஸ்நேஹத்தின் மிகுதியால் அதைப்பிரிந்திருக்கப் பொறுமல் தோளின்மேல் தூக்கிக் கொண்டுபோவான்; இங்ஙனமே படுக்கும்பொழுது மார் பிலும் உட்கார்ந்திருக்கும்பொழுது மடியிலும் வைத்து அதைச் சீராட்டி மஹாநந்தத்தை அடைந்தான். அவன் நித்ய நைமித்திகாதி கர்மங்களை அனுஷ்டித்துக்கொண் டிருக்கையில் இடையில் க்ஷணந்தோறும் எழுந்தெழுந்து அதைப் பார்ப்பான். அங்ஙனம் பார்க்கும்பொழுதெல் லாம் அப்பரதன் மனவூக்கத்துடன் 'குழந்தாய்! உனக்கு எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் க்ஷேமங் கள் உண்டாகுக' என்று ஆசீர்வாதம் செய்வான். அங்ங னம் பார்க்கும்பொழுது ஒருகால் அதைக்காணுமல் பண த்தை இழந்தவன்போல் மிகவும் பயந்து ப்ரீதியின் மிகு தியால் அதைப் பிரிந்திருக்கப் பொறுமல் எப்பொழுது காண்பேனென்னு மாவலுடன் மனம் தழதழத்துப் பரித பித்து மன இரக்கத்திற்கிடமாகிப் பெரிய மோஹத்தை அடைந்து சோகித்துக்கொண்டு மன இரக்கத்துடன் இங்ஙனம் மொழிந்தான்:—'தாயை யிழந்தமையால் ஐயோவென்று வருந்துவதற்கிடமான என்னிளமான் கன்று எங்கேயோ தெரியவில்லையே? நான் துஷ்டன்;

கிராதகன்போன்ற கொடுமதியன்; பாக்யமற்றவன். இப்படிப்பட்ட என்னிடத்தில் அது பெரிய விஸ்வாஸம் வைத்திருந்தது. அது தன் விஸ்வாஸத்தினுல் என் தோஷங்களைப் பாராமல் நன்மையுடைய ஸாதுவைப் போல் மீளவும் என்னிடம் வந்து சேருமா? அந்த என் மான் குட்டி தேவனுல் பாதுகாக்கப்பெற்று இந்த ஆஶ்ரமத்திற் கருகாமையிலுள்ள வனத்தில் க்ஷேமமாய்ப் புல் மேய்ந்து கொண்டிருக்கக் காண்பேனு? செந்நாயாவது காட்டுநாயாவது பன்றியாவது புலியாவது அதைப் பக்ஷியாதிருக்குமா? ஸமஸ்தலோகங்களுக்கும் க்ஷேமம் விளையுமாறு உதிக்குந்தன்மையுடைய ஸூர்ய பகவான் அஸ்தமிக்கிருனே. இன்னம், மான்பேடு என்னிடத்தில் பாதுகாக்கும்படி வைத்த என்னிளமான்கன்று வந்துசேரவில்லையே. என்னுடைய மான்குட்டியாகிற ராஜகுமாரன் மான்குட்டிகளுக்கு இயற்கையில் ஏற்பட்டவைகளும் பார்க்கப் பதினுயிரம் கண்கள் வேண்டும்படி அழகாயிருப்பவைகளுமான பலவகை விளையாட்டுக்களால் தன் பந்துவாகிய என் மன வருத்தங்களை யெல்லாம் போக்கிக்கொண்டு வந்து பாக்யமற்ற என்னை ஆநந்தப் படுத்துவானு? நான் தன்னேடு விளையாடும்பொழுது பொய்யாகவே த்யானம் செய்வதுபோல் கண்ணை மூடிக்கொண்டிருக்கையில், ப்ரணய கோபத்தினுல் கலங்கி அருகாமையில் வந்து நீர்த்திவலைபோல் மெதுவாயிருக்கின்ற கொம்புகளின் நுனியால் பொற்ருதபடி பயந்து பயந்து அடிக்கடி என்னை முட்டிப் பார்ப்பார்க்குமல்லவா? ஹவிஸ்ஸு வைத்திருக்கிற தர்ப்பத்தைக் கடித்து எச்சிலாக்கித் தூஷிக்கையில் என்னுல் கோபத்துடன் அதட்டப்பெற்றுப்பயந்து அந்தக்ஷணமே விளையாட்டெல்லாம் அடங்கி இந்த்ரியங்களையெல்லாம் வென்ற ரிஷி குமாரன்போல் பேசாதிருக்குமே. இந்தப்

பூமி நிரம்பவும் கௌரவிக்கத்தக்கது. இது என்ன தவம் செய்ததோ? ஏனெனில், இப்பூமி வணக்கமுடைய க்ருஷ்ணஸாரமான் குட்டியின் அழகிய குளப்படிகளால் நிறைந்திருக்கின்றது. அவை மிகவும் மங்களமானவை; உறுதியானவை. அத்தகைய குளப்படிகளின் வரிசைகளால் நிறைந்த இப்பூமி என் தனமாகிய மான்குட்டியை இழந்து வருந்துகிற எனக்கு அது போனவழியை அறிவிக்கின்றது. இப்பூமி அதன் குளப்படிகளால் அலங்காரமுற்று ஸ்வர்க்கமோக்ஷங்களை விரும்புகிற அந்தணர்கள் வேள்வி செய்தற்குரிய இடம்தானேயென்னும்படி திகழ்கின்றது.[1] மனஇரக்கத்திற்கிடமான ஜனங்களிடத்தில் மிகுந்தப்ரீதியுடைய மஹானுபாவனாகிய இச்சந்த்ரன், தாய் மரணம் அடைந்ததும் எனது ஆஶ்ரமத்தினின்று தப்பிப்போனதுமாகிய இந்த மான்குட்டியைத் தயையினால் காத்திருப்பானா? என் புதல்வனாகிய மான் குட்டியைப் பிரிந்தமையாலுண்டான ஜ்வரமாகிற அக்னியின் ஜ்வாலைகளால் என் ஹ்ருதயமாகிற நிலத்தாமரை தபிக்கப்பட்டிருக்கின்றது. மற்றும் மான்குட்டியைத் தேடித் திரிந்தமையால். நான் இளைப்புற்றிருக்கின்றேன். இப்படிப்பட்ட என்னை இச்சந்த்ரன் குளிர்ந்து சாந்தமாயிருப்பதும் என்னிடத்தில் ப்ரீதியால் மேல் மேல் பெருகுவதுமாகிய தன் வாயில் வரும் ஜலமாகிற அம்ருதமயமான கிரணங்களால் ச்ரமந்திரும்படி செய்கின்றான்' என்றான். இங்ஙனம் நேரக்கூடாத பலவகை மனோரதங்களால் அப்பரத மன்னவன் மனக்கலக்க முற்றிருந்தான். மான் குட்டியென்னும் வ்யாஜத்தையுடைய ப்ராரப்தகர்மமே அங்ஙனம் அவனுக்குப் பெரிய விக்னமாய் நேர்ந்தது. அதனால் அவன் ஜ்ஞான

1. க்ருஷ்ணஸார ம்ருகம் இருக்குமிடம் யாகஞ் செய்யத்தகுந்த இடமென்று ஸ்ம்ருதி சொல்லுகின்றது.

யோகாரம்பம் தனதுவர்ணாஶ்ரமங்களுக்குரிய கர்மயோக ரூபமான தவம் பகவதாராதனரூபமான தவம் ஆகிய இவை யெல்லாவற்றினின்றும் நழுவினான். இது ப்ராரப்த கர்ம மாகாத பக்ஷத்தில், வேறு ஜாதியாகிய மான்குட்டியிடத் தில் தன் பிள்ளையினிடத்தில் போல இப்படிப்பட்ட மன விருப்பம் எப்படி உண்டாகும்? மோக்ஷமார்க்கத்திற்கு விரோதிகளென்று நேரே வயிற்றில் பிறந்த விடமுடியாத குணமுள்ள பிள்ளைகளைத் துறந்தும், இங்ஙனம் விக்னத் தினால் யோகாரம்பமெல்லாம் தடை படப்பெற்று மான் குட்டியைப் போஷிப்பதும் பாதுகாப்பதும் அதற்கு ப்ரிய மான கார்யங்களைச் செய்வதும் சீராட்டுவதுமாய் அத னிடத்தில் மிக்க மனப்பற்றுக்கொண்டு தன்னைப்பற்றி இம்மியும் நினையாதிருக்கிற அப்பரதனென்னும் ராஜ ரிஷிக்கு எலிப்பாழியில் பாம்பு நுழைவதுபோல், கடக்க முடியாத மரணகாலம் வந்தது. அப்பொழுதும் தன் பக்கத்திலிருந்து பிள்ளையைப்போல சோகிக்கின்ற அந்த மான் குட்டியைப் பார்த்துக்கொண்டே அதனிடத்தி லேயே மனம் சென்று அத்தோடுகூடவே அந்தத் தேஹத்தையும் துறந்து ஒன்றுமறியாத மூடன்போல் ம்ருகஜன்மத்தைப்பெற்றான். அப்பொழுதும் பூர்வஜன்ம ஸ்மரணம் மாறப்பெறாதிருந்தான். முன் ஜன்மத்தில் அவன் பகவானை ஆராதித்துக்கொண்டிருந்த நற்செய லின் மஹிமையால் தான் மானாகப் பிறந்தமைக்குக் கார ணம் இன்னதென்பதை அறிந்து அதற்கு மிகவும் பரித பித்து 'ஆ! என்ன வருத்தம்? நான் ஜ்ஞானிகளுடைய மார்க்கத்தைத் தொடர்ந்து சென்றும் இடையில் இடை யூறுகளால் தடைபட்டு அதினின்றும்நழுவினேன். எனக்கு என்ன கஷ்டம் நேர்ந்தது? நான் தேஹத்திலும் அதைத் தொடர்ந்த மற்றவைகளிடத்திலும் பற்றுக்களை யெல்

லாம் துறந்து ஜனஸஞ்சாரமில்லாத பரிசுத்தமான அரண்யத்தில் வாஸம் செய்துகொண்டு இந்த்ரியங்களையெல்லாம் வென்று ஸர்வாந்தராத்மாவான பகவானுடைய கதைகளைக் கேட்பது அவனுடைய திருமேனியை த்யானம் செய்வது குணங்களைக் கீர்த்திப்பது அவனை ஆராதிப்பது அவனையே நினைப்பது முதலியவற்றில் அபிநிவேசங்கொண்டு அதனால் ஒருயாமமும் வீணாகப்பெறாத நெடுங்காலமாய் மனத்தை வேறு எவ்விஷயத்திலும் போகவொட்டாமல் தடுத்து அந்த வாஸுதேவனிடத்திலேயே ஊக்கத்துடன் நிலை நிறுத்தியிருந்தேன். அப்படிப்பட்ட மனத்தை மான் குட்டியிடத்தில் பற்றவிட்டு மதிகெட்டு அந்தமானையே அனுஸரித்திருந்தேனாகையால் யோகமார்க்கத்தினின்று நன்றாக நழுவச்செய்தேன்' என்று தனக்குள் பரிதபித்தான். இங்ஙனம் மனவெறுப்புற்றுத் தாயான பெண்மானைத் துறந்து தானிருந்த காலஞ்சர பர்வதத்தினின்று புறப்பட்டு இந்த்ரியங்களை அடக்கி யாள்கையே இயற்கையாகப்பெற்ற முனிவர் கூட்டங்களுக்கு ப்ரியமாயிருப்பதும் பகவானுடைய ஆவிர்ப்பாவ ஸ்தானமுமாகிய ஸாலக்ராமமென்கிற புலஹாஶ்ரமத்திற்கு வந்தான். அங்குத் தனக்குத் தானே ஸஹாயமாய்த் தனியே அந்த மான் சரீரம் விடுங்காலத்தை எதிர்பார்த்துக் கொண்டு எதில் மனப்பற்று செய்தால் என்ன கெடுதி நேரிடுமோவென்று மிகவும் பயந்து உலர்ந்த இலை புல் கொடி இவைகளைத்தின்று மானாகப் பிறந்ததற்குக் காரணமான ப்ராரப்த கர்மத்தின் முடிவையே எண்ணிக்கொண்டிருந்தான். பிறகு அச்சரீரம் முடியும்படியான காலம் நேரப்பெற்று அப்புண்ய தீர்த்தத்தில் பாதி நனைந்திருக்கின்ற ம்ருகசரீரத்தை துறந்தான். எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---



**மான் சரீரத்தைத் துறந்த பரதன் ப்ராஹ்மண குமாரனாய்ப் பிறந்தது.**



ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பிறகு ஆங்கிரஸ கோத்திரத்தில் பிறந்தவர்களில் சிறந்தவரும் சமம் தமம் தவம் வேதங்களை ஓதுகை ஓதுவிக்கை தெய்வாதீனமாய்க் கிடைத்த அன்னாதிகளால் ஸந்தோஷ முற்றிருக்கை ஸுகதுக்காதிகளைப்பொறுத்திருக்கை வணக்கம் தானம் ஶாஸ்த்ரஜ்ஞானம் பிறரிடத்தில் தோஷங்களை ஏறிடாமை ஆத்மஜ்ஞானம் ப்ரஹ்மாநந்தத்தை அனுபவிக்கையாகிற பக்தியோகம் இவையெல்லாம் அமைந்தவருமான ஓர் அந்தணருக்கு மூத்த பார்யை யிடத்தில் கேள்வி சீலம் ஆகாரம் உருவம் ஔதார்யம் முதலிய குணங்களில் தன்னோடொத்த ஒன்பது புதல்வர்களும் இளைய பார்யையிடத்தில் ஓர் பெண்ணும் ஓர் பிள்ளையும் பிறந்தார்கள். இளையவளுக்குப் பிறந்த பிள்ளையே பாகவதஶ்ரேஷ்டனும் ராஜர்ஷிகளில் சிறந்தவனும் மான் சரீரத்தை அடைந்து அதைத் துறந்தவனுமாகிய பரதனென்றும், அவனுக்கு அதுவே சரம சரீரமென்றும் அவனே அங்ஙனம் ப்ராஹ்மணனாய்ப் பிறந்தானென்றும் அத்தோடு மோக்ஷம் பெற்றானென்றும் சொல்லுகிறார்கள். அந்த ஜன்மத்திலும் பகவானுடைய அனுக்ரஹத்தினால் பூர்வ ஜன்மங்களின் பரம்பரையைப்பற்றின நினைவு மாறப்பெறாமல் பந்துக்களோடு ஸஹவாஸம் செய்தால் என்ன கெடுதி நேரிடுமோ என்று பயந்து கேள்வி நினைவு குணங்களைச்சொல்லுகை இவற்றில் ஏதேனுமொன்று செய்யினும் கர்மபந்தங்களையெல்லாம் போக்குந்திறமையமைந்த அப்பகவானுடைய பாதாரவிந்தங்களையே மனத்தில் த்யானித்துக்கொண்டு உலகத்தவர் தன்னைப் பித்தம் பிடித்தவனாகவும் மூடனாகவும்

குருடனுகவும் செவுடனுகவும் நினைக்கும்படி தன்னிடத்தில் அத்தன்மைகளை ஏறிட்டுக் கொண்டிருந்தான். அந்த ஆங்கிரஸராகிய அந்தணர் தன் பிள்ளை அங்ஙனம் பித்தம் பிடித்தாற்போலிருப்பினும் புத்ரஸ்நேஹத்தினுல் மனம் தொடரப்பெற்று அவனுக்கு ஸமாவர்த்தனம் வரையிலுள்ள ஸம்ஸ்காரங்களையெல்லாம் செய்யமுயன்று உபநயனம் செய்து, அவனுக்குப் பூர்வவாஸனையால் எல்லாம் தெரியுமாகையால் ஒன்றும் கற்பிக்கவேண்டிய அவஶ்யமில்லையாயினும் அதை அறியாமல் தகப்பன் பிள்ளைக்குக் கற்பிக்கவேண்டியது கடமையென்பதை நினைத்து, சௌசம் ஆசமனம் முதலிய கர்ம நியமங்களையெல்லாம் கற்பித்தார். அவனும் தந்தையின் நிர்ப்பந்தத்தை விடுவித்துக்கொள்ள விரும்பி அவரது ஸமீபத்திலேயே அஸம்பத்தமான கார்யங்களைச் செய்து மூடன்போல் நடித்து வந்தான். அவர் அவனுக்கு வேதங்களை ஓதுவிக்க முயன்று வ்யாஹ்ருதி ப்ரணவம் சிரஸ்ஸு என்னுமிவற்ருேடுகூடி மூன்று அடிகளையுடைய காயத்ரியை வஸந்தம் க்ரீஷ்மம் ஆகிய நான்கு மாதங்கள் சொல்லிக்கொடுத்தும் அவனுக்கு அதை நன்ருய்க் கற்பிக்க முடியாதிருந்தார். ஸ்வரங்களும் எழுத்துக்களும் மாருட்டமாகவே ஒன்று ஒன்ருக அவன் அதைச் சொன்னுன். நீ எவ்வளவு கற்பித்தும் அதை அறியாதவன் போலவே இருந்தான். இங்ஙனம்பிள்ளையிடத்தில்பெரும்ப்ரீதியுடைய அவ்வந்தணர் உபகுர்வாணப்ரஹ்மசாரிக்கு வேண்டிய சௌசம் ஆசமனம் காண்டவ்ரதம் மற்றுமுள்ள நியமங்கள் குருசுஶ்ரூஷை அக்னிசுஶ்ரூஷை முதலிய இவையெல்லாம் ஜன்மாந்தர ஸம்ஸ்காரத்தினுல் எல்லாமுணர்ந்த அவனுக்கு வேண்டாதவையாயினும் அதை அறியாமல் பிள்ளைக்குத் தகப்பன் கற்பிக்கவேண்டுமென்னும்

பிடிவாதத்தினால் அவனைச் சீர்திருத்த வேண்டுமென்று எவ்வளவு வருந்தி ப்ரயத்னப்பட்டும் தன்மனோரதம் நிறைவேறப் பெறாமலே இல்லறவாழ்க்கையில் இழிந்து மரணத்தைப் பற்றின சிந்தையேயில்லாதிருக்கையில் மனவூக்கமுடைய ம்ருத்யுவினால் அவ்வளவில் முடிக்கப்பட்டார். அவருடைய பார்யைகளில் இளையவள் தன் பெண்ணையும் பிள்ளையையும் மூத்தவளிடம் ஒப்புவித்துத் தான் அநுமரணம் செய்து பதிலோகத்தை அடைந்தாள். கர்மங்களை அறிவிக்கிற வேதமார்க்கத்திலேயே முடிந்த மதியுடையவரும் வேதாந்த வித்யையில் செல்லாதவருமாகிய அவருடைய பிள்ளைகள் ஒன்பதின்மரும் தந்தை மரணம் அடைந்த பின்பு அந்தப் பாதனுடைய மஹிமையை அறியாமல் இவன் ஜடனென்று நினைத்து ப்ராதாவாகிய அவனுக்குக் கற்பிக்கையாகிற நிர்ப்பந்தத்தினின்று நீங்க விரும்பினார்கள்; அந்த ஜடபரதன் இருகால் பசுக்களாகிய ப்ராக்ருத ஜனங்களால் 'அட பித்தா! மூடா! செவிடா!' என்று அழைக்கப்பெற்று அத்தன்மைகளுக்குரிய பேச்சுக்களைப் பேசிக்கொண்டு தான் செய்யவேண்டிய செயலற்றவனாயினும் பிறருடைய தூண்டுதலால் வெட்டிக்கு வேலை செய்வதும் கூலிக்கு வேலை செய்வதுமாயிருந்தான். வெட்டியாகவும் செய்தவேலைக்குக்கூலியாகவும் யாசிதமாகவும் தெய்வாதீனமாகவும் கிடைத்த அன்னாதிகளைப் பெற்று அவை அற்பமாயினும் வெகுவாயினும் ருசியாயிருப்பினும் ருசியற்றிருப்பினும் எதையும் பாராமல் தேஹதாரணத்திற்காக அவற்றைப் புசித்துவந்தானன்றி இந்த்ரியங்களின் ப்ரீதிக்காக அவன் அவற்றைப் புசிக்கவில்லை. அவன் ஆத்ம ஸ்வரூபத்தை மறைப்பவைகளும் ஸுக துக்கங்களுக்குக் காரணங்களுமான புண்யபாப கர்மங்கள் அடியோடு தொலையப்பெற்ற

வன்; நித்பஸித்தனும் ராகம்முதலிய தோஷங்கள் எவையு மின்றிப் பரிசுத்தனும் ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனுமாகிய ஆத்மாவின் உண்மையை அறிந்து குளிர் வெய்யில் முத லியவற்றால் விளையும் லௌகதுக்கங்களில் தேஹத்தில் சிறி தும் அபிமானம் உண்டாகப்பெறாதவன். அவன் குளிர் வெய்யில் காற்று மழை இவைகளில் வ்ருஷபம்போல் உடம் பை மூடாதிருப்பினும் அவனுடைய அவயவங்களெல் லாம் பருத்து உறுதியாகவேயிருந்தன. அவன் வெறுந் தரையிலேயே படுப்பான்; உடம்புக்கு எண்ணெய் தேய்த்து அழுக்குப் போகும்படி ஸ்னானம் செய்தறி யான். ஆகையால் அவனது சரீரம் அழுக்கேறியிருந் தது. ஆனதுபற்றி அவன் ப்ரஹ்ம தேஜஸ்ஸௌ வெளித் தோன்றாமல் அழுக்கடைந்த மஹாரத்னம் போன்று அரையில் ஒன்றுக்கும் வழங்காத கந்தற்றுணியை உடுத்து மிகவும் அழுக்கேறின யஜ்ஞோபவீதமுடையவனாய் அவன் மஹிமையை அறியாத மூடர்களால் கேவலப்ராஹ் மணனென்றும் துர்ப்ராஹ்மணனென்றும் அவமதிக்கப் பெற்றுத் திரிந்துகொண்டிருந்தான். அவன் பிறரிடத்தில் ஆஹாரத்திற்காகக் கூலிவேலை செய்வது கண்டு அவனு டைய ப்ராதாக்களும் கூலிகொடுப்பதாகச் சொல்லி அவ னைக் கழனிவேலையில் நியோகிக்க அவன் அதையும் செய் வான். ஆனால் மேடென்றும் பள்ளமென்றும் குறைவென் றும் நிறைவென்றும் அவன் அறியான். அவர்கள் நொய் பிண்ணாக்கு தவிடு கொள்ளு காந்தல் முதலியவற்றைக் கொடுப்பினும் அவற்றை அம்ருதம்போல் புசிப்பான். விஷ்ணுராதனே! அந்த ஜடபரதனுடைய ஆச்சர்யமான ஒரு வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன் கேள். திரு டர்களில் தலைமையுள்ள ஒரு சூத்ரன் தனக்குப் பிள்ளை யில்லாமையால், 'எனக்குப் பிள்ளை பிறந்தால் நரபலி

கொடுக்கிறேன்' என்று பத்ரகாளியை வேண்டிக்கொண்டான். அப்பால் அவனுக்குப் பிள்ளை பிறக்கையில், அவன் தெய்வாதீனமாய்க் கிடைக்கும் நரபசுவைக் கொண்டு வாருங்களென்று தன் வேலைக்காரர்களுக்குச் சொல்ல, அவர்களும் இருள்மூடின ராத்ரியில் அதிலும் அர்த்த ராத்ர ஸமயத்தில் தெய்வாதீனமாய்ப் பசுகிடைக்கும் வழியைப்பற்றி வெகுதூரம் தேடிக்கொண்டு சென்றும் பசு அகப்படாமல் தெய்வச்செயலால் மஞ்சத்தின் மேல் வீராஸனத்தில் உட்கார்ந்து மான் பன்றி முதலியவைவராவிடாமல்கழனிகளைப் பாதுகாத்துக்கொண்டிருக்கும்ஆங்கிரஸ குமாரனாகிய ஜடபரதனைக் கண்டார்கள். அவன் லக்ஷணங்களெல்லாம் அமைந்திருப்பதைக் கண்டு அவர்கள் ஸந்தோஷத்தினால் முகம் மலரப்பெற்றுத் தமது பர்த்தாவின் கார்யம் நிறைவேறிற்றென்று நினைத்து அவனைக் கயிற்றால் கட்டிக் காளியின்கோவிலுக்குக் கொண்டுபோனார்கள். பிறகு அந்தத் திருடர்கள் அவனுக்கு விதிப்படி அபிஷேகம் செய்வித்துப் புதிய ஆடை உடுத்தி ஆபரணம் சந்தனம் பூமாலை திலகம் முதலியவற்றால் அலங்கரித்துப் போஜனம் அளித்துத் தூபம் தீபம் மாலை பொரி தளிர்முளை பழம் முதலி உபஹாரங்களைக் கொண்டு பலி கொடுக்கும் விதிப்படி பாட்டு ஸ்தோத்ரம் ம்ருதங்கம் உடுக்கைமுதலிய பெரியகோஷத்துடன் அந்நரபசுவைப் பத்ரகாளியின் முன்னே கொண்டுபோய் உட்காரவைத்தார்கள். அந்தச் சூத்ரராஜனுக்குப் புரோஹிதனாகிய ஒரு சூத்ரன் அந்நரபசுவின் ரக்தமாகிற மத்யத்தினால் பத்ரகாளியை ஆராதிக்கமுயன்று அக்காளிமந்த்ரத்தினால் மந்த்ரிக்கப்பட்டதும் கூரிய நுனியுடையதும் பயங்கரமாயிருப்பதுமாகிய கத்தியை எடுத்துக்கொண்டான். ரஜோ குணமும் தமோகுணமுமே இயற்கையாகப் பெற்றுப்

பணக்கொழுப்பாகிற தூசி படிந்து கர்வமுற்ற மனமுடையவரும் பகவானுடைய அம்சம் அமைந்த தபோவீரர்களான ப்ராஹ்மணர்களின் குலத்தைச் சிறிதும் பொருள் செய்யாமல் தப்புவழியில் இழிந்து மனம்போனபடி விளையாடுகின்றவரும் பரஹிம்ஸையையே விநோதமாகப் பெற்றவருமாகிய அச்சூத்ரர்கள் பரப்ராஹ்மத்தோடு ஸாயுஜ்யத்தை அடைய ஸித்தமாயிருக்கின்றவனும் ப்ராஹ்மரிஷியாகிய ஆங்கிரஸருடைய புதல்வனும் ஸமஸ்த பூதங்களிடத்திலும் வைரமின்றி நன்மனமுடையவனுமாகிய அந்த ஜடபரதனை வெட்டமுயன்றமையாகிற அதிபயங்கரமான கார்யத்தைக் கண்டு ஹிம்ஸையிலும் அவ்வணம் வெட்டுவதுநிஷித்தமாகையால் பத்ரகாளி பொறுக்கமுடியாத ப்ராஹ்ம தேஜஸ்ஸினால் தஹிக்கப்பெற்றுத்திடீரென்று உருவத்துடன் தோற்றினாள். அவள் பெருங்கோபாவேசத்தினால் புருவங்களை நெரித்துக்கொண்டு கோணலானகோரைப் பற்களாலும் சிவந்த கண்களின் கொடுமையாலும் பயங்கரமான முகமுடையவளாகி இந்த ஜகத்தையெல்லாம் வதிக்கமுயன்றவள்போன்று பெரிய பரபரப்புடன் மஹத்தான அட்டஹாஸம்செய்து அவ்விடத்தினின்று கிளம்பி அதே கத்தியைப் பிடுங்கிக்கொண்டு பாபிஷ்டர்களும் கொழுத்தவர்களுமாகிய அச்சூத்ரகளின் தலைகளையெல்லாம் அறுத்து அவர்களுடைய கழுத்தினின்று மிக்க உஷ்ணமாய்ப் பெருகும் ரக்தமாகிறமத்யத்தைத் தன் கூட்டத்தாருடன் பானம் செய்து அந்த மதத்தினால் மெய்ம்மறந்து தன் கூட்டத்துடன் உறக்கப்பாடிக் கூத்தாடி அவர்கள் தலைகளாகிற பந்துகளைக் கொண்டு விளையாடினாள். இவ்வனமே பெரியோர்களிடத்தில் அபராதப் படுவார்களாயின், அதெல்லாம் அவர்களுக்கே பலிக்கும். பரீக்ஷித்து மன்னவனே! தேஹத்தில் ஆத்மா

விமானமும் அதைத் தொடர்ந்த மற்றவைகளிடத்தில் மமதையுமாகிற உறுதியான ஹ்ருதய க்ரந்தியை அறுத்துக் கொண்டவர்களும் ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் ஸ்நேஹம் நிறைந்த மனமுடையவர்களும் வைரமற்றவர்களும் மனவூக்கமுடைய கால சக்ரத்தையும் மற்றும் அந்தந்த வஸ்துக்களையும் கொண்டு பகவானால் நேரே பாதுகாக்கப் பெற்றவர்களும் எவ்விதத்திலும் பயமில்லாத அந்தப் பகவானுடைய பாதமூலத்தையே சரணம் அடைந்தவர்களுமாகிய பரிசுத்தரான யோகிகள் தலையை அறுக்க வரினும் பரபரப்பின்றி நிர்ப்பயமாயிருக்குமிது ஓராச்சர்யமன்று. ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஜடபாதன் ரஹோர்கண மன்னவனுக்குத் தத்வோபதேசம் செய்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— அப்பால் ஸிந்து தேசங்களுக்கும் ஸௌவீர தேசங்களுக்கும் ப்ரபுவாகிய ரஹோர்கண மன்னவன் கபிலமுனிவரிடம் தத்வங்களை அறிய விரும்பி அவரிருக்குமிடம் தேடிப்போய்க் கொண்டிருக்கையில் வழியில் இக்ஷுமதியென்னும் நதியின் கரையில் பல்லக்குத் தூக்க ஆள்வேண்டித் தேடும் ஸமயத்தில், பல்லக்கெடுப்பவர்களின் தலைவன் ஆங்கிரஸருடைய புதல்வனாகிய ஜடபாதனைத் தெய்வாதீனமாய்க் கண்டு, ‘இவன் உடம்பெல்லாம் பருத்து யௌவன வயதும் அமைந்திருக்கிறான். இவனுடைய அங்கங்களெல்லாம் கட்டுத் தளராமல் உறுதியாயிருக்கின்றன. ஆகையால் இவன் வ்ருஷபம் போலும் கழுதைபோலும் பாரம் சுமக்கவல்லவன்’ என்று ஆலோசித்து முன்னமே வெட்டிக்குப் பிடித்துக் கொண்டவர்களோடு இவனையும் பலாத்காரமாகப் பிடித்துச் சேர்த்துக்கொண்டான். அம்மஹானுபாவன் பல்லக்குத்

தூக்கத் தகாதவனாயினும் அதைத் தூக்கிக் கொண்டு சென்றான். அந்த ப்ராஹ்மண ஸ்ரேஷ்டனாகிய ஜடபரதன் ஜந்துஹிம்ஸை வாராமைக்காக ஒரு பாணத்தளவு தூரம் பூமியைப் பார்த்துக்கொண்டே மெதுவாக நடந்தானாகையால் அவர் நடை மற்றவர் நடையோடு ஒத்திருக்கவில்லை. அதனால் பல்லக்கும் அடிக்கொருதரம் கோணலாகப்போக ஆரம்பித்தது. ரஹூகணன் அதை ஆலோசித்துப் பல்லக்குத் தூக்கும் புருஷர்களைப் பார்த்து 'ஓ பல்லக்கெடுக்கிறவர்களே! நன்கு நடப்பீர்களாக. என் பல்லக்கை இங்ஙனம் கோணலாய்த் தூக்கிக்கொண்டு போகிறீர்கள்?' என்றான். அவர்கள் அம்மன்னவன் அதட்டிச் சொன்ன வார்த்தையைக் கேட்டுத் தண்டிப்பானென்று பயந்து அவனைக் குறித்து 'மன்னவனே! நாங்கள் மனவூக்கந்தவறுதலின்றி உனது கட்டளைக்குட்பட்டு நன்றாகவே சுமக்கின்றோம். பின்னையென்னவெனில், இவன் இப்பொழுதே தூக்கவந்தவனாயினும் வேகமாய் நடக்கமாட்டாதிருக்கின்றான். இவனோடுகூட எங்களால் தூக்கமுடியாது' என்றார்கள். அவர்கள் இங்ஙனம் மனஇரக்கத்திற்கிடமாக மொழிந்த வசனத்தைக்கேட்ட மன்னவன், ஒருவனுடைய தோஷம் அவனுடைய ஸம்பந்தத்தினால் மற்றெல்லோர்க்கும் உண்டாகிறதென்று நிச்சயித்துப் பெரியோர்களைப்பணிந்து படிந்தவனாயினும் இயற்கையிலேற்பட்ட ரஜோகுணத்தினால் பரவசனாகிச் சிறிது கோபங்கொண்டு ப்ரஹ்மதேஜஸ்ஸு வெளித்தோற்றாமல் உள்ளே அடங்கியிருப்பவரும் நீறுபூத்த நெருப்புப் போன்றவருமாகிய அந்த ப்ராஹ்மணரைப் பார்த்து 'அப்பா! வாஸ்தவம். நிரம்பவும் இளைப்புற்றிருக்கின்றனை; வெகுநேரமாய் நீ யொருவனே நெடுந்தூரம் பல்லக்குச் சுமந்து வந்தனை யல்லவா? மற்றும், நீ மிக்க பருமனில்லாமல்

இளைத்திருக்கின்றனை. அன்றியும், உன்னுடம்பெல்லாம் கட்டுத் தளர்ந்து உறுதியற்றிருக்கின்றன. அதுவுமன்றிக் கிழத்தனத்தினல் வருந்தி யிருக்கின்றனை. நண்பனே! உன்னேடு கூடத்தூக்குகிற மற்ற இவர்களெல்லோரும் நெடுந்தூரம் நடக்காமல் ஸுகமாகவே இருக்கின்றனர்' என்று பலவாறு பரிஹாஸத்துடன் விரட்டிச் சொல்லினும், கர்மத்தினல் பரிணமித்த பஞ்சபூதங்களும் சப்தாதி விஷயங்களும் செயல்களும் இந்த்ரியங்களும் மனமும் வாஸனையும் அமைந்து எப்பொழுதும் ஒருவாறுயிராமல் மாறிக்கொண்டே யிருப்பதும் அவயவங்களின்சேர்க்கையாலேற்பட்டஒருஆகாரவிசேஷமாயிருப்பதும் சரமசரீரமுமாகியதேஹத்திலும்அதைத்தொடர்ந்த மற்றவைகளிடத்திலும் நானென்றும் என்னுடையதென்றும் விளையும் பொய்யெண்ணங்களின்றிப் பரப்ரஹ்ம ஸாயுஜ்யத்தை அடைய ஸித்தமாயிருப்பவராகையால் அவர் அவன் சொன்னதை யொன்றும் பொருள் செய்யாமல் முன் போலவே பல்லக்கைச் சுமந்துகொண்டு நடந்தார். மீளவும் தன் பல்லக்கு முன்போல் கோணலாய்ப் போவதைக் கண்டு ரஹோகணன் மிகவும் கோபித்து அந்த ப்ராஹ்மணரைப் பார்த்து 'இதென்ன? அடே! நீ ஜீவித்திருந்தும் செத்தாற் போலிருக்கின்றனை. என்னைப் பொருள் செய்யாமல் ப்ரபுவாகிய எனது கட்டளையைக் கடந்து நடக்கின்றனை. யமன் ப்ராணிகளைத் தண்டிப்பதுபோல், நீ உன்னியற்கையில் நின்று நன்ருக வேலை செய்யும்படி மனவூக்கமற்றிருக்கிற உன்னை நான்தண்டிக்கிறேன்' என்ருன். ரஜோகுணமும் தமோகுணமும் தொடரப்பெற்றுத் தன்னை மன்னவனென்றும் பண்டிதனென்றும் நினைத்துப் பெருமதங்கொண்டு பாகவதர்களையெல்லாம் அவமதிக்கின்ற அவ்வரசன் இங்ஙனம்

அஸம்பத்தமான பல பேச்சுக்களைப் பேசிக்கொண்டிருக்கையில், பரப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரித்தமையால் ப்ரஹ்மஸ்வரூபியும் மஹானுபாவருமாகிய அவ்வந்தணர் ஸமஸ்த பூதங்களுக்கும் நன்மையையே நினைக்கும் மனமுடையவராகையால் யோகேஸ்வரர்களின் நடத்தையில் பரிசயப்படாத மதியுடைய அம்மன்னவனைப் பார்த்துப் புன்னகை செய்துகொண்டு சிறிதும் கர்வமின்றி மேல்வருமாறு மொழிந்தார்:—'மன்னவனே! நீ மொழிந்தது உலகரீதியில் வாஸ்தவமே. உண்மையில் ஒன்றின் தர்மத்தை மற்றொன்றில் ஏறிட்டுச் சொன்னாயாகையால் உன் வார்த்தை யெல்லாம் பொய்யே. வீரனே! சுமக்கிறவனுக்குப் பாரம் உளதாயின், அது எனக்குக் கிடையாது. நான் சுமக்கிறவனல்லேன். நடக்கிறவனுக்குப் போய்ச் சேரவேண்டிய இடம் உண்டாயின், அது ஸாக்ஷாத்தாக எனக்குக் கிடையாது. நான் நடக்கிறவனல்லேன். பருமன் தேஹத்திற்கே யன்றி எனக்குக் கிடையாது. இங்ஙனமே ஆத்மஸ்வருபத்தை அறிந்தவர்கள் வழங்குவார்கள். பருமன் இளைப்பு சரீரவ்யாதிகள் மனோவ்யாதிகள் பசி தாஹம் பயம் கலஹம் காமம் கிழத்தனம் தூக்கம் விஷயங்களில் ஆஸக்தி கோபம் அஹங்காரம் மோஹம் இவை யெல்லாம் தேஹத்திற்கேயன்றிப் பிறவி முதலிய விகாரங்களெவையும் தீண்டப்பெறாத எனக்குக் கிடையாது. ராஜனே! ஜீவித்தலும் மரணம் அடைதலும் ஆதி அந்தங்களையுடையதும் விகாரங்களுக்கிடமுமாகிய தேஹத்திற்கேயன்றி அவை ஆத்மாவுக்கில்லை. பெருமையுடையவனே! ஒருவன் ப்ரபுவாயிருக்கையும் மற்றொருவன் அவனுக்குத் தாஸனாயிருக்கையுமாகிற ஸ்வஸ்வாமிபாவமென்னும் ஸம்பந்தம் எவரிடத்தில் நிலைநின்றிருக்குமோ, அத்தகைய புருஷர்களிடத்தில் தான் ஸ்வாமியா

யிருப்பவன் கட்டளையிடுவதும் தாஸனயிருப்பவன் இட்ட வேலையைச் செய்வதுமாகிய இவற்றின் சேர்க்கை நிலை நின்றிருக்கும். அந்த ஸம்பந்தம் ஜீவாத்மாக்களுக்கும் பரமாத்மாவுக்குமே நிலை நின்றிருக்கும். நீ என்றும் இப்படியே ப்ரபுவாயிருப்பா யென்கிற நியதி இல்லை. உனக்கு ராஜ்யம் கைசோர்ந்து எனக்கு வருமாயின் உன் ப்ரபுத்வமும் என்னுடைய தாஸத்வமும்மாறிப்போமல்லவா? ஆகையால் ப்ரபு வல்லாத உன்னை நீ ப்ரபுவாக நினைத்துக் கொண்டிருப்பது ப்ரமமே. 'நீப்ருத்யன். நான் ப்ரபு' என்று வாயால் சொல்லுவதொழிய அங்ஙனம் பேதமாக நினைப்பதற்குச் சிறிதும் இடம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இப்படி யிருக்க யார் ப்ரபு? யார் தாஸன்? நீயும் எனக்கு ப்ரபுவல்லை.நானும் உனக்கு தாஸனல்லேன். நான் சொல்லுவது உனக்கு இஷ்டமாயிராது. ஆயினும் என்னசெய்யலாம்?வஸ்துஸ்வரூபத்தைமாற்றமுடியாதே? பரப்ரஹ்ம ஸ்வரூபனான ஆத்மாவை அனுபவிப்பதில் நிலை நின்று பித்தன் ஊமை குருடன் மூடன் இவர்கள்போன்று பிறர் விரட்டுதல் அடித்தல் முதலிய பரிபவங்களை விரும்புகிற எனக்கு உன்னுடைய தண்டனையால் என்ன ப்ரயோஜனம்? நான் ஆத்ம ஸ்வரூபத்தை அறியாத ஸம்ஸாரியாகவே வருந்திக்கொண்டிருப்பேனாயினும் உன்னுடைய தண்டனை பிஷ்டபேஷ்ணம்போல் பயனற்றதேயாம்' என்றார். கோபமில்லாமை முதலிய குணங்களையே இயற்கையாக உடையவரும் வேறு சரீரம் உண்டாவதற்கிடமான கர்ம ஸம்பந்தமற்றவரும் சரீரமாகிற ப்ராரப்த கர்மத்தை அனுபவத்தினால் கழித்துக்கொண்டிருப்பவருமாகிய அம் முனிஶ்ரேஷ்டர் அம்மன்னவன் சொன்னதற்கெல்லாம் மறுமொழி கூறி முன்போலவே அவனது பல்லக்கைச் சுமந்து சென்றார். பரீக்ஷித்து மன்னவனே! ஸிந்து

ஸௌவீர தேசங்களுக்குப் பதியாகிய அந்த ரஹோ கணனும் ஶ்ரத்தையுடன் தத்வத்தை அறிய முயன்ற வனுகையால் அஜ்ஞானத்தைப் போக்குவதும் பல யோகக்ரந்தங்களுக்கிணங்கினதுமாகிய அவ்வந்தணரது வசனத்தைக் கேட்டு மன்னவனென்னும் கர்வத்தைத் துறந்து பல்லக்கினின்று இறங்கி அவர் பாதத்தருகே வந்து நமஸ்கரித்துத் தான் அவரிடம் பட்ட அபராதத்தை பொறுப்பிக்க முயன்று 'ப்ராஹ்மணர்களில் நீர் யாவர்? ப்ரஹ்மதேஜஸ்ஸை வெளியிடாமல் மறைத்துக்கொண்டு திரிகின்றீர். நீர் யஜ்ஞோபவீதம் தரித்துக் கொண்டிருக்கிறீராகையால் ப்ராஹ்மணரென்பதில் ஸந்தேஹமில்லை. எல்லோரும் அவமதிக்கும்படியான வேஷமுடையவராயிருக்கின்றீர். நீர் யாருடைய புதல்வர்? யாருடைய சிஷ்யர்? உமது இருப்பிடம் யாது? எதற்காக நீர் இவ்விடம் வந்தீர்? ஒருகால் என்னுடைய க்ஷேமத்திற்காக வந்த கபில முனிவராயிருக்கக்கூடுமோ? நான் தேவேந்த்ரனுடைய வஜ்ராயுதத்தினின்றுவது ருத்ரனுடைய சூலாயுதத்தினின்றுவது யமனுடைய தண்டாயுதத்தினின்றுவது அக்னி ஸூர்யன் சந்த்ரன் வாயு குபேரன் இவர்களுடைய அஸ்த்ரங்களினின்றுவது பயப்படமாட்டேன். ஆனல் ப்ராஹ்மண குலத்தை அவமதிக்கையாகிற மஹாஸ்த்ரத்தினின்று மிகவும் பயப்படுவேன். ஆகையால் எனக்கு உமது உண்மையைச் சொல்வீராக. நீர் பற்றற்று ஜ்ஞானமாகிற உமது வீர்யத்தை மறைத்துக்கொண்டு அறிய முடியாத அபிப்ராயமுடையவராய் மூடன்போல் திரிகின்றீர். உமது வார்த்தைகள் யோக சாஸ்த்ர மர்யாதையால் மறைந்திருக்கின்றன. நல்லியற்கையுள்ளவரே! எவ்வளவு ஸூக்ஷ்ம புத்தியால் ஆலோசித்துப்பார்க்கினும் உமது வசனத்தின் கருத்தை எனக்கு

அறியமுடியவில்லை. நான் தத்வங்களை உணர்ந்தவர்களில் தலைவரும் ஹிதோபதேசம்செய்பவரும்ஜ்ஞானத்தின் அம்சத்துடன் அவதரித்த ஸாக்ஷாத் விஷ்ணுவுமாகிய கபில முனிவரிடம் சென்று இந்த ஸம்ஸாரத்தில் எது ரக்ஷகமென்று வினவித் தெரிந்துகொள்ள முயன்றிருக்கிறேன். உலகங்களை ரக்ஷிக்கும்பொருட்டு அந்தக்கபிலரே இங்ஙனம் மாறுவேஷத்தினால் மறைந்து திரிகின்றாரோ? இல்லறவாழ்க்கையில் இழிந்த என்னைப்போன்ற மூடன் யோகீஸ்வரர்களின் கதியை எங்ஙனம் அறிவான்? ஆத்மா தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டவனாயினும் தேஹ ஸம்பந்தத்தினால் யுத்தாதிகர்மங்களைச் செய்யும்பொழுது ஶ்ரமம் உண்டாவது எனக்கு அனுபவஸித்தமாயிருக்கின்றது. பாரத்தைச் சுமந்துகொண்டு வழிநடக்கிற உமக்கும் அங்ஙனமே இருக்குமென்று நான் ஊஹிக்கிறேன். 'உலகத்தார் அங்ஙனம் வழங்குவது மாத்ரமேயன்றி அது உண்மையன்று' என்னில், சொல்லுகிறேன். குடம் முதலியன உளவாயின் ஜலம் கொண்டுவருகை முதலியன உண்டு. அவை இல்லாத பக்ஷத்தில் இல்லை. ஆகையால் உலகவழக்கமும் ப்ரமாணமென்றே ஒப்புக்கொள்ள வேண்டும். ஆகையால் உலகத்தில் வழங்குவது உண்மையன்றென்று சொல்லலாகாது. பாத்ரத்தை நெருப்பில் வைத்துக் காய்ச்சினோமாயின், அதிலிருக்குந் தண்ணீரும் கொதிக்கின்றது. அதினிடையில் சேர்ந்த அரிசியும் பக்வமாகின்றது. அங்ஙனமே தேஹம் இந்த்ரியம் ப்ராணன் வாஸனை மனம் இவற்றின் ஸம்பந்தம் பரிஹரிக்க முடியாமல் தொடர்ந்து வருகின்றமையால் சுத்தஸ்வரூபனான ஆத்மாவுக்கும் துக்கங்களுக்கிடமான ஸம்ஸாரம் உண்டாகக்கூடும். நான் கர்மவசத்தினால் அரசனாயிருக்கும்பொழுது வழியைக் கடக்கின்ற ப்ரஜைகளைச் சிக்ஷிப்பவனும்

நல்வழியில் நடப்பவர்களைக் காப்பவனுமாயிருக்கிறேன். பகவானுக்கு அடிமை பூண்டு வர்ணாஸ்ரம தர்மங்களால் அவனை ஆராதிக்க முயன்று தப்புவழியில் நடப்பவர்களைத் தண்டிப்பதும் நல்வழியில் நடப்பவர்களை அனுக்ரஹிப்பதுமாகிய பகவதாராதன ரூபமான க்ஷத்ரிய தர்மத்தை அனுஷ்டிப்பேனாயின், அது எப்படி பிஷ்டபேஷணம் போல் நிஷ்பலமாகும்? தனக்கு ஏற்பட்ட வர்ணாஸ்ரம தர்மங்களை அனுஷ்டித்து வருவானாயின், பாபராசிகளையெல்லாம் போக்குவானல்லவா? வருத்தினவர்களுக்குப் பந்துவாயிருப்பவரே! இங்ஙனம் தத்வத்தை அறிய விரும்புகிறேனாகையால் 'மன்னவன்' என்னும் துரபிமானத்தினால் மதித்துப் பெரியோர்களை அவமதிக்கின்ற என் பிழைகளைப் பொறுத்து என்னை ஸ்நேஹம் நிறைந்த கண்களால் கடாக்ஷிப்பீராக. அதனால் நான் பெரியோர்களை அவமதித்தமையாலுண்டான பாபங்களைக் கடப்பேனாக. நீர் ஜகத்திற்கெல்லாம் நண்பனாகிய பரமபுருஷனுக்கு மிகவும் நண்பனாயிருப்பவர். நீர் எல்லாம் பரப்ரஹ்மஸ்வரூபமே யென்னும் நினைவுடையவர்; தேஹாத்மாபிமானமற்றவர்; ஈஸ்வரனுக்குட்படாத ஸ்வதந்த்ரவஸ்து உண்டென்னும் ப்ரமமற்றவர். ஆகையால் உமக்கு நான் செய்த அவமதியால் மனக்கலக்கம் உண்டாகாது. ஆயினும் என்னைப்போன்ற ஜந்துக்கள் சூலபாணியான ருத்ரனைப்போல் ஸமர்த்தர்களாயினும் பெரியோர்களை அவமதிப்பார்களாயின் தாம் செய்த அப்பாப தோஷத்தினால் சீக்ரத்தில் நசித்துப்போவார்கள். ஸ்தாவர ஜன்மத்தைப் பெறுவார்கள். ஆகையால் என் பிழையைப் பொறுத்து எனக்குத் தத்வத்தை உபதேசிப்பீராக" என்றான். பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

## பரதன் ரஹூகணனுக்குத் தத்வோபதேசம் செய்தல்.

ப்ராஹ்மணர் சொல்லுகிறார்:— நீ, ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணரான ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறியாதவனாயினும் அதை அறிந்தாற் போல் பேசுகின்றனை. ஆகையால் நீ அறிஞர்களில் மிகவும் சிறப்புடையவனாகமாட்டாய். தேஹத்தை ஆத்மாவென்று நினைக்கை ஆத்மாவை ஸ்வதந்த்ரனென்று நினைக்கை ஆகிய இவ்வஜ்ஞானங்களால் பருமன் இளைப்பு யௌவனம் மூப்பு போதல் வருதல் முதலிய இத்தர்மங்களை ஆத்மாவினிடத்தில் ஏறிட்டு ஒருவனை ஸ்வாமியாகவும் மற்றொருவனை அவனுக்குத் தாஸனாகவும் ஜனங்கள் வழங்குகிறார்கள். தத்வங்களை அறிந்த பெரியோர்கள் அவர்களுடைய நினைவு தத்வ விசாரத்தினால் பிறந்ததென்று ஒப்புக்கொள்ளமாட்டார்கள். க்ருஹஸ்தாஶ்ரமத்திலிருப்பவர் அனுஷ்டிக்கத்தக்கவைகளான பலவகை யஜ்ஞாதி கர்மங்களின் விரிவை அறிவிக்கையால் மிகவும் வளர்ந்திருக்கிற வேதவாக்யங்களில் தத்வநிர்ணயம் பெரும்பாலும் நன்றாக ஏற்படாது. ஸ்வப்னத்தில் உண்டாகும் அனுபவங்களெல்லாம் அல்பமும் அஸ்திரமுமாயிருப்பதை அறிந்து க்ருஹஸ்தாஶ்ரமத்தைப் பற்றின இஹலோகஸுகங்களும் பரலோக ஸுகங்களும் அங்ஙனமே அற்பங்களும் அஸ்திரங்களுமாயிருக்குமாகையால் அவை பற்றத்தகுந்தவை யன்றென்று அறியாமல் அவற்றில் விருப்புற்றிருக்கும் புருஷனுக்குப் பெருமை பொருந்திய வேதாந்தவாக்யங்களாலும் தத்வஜ்ஞானம் நன்றாக உண்டாகாது; இந்த ஜீவனுடைய மனம் ஸத்வரஜஸ்தமஸ்ஸுக்களில் ஏதேனுமொன்றால் தொடரப்பெற்றிருக்கும் வரையில் அந்தந்தக் குணங்களுக்குத்

தருந்தபடி. ஜ்ஞானேந்த்ரியங்கள் மூலமாகவும் கர்மேந்த்ரியங்கள் மூலமாகவும் விளைகிற புண்யபாபரூபமான கர்மங்களால் மேன்மையும் தாழ்மையுமான தேஹபந்தத்தைத் தடையின்றி விளைத்துக்கொண்டிருக்கும். வாஸனைக்குட்பட்டு அவற்றிற் குரியபடி வெள்ளம்போல் பெருகுவதும் விகாரமுற்றிருப்பதும் பஞ்சபூதங்கள் பதினொரு இந்த்ரியங்கள் ஆகிய பதினாறு த்ரவ்யங்களில் தலைமையுடையதுமாகிய மனம் ஆத்மாக்களுக்குத் தேவ மனுஷ்யாதி சரீரங்களையும் நாமங்களையும் விளைத்து ஜ்ஞானைகஸ்வரூபர்களாகையால் ஒருவாறாயிருக்கின்ற அவ்வாத்மாக்களை அச்சரீரங்களாலும் ராகத்வேஷாதி குணங்களாலும் வேறுபட்டவர்போல் தோற்றும்படி செய்கின்றது. இத்தகைய ஸம்ஸாரமாகிற சக்ரத்தில் பர்வத சிகரம்போல அசையாதிருந்துகொண்டு ப்ரக்ருதியின் பரிணாமமான மனமுடைய ஜீவன் தன்னைச் சரீரமாகவுடைய பரமாத்மாவை அணைத்துக்கொண்டிருப்பினும் அவனை அறியாமல் தடுக்கமுடியாதபடி தெய்வாதீனமாய் ஏற்பட்ட துக்கம் ஸுகம் மோஹம் ஆகிற கர்மபலனை அனுபவிக்கின்றான். ‘நான் தேவன் நான் மனுஷ்யன். நான் பருத்திருக்கிறேன். இளைத்திருக்கிறேன்’ என்று வெளியாகாரத்தைப்பற்றின வ்யவஹாரங்களும் ‘நான் ஸுகிக்கிறேன். நான் துக்கிக்கிறேன்’ என்ற உள்ளாகாரத்தைப் பற்றின ஸூக்ஷ்மவ்யவஹாரங்களும் தேஹாத்மாபிமானத்தினால் உண்டானவை. தேவத்வ மனுஷ்யத்வாதிகளும் பருமன் இளைப்பு முதலியவைகளும் ஸுக துக்காதிகளும் தேஹதர்மங்களேயாயினும் மூடஜனங்கள் அஜ்ஞானத்தினால் அவற்றை ஜ்ஞானைகஸ்வரூபனான ஆத்மாவினிடத்தில் ஏறிட்டுச் சொல்லுகிறார்கள். அந்த அஜ்ஞானம் மனோமூலமான இக்கர்மஸம்பந்தம் மாறுதவரையில்

நீங்காது. ஆகையால் தாழ்மையான ஸம்ஸாரத்திற்கும் மேன்மையான மோக்ஷத்திற்கும், மேன்மைக்கிடமான தேவாதிதேஹங்களைப் பெறுதற்கும் தாழ்மைக்கிடமான பசுபக்ஷி முதலிய தேஹங்களைப் பெறுதற்கும் இம்மனமே காரணமென்று சொல்லுகிறார்கள். மனம் ஸத்வாதி முக்குணங்களால் தீண்டப்பட்டு அக்குணங்களுக்குரிய செயல்களில் ஆழ்ந்திருக்குமாயின் பல துக்கங்களுக்கிடமான ஸம்ஸாரத்திற்கும், குணங்களால் தீண்டப்பெறாமல் செயலற்றிருக்குமாயின் மஹாநந்த ரூபமான மோக்ஷத்திற்கும் காரணமாம். விளக்கு நெய்யில் நனைந்த திரியில்பற்றி யெரியுமாயின் புகையோடு கூடின ஜ்வாலையைப் பெறுகின்றது. அங்ஙனமே மனது ஸத்வாதி குணங்களால் தீண்டப்பட்டுப் புண்யபாபகர்மங்களால் கலக்கமுற்று ராகத் வேஷாதிகளையும், குணங்களால் தீண்டப்படாமல் செயலற்றிருக்குமாயின் தனக்கியற்கையான சுத்த ஸத்வத்தையும் பெறுகின்றது. மனத்திற்குப் பதினொரு வ்யாபாரங்கள் உண்டு. அவற்றில் ஐந்து கர்மேந்த்ரியங்களின் மூலமாய் உண்டாகின்றன, அவை க்ரியாரூபமாயிருக்கும். ஐந்து ஜ்ஞானேந்த்ரியங்களின் மூலமாய் உண்டாகின்றன. அவை ஜ்ஞானரூபமாயிருக்கும். மற்றொன்று அஹங்கார மமகாராதி ரூபமாயிருக்கும். சப்தாதி விஷயங்களைந்தும் கர்மங்களைந்தும் சரீரமொன்றுமாகிய இப்பதினொன்றும் அம்மனோவ்யாபாரங்கள் பதினொன்றுக்கும் விஷயங்களென்று சொல்லுகிறார்கள். கந்தம் உருவம் ஊறு ரஸம் சப்தம் இவ்வைந்தும் ஜ்ஞானேந்த்ரியங்களின் மூலமான மனோவ்யாபாரங்களின் விஷயங்கள். மலத்தை விடுதல் ஸம்போகம் நடை பேச்சு சில்பம் இவ்வைந்தும் கர்மேந்த்ரியங்களின் மூலமான மனோவ்யாபாரங்களுக்கு விஷயங்களாம். சரீரத்தை என்னுடைய

தென்று நினைக்கை மனத்திற்கு நேரே உண்டாகும் வ்யாபாரம். அதற்குச்சரீரம் விஷயம். தேஹத்தை ஆத்ம வென்று நினைக்கை மனத்திற்குப் பன்னிரண்டாம் வ்யாபாரமென்றும், இது நேரே உண்டாகிறதென்றும், இதற்குச் சரீரம் விஷயமென்றும் சிலர் சொல்லுகிறார்கள். ப்ருதிவி முதலிய பஞ்சபூதங்கள் அவற்றின் ஸ்வபாவம் வாஸனை புண்யபாபகர்மங்கள் காலம் இவைகளால் இந்த மனத்தின் வ்யாபாரங்கள் பதினொன்றும் நூறும் ஆயிரமும் கோடியுமாகின்றன. இவை கேவல மனத்தின் கார்யங்களன்று. ஜீவனால் அதிஷ்டானம் செய்யப்பெற்ற மனத்தின் கார்யங்கள். ஜீவனுடைய அதிஷ்டானத்தினால் மனத்திற்கு உண்டாகின்றனவன்றி மனத்தினுடைய அதிஷ்டானத்தினால் ஜீவனுக்குண்டாகின்றனவன்று. ஆனால் ஜீவனுடைய அதிஷ்டானம் இருந்தாலும் தானே உண்டாகமாட்டா. கர்மஸம்பந்தமே இவற்றிற்குக்காரணம். அசுத்தமான கர்மங்களைச்செய்வதும் அவற்றின் பலன்களை அனுபவிப்பதுமாயிருக்கிறஜீவனால் அதிஷ்டானம் செய்யப்பெற்ற மனத்தில் ப்ரக்ருதியின் மூலமாய் உண்டாகிற இந்த வ்யாபாரங்கள் ப்ரவாஹம்போல் நித்யமாயிருக்கும். ஒருகால் (விழித்துக் கொண்டிருக்கும் பொழுது) தோற்றி, ஒருகால் (உறங்கும்பொழுது) மறைந்திருக்கும். பரமாத்மா இம்மனோவ்யாபாரங்களைப் பரிசுத்தனாகவே பார்த்துக்கொண்டிருக்கிறான். அப்பரமாத்மா சரீரத்தை உள்ளபடி அறிந்தவன்; ப்ரக்ருதி புருஷர்களுக்கு உள்ளே புகுந்து நியமித்துத் தரிப்பவன்; ஜகத்திற்கெல்லாம் ஆதி காரணனான புராண புருஷன் ஸ்வயம்ப்ரகாசன். அத்தன்மை ஜீவனுக்கும் உண்டேயாயினும் அது இவனுடைய நித்ய ஸங்கல்பத்தினால் உண்டானது. இவனுக்குள்ள ஸ்வயம் ப்ரகாசத்வம் மற்றொருவனுடைய ஸங்கல்பத்தினால் உண்டான

தன்று. இயற்கையாகவே ஏற்பட்டிருக்கும். மற்றும், அவன் பிறவி யற்றவன்; மேன்மையுடைய ப்ரஹ்மாதிக ளுக்கும் ஈஶ்வரன். நாராயணன் பகவான் வாஸுதேவ னென்னு மிந்நாமங்கள் அவனுக்கு அஸாதாரணமாயிருப் பவை. அவன் தனது ஆச்சர்ய சக்தியால் ஜீவனுக்குள் புகுந்து மறைந்திருப்பவன்; வாயு ஜங்கம ஸ்தாவர ரூப மான ஸமஸ்த பூதங்களிலும் தன் ஸ்வரூபத்தினால் உட் புகுந்து அவற்றைத் தூண்டுவதுபோல், ஷாட்குண்ய பூர் ணனான வாஸுதேவன் சேதனசேதன ரூபமான இந்த் ஜகத்திற்குள் புகுந்து நிறைந்து நியமித்துக் கொண்டி ருக்கிறான். மன்னவனே! அஹங்கார மமகார ரூபமான இந்த மாயையை ஜ்ஞானோதயத்தினால் போக்கி, தேஹம் வீடு முதலியவற்றில் பற்றின்றிப் பஞ்சேந்த்ரியங்களும் மனமுமாகிய ஆறு சத்ருக்களையும் வென்று பரமாத்மா வின் உண்மையை அறியாதவரையில் ஜீவன் இந்த ஸம் ஸாரத்தில் சுற்றிக்கொண்டிருப்பான். ஸம்ஸார தாபங்க ளுக்கு விளைநிலமும் ஜீவனுடைய ஸம்ஸார மோக்ஷங்க ளுக்குக் காரணமுமாகிய இம்மனத்துக்கு மமகாரமும் அதைத் தொடர்ந்த சோகம் மோஹம் வியாதி ராகம் லோபம் வைரம் ஆகிய இவைகளும் மாறப்பெறாதிருக்கும் வரையில் ஜீவன் பரமாத்ம தத்வத்தை அறிய வல்லவனாக மாட்டான். ஆகையால் மனம் ஜீவனுக்கு ஸஹஜ சத்ரு; அடக்காமல் உபேக்ஷித்தமையால் மேன்மேலும் வளர்ந் திருக்கின்றது; ஆனதுபற்றியே அழிவில்லாத பெரு வீர் யமுடையது; அப்ரியத்தையே செய்யுந்தன்மையது; ஆத் மாவைப் பறித்துக்கொண்டு போய்விடும். இத்தகைய மனத்தை நீ ஸ்வயமாகவே ஆசார்யஸ்வரூபியான பகவா னுடைய பாதாரவிந்தங்களைப் பணிகையாகிற அஸ்த் ரத்தினால் வதிப்பாயாக. பதினொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

{ ரஹூகணனுடைய ஸந்தேஹங்களுக்கு ஜடபரதர் ஸமாதானம் கூறுதல். }

ரஹூகணன் சொல்லுகிறான்:—நீர் பரமாத்மாவுக்கு வாஸஸ்தானமாயிருப்பவர். எங்களைப் போன்ற ஜனங்களைப் பாதுகாக்கும் பொருட்டே நீர் இச்சரீரங் கொண்டவர். நீர் ஆத்மஸ்வரூபத்தை அறிந்து அதையே அனுபவித்துக்கொண்டிருக்குந் தன்மையராகையால் அபராதம் செய்தவரிடத்திலும் விரோதத்தைப் பாராட்டுகின்றவரல்லர். நீர், எப்பொழுதும் பரமாத்மானுபவத்தில் ஆழ்ந்திருப்பவராயினும் எல்லோரும் அவமதிக்கும்படி ப்ராஹ்மணாதமனுடைய வேஷம் பூண்டிருக்கின்றமையால் அது ஒருவர்க்கும் தெரியாமல் மறைந்திருக்கின்றது. இத்தகைய உமக்கு நமஸ்காரம். ப்ராஹ்மணஶ்ரேஷ்டரே! ஜ்வரத்தினால் வருந்தினவனுக்குச் சுத்தமான ஔஷதம் போலவும், கோடைகாலத்து வெயிலில் அடிபட்டவனுக்குத் தண்ணீர் போலவும், ஆபாஸமான தேஹத்தில் ஆத்மாபிமானமாகிற ஸர்ப்பத்தினால் நன்கு கடியுண்ட விவேகமென்னுங் கண்ணுடைய எனக்கு வருத்தங்களையும் தாபங்களையும் போக்குவதாகிய உமது மொழி அம்ருதம் போன்ற ஔஷதமாயிருக்கின்றது. ஆனால் எனக்கு இவ்விஷயத்தில் சில ஸம்சயங்கள் உண்டு. அவற்றைப் பிறகு கேட்டுக்கொள்கிறேன். இப்பொழுது நீர் மொழிந்தது ஆத்மயோக விஷயங்கள் பலவும் நிறைந்திருக்கையால் எனக்கு எளிதில் அறியக்கூடாதிருக்கின்றது. அதை நான் நன்றாக அறியும்படி விவரித்துச் சொல்வீராக. இதை நன்றாக அறிய வேண்டுமென்று என் மனம் மிகவும் குதூஹலப்படுகின்றது. யோகேஶ்வரரே! கார்யங்களைச் செய்யும்பொழுது வேர்வை முதலியவை ப்ரத்யக்ஷமாய் உண்டாக நாம் காண்கின்றோம். மிகவும்

ஶ்ரமப்பட்டாயென்று உலகத்தில் ஜனங்கள் வழங்குவதும் உண்மையாகவே தெரிகின்றது. அப்படியிருக்க அது உண்மையன்றென்று நீர் மொழிந்தீர். நீர் சொன்னதின் கருத்தை என் மனம் எளிதில் அறியமுடியாமல் ப்ரமிக்கின்றது. ஆகையால் இதை விவரித்துச் சொல்வீராக.

ப்ராஹ்மணர் சொல்லுகிறார்:—மன்னவனே! ப்ருதிவி முதலிய பஞ்சபூதங்களின் பரிணாமமாகிய சரீரங்களில் ஏதோ ஒரு காரணத்தினால் பூமியில் இங்ஙனம் ஸஞ்சரிக்கின்ற சில சரீரங்கள் ஜனங்களென்று கூறப்படுகின்றன. அவற்றின் பாதங்களின்மேல் குதிகால்களும் அவற்றின் மேல் கணைக்கால்களும் அவற்றின்மேல் முழங்கால்களும் அவற்றின்மேல் துடைகளும் அவற்றின்மேல் இடையும் அதன்மேல் மார்பும் அதன்மேல் கழுத்தும் தோள்களும் தோளின்மேல் பல்லக்கும் அதன்மேல் ஸௌவீரதேசங்களுக்கு அரசனென்று சொல்லப்படும் சரீரமும் இருக்கின்றன. நீ அச்சரீரத்தையே ஆத்மாவாக அபிமானித்து நான் ஸிந்து ஸௌவீர தேசங்களுக்கு ராஜனென்று கொடுமதங் கொண்டிருக்கின்றனை. மிகவும் வருந்திச்சுமக்கின்றமையால் மனஇரக்கத்திற் கிடமாய்ச்சோசிக்கத்தகுந்தவர்களுமாகிய இவர்களை வெட்டிக்குப் பிடித்து மனஇரக்க மில்லாதிருக்கின்றனை. நான் ஜனங்களைப் பாதுகாக்கின்றேனென்று பிதற்றுகிற நீ தேஹாத்மவிவேகமுள்ள பெரியோர்களின் ஸபையில் விளங்கமாட்டாய். நீ தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து விவேகமற்று நன்னடத்தையினின்று தவறியிருக்கின்றனை. ஜங்கமஸ்தாவரரூபமான தேஹங்களெல்லாம் பூமியிலேயே உண்டாவதும் அதிலேயே நசிப்பதுமாயிருத்தலை நாம் என்றும் காண்கின்றோம். ஆகையால் நித்யவஸ்துவாகிய ஆத்மா

வினிடத்தில் ராஜனுயிருக்கை முதலியவைகளும் பருமன் இளைப்பு முதலியவைகளும் உண்டென்பதற்குத் தேஹத்தையே ஆத்மாவாகப்ரமித்த உன்சொல்லொழியவேருெரு காரணமும் இல்லை. 'நான் மாத்ரமா சொல்லுகிறேன்: ஜனங்களெல்லோரும் இங்ஙனமேயன்ருே வழங்குகிருர்கள். அதனுல் அவை ஆத்மாவினிடத்தில் உண்டென்று ஊஹிக்கலாமே' என்னில், உலகமெல்லாம் உன்னைப்போல் அஜ்ஞானத்தினுல் அங்ஙனம் வழங்குகிறதன்றி அதுஉண்மையன்று. அறிவுடையோர் அங்ஙனம் வழங்கமாட்டார்கள். அநித்யமான கார்யவஸ்துக்களுக்கு லயஸ்தானமாகிய இப்பூமியும் அநித்யமே. இது பூதஸூக்ஷ்மங்களின் ஸமூஹங்களால் உண்டானது. அப்பூத ஸூக்ஷ்மங்களை ஈஶ்வரன் தனது ஸங்கல்பத்தினுல் ப்ரக்ருதியினின்று உண்டாக்கினுன். ஆகையால் அவை அநித்யங்களே. இங்ஙனம் இளைப்பு பருமன் பெருமை சிறுமை மேன்மை தாழ்மை இவற்றிற்கிடமாகிய ஜங்கம ஸ்தாவர ரூபமான சரீரங்களெல்லாம் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டவையென்றும், பஞ்சபூதங்கள் அவற்றின் ஸ்வபாவங்கள் அந்தக்கரணம் வாஸனை காலம் என்று பலவாருய் விரிந்திருப்பதாகிய ப்ரக்ருதியால் ஏற்பட்டவையென்றும் ஸூக்ஷ்மபுத்தியுடன் ஊஹித்துணர்வாயாக. ஆத்மா ஜ்ஞான ஸ்வரூபன்; இயற்கையில் கர்ம ஸம்பந்தமில்லாமையால் பரிசுத்தன்; புருஷார்த்தமாயிருப்பவன். எல்லா இடங்களிலும் ஆத்மா ஒரு வாருகவேயிருப்பான்; உள்ளும் புறமுமில்லாதவன்; ஜ்ஞானத்தினுல் எங்கும் நிறைந்திருப்பவன்; நித்யன்; தனக்குத் தான் தோற்றுந்தன்மையன்; பசி தாஹம் சோகம் மோஹம் மூப்பு இறப்பு என்கிற ஊர்மிகள் இன்றி ஓய்ந்திருப்பவன். பகவானென்றும் வாஸுதேவனென்றும் சொல்லப்படுகிற பரமாத்மாவுக்கு

ஸர்வப்ரகாரத்தினாலும் உட்பட்டிருப்பவனாகையால் வாஸுதேவனென்றே இவனைக் கவிகள் வழங்குவார்கள். ரஹோகணனே! ஆத்மபரமாத்மாக்களின் உண்மையைப்பற்றின அறிவு பகவத் பக்தர்களான பெரியோர்களின் பாததூளியின் அபிஷேகத்தினால் உண்டாகுமன்றி மற்ற தவத்தினாலாவது யாகம்முதலிய வைதிககர்மத்தினாலாவது தானத்தினாலாவது க்ருஹஸ்தாஸ்ரமதர்மங்களைக் குறைவற அனுஷ்டிக்கையாலாவது வேதாப்யாஸத்தினாலாவது ஜலம் அக்னி ஸூர்யன் இவர்களை உபாஸிக்கையாலாவது உண்டாகாது. பெரியோர்கள் க்ராம்ய கதைகளுக்கு இடங்கொடாமல் உத்தமஸ்லோகனான பகவானுடைய குணங்களையே எப்பொழுதும் சொல்லிப் பொழுது போக்கிக்கொண்டிருப்பார்கள். மோக்ஷத்தில் விருப்பமுடையவர் அவரிடம் சென்று அந்தப் பகவானுடைய குணங்களைக் கேட்பார்களாயின், வாஸுதேவனிடத்தில் நல்லமதி உண்டாகப் பெறுவார்கள். நான் முன் ஜன்மத்தில் பரதனென்னும் பேருடைய மன்னவனாயிருந்தேன். அப்பொழுது நான் ஐஹிக ஸுகங்களிலும் பரலோக ஸுகங்களிலும் சிறிதும் மனப்பற்றின்றிப் பகவானை ஆராதித்துக் கொண்டிருந்தும் கடைசியில் ஓர் மான்குட்டியினிடத்தில் மனப்பற்றுசெய்து அதனால் பகவதாராதன ரூபமான ப்ரயோஜனமெல்லாம் தடைபட்டு மான்ஜன்மத்தை அடைந்தேன். வீரனே! நான் பகவானை ஆராதித்த மஹிமையால் மான் ஜன்மத்திலும் முன் ஜன்மத்தின் நினைவு மாறப்பெறாதிருந்தேன். ஆ! பகவதாராதனத்தின் மஹிமையை என்னென்று சொல்லுவேன்? இப்பொழுது நான் ஜனங்களோடு ஸஹவாஸம் செய்தால் என்னகெடுதி நேருமோவென்று பயந்து பற்றின்றி எங்கும் தங்காமல் வெளியிலேயே திரிந்துகொண்

டிருக்கிறேன். ஆகையால் மோக்ஷத்தை விரும்பும் மனிதன் பற்றற்ற பெரியோர்களோடு ஸஹவாஸம் செய்து ஜ்ஞானம் உண்டாகப்பெற்று அந்த ஜ்ஞானமாகிற கத்தியைக்கொண்டு தேஹத்திலும் அதைத் தொடர்ந்த மற்ற க்ருஹ க்ஷேத்ர புத்ராதிகளிடத்திலும் விளைகிற மனப்பற்றுக்களை அறுத்துப் பகவானுடைய சரித்ரங்களை வாயாற் சொல்லுவதும் காதால் கேட்பதும் செய்து அவனை எப்பொழுதும் மறவாமல் த்யானித்துக்கொண்டிருப்பானுயின் ஸம்ஸார மார்க்கத்தின் கடைக் கரையாகிய அந்தப் பகவானைப் பெறுவான். பன்னிரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

விரக்தி உண்டாகும் பொருட்டு ரஹூகணனுக்கு ஜடபாதன் ஸம்ஸாரத்தின் கொடுமையைக் கூறுதல்.

ப்ராஹ்மணர் சொல்லுகிறார்:— பகவானுடைய அநுக்ரஹத்தை யொழிய மற்ற எவ்வகையிலும் கடக்க முடியாத கர்மமார்க்கத்தில் ப்ரக்ருதியால் நுழைக்கப்பட்டு ஸத்வரஜஸ்தமோ குணங்களால் பிரிந்திருக்கிற கர்மங்களில் கண் வைத்து, வர்த்தகர் பணம் ஸம்பாதிக்கும் பொருட்டுக் காடுமேடெல்லாம் திரிவதுபோல், தர்ம அர்த்த காமங்களில் மனம் சென்ற ஜீவாத்மாக்கள் ஸம்ஸாரமாகிற அடவியில் அகப்பட்டு ஸுகத்தை அடைய மாட்டார்கள். ஓ மன்னவனே! இவ்வடவியில் ஆறு திருடர்கள் உலாவிக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் நல்வழி தெரியாத ஒருவனைத் தலைவனாகக்கொண்டு திரிகின்ற வர்த்தகர்களைத் தடுத்து மேல் விழுந்து அவரிடத்தினின்று பணத்தைப் பறிக்கின்றார்கள். இதில் நரிகள் பல உண்டு. செந்நாய்கள் ஆட்டை இழுத்துக்கொண்டு

போவதுபோல், அவை மனவூக்கமற்றிருக்கிற அவ்வர்த்தகர்களின் கூட்டத்தை இழுத்துக்கொண்டு போகின்றன. பல கொடிகளும் புற்களும் புதர்களும் நிறைந்த ஓரிடத்தில் கொடிய காட்டீக்களாலும் கொசுக்களாலும் கடியுண்டு வருந்துவார்கள். ஒருகால் கந்தர்வநகரத்தைக் கண்டு இது நிலையென்று நினைப்பார்கள். சிற்சில இடங்களில் பெருவேகமுடைய கொள்ளிவாய்ப் பிசாசத்தைக் காண்பார்கள். கானல்போன்ற தனத்தில் புத்தி சென்று அவ்வடவியில் இங்குமங்கும் திரிவார்கள். சில இடங்களில் சுழற்காற்றால் மேற்கிளம்பின தூட்களால் கண்கள் நிரம்பப் பெற்றுத் திக்கு தெரியாதிருப்பார்கள். சில இடங்களில் கண்ணுக்குத் தெரியாமல் ஒலிக்கின்ற சுவர்க்கோழிகளின் த்வனியினால் காது நோவெடுக்கப் பெறுவார்கள். கோட்டான்களின் கூக்குரல்களால் மனவருத்த முறுவார்கள். சில இடங்களில் பசியால் வருந்தி எட்டி முதலிய விஷவ்ருக்ஷங்களைப் பற்றுவார்கள். சில இடங்களில் கானலைத் தண்ணீரென்று ப்ரமித்து ஓடுவார்கள். சில இடங்களில் ஜலமில்லாத நதிகளைத் தேடிக்கொண்டு சென்று தண்ணீர் காணுமல் தடுக்கிப் பள்ளங்களில் விழுந்து கைகால் ஒடிந்து வருந்துவார்கள், ஒருகால் ஆஹாரமின்றிப் பிறருடைய தனத்தைப் பெற விரும்புவார்கள். ஒருகால் காட்டுத் தீயில் அகப்பட்டு அத்தீயால் கொளுத்தப்பட்டு வருந்துவார்கள். ஒருகால் யக்ஷர்களால் ப்ராணன்கள் பறியுண்டு வருந்துவார்கள். மன்னவனே! ஒருகால் சூரர்களான ராஜபடர்களால் பணம் பிடுங்கப்பெற்றுத் துக்கிப்பார்கள். ஒருகால் சோகித்து மோஹித்து மூர்ச்சை அடைவார்கள். ஒருகால் கந்தர்வநகரத்தில் நுழைந்து ஸங்கித்தவர்போல் முஹூர்த்த காலம் ஸந்தோஷிப்பார்கள். ஒருகால் ஏறமுடி

யாத மலையின்மேல் ஏறத்தொடங்கி முட்களாலும் பரல் கற்களாலும் பாதங்கள் நோவப்பெற்று வாடி வருந்து வார்கள். குடும்பபோஷணத்திற்கு முயன்று அடிக்கடி ஜாடராக்னியால் வருந்திப் பெண்டிர் பிள்ளை முதலியவர் மேல் கோபித்துக்கொள்வார்கள். ஒருகால் இவர் கள் மலைப்பாம்பினால் விழுங்கப்பெற்று அரண்யத்தில் விழுபிணம்போல் ஒன்றுமறியாதிருப்பார்கள். ஒருகால் ஸர்ப்பங்களால் கடியுண்டு கண்தெரியாமல் பாழுங் கிணற்றில் விழுந்து இருட்டில் படுத்திருப்பார்கள். ஒரு கால்[1] அற்பரஸங்களை விரும்பித் தேடிக்கொண்டு சென்று ஆங்குள்ள ஈக்களால் அடியுண்டு அவமதிக்கப்பட்டு வருந்துவார்கள்; கடைசியில் பெருவருத்தத்துடன் அந்தத் தேன் துளிகளைப் பெறினும் அவரை வஞ்சித்து மற்றவர் அதைப் பறித்துக்கொண்டு போவார்கள். அவ ரையும் வஞ்சித்து வேறு சிலர் பறிப்பார்கள், ஒருகால் குளிர் வெய்யில் மழை காற்று முதலியவற்றிற்குப் பரிஹா ரம் செய்ய முடியாமல் அவற்றால் வருந்துவார்கள். ஒரு கால் ஒருவர்க்கொருவர் அற்பமான வஸ்துவை விற்பதும் வாங்குவதுமாய் பேரஞ் செய்யத் தொடங்கிப் பணத்தி லாசையால் த்வேஷத்தை அடைவார்கள். ஒருகால் கையிலிருந்த பணமெல்லாம் செலவழியப் பெற்று அவ் வடவியில் படுக்கை ஆஸனம் இருப்பிடம் வாஹனம் முத லிய கருவிகள் எவையுமின்றிப் பிறரிடத்தில் வேண்டியும் அவை நேரப்பெறாமல் பிறருடைய ஸொத்துக்களில் விருப்பங்கொண்டு அவமானத்தை அடைவார்கள். ஒரு வர்க்கொருவர் பணத்தை ஏமாற்றுதலால் ஒருவர்மேல் ஒருவர்க்கு த்வேஷம் தொடர்ந்து வளர்ந்து விவாதப் பட்டுக் கடக்க முடியாத இவ்வரண்ய மார்க்கத்தில்

1 சிறிய தேன்கூடுகளை.

மிகப் பெரிய வருத்தங்களாலும் பண அழிவுகளாலும் த்வேஷாதிகளாலும் வருந்திச் செத்தாப்போ லிருப்பார்கள். தந்தை தாய் பிள்ளை பெண்டிர் முதலியவர் மரணம் அடைகையில் அவர்களை ஆங்காங்குத் துறந்து மேல் பிறக்கும் பிள்ளை பெண் முதலியவர்களை எடுத்துக்கொண்டு இன்னும் இம்மார்க்கத்திலேயே சுற்றிக் கொண்டிருக்கிறார்களேயன்றி, இவ்வர்த்தகர்களில் ஒருவராவது இவ்வரண்யமார்க்கத்தைக் கடக்கும் உபாயமாகிய யோகத்தைக் கைப்பற்றவில்லை. சூரர்களும் திக்கஜங்களை வெல்லுந் திறமையுடையவர்களுமான மன்னவர்கள் அனைவரும் பூமியை 'என்னுடையது; என்னுடையது' என்று அபிமானித்து அதற்காக ஒருவர்மேல் ஒருவர் மாறாத வைரங்கொண்டு யுத்தத்தில் கேவலம் ப்ராணன்களை இழந்தார்களேயன்றித் தண்டனாதிகாரத்தைத் துறந்து ப்ராணிகளிடத்தில் வைரத்தை வேரோடறுத்துக் கொண்ட யோகிகள் பெறும்படியான விஷ்ணுவின் ஸ்தானத்தை அடையவில்லை. ஒருகால் அழகியகொடிகளின் கிளைகளைப் பற்றி அங்குள்ள பக்ஷிகளின் இனிய குரலைக் கேட்டு அதில் விருப்புற்று அங்குக் கால் தாழ்ந்திருப்பார்கள். ஒருகால் ஓரிடத்தில் ஸிம்ஹக்கூட்டத்தினின்று பயந்து கொக்கு பருந்து கழு முதலியவற்றோடு ஸ்நேஹம் செய்வார்கள்; கடைசியில் அவற்றால் வஞ்சிக்கப்பட்டுத் தாமும் அவற்றை வஞ்சித்து ஹம்ஸக்கூட்டத்தில் புகுந்து அவற்றின் ஸ்வபாவம் தமக்கு ருசிக்காமல் வானரங்களைப் பற்றுவார்கள். அந்த வானரஜாதியோடு விளையாடி இந்த்ரியங்களின் த்ருப்தியை அடைந்து அவற்றைத் தாமும் தம்மை அவையுமாகப் பார்த்துக்கொண்டு மரணகாலம் ஸமீபித்து வருவதையும் அறியாதிருப்பார்கள். கேவலம் ஐஹிக ஸுகங்களுக்கிடமான க்ருஹஸ்தாச்ர

மத்தில் ஸுகங்களை அனுபவிக்க விரும்பி ஸ்த்ரீகளைப் புணரவேண்டுமென்னுமாசையால் வருந்திப் பிள்ளைகளிடத்திலும் பெண்டிர்களிடத்திலும் வாத்ஸல்யமுடையவராகி அங்ஙனம் தனக்கு நேரிட்ட ஸம்ஸார பந்தத்தில் அகப்பட்டு அதைப் பரிஹரிக்க முடியாதிருப்பார்கள். ஒருகால் மனவூக்கமற்றுப் பர்வத குஹையில் விழுந்து அங்கு யானையைக் கண்டு பயந்து கொடியைப் பிடித்துக் கொண்டு நிற்பார்கள். பிறகு பெரிய வருத்தத்துடன் அவ்வாபத்தினின்று மீண்டு மீளவும் தன்னினத்தாருடன் கலந்து முன்போலவே இந்த ஸம்ஸாரமாகிற அரண்யத்தில் பகவானுடைய மாயையால் நுழைக்கப்பட்டுக் கரையேறுதிருக்கிறார்கள். ரஹூகணனே! ஆகையால் நீயும் ப்ராணிகளைத் தண்டிக்கும் அதிகாரத்தைத் துறந்து ஸமஸ்த பூதங்களிடத்திலும் நட்புடையவனுகிச் சப்தாதி விஷயங்களில் மனத்தைச் செலுத்தாமல் வர்ணாஶ்ரம தர்மங்களால் பகவானை ஆராதித்து அதனுல் வளர்ந்த கூரிய அறிவாகிற கத்தியைக்கொண்டு ப்ரக்ருதி ஸம்பந்தமாகிற வ்ருக்ஷத்தை வேருடன் அறுத்து இந்த ஸம்ஸாரமார்க்கத்தின் அக்கரையாகிய விஷ்ணுவின் ஸ்தானத்தை அடைவாயாக.

ரஹூகணமன்னவன் சொல்லுகிறுன்:— பிறவிகளுக்குள் மானிடப்பிறவியே சிறப்புடையது. பரலோகத்தில் தேவாதிகளாகப் பிறந்தும் என்ன ப்ரயோஜனம்? அந்தத் தேவாதி ஜன்மங்களில் பகவானுடைய புகழால் பரிசுத்தமான மனமுடைய உம்மைப்போன்ற பெரியோர்களின் ஸஹவாஸம் பெரும்பாலும் நேராதல்லவா? உம்மைப்போன்ற பெரியோர்களின் பாதாரவிந்தங்களை இடைவிடின்றிப் பணிந்து அவற்றின் தூட்களால் பாபங்களெல்லாம் தொலையப்பெற்ற மனிதனுக்குப் பகவானிடத்தில்

நிர்மலமான பக்தி உண்டாவது ஓராச்சர்யமன்று. ஒரு முஹூர்த்தகாலம் உம்மோடு ஸஹவாஸம் செய்ததால் குயுக்திகளால் வேரூன்றியிருந்த என்னுடைய அவிவேக மெல்லாம் பறந்துபோயிற்று. வயது சென்றவர்களும் சிசுக்களும் யௌவனப் பருவமுடையவர்களும் சிறுவர்களுமாகித் தமது பெருமையை மறைத்துக் கொண்டு திரியும் பெரியோர்கள் அனைவர்க்கும் நமஸ்காரம். மஹானுபாவர்களாயினும் தமது மஹிமையை வெளிப்படுத்தாமல் அனைவரும் அவமதிக்கும் படியான வேஷத்துடன் பூமியில் ஸஞ்சரிக்கின்ற ப்ராஹ்மணர்களிடத்தினின்று என்னைப்போல் அபராதப் படுந்தன்மையான ராஜாக்களுக்கு க்ஷேமம் உண்டாகுக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—உத்தரையின் புதல்வனே! அளவிட முடியாத மஹத்தான வைபவமுடையவரும் ப்ரஹ்ம ரிஷியின் புதல்வருமாகிய அந்த ப்ராஹ்மணர் ஸிந்து ஸௌவீர தேசங்களுக்கு ப்ரபுவாகிய ரஹூகண மன்னவன் தன்னை அவமதிக்கினும் பரமகாருணிகராகையால் அதைப் பொருள் செய்யாமல் அவனுடைய அவிவேகத்தைப் பொறுக்கமுடியாமல் இங்ஙனம் ஆத்ம தத்வத்தை உபதேசித்து அம்மன்னவனால் ஸ்நேஹத்துடன் பாதவந்தனம் செய்யப்பெற்று இந்த்ரியங்களும் பசி தாஹம்முதலிய ஊர்மிகளும் மனமும் வாஸனையும் சாந்தமாயிருக்கப்பெற்றுப் பூர்ண ஸமுத்ரம் போன்று இப்பூமியெல்லாம் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தார். ஸௌவீர தேசாதிபதியாகிய ரஹூகணனும் ஸத்புருஷராகிய அந்த ப்ராஹ்மரிஷியின் குமாரரிடத்தினின்று பரமாத்மாவின் உண்மையை நன்றாக அறிந்து தான் நெடுநாளாய் அஜ்ஞானத்தினால் தேஹத்தையே ஆத்மாவாக நினைத்திருந்த எண்ணத்தை அப்பொழுதே துறந்தான். மன்னவ

னே! பாகவதர்களைப் பணிந்தபெரியோர்களின் ப்ரபாவம் இத்தகைய தல்லவா?

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—பாகவதர்களிற் சிறந்தவரே! பலபேரிடத்தில் பலபலவும் கேட்டுணர்ந்த மஹா ஜ்ஞானியாகிய நீர் ஜீவலோகத்தினுடைய ஸம்ஸார மார்க்கத்தை மறைத்து மொழிந்தீர். அதன்பொருள் விவேகிகளின் புத்தியால் அறியக்கூடியதாயிருக்கின்றதேயன்றி அவிவேகிகளான என்னைப் போன்றவர்க்கு எளிதில் அறியக்கூடியதாயில்லை. ஆகையால் தேவரீர் மறைத்து மொழிந்த வாக்யங்களின் பொருளை ஸ்பஷ்டமாய் எடுத்து மொழிவீராக. பதின்மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

**{மறைத்துச் சொன்ன ஸம்ஸாரத்தின் கொடுமையை விவரித்துக் கூறுதல்.}**

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸர்வேஸ்வரனாகிய பகவானுடைய வசத்திலிருக்கும் மாயையால் தேஹாத்மாபிமானிகள் ஸத்வ ரஜஸ் தமோகுணங்களுக்கிடமாகச் செய்யும் நல்லதும் தீயதும் இரண்டும் கலந்துமான பலவகைக் கர்மங்களால் விளைகிற தேவ மனுஷ்யாதிதேஹபரம்பரைகளைப் பெறுகையும் அவற்றைத் துறக்கையுமாகிற ஸம்ஸாரத்தின் அனுபவத்திற்குக் காரணமான செவி வாய் கண் மூக்கு உடல் மனம் என்கிற ஆறு இந்த்ரியங்களின் கூட்டத்தினால் ஜீவலோகம் நுழையமுடியாத காட்டுவழிபோன்ற கர்ம மார்க்கத்தில் விழுந்து பணம் ஸம்பாதிக்கமுயன்ற வர்த்தகர் கூட்டம்போல் தாம் செய்த கர்மங்களின் பலன்களை அனுபவித்துக்கொண்டு தாம்செய்யும் ப்ரயத்னங்களெல்லாம் வீணாவதும் விக்னங்களால் தடைபடுவதுமாகப் பெற்று, ஸ்மாசனம்போல் அமங்களமான

ஸம்ஸாரமார்க்கத்தில் சென்று அதில் விளையும் தாபங்களைப் போக்குவதும் பாகவதர்களால் அனுஷ்டிக்கப்படுவதுமாகிய பக்திமார்க்கத்தை இன்னம் கைப்பற்றுமலே வருந்துகின்றது. இந்த ஸம்ஸாரமார்க்கத்தில் ஆறு இந்த்ரியங்களே திருடர்களாகக் கூறப்பட்டன. வர்த்தகர் முதலிய ஜனங்கள் மிகவும் ப்ரயாஸப்பட்டு ஸம்பாதித்ததும் தர்மத்திற்கு உபயோகப்படக்கூடியதுமாகிய தனத்தை அவர்கள் மனவூக்கமற்றிருக்கையில் திருடர்கள் திருடிக்கொண்டுபோவதுபோல், இந்த்ரியங்கள், ஜீவாத்மாக்களைப் பார்த்தல் தொடுதல் கேட்டல் நக்குதல் முகருதல் நினைத்தல் நிச்சயித்தல் ஆகிற தம்செயல்களால் இல்லறவாழ்க்கையில் உண்டாகும் அற்பமான ஸுகங்களில் மூட்டிமதியைக்கெடுத்துத் தம்மைவெல்லமுடியாமல் ஊக்கமற்றிருக்கையில் அவர்கள் நெடுநாளாய் வருந்தி அனுஷ்டித்ததும் பரலோகத்தில் நன்மையை விளைவிப்பதுமாகிய வர்ணாஸ்ரம தர்மத்தையும் பகவதாராதன ரூபமான தர்மத்தையும் பாழ்செய்கின்றன. பெரியோர்கள் ஜீவாத்மாவுக்கு வர்ணாஸ்ரம தர்மங்களால் உதவி செய்யப்பெற்ற பகவதாராதன ரூபமான தர்மத்தையே தனமாகக் கூறுகிறுர்கள். அதை இவ்விந்த்ரியங்களாகிற திருடர்கள் பறிக்கின்றுர்கள். ஜீவன் பிள்ளை பெண்டிர் முதலியவர்களிடத்தில் மனப்பற்றைத் துறக்க முயன்றிருப்பினும், அரண்யத்தில் நரிகளும் செந்நாய்களும் ஆட்டைப்பறிப்பதுபோல் அவர்கள் என் தகப்பனென்றும் என் பர்த்தாவென்றும் சொல்லிக்கொண்டு மேல்விழுந்து அவனைத்தம்வசம் இழுக்கின்றுர்கள். ஆகையால் அவர்கள் செந்நாய்களாகவும் நரிகளாகவும் கூறப்பட்டனர். உலகத்தில் பயிர் செய்பவர் வருஷந்தோறும் நிலங்களில் முளைத்த செடி கொடிகளையும் புற்பூண்டுகளையும் பிடுங்கி மீளவும் வேருன்றவொட்

டாமல் நெருப்பை யிட்டுக் கொளுத்திச் சீர்திருத்தஞ் செய்யினும், அவற்றின்வேர்கள் சாகாதிருந்து, உழுது விதை விதைத்தபின்புபயிர்களோடுகூட அவையும் முளைத்து நிலம் முழுவதும் சூழ்வதுபோல், இல்லற வாழ்க்கையில் கர்மங்கள் எவ்வளவு அழிக்கப் பார்க்கினும் வேருடன் அழியமாட்டா. கற்பூரபாணியில் கற்பூரம் இல்லாமற் போயினும் அதன் வாஸனை மாறுதிருப்பதுபோல்,இதில் கர்மங்கள் அநுபவத்தினுல் க்ஷீணிக்கினும் அதன்வாஸனை மாறுது. இந்த க்ருஹஸ்தாஸ்ரமம் காமங்களுக்கெல்லாம் விளைநிலமாயிருக்கும். ஜீவாத்மாக்கள் இதில் அகப்பட்டுக் காட்டீக்கள் போலவும் கொசுக்கள் போலவும் தடுக்கமுடியாமல் உபத்ரவம் செய்கின்ற அற்பஜனங்களால் பீடிக்கப்பட்டுவருந்துவார்கள். மற்றும், இவர்கள் தனதான்யாதிகளை வெளியில் ஸஞ்சரிக்கும் ப்ராணன்களென்று சொல்லும்படி மிகவும்அன்புடன் பாதுகாத்து வருகையில், விட்டில்களும் பக்ஷிகளும் திருடர்களும் எலிகளும் அவற்றைப் பறித்துக் கொண்டு போகப்பெற்று வருந்துவார்கள். இந்த ஸம்ஸாரத்தில் ஓரிடத்தில் சுழன்றுகொண்டிருக்கிற ஜீவன் அஹங்கார மமகாரங்களாலும் சப்தாதி விஷயங்களை அநுபவிக்க வேண்டுமென்னும் விருப்பத்தினுலும் புண்ய பாப கர்ம வாஸனையாலும் மனம்கலங்கப்பெற்றுக் கந்தர்வநகரம்போலநிலையற்ற தன்சரீரத்தையும் பிள்ளை பெண்டிர் முதலியவர்களின் சரீரத்தையும் ப்ரமத்தினுல் நிலைநின்றிருப்பதாக நினைப்பான். தண்ணீர் தாஹமுடையவன் காட்டில் கானலோடுவதைக் கண்டு ஜலம் இருப்பதாக ப்ரமித்து அங்கோடுவது போல், ஜீவன் அந்த மனுஷ்யசரீரத்தில் இருந்துகொண்டு ஸுகத்திற்கிடமல்லாமை மாத்ரமே யன்றித் துக்கத்தையும் விளைக்கவல்ல சப்தாதி விஷயங்களை அநுப

விக்கவிரும்பி அவற்றைத் தேடிக்கொண்டோடுவான். குடிப்பதுசாப்பிடுவது ஸம்போகிப்பதுமுதலிய ஸாம்ஸாரிகஸுகங்களில் விருப்புற்று, குளிரில் அடிபட்டவன் கொள்ளிவாய்ப் பிசாசத்தைக் கண்டு நெருப்பென்று ப்ரமித்து அதனிடம் போவதுபோல், ரஜோகுணத்தினால் மதிமயங்கின ஜீவன் ஸமஸ்த தோஷங்களுக்கும் இடமாயிருப்பதும் அக்னியின் விஷ்டையுமாகிய ஸ்வர்ணத்தை விரும்புவான். நெருப்புக்காகக் கொள்ளிவாய்ப் பிசாசத்திடம் ஓடியோடிப்போயினும் அது கிட்டமாட்டாமல் வருந்திக் கடைசியில் கிட்டினும் அதனால் விரட்டப்பட்டுப் பயந்து மரணம் அடைவதுபோல், ஸ்வர்ணத்தைப் பெற விரும்பி எவ்வளவு ப்ரயாஸப்பட்டும் அது கிடைக்காமல் வருந்தி, அவ்வளவோடு நிற்காமல் எவ்விதத்திலாவது அதைப் பெறவேண்டுமென்னும் பிடிவாதத்துடன் நெஞ்சிலும் நினைக்க முடியாத பாபகர்மங்களையும் செய்து மிக்கவருத்தத்துடன் அதைப்பெறினும் பண்ணின பாபத்தினால் ஆயுள் க்ஷீணிக்கப்பெற்று ஆசைப்பட்ட போகங்களை அனுபவிக்காமலே மரணம் அடைந்து நரகத்திற் சென்று பற்பல யாதனைகளை அனுபவிப்பான். இங்ஙனம் சரீரம் நிலையற்றதாகையால் கந்தர்வ நகரமாகவும், ஸுகத்திற்கிடம்போல் தோற்றிக் கடைசியில் துக்கத்திற்கே இடமாயிருக்குமாகையால் சப்தாதி விஷயங்கள் கானலாகவும், அனர்த்தத்தை விளைப்பதாகையால் ஸுவர்ணம் கொள்ளிவாய்ப் பிசாசமாகவும் கூறப்பட்டன. இருப்பிடம் குடிநீர் பணம் முதலிய பல போகஸாதனங்களை விரும்பி அவற்றை ஸம்பாதிக்கும்பொருட்டு அபிநிவேசத்துடன் இங்குமங்கும் திரிவான். ராத்ரியிலிருள்போல் ஒன்றும் தெரியவொட்டாமல் மறைக்கிற சுழற்காற்றில் அகப்பட்டவன் கண்களில் தூள் படியப்பெற்றுத் திக்கு

தெரியாமல் தடுமாறுவதுபோல், மடந்தையர் மடியில் அகப்பட்டவன் அக்காலம் தலையெடுத்த காமமோஹத்தினால் மதிமயங்கி மர்யாதைகளை யெல்லாம் தவிர்ந்து ப்ராணிகளின் நடத்தைகளுக்கு ஸாக்ஷிகளான திக்தேவதைகளையும் காணமாட்டான். ஒருகால் சப்தாதி விஷயங்கள் பயனற்றவை யென்பதை அனுபவித்தறிந்தவனாயினும் தேஹசிந்தையினால் ஆத்மாவின் நினைவை இழந்து கானலில் தோற்றும் நீரோட்டம் போன்ற அச்சப்தாதி விஷயங்களையே விரும்பி யோடுவான். ஒருகால் கோட்டான்களுடைய கோஷம்போல் மிகவும் கர்ணகடோரமாய்ப் பரபரப்புடன் பேசுகிற ராஜபடர்களின் விரட்டல்களால் ப்ரத்யக்ஷத்தில் காதுகளிரண்டும் பிளவுண்டாற்போல் வருந்துவான். சுவர்க்கோழிகளின் கோஷம்போல் மிகவும் க்ரூரமாயிருப்பதும் உத்ஸாஹத்தினால் பெரிய பரப்பரப்புடன் கூடியதுமாகிய சத்ருக்களின் விரட்டல்களை மறைவில் கேட்டு ஹ்ருதயம் பிளவுண்டாற்போல் வருந்துவான். பூர்வஜன்மத்தில் புண்யம் செய்திரானாயின், ஒன்றுக்கும் உபயோகப்படாத எட்டி விஷத்தும்பை முதலிய மரம் செடி கொடிகள் போலவும் விஷக்கிணறுபோலவும் [1] இருவகை ப்ரயோஜனங்களுக்கும் இடமில்லாத பணங்களையுடையவர்களும் ஜீவித்திருந்தும் செத்தாற்போலிருப்பவர்களுமான பாபிஷ்டர்களை அடுத்துப் பிழைக்கப்பார்ப்பான். ஒருகால் அஸத்துக்களின் ஸஹவாஸத்தினால் வஞ்சிக்கப்பட்டு மதிகெட்டுத்தண்ணீர் தாஹமுடையவன் ஜலமில்லாத ஆற்றில் இறங்க முயன்று பள்ளத்தில்விழுந்து தண்ணீர் பெருமைமாத்ரமேயன்றி மண்டைஉடையப்பெற்றுப் பின்பும் தலைநோய்தொடர்ந்து

1. இஹலோகத்து ப்ரயோஜனமும் பரலோகத்து ப்ரயோஜனமுமாகிய இருவகை ப்ரயோஜனங்களுக்கும்.

வருந்துவதுபோல் இஹலோகத்திலும் பரலோகத்திலும் துக்கத்தைக் கொடுக்கிற பாஷண்ட மார்க்கத்தைக் கைப் பற்றி வருந்துவான். ஒருகால் பிறரை வருத்தியும் ஆஹா ரம் கிடைக்காமல் தந்தை பிள்ளை முதலியவரைச் சேர் ந்த த்ருணமாயினும் எவரிடத்தில் புலப்படுமோ அவர்க ளைப் பக்ஷிக்கத் தொடங்குவான். ஒருகால் காட்டுத் தீபோல் போக்ய வஸ்துக்கள் எவையுமின்றி மேன்மே லும் துக்க பரம்பரைகளுக்கே இடமான க்ருஹஸ்தாஸ்ர மத்தில் இழிந்து அதில் தான் விரும்புகின்றவை கிடைக் காமையாலும் தனக்கு வேண்டாதவை பலவும் நேர்ந்து நீங்காமையாலும் சோகமாகிற அக்னியால் தஹிக் கப்பட்டு 'ஆ! நான் பூர்வஜன்மத்தில் நல்லது செய்ய வில்லை. ஆகையால் இப்பொழுது பாக்யமற்று வருந்து கிறேன்' என்று மிகவும் மனவெறுப்புறுவான். ஒருகால் ராஜகுலத்திலுள்ளார் காலக்கொடுமையால் ப்ரதிகூல ராகி, தான் ப்ராணன்களைப்போல் மிகுந்த ப்ரீதியுடன் பாதுகாத்து வருகிற தனங்களை ராக்ஷஸர்போல் மேல் விழுந்து பறித்துக்கொண்டு போகையில், ஸந்தோஷம் முதலிய ஜீவலக்ஷணங்களெல்லாம் தொலைந்து மரணம் அடைந்தாற்போலிருப்பான். ஒருகால் விழித்துக்கொண் டிருக்கையில் ஆசைப்பட்டபடி ஸ்வப்னத்தில் தந்தை பாட்டன் முதலிய பந்துவர்க்கத்தைக் கண்டு அடுத்த க்ஷணத்தில் புலப்படாத அந்தப் பந்து வர்க்கத்தைச் சாஸ் வதமாக நினைத்து க்ஷணகாலம் ஸுகத்தை அனுபவிப் பான். ஸ்வப்னத்தில் புலப்படும் வஸ்துக்கள் அக்காலத் தில் அந்தந்த ஜீவாத்மாக்கள் மாத்ரமே அனுபவிக்கு மாறு ஈஸ்வரனால் ஸ்ருஷ்டிக்கப்படுகின்றன. அவை விழித் துக்கொண்ட பின்பு புலப்படமாட்டா. ஆனதுபற்றிக் கந் தர்வ நகரமென்று கூறப்பட்டன. மூடவன் பெரிய நெட்

டான மலையின்மேல் ஏற விரும்புவதுபோல், மிக்க பணச் செலவாலும் சரீராயாஸத்தினாலும் அனுஷ்டிக்க வேண்டிய வைதிக கர்மங்களை அனுஷ்டிக்க விரும்பி, மலைமேல் ஏறுகிறவன் முட்போன்ற பரல்கற்களால் பாதங்கள் பொற்றப்பெற்று வருந்துவதுபோல், இடையில் பலவகையான ஸாம்ஸாரிக துக்கங்களால் மனம் கலங்கப்பெற்று வருந்துவான். ஒருகால் ஜாடராக்னியால் சரீரத்திலுள்ள பலமெல்லாம் ஒடுங்கப்பெற்று இளைத்துத் தனது குடும்பத்தின் மேல் கோபித்துக் கொள்வான். அவனே உறக்கமாகிற மலைப்பாம்பினால் பிடியுண்டு தன்னையும் பிறனையும் அறியமுடியாத அஜ்ஞானமாகிற பெரிய அந்தகாரத்தில் மூழ்கி ஜனஸஞ்சாரமில்லாத அரண்யத்தில் போலப் படுத்து விழுபிணம்போலிருப்பான். ஒருகால் துர்ஜனாகளாகிற ஸர்ப்பங்களால் கடியுண்டு கர்வமாகிற கோரைப்பல் ஒடியப்பெற்று உறங்குவதற்குச் சிறிதும் அவகாசம் கிடைக்காமல் மனவருத்தமுற்று அதனால் ஜ்ஞானஸங்கோசத்தை அடைந்து குருடன்தெரியாமல் பாழ்ங்கிணற்றில் விழுவதுபோல் மஹத்தான துக்கத்தில் விழுவான். ஒருகால் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கையாலுண்டாகும் ஸுகமாகிற தேன் துளிகளைத் தேடிக்கொண்டு பரதாரங்களையும் பரத்ரவ்யங்களையும் மேல்விழுந்து பறிக்கத் தொடங்கி அரசனாலாவது அவற்றிற்கு உடையவர்களாலாவது அடிக்கப்பெற்றுப் பெரிய நரகம்போன்ற சிறைச்சாலையில் அடைப்புண்பான். ஆகையால் ஜீவன் ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் இழிந்து செய்யும் புண்ய பாப கர்மங்களெல்லாம் இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் அவனுக்கு ஸம்ஸாரத்தையே விளைக்குமென்று சொல்லுகிறார்கள். பரத்ரவ்ய பரதாரங்களில் கைவைத்து அதற்காகச் சிறைச்சாலையில் அடைப்புண்டவன் அதினின்று

விடுபடுவானுயின், அவனிடத்திலுள்ள த்ரவ்யத்தையும் மடந்தையர்களையும் தேவதத்தனும், அவனிடத்தினின்று யஜ்ஞமித்ரனும் பறித்துக்கொண்டு போவார்கள். இங்ஙனமே அந்யாயமாய் ஸம்பாதித்த ஸொத்து ஒருவனுக்கும் நிலைநிற்காது. ஒருவனை விட்டு மற்றொருவனிடம் போய்க்கொண்டேயிருக்கும். சிறையிலிருந்து வருந்தியும் அதை அனுபவிக்கப் பெறமாட்டான். ஒருகால் குளிர் வெய்யில் காற்று முதலிய பல ஆதிதெய்விகதாபங்களாலும் ஆதிபௌதிகதாபங்களாலும் ஆத்யாத்மிகதாபங்களாலும் வருந்தி அவற்றைத் தடுக்க விரும்பி அதற்கு வல்லமையற்று எல்லையில்லாத மனக்கவலையுடன் துக்கித்துக் கொண்டிருப்பான். ஒருகால் ஏதேனும் ஒரு தனத்தைக் கொடுக்கல் வாங்கல் செய்து கொண்டிருந்து பணத்தாசையால் இருபது பல கறைகளுக்காவது அன்றி அவற்றிலும் குறைந்த அற்ப வஸ்துவுக்காவது த்வேஷத்தை ஏற்றுக்கொள்வான். ஒருகால் பணமெல்லாம் அழியப்பெற்றுப் படுக்கை ஆஸனம் இருப்பிடம் முதலிய போகத்திற்கு வேண்டிய கருவிகள் எவையுமின்றி மீளவும் அவற்றைப் பெற விரும்பி அதற்குப் பணம் வேண்டுமாகையால் முயற்சி செய்தும் அது கைகூடாமல் பிறனுடைய ஸொத்தைப் பறிக்க மனத்தில் நிச்சயித்துக்கொண்டு முயன்று அவமானம் முதலியவற்றைப் பெறுவான். கொடுக்கல் வாங்கலின் மாறுபாட்டினுல் ஒருவர் மேல் ஒருவர்க்கு வைரம் வேரூன்றி அதன் தொடர்ச்சியால் அனிஷ்டங்களைச் செய்து கொண்டிருப்பினும் முன்பு கலந்திருந்த அபிமானத்தின் வாஸனையால் அவர்களோடு விவாஹாதி ஸம்பந்தத்தையும் ஏற்றுக்கொள்வான். இத்தகைய பல வருத்தங்களாலும் ஸுகம் துக்கம் ராகம் த்வேஷம்

முதலியவைகளாலும் மிகவும் விஸ்தீர்ணமாயிருக்கிற இந்த ஸம்ஸார மார்க்கத்தில் ஆபத்தை அடைந்து மரணம் அடைகின்ற தந்தை பாட்டன் பிள்ளை பெண்டிர் முதலியவர்களைத் துறந்து மேன்மேல் நேரிடுகிற பிள்ளை பெண் முதலியவர்களை நம்முடையவர்களென்னும் அபிமானத்துடன் கைப்பற்றி அங்ஙனம் பிறந்த பிள்ளைமுதலியவர் மரணம் அடைகையில் சோகிப்பதும் மோஹிப்பதும் வருந்துவதும் வாயாற் புலம்புவதும் கண்ணீர் பெருக்குவதுமாகி, மீளவும் பிள்ளை பெண் முதலியன உண்டாகும் பொழுது ஸந்தோஷிப்பதும் இடியிடியென்று நகைப்பதும், ஒருகால் ஜீவித்திருக்கிற பிள்ளை பெண் முதலியவர்க்கு என்ன வருமோவென்று பயப்படுவதும், அவர்களுடைய குணங்களைப்பாடுவதுமாகி மோஹித்திருப்பான். இங்ஙனம் இவ்வுலகத்திலுள்ள ப்ராணி ஸமூஹமெல்லாம் நற்செயலேதுமின்றி ஸம்ஸார மார்க்கத்தின் அக்கரையாகிய ஆத்ம யோகத்தில் இழியாமல் இதிலேயே உழலகின்றன. சாந்தியே ஸ்வபாவமாயிருக்கப்பெற்றவரும் மனத்தை அடக்கியாள்பவரும் பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை மனனம் செய்பவருமான முனிவர்கள் எத்தகைய பூதங்களுக்கும் த்ரோஹம் செய்யாமல் நண்பர்களாகி ஆவலுடன் அநுஷ்டித்து வருகிற ஆத்மயோகம் மிகவும் ஆநந்தமாயிருக்கும்; அது ஸம்ஸாரத்தினின்று கடத்திப் பரமாத்மாநுபவத்தை விளைக்கும். மன்னவர்கள் தாம் திக்கஜங்களை வென்றவராயினும் மனத்தை வெல்ல முடியாமல் அத்தகைய ஆத்ம யோகத்தைக் கைப்பற்றுமலே வருந்துகிறார்கள். மற்றும், அவ்வரசர்கள் இப்பூமண்டலமெல்லாம் என்னுடையதேயென்று அபிமானித்து அதற்காக ஒருவர்மேல் ஒருவர் வைரத்தை ஏற்றுக்கொண்டு அது மேன்மேலும் தொடர்

ந்து வரப்பெற்று யுத்தத்தில் சத்ருக்களால் அடியுண்டு தாம் அபிமானித்திருந்த அப்பூமியைத் துறந்து யுத்த பூமியில் படுக்கின்றார்கள். இந்த ஸம்ஸார மார்க்கத்தில் இத்தகைய பெரிய வருத்தங்களும் பணத்தை இழக்கை முதலியவைகளும் ஸுகம் துக்கம் ராகம் த்வேஷம் பயம் அபிமானம் ஸந்தோஷம் மனவூக்கமின்மை பிச்சேறுகை சோகம் மோஹம் பிறனுடைய நன்மையைக் கண்டு பொறாமை பிறனுடைய குணங்களைப் பொறாமல் அவன் மேல் தோஷங்களை ஏறிடுகை அவமானம் பசி தாஹம் மனோவ்யாதி சரீரவ்யாதி பிறவிமூப்பு மரணம்முதலிய பலவகை உபத்ரவங்களும் மாறாதிருக்கின்றன. ஒருகால்ஸ்த்ரீயென்னும் பேர்பூண்ட பகவானுடைய மாயையால் இருகரங்களாலும் அணைக்கப்பெற்று விவேகம் கெட்டுத் தேஹத்தைக்காட்டிலும் விலக்ஷணனான ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறியப்பெறாமல் பகவானை உபாஸிக்கவேண்டுமென்னும் நினைவேயின்றி, அந்த ஸ்த்ரீயினுடைய லீலாக்ருஹத்தின் வாசற்படி நுழையமுயன்ற மாத்ரத்திலேயே மனம் கலங்கி அவ்விடத்திலுள்ள பிள்ளை பெண் மனைவி முதலியவர்களின் பேச்சுக்களால் மனம்பறியுண்டு இந்த்ரியங்களை அடக்க முடியாமல் தன்னை எல்லையில்லாத பெரிய அந்தகாரம்போன்ற துக்கஸாகரத்தில் தள்ளிக்கொள்கிறான். பரமாணுமுதல்த்விபரார்த்தம்வரையிலுள்ளகாலரூபமான பகவானுடைய சக்ராயுதம் பால்யம் முதலிய வயதைமிக்க விரைவுடன் நடத்திக்கொண்டு வந்து ப்ரஹ்மதேவன் முதல் பூச்சி புழு வரையிலுமுள்ள ஸமஸ்த ப்ராணிகளுடைய ஆயுளையும் கணக்கிடுகின்றது. காலசக்ரம் சிறிதும் மனவூக்கம் தவறாமல், ப்ராணிகளின் ஆயுளைப் பறிக்கின்றது. ப்ராணிகள் நெடுநாள் வரையிலும் தமது ஆயுள் க்ஷீணிப்பதை அறியாமலேயிருந்து கடைசியில் மரணம்

வருவதை நினைத்து அந்தக்கால சக்ரத்தினின்று பயந்து என்றும் மரணமில்லாதிருக்க வேண்டுமென்று விரும்பி அக்கால சக்ரத்தையே ஆயுதமாகவுடைய யஜ்ஞபுருஷனை பகவானை உபேக்ஷித்து வைதிக ஸித்தாந்தத்தினின்று வெளிப்பட்டு பருந்து கழுகு கொக்குமுதலிய பறவைகள்போல் நம்பினவர்களையும் வஞ்சிக்குந் தன்மையுடையவைகளும் சாஸ்த்ரங்களில் விதிக்கப் படுகையின்றிக் கேவல ஸங்கேதத்தினல் ஏற்பட்டவைகளுமான பாஷண்ட தேவதைகளை அடுத்துப் பாஷண்ட தர்மங்களை ஏற்றுக் கொள்கிறுர்கள். தம்மைத் தாமே வஞ்சனை செய்கின்ற அப்பாஷண்ட தேவதைகளால் வஞ்சிக்கப்பட்டு அதில் உபயோகமில்லையென்று அதினின்று ப்ராஹ்மண குலத்தில் புகுந்து, ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்ட உபநயனம் முதலிய தர்மங்களால் யஜ்ஞபுருஷனை ஆராதிக்கையாகிற அந்தப்ராஹ்மணர்களின் நடத்தை தனக்கு ருசிக்காமல், வைதிகமான ஆசாரத்தில்சக்தியில்லாமையால் வானரஜாதிபோல் ஸம்போக ஸுகமும் குடும்பபோஷணமுமாகிய இவையேபரமபுருஷார்த்தங்களாகப்பெற்றுஆத்ம விஷயத்தில் சிறிதும் கண்வையாத சூத்ரகுலத்தை அடுக்கிறுர்கள். அதிலும் தடையின்றித் தேசகாலங்களின் உரிமையை எதிர்பாராமல் மனம் போனபடி க்ரீடித்துக் கொண்டு சப்தாதிவிஷயங்களில் மிகவும் தாழ்ந்தமதியுடையவராகி ஸ்த்ரீயும் புருஷனும்ஒருவர்க்கொருவர்முகத்தைப்பார்ப்பது முதலிய க்ராம்யபோகத்திலேயே அழுந்தி ஆயுள் முடிவையும் மறக்கின்றுர்கள். ஒருகால்மரம்போல் கேவலம் ஐஹிகஸுகத்தையே விளைப்பதான க்ருஹஸ்தாஶ்ரமத்தில் க்ரீடிக்கமுயன்றுவானரம்போல் பிள்ளைபெண்டிர்களிடத்தில் மிகுந்த ப்ரீதிகொண்டு மைதுனத்தையே பெரியஉத்ஸவமாக நினைக்கின்றுர்கள். இங்ஙனம்ஸம்ஸார

மார்கத்தில் ஸுகம் துக்கம் முதலியவற்றை அனுபவித்துக்கொண்டு ம்ருத்யுவாகிற யானையிடத்தில் பயந்து பர்வத குஹைபோல் எவ்விதத்திலும் கடக்கமுடியாத ரோகம் முதலிய ஆபத்தில் விழுந்து மீளவும் ஜீவித்திருப்பதற்குக் காரணமான கர்மமாகிற கொடியைப் பிடித்துக்கொண்டு அவ்வாபத்தினின்று மிக்க ப்ரயாஸத்துடன் விடுபட்டு மீளவும் கீழ்ச்சொன்னபடியே இந்த ஸம்ஸாரமார்கத்தில் இருந்துகொண்டு தம்மைப்போன்ற ப்ராணி ஸமூஹத்தையே தொடர்கின்றார்கள். லோகாந்தரத்திலுள்ள ஜீவஸமூஹமும் இங்ஙனமே இந்த்ரியங்களை அடக்கியாள முடியாமல் சப்தாதிவிஷயங்களில் விழுந்து வருந்துகின்றது. மன்னவனே! முன்பு மறைத்துச் சொன்ன ஸம்ஸாரத்தின் கொடுமையையே விவரித்துச்சொன்னேன். ரஹூகணனுக்குப் பரதன் இங்ஙனம் ஆத்ம பரமாத்ம ஸ்வரூபத்தையும் ஸம்ஸாரத்தினிழிவையும் உபதேசித்தான். இப்பரதனுடைய மஹிமையைப்பற்றி இங்ஙனம் பாடுகிறார்கள்:—“ருஷபமன்னவனுடைய குமாரனும் மஹானுபாவனுமாகிய பரதனென்னும் ராஜர்ஷியின் மஹிமை இத்தகையது. கருடனுடைய வேகத்தை ஈ அனுஸரிக்கமுடியாததுபோல், இம்மஹானுபாவனுடைய மஹிமையை மற்றொருமன்னவன் நெஞ்சாலும் தொடர உரியவனல்லன். இந்த ருஷபகுமாரனாகிய ராஜர்ஷி பகவானிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனாகி யௌவன வயதிலிருக்கும்பொழுதே மனத்திற்கினியர்களும் விடமுடியாதவர்களுமான பெண்டிர்களையும் புதல்வர்களையும் நண்பர்களையும் ராஜ்யத்தையும் விஷ்டையைப் போல் துறந்தான். இம்மன்னவன் பூமண்டலத்தையும் பிள்ளைகளையும் பந்துக்களையும் பணத்தையும் பார்யையையும், தேவதைகளாலும் மனுஷ்யர்களாலும் ப்ரார்த்திக்

கத்தகுந்தவளும் தன்னிடத்தில் கருணுகடாக்ஷமுடைய வளும் தன்கருணுகடாக்ஷத்தை எதிர்பார்க்கின்றவளு மாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மியையும் துறந்து அவற்றில் சிறி தும் மனவிருப்பமில்லாமலே யிருந்தான். இது யுக்தமே. ஏனென்னில், பகவானுடைய ஸேவையில் அனுராகம் நிறைந்த மனத்தரான பெரியோர்களுக்கு மோக்ஷமும் அற்பமாகவே தோன்றும். இனி இஹலோகபோகங் களை அவர்கள் ஒருபொருளாக எப்படி நினைப்பார்கள்? இம்மன்னவன் மானுகப் பிறந்திருக்கையில் அந்த மான் சரீரத்தைத் துறக்கமுயன்ற ஸமயத்திலும் 'யஜ்ஞஸ்வ ரூபியும் ராமக்ருஷ்ணுதி அவதாரங்களால் வர்ணுஸ்ரம தர்மங்களைப் பாதுகாப்பவனும் தர்மத்தை அனுஸரிப் பவர்களைக் காப்பதில் வல்லமை அமைந்தவனும் ஆத்ம ஸ்வரூபத்தையும் தேஹஸ்வரூபத்தையும் முக்யமாக எடு த்துரைக்கிற ஸாங்க்யஶாஸ்த்ரத்தை வெளியிட்டவனும் பக்தியோகத்தினுல் அறியத்தகுந்தவனும் ப்ரக்ருதி க்கு நியாமகனும் ஸமஸ்தசேதனுசேதனங்களைச் சரீர மாகவுடையவனும் தன்னைப்பற்றினுருடைய ஸம்ஸார பந்தத்தைப்போக்குந் தன்மையனுமாகிய பரமபுருஷனு க்கு நமஸ்காரம்' என்று மனேபாவத்துடன் மொழிந் தான்''. இந்தப் பரதனென்னும் ராஜரிஷி பரிசுத்தமான செயலுடையவன். இவனது செயல்களைப் பகவானிடத் தில் பக்தியுடைய பெரியோர்கள் கொண்டாடுவார்கள். இவனது குணங்களும் அப்படிப்பட்டவைகளே. இவனு டைய சரித்ரம் புகழையும் மங்களத்தையும் ஆயுஸ்ஸை யும் தனத்தையும் ஸ்வர்க்கத்தையும் மோக்ஷத்தையும் கொடுக்கும். இதைக் கேட்கிறவனும் சொல்லுகிறவனும் இதைச்சொல்லுகிறவர்களையும் கேட்கிறவர்களையும்கண்டு ஸந்தோஷிக்கிறவனும் தாம் விரும்பும் விருப்பங்களை

யெல்லாம் தாமே பெறுவார்கள்; எதற்காகவும் பிறனை எதிர்பார்க்கமாட்டார்கள். பதினைன்காவது அத்யாயம் முற்றிற்று.

---

{ பரதனது வம்சத்தில் பிறந்த ராஜாக்களைக் கூறுதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பரதனுக்கு ஸுமதியென்று சொல்லப்பட்ட ஓர்புதல்வன் உண்டு. அவன் ருஷபன் அனுஷ்டித்த யோகமார்க்கத்தை அனுஸரித்திருப்பதைக்கண்டு சில பாஷண்டிகள் வேதத்தில் சொல்லப்படாத புத்தனென்னும்தேவதையைக்கைப்பற்றிஅத்தேவதையே இங்ஙனம் ஸுமதியாக அவதரித்தானென்று தமது பாபிஷ்ட புத்தியால் கற்பிக்கப்போகிறார்கள். அந்த ஸுமதிக்கு க்ருத்ரஸேனையென்னும் பார்யையிடத்தில் தேவதாஜித்தென்னும் புதல்வன் உண்டானான். அவனுக்கு ஆஸுரியென்னும் பார்யையிடத்தில் தேவத்யும்னனென்னும் பிள்ளை பிறந்தான். அவனுக்குத் தேனுமதியென்பவளிடத்தில் பரமேஷ்டியென்னும் பிள்ளை பிறந்தான். அவனுக்கு ஸுவர்ச்சலையென்னும் பார்யையிடத்தில் ப்ரதீஹனென்னும் பிள்ளை பிறந்தான். இவன் பலர்க்கு ஆத்மவித்யையை உபதேசித்து அதனால் பரிசுத்தமான மனமுடையவனாகிப் பரமபுருஷனை உபாஸித்தான். ஸுவர்ச்சலையின் புதல்வனாகிய ப்ரதீஹனுக்கு ப்ரதிஹர்த்தா ப்ரஸ்தோதா உத்காதா என்னும் மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். அம்மூவரும் யாகானுஷ்டானத்தில் நிபுணராயிருந்தார்கள். அவர்களில் ப்ரதிஹர்த்தாவுக்கு ஸ்துதியென்னும் பார்யையிடத்தில் அஜன் பூமன் என்று இரண்டு பிள்ளைகள் பிறந்தார்கள். பூமனுக்கு ரிஷிகுல்யையென்னும் பார்யையிடத்தில் உத்கீத

னென்னும் பிள்ளை பிறந்தான். அவனுக்குத்தேவகுல்யை யிடத்தில் ப்ரஸ்தாரனும், அவனுக்கு விகுத்ஸையிடத்தில் விபுவும், அவனுக்குப் பாரதியிடத்தில்ப்ருதுஷேணனும், அவனுக்கு ஆகூதியிடத்தில் நக்தனும், அவனுக்கு க்ருதி யிடத்தில் கயனும் பிறந்தார்கள். அவன் ராஜரிஷிகளில் சிறந்தவன்; பெரும்புகழுடையவன்; ஜகத்தை ரக்ஷிக் கும்பொருட்டுச் சுத்த ஸத்வமயமான திருவுருவங் கொண்ட பகவானுடைய அம்சம்; மனச்சிறப்பு முதலிய அடையாளங்களால் மஹாபுருஷனுயிருந்தான். அவன் கர்மபலன்களை விரும்பாமல் ப்ரஜைகளைப் பயத்தினின்று காப்பது அவர்களை அன்னதானுதிகளால் ஸந்தோஷப் படுத்துவது பிள்ளைகளைப்போல் சீராட்டுவது துர்மார்க் கத்தினின்று தடுத்து நல்வழியில் நடத்துவது முதலிய தன் வர்ண தர்மத்தினுலும் பஞ்சமஹா யஜ்ஞாதி கர்மங் களை அனுஷ்டிக்கையாகிற தன் ஆஸ்ரம தர்மத்தினுலும் ஷாட்குண்ய பூர்ணனும் ஸ்வரூபத்தினுலும் குணங்களா லும் எங்கும் நிறைந்தவனும் தலைமையுள்ள ப்ரஹ்மாதி தேவர்களுக்குந் தேவனும் மஹாபுருஷனுமாகிய ஸர்வே ஸ்வரனிடத்தில் ஸர்வப்ரகாரத்தாலும் ஆத்ம ஸமர்ப் பணம் செய்கையாகிற முக்யமான அங்கத்தோடு கூடிய தும் பரப்ரஹ்மத்தை அறிந்த பெரியோர்களின் பாதஸே வையால் விளைந்து வளர்ந்ததுமாகிய பகவத் பக்தியோ கத்தினுலும் மனமலங்களெல்லாம் தீர்ந்து மதிதெளியப் பெற்றுத் தேஹமே ஆத்மாவென்னும் ப்ரமத்தையும் துறந்து தனக்கு அந்தராத்மாவான பரமாத்மாவை ஸாக்ஷாத்கரித்துத் தேஹாத்மப்ரமம் ஸ்வதந்த்ராத்மப்ர மம் இவையில்லாமலே இந்தப் பூமியைப் பாதுகாத்து வந்தான். பரீக்ஷித்து மன்னவனே! பெரியோர்கள் அவன் புகழை இங்ஙனம் பாடுகிருர்கள். 'எந்த மன்னவன் தான்

கயனைச் செயல்களால் தொடரவல்லனுவான்? அவன் வேதங்களில் விதிக்கப்பட்ட யஜ்ஞங்களையெல்லாம் அனுஷ்டித்தவன்; அனைவராலும் வெகுமதிக்கத் தகுந்தவன்; பலபேரிடத்தில் பலவும் கேட்டுணர்ந்தவன்; வர்ணுஸ்ரம தர்மங்களைப் பாதுகாப்பவன். ஸ்ரீமஹாலக்ஷ்மி அவனை விடாமல் தொடர்ந்திருந்தாள். அவன் ஸத்புருஷர்களின் ஸபைக்குத் தலைவன்; அவர்களைப் பணியுந்தன்மையன். பகவானுடைய அம்சமாகிய கயனைத் தவிர மற்ற எவன் இத்தகைய குணங்கள் அமைந்தவன்? எவனுமே இல்லை. நல்லியற்கையுடையவரும் பொய்யாகாத ஆசீர்வாதங்களை அளிக்குந்திறமை யுடையவருமாகிய தக்ஷகன்னிகைகள் தம்முடைய தேஜஸ்ஸுக்களால்இவனை அபிஷேகம் செய்தார்கள். (சிறக்கச் செய்தார்கள்.) பூமியாகிற பசு இவனுடைய குணங்களாகிற கன்றிடத்தில் ப்ரீதியால் பால் சுரந்த மடியுடையதாகி, அவன் எதையும் அபேக்ஷிக்காதிருப்பினும் அவனது ப்ரஜைகளின் விருப்பங்களையெல்லாம் கறந்தது. வேதங்களும் வேதங்களில் சொல்லப்பட்ட யஜ்ஞாதி கர்மங்களும் எதையும் விரும்பாத அம்மன்னவனுக்குப் பற்பல காமங்களைக் கறந்தன. சத்ரு ராஜாக்கள் யுத்தத்தில் அவனுடைய பாணங்களால் பூஜிக்கப்பட்டுக் கப்பங்களைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். ப்ராஹ்மணர்கள், அம்மன்னவனுல் தர்மந்தவருமல் பாதுகாக்கையாலும் தக்ஷிணைகளாலும் பூஜிக்கப்பட்டுப் பரலோகத்தில் அனுபவிக்கக்கூடிய தமது தர்ம பலன்களின் ஆறில் ஒரு பாகத்தை அவனுக்குக் கொடுத்தார்கள். இந்தக் கயனுடைய யஜ்ஞத்தில்இந்த்ரன் நிரம்பவும் ஸோமபானம் செய்து மதித்திருக்கையில், யஜ்ஞஸ்வரூபியாகிய பகவான் ஸ்ரத்தையால் பரிசுத்தமாயிருப்பதும் இடையூறுகளால் தடைபடாததுமாகிய பக்தியோகத்

தினுல் ஸமர்ப்பிக்கப்பட்ட ப்ரீதியாகிற யாகபலனைத் தானே நேரில் வந்து பெற்றுக்கொண்டான். யாகத்தில் பகவான் களிப்புறுவானுயின் ப்ரஹ்மதேவன் முதற்கொண்டு தேவர் திர்யக்கு மனுஷ்யர் கொடி புல் வரையிலுள்ள ஸமஸ்தமான ஜகத்தும் அபொழுதே களிப்புறும். ஜகத்திற்கெல்லாம் ப்ராணன்போன்ற அப்பகவான் கயமன்னவனிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனுகி அவனுடைய ப்ரீதியை அங்கீகரித்தான். கயனுக்கு ஜயந்தியிடத்தில் சித்ரரதன் ஸ்வாதி அவரோதனன் என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். அவர்களில் சித்ரரதனுக்கு ஊர்ஜையிடத்தில் ஸம்ராட்டென்பவன் பிறந்தான். அவனுக்கு உத்கலையிடத்தில் மரீசியும், அவனுக்குப் பிந்துமதியிடத்தில் பிந்துமானென்பவனும், அவனுக்கு ஸரகஷேணையிடத்தில் மதுவும், மதுவுக்கு ஸுமனஸ்ஸென்பவளிடத்தில் விரவ்ரதனும், அவனுக்கு ப்ரபோதையிடத்தில் மதுப்ரமது என்னும் இரண்டு பிள்ளைகளும், அவர்களில் மதுவுக்கு ஸத்யையிடத்தில் பௌமனனும், அவனுக்கு தூஷணையிடத்தில் த்வஷ்டாவும், அவனுக்கு விரோசனையிடத்தில் விரஜனும், அவனுக்கு விஷூசியிடத்தில் சதஜித்துமுதலிய நூறு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் பிறந்தார்கள். இதுவேப்ரியவ்ரதனுடைய வம்சத்தின்வரலாறு. இதைப்பற்றி இங்ஙனம் சொல்லுகிருர்கள். 'ஸ்ரீமஹாவிஷ்ணு தேவர் கூட்டத்தை அலங்கரிப்பதுபோல், நூறு பிள்ளைகளைப்பெற்ற இவ்விரஜன் இந்த ப்ரியவ்ரத வம்சத்தைத் தன் கீர்த்தியால் மிகவும் அலங்கரித்தான்.' பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

மேருவின் நிலைமையைக் கூறுதல்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—'ஸூர்யன் எது வரையில் வெயில் காய்கிறானோ, சந்த்ரன் நக்ஷத்ரங்களோடு எதுவரையில் புலப்படுகிறானோ, அதுவரையிலுள்ள பூமண்டலத்தின் விஸ்தார விசேஷத்தை மொழிந்தீர். அதிலும் ப்ரியவ்ரதனுடைய தேர்சக்ரம் படிந்த பள்ளங்களால் ஏழு ஸமுத்ரங்கள் ஏற்பட்டதையும், அவற்றால் இப்பூமியில் ஏழு தீவுகள் ஏற்பட்டதையும் ஸூசனையாகச் சொன்னீர். இவற்றின் அளவையும் அடையாளத்தையும் எனக்குச் சொல்வீராக. ஸத்வாதி குணங்களின் பரிணாமமான இந்த ஜகத்தெல்லாம் பகவானுடைய ஸ்தூலரூபமென்றும் அதில் மனத்தைச் செலுத்தி அநுஸந்தித்தால் ஸத்வாதி குணங்களின் ஸம்பந்தமின்றிச் சுத்த ஸத்வமயமாயிருப்பதும் ஸ்வயம்ப்ரகாசமும் பரப்ரஹ்மம் பகவான் வாஸுதேவன் இவைமுதலிய சப்தங்களால் கூறப்படுவதுமாகிய பரமாத்மாவின் ஸூக்ஷ்ம ரூபத்தில் அம்மனம் ஸுகமாகப் பற்றுமென்றும் சொன்னீர். அஜ்ஞானாந்தகாரத்தைப் போக்கும் குருவே! ஆகையால் பகவானுடைய ஸ்தூலரூபமான இப்பூமண்டலத்தின் அளவு முதலியவற்றை அறியவிரும்புகிற எனக்கு அவற்றை விவரித்து மொழியவேண்டும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஓ மஹாராஜனே! ஒருவன் தேவதைகளைப்போல் நீண்ட ஆயுளுடையவனாயினும் பகவானுடைய லீலாவிபூதியிலுள்ள ஸ்தானவிசேஷங்களின் ஸ்வரூபத்தையும் பேரையும் முழுவதும் வாயால் சொல்லவாவது மனத்தினால் நினைக்கவாவது வல்லனாகமாட்டான். ஆகையால் முக்யமான பூகோளவிசேஷத்தின் ஸ்வரூபத்தையும் பேரையும் அடையாளத்தையும் சொல்லுகிறோம். த்வீபங்களில் ப்ரஸித்தமான இந்த

ஜம்பூத்வீபம் பூமண்டலமாகிற தாமரை மலரின் இதழ் வட்டங்கள்போன்ற த்வீபங்களில் உள்ளிதழ் வட்டம் போன்றிருக்கும்; லக்ஷயோஜனவிஸ்தாரமுடையது; தாமரை யிலைபோல் ஏற்றக்குறைவின்றி வட்டமாயிருக்கும். இதில் ஒன்பது வர்ஷங்கள் (கண்டங்கள்) உண்டு. ஒவ்வொன்றும் ஒன்பதினாயிர யோஜனை விஸ்தாரமுடையது. இவ்வொன்பது வர்ஷங்களும் எல்லையை அறிவிக்கிற எட்டுக்குலபர்வதங்களால் தனித்தனியே பிரிந்திருக்கின்றன. அவற்றில் இலாவ்ருதமென்னும் வர்ஷம் இடையில் இருக்கின்றது. குலபர்வதங்களில் தலைமையுள்ள மேருபர்வதம் இதினிடையில் இருக்கின்றது; ஜம்பூத்வீபத்தின் விஸ்தீர்ணம் எவ்வளவோ அவ்வளவு(லக்ஷயோஜனை) உயரமுடையது; இப்பூமண்டலமாகிற கமலத்திற்குக் கர்ணிகைபோலிருக்கும். அம்மேருவின் முடி முப்பத்திரண்டு யோஜனை விஸ்தாரமுடையது. அதன் அடி பதினாறுயிரம் யோஜனையுடையது; பதினாறுயிரம் யோஜனை பூமிக்குள் மறைந்திருக்கின்றது. இலாவ்ருதவர்ஷத்திற்கு வடபாகத்தில் வரிசையாக நீலம் ஸ்வேதம் ஸ்ருங்கவான் என்னும் மூன்று மலைகள் இருக்கின்றன. அவை ரம்யகம் ஹிரண்மயம் குரு என்னும் வர்ஷங்களுக்கு எல்லைப் பர்வதங்கள். அவை மூன்றும் கிழக்கே நீண்டிருப்பவை; இருபுறத்திலும் லவண ஸமுத்ரத்தை எல்லையாகவுடையவை. ஒவ்வொன்றும் இரண்டாயிரம் யோஜனை விஸ்தீர்ணமுடையது. ஒன்றைவிட ஒன்று நீட்சியில் மாத்ரம் பத்து மடங்குக்குமேல் குறைந்திருக்கும். இங்ஙனமே இலாவ்ருதவர்ஷத்திற்குத் தென்பாகத்தில் நிஷதம் ஹேமகூடம் ஹிமாலயம் என்று மூன்று மலைகள் இருக்கின்றன. இவையும் கிழக்கே நீண்டிருப்பவை. நீலம் முதலிய வடக்கு மலைகளைப்போலவே இரண்டாயிரம் யோஜனை விஸ்தீர்ணமும்

பதினாயிரம் யோஜனை உயரமு முடையவை. இவை ஹரி வர்ஷம் கிம்புருஷவர்ஷம் பாரதவர்ஷம் இவைகளுக்கு எல்லைப் பர்வதங்கள். அங்ஙனமே இலாவ்ருத வர்ஷத்திற்கு மேல்பாகத்தில் மால்யவானென்றும் கீழ்ப்பாகத்தில் கந்தமாதனமென்றும் இரண்டு மலைகள் இருக்கின்றன. இவை யிரண்டும் வடக்கில் நீலபர்வதம் வரையிலும் தெற்கில் நிஷதபர்வதம் வரையிலும் நீண்டிருப்பவை. இரண்டாயிரம் யோஜனை விஸ்தீர்ண முடையவை. இவை கேதுமாலம் பத்ராஸ்வம் என்னும் வர்ஷங்களுக்கு எல்லைப் பர்வதங்கள். மந்தரம் மேருமந்தரம் ஸுபார்ஸ்வம் குமுதம் என்னும் நான்கு மலைகள் மேருவுக்கு நான்கு புறங்களிலும் அரைநாண்மாலைபோல் சுற்றிக்கொண்டிருக்கின்றன. இவை பதினாயிரம்யோஜனைவிஸ்தீர்ணமும் உயரமு முடையவை. அவற்றுள் மந்தரபர்வதத்தில் மேலான மாமரமும், மேருமந்தர பர்வதத்தில் சிறந்த நாவல் மரமும், ஸுபார்ஸ்வ பர்வதத்தில் ஸ்லாக்யமான கடப்ப மரமும், குமுத பர்வதத்தில் ஸ்ரேஷ்டமான ஆலமரமும் அம்மலைகளுக்கு த்வஜங்கள்போல் ஏற்பட்டிருக்கின்றன. அவை நான்கும் ஆயிரத்து நூறுயோஜனை உயரமும் அவ்வளவு விஸ்தீர்ணமு முடையவை அங்ஙனமே மந்தரத்தில் பால்மடுவும், மேருமந்தரத்தில் தேன்மடுவும், ஸுபார்ஸ்வத்தில் கருப்பஞ்சாற்று மடுவும், குமுதத்தில் சுத்தஜல மடுவும், ஆக நான்கு மடுக்கள் இருக்கின்றன. பரதஸ்ரேஷ்டனே! இம்மடுக்களில் ஸ்நான பானாதிகளைச் செய்யும் கந்தர்வர்கள் இயற்கையாகவே அணிமாதி யோகைஸ்வர்யங்களைத் தரித்துக்கொண்டிருக்கின்றனர். நந்தனம் சைத்ரரதம் வைப்ராஜிகம் விஸ்வதோபத்ரம் என்று நான்கு தேவோத்யானங்களும் ஏற்பட்டிருக்கின்றன. அவற்றில் சிறப்புடைய தேவதைகள் கந்தர்வர்

களால் பாடப்பட்ட மஹிமையுடையவர்களாகி அப்ஸரஸ்த்ரீகளுடன் விளையாடிக்கொண்டிருப்பார்கள். மந்தர மலையின் தாழ்வரையில் பதினொரு யோஜனை உயரமுடைய தெய்வமாமரத்தின் நுனியினின்று பர்வத சிகரம்போல் பருத்து அம்ருதம்போல் ருசியுடைய பழங்கள் பழுத்து விழுகின்றன. அங்ஙனம் கீழ் விழுந்துடைகின்ற மாம்பழங்களின் ரஸம் மிக்க மதுரமும் இயற்கை வாஸனையோடு மற்ற வாஸனை வஸ்துக்களின் பரிமளத்தினால் மிகுந்த வாஸனையுடையதும் சிவந்த நிறமுடையதுமாகி அருணோதை யென்னும் நதியென்று பேர் பெற்று மந்தரபர்வதத்தின் சிகரத்தினின்று பெருகி இலாவ்ருதவர்ஷத்தின் கீழ்ப்பாகத்தில் பாய்கின்றது. இந்நதியின் ஜலத்தைப் பானம் செய்வதனால் நன்மணமுடைய பார்வதியின் தாஸிகளுடைய சரீரத்திலும் புண்யஜனஸ்த்ரீகளின் சரீரத்திலும் பட்டு மிக்க பரிமளத்துடன் வீசுங்காற்று நாற்புறத்திலும் பத்து யோஜனைதூரம் ஸுகந்தமாகச் செய்கின்றது. மேருமந்தர பர்வதத்திலுள்ள நாவல்மரத்தின் பழங்கள் யானையினுடல்போல் பருத்து மிகவும் ஸூக்ஷ்மமான கொட்டைகளை உடையவைகளாயிருக்கும். வெகு தூரத்தினின்று கீழ் விழுகையினால் உடைந்த அந்த நாவற்பழங்களின் ரஸம் ஜம்பூநதி யென்று பேர்பெற்றுப் பதினாயிரம் யோஜனை உயரமுடைய அம்மேருமந்தாத்தின் சிகரத்தினின்று பூமியில் விழுந்து இலாவ்ருதவர்ஷத்தின் தென்பாகத்தில் பாய்கின்றது. அந்நதி எவ்வளவு தூரம் பாய்கின்றதோ அவ்வளவும் இரண்டு கரைகளிலுமுள்ள மண்ணெல்லாம் அந்நதியின் ஜலம் பட்டு நனைந்து காற்றும் வெயிலும் படுவதால் ஒரு விதமான பரிணமத்தை அடைந்து ஜாம்பூநதமென்ற ஸுவர்ணமா

கித் தேவலோகத்திலுள்ளவர்களுக்கு ஆபாணத்திற்கு உபயோகப்படுகின்றது. தேவஜாதியில்சேர்ந்தவர்களனை வரும் அவரது மடக்தையர்களும் இந்த ஸுவர்ணத்தை எடுத்துக் கிரீடம் கைவளை அரைஞாண்மாலை முதலிய ஆபாணங்களாகச் செய்து தரிக்கிருர்கள். ஸுபார்ஶ்வமலையில் முளைத்திருக்கின்ற பெரிய கடப்ப மரத்தின் பொந்துகளினின்று ஐந்துமார்பகலமுடைய தேன் தாரைகள் பெருகி ஸுபார்ஶ்வமலையின் சிகரத்தினின்று விழுந்து இலாவ்ருதவர்ஷத்தின் மேற்குப்பாகத்தில் நன் மணத்துடன் பாய்கின்றது. அவ்விடத்தில் வீசுங்காற்று அத்தேன் தாரைகளைப் பருகுஞ் ஜனங்களின் முகவாஸனையால் பரிமளமுடையதாகி நாற்புறத்திலும் நாறு யோஜனை தூரம் பரிமளிக்கச் செய்கின்றது. குமுதமலையில் முளைத்திருக்கும் ஆலமரம் சதவலிசமென்னும் பேருடையது. அம்மரத்தின் கிளைகளினின்று பால் தயிர் நெய் தேன் வெல்லம் அன்னம் முதலியவைகளும் ஆடை படுக்கை ஆஸனம் ஆபாணம் முதலியவைகளுமாகிய ஸமஸ்தமான விருப்பங்களையும் கறக்க வல்ல நதங்கள் கீழ்முகமாய்ப் பெருகிக் குமுத மலையினின்று இலாவ்ருதவர்ஷத்திற்கு வடபாகத்தில் பாய்ந்து அங்குள்ளவர்களைக் களிக்கச் செய்கின்றன. இவற்றின் ஜலத்தை உபயோகப்படுத்தும் ப்ராஜைகளுக்குச் சதைச் சுருக்கம் மயிர்நரைத்தல் இளைப்பு வேர்வை துர்நாற்றம் கிழத்தனம் மரணம் வ்யாதி அபம்ருத்யு குளிர் வெப்பம் நிறம்மாறுதல் இவைகளும் ஸுகம் துக்கம் ராகம் த்வேஷம் முதலிய உபஸர்க்கங்களும் மற்றுமுள்ள எவ்வகை உபத்ரவங்களும் ஒருகாலும் உண்டாகிறதில்லை. ஜீவித்திருக்கும் வரையில் மேலான ஸுகத்தையே அனுபவிப்பார்கள். குரங்கம் குாரம் குஸும்பம் வைகங்கதம் த்ரிகூடம் சிசிரம் பதங்

கம் ருசகம் நிஷதம் ஸிதிவாஸம் கபிலம் சங்கம் வைடூர்யம் ஜாருதி விஹங்கம் ஹம்ஸம் ருஷபம் நாகம் காலஞ்சரம் நாரதம் முதலிய பர்வதங்கள் தாமரைக்காய் போன்ற மேருவின் அடிப்பாகத்தில் தாதுகள்போல் அதைச்சுற்றி ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவை கேஸரபர்வதங்களென்று கூறப்படுகின்றன. மேருவுக்குக் கிழண்டையில் அதனடிவாரத்தினின்று ஆயிரம் யோஜனை தூரத்திற்கு அப்புறத்தில் ஜடரமென்றும் தேவ கூடமென்றும் இரண்டு பர்வதங்கள் இருக்கின்றன. அவை வடக்கில் பதினெண்ணாயிரம் யோஜனை நீண்டு இரண்டாயிரம் யோஜனை அகலமும் அவ்வளவு உயரமு முடையவை. இங்ஙனமே அம்மேருவுக்கு மேலண்டையில் பவனமென்றும் பாரியாத்ரமென்றும் இரண்டு பர்வதங் கள் இருக்கின்றன. அவை கிழக்கே நீண்டவை. ஜடர தேவகூடங்களைப் போலவே நீளமும் அகலமும் உயரமு முடையவை. அம்மேருவின் தென்னண்டையில் த்ரிஶ் ருங்கமென்றும் மகரமென்றும் இரண்டு பர்வதங்கள் இருக்கின்றன. இங்ஙனம் எட்டுப் பர்வதங்களால் சூழப் பட்ட மேரு பர்வதம் தர்ப்பங்களால் சூழப்பட்ட அக்னி போல் நாற்புறத்திலும் திகழ்கின்றது. மேருவின் முடியில் மத்யத்தில் ப்ரஹ்மாவின் பட்டணம் சாதகௌம்பீ யென்று பேர் பெற்றுப் பதினாயிரம்யோஜனைவிஸ்தார முடையதும் சதுர முமாயிருக்குமென்று சொல்லுகி றார்கள். அந்தப் பட்டணத்தைச் சுற்றிக் கிழக்கு முத லிய எட்டுத் திக்குக்களில் இந்த்ரன் முதலான லோக பாலர்களின் பட்டணங்கள் எட்டும் ஏற்பட்டிருக்கின்றன. அவை ஒவ்வொன்றும் இரண்டாயிரத்தைந்நூறு யோ ஜனைவிஸ்தாரமுடையவை. அமராவதி தேஜோவதி ஸம் யமனி க்ருஷ்ணாங்கனை ஶ்ரத்தாவதி கந்தவதி மஹோ

தயை யசோவதி என்று பேர் பெற்றவை. பதினாறுவது அத்யாயம் முற்றிற்று.

---

கங்கை பூமியில் இறங்கி வருதலும், இலாவ்ருதவர்ஷத்தில் ருத்ரன் ஸங்கர்ஷணபகவானை ஆராதித்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ஷாட்குண்யபூர்ணனும் யஜ்ஞமூர்த்தியும் வாமனரூபியுமான ஸ்ரீமஹாவிஷ்ணு மூன்றுலோகங்களையும் மூன்று அடிகளால் அளக்கும்பொழுது அந்தப் பகவானுடைய இடக்கால்கட்டைவிரல்நகத்தினால் அண்டகடாஹம் பிளவுண்டு அந்த த்வாரத்தினால் அதற்கு வெளியிலுள்ள ஆவரண ஜலத்தின் தாரை உள்ளே நுழைந்து நெடுங்காலமாய் விஷ்ணு பதமென்று கூறப்படுகிற த்யுலோகத்தின் நுனியில் இறங்கியிருந்தது. அந்தப் பகவானுடைய பாதாரவிந்தங்களை அலம்புகையால் அப்பாதாரவிந்தங்களின் செவ்விய தாதுகள் போன்ற குங்குமக்குழம்பு பட்டு அந்த ஜலம் சிவந்திருக்கும். அது, தன்னைத்தொடுகிறவர்களின் ஸமஸ்த பாபங்களையும் போக்குந் திறமையுடையது; ஆயினும் அந்தப் பாபம் தன்மேல் தீண்டப்பெறாமல் பரிசுத்தமாயிருக்கும். அந்த ஜலமே பூமியில் இறங்கின பின்பு ஜாஹ்னவி யென்றும் பாகிரதி யென்றும் பல பேர்களைப் பெற்றது. அதுவே கங்கை. அது பூமியில் இறங்குவதற்கு முன்பு வேறு நாமங்களெவையுமின்றிக் கேவலம் பகவத்பதியென்றே கூறப்பட்டிருந்தது. அந்த த்யுலோகத்தில் நினைத்தபடியே நடத்தும்படியான மனஉறுதியுடையவனும் உத்தானபாதனது புதல்வனுமாகிய த்ருவன்க்ஷணந்தோறும் வளர்கின்ற பகவத் பக்தியோகத்தினால் மிகவும் மனம் உருகப்பெற்று ப்ரீதியின் மிகுதியால் மெய்ம்மறந்து

மொட்டுக்கள்போன்ற கண்களை மூடிக்கொண்டு ஆநந்த நீர் பெருக்கி உடம்பெல்லாம் மயிர்க்கூச்சம் நிறைந்து 'இது நங்குலதேவதையான பகவானுடைய பாதாரவிந்தத்தினின்று பெருகின புண்யதீர்த்தம்' என்னும் கௌரவத்துடன் அந்தக் கங்காஜலத்தை மூன்று ஸந்திகளிலும் இப்பொழுதும் சிரஸ்ஸில் தரித்துக்கொண்டிருக்கிறான். ஆகையால் ஸப்தரிஷிகள் அந்தக் கங்காஜலத்தின் ப்ரபாவத்தை அறிந்து 'தவத்தின் ஸித்தியாவது இந்த விஷ்ணுபதியின் ஸேவையே. இவ்வளவே யன்றி இதற்கு மேற்பட்டதில்லை' என்று நினைத்து, ஸர்வாந்தராத்மாவான வாஸுதேவ பகவானிடத்தில் மாறாத பக்தியோகம் உண்டாகப்பெற்று அர்த்தகாமாதியான மற்ற புருஷார்த்தங்களையும் கேவலமான ஆத்மஸ்வரூபத்தை அனுபவிக்கையாகிற கைவல்யத்தையும் உபேக்ஷித்து. மோக்ஷத்தில் விருப்பமுடையவர் ஸித்தமாய் நேரிட்டிருக்கும் மோக்ஷத்தை வெகுமதிப்பதுபோல் வெகுமதித்து இப்பொழுதும் அந்தக் கங்காஜலத்தைத் தமது ஜடாபாரத்தினால் தரித்துக்கொண்டிருக்கிறார்கள். அந்த ஜலம் அவ்விடத்தினின்று அனேகமாயிரங்கோடி விமானங்கள் நிறைந்த ஆகாசமார்க்கத்தினால் கீழே இறங்கிச் சந்த்ரமண்டலத்தை நனைத்து அதினின்று மேரு பர்வதத்தின் சிகரத்திலுள்ள ப்ரஹ்மாவின் ஸ்தானத்தில் வந்து விழுகின்றது. அவ்விடத்தில் நான்கு வகையாகப் பிரிந்து ஸீதைஅலகநந்தை சக்ஷுஸ் பத்ரை என்று நான்கு பேர்களைப் பெற்று நான்கு திசைகளில் பாய்ந்து ஸமுத்ரத்தில் போய் விழுகின்றது. அந்நான்கு ப்ரவாஹங்களில் ஸீதையென்னும் ப்ரவாஹம் ப்ரஹ்மஸதனத்தினின்று கிழக்கு முகமாய்ப் பெருகி கேஸரம் அவஷ்டம்பம் முதலிய பர்வதங்களின் சிகரங்களில்விழுந்து அவற்றினின்று

குமுதம் குகுரம் முதலிய பர்வதங்களின் சிகரங்களைக் கடந்து கீழ்ப்பாய்ந்து கந்தமாதனபர்வத்தின் சிகரங்களில் விழுந்து பத்ராஸ்வ வர்ஷத்தினிடையில் பெருகிக் கிழக்குத் திக்கிலுள்ள லவண ஸமுத்ரத்தில் போய் விழுகின்றது. அங்ஙனமே அலகநந்தையென்னும் ப்ரவாஹம் ப்ரஹ்ம ஸதனத்தினின்று தெற்கு முகமாய்ப் பெருகிப் பல பர்வத சிகரங்களைக் கடந்து ஹேமகூடம் ஹிமாலயம் இப்பர்வதங்களின் சிகரங்களில் சிறிதும் தடைபடாத பெருவேகத்துடன் பாய்ந்து பாரதவர்ஷத்தில் நிரம்பவும் பெருகித் தென் திசையிலுள்ள லவண ஸமுத்ரத்தில் போய்ச் சேருகின்றது. இங்ஙனமே சக்ஷுவென்னும் ப்ரவாஹம் மேற்கு முகமாய் மால்யவானென்னும் மலையின் சிகரத்தில் பாய்ந்து அதினின்று கீழ் விழுந்து வேகம் குறையாமல் கேதுமால வர்ஷத்தினிடையில் பெருகி மேற்கு ஸமுத்ரத்தில் போய் விழுகின்றது. பத்ரை யென்னும் ப்ரவாஹம் மேரு சிகரத்தினின்று வடக்கு முகமாய்ப் பாய்ந்து குமுத பர்வத்தின் சிகரத்தில் விழுந்து அதினின்றுமேல் நோக்கி நீல பர்வதத்தின் சிகரத்தில் சேர்ந்து அதினின்று ஸ்வேத பர்வதத்தின் சிகரத்தைத் தொடாமலே ஶ்ருங்கவானென்கிற பர்வதத்தில் விழுந்து அதினின்று கீழ் நோக்கி உத்தர குருதேசங்களில் பாய்ந்து வடதிசையிலுள்ள லவண ஸமுத்ரத்தில் போய்ச் சேருகின்றது. மேரு முதலிய பர்வதங்களினின்று பெருகி வருகின்ற மற்றும் பலவகை நதங்களும் நதிகளும் வர்ஷந்தோறும் அனேகமாயிரம் இருக்கின்றன. இந்த ஜம்பூத்வீபத்திலும் பாரதவர்ஷமே கர்ம க்ஷேத்ரமாம். மற்ற எட்டு வர்ஷங்களும் புண்யவசத்தினால் ஸ்வர்க்க லோக போகங்களை அனுபவிப்பவர்கள் புண்யம் கழிந்த பின்பு கீழே விழுந்து

புண்யசேஷத்தின் பலனை அனுபவிப்பதற்காக ஏற்பட்ட ஸ்தானங்களாம். அவற்றைப் பூமி ஸ்வர்க்கங்களென்று வழங்குகிறார்கள். அவ்வர்ஷங்களிலுள்ள புருஷர்கள் புருஷனுடைய வாழ்நாளைப் போன்ற பதினாயிரம் வாழ் நாள் வர்ஷங்களையுடையவர்கள்; தேவதைகளோடொத் தவர்கள், பதினாயிரம் யானைப் பலமுடையவர்கள். அவர்க ளுடைய சரீரம் வஜ்ராயுதம்போல் திடமாயிருக்கும். அவர் கள் பார்யைகளும் அத்தகைய சரீரமுடையவர்களே. ஸ்த்ரீகளும் புருஷர்களும் பலம் வயது ஆநந்தம் இவை களால் எப்பொழுதும் களிப்புற்றிருப்பார்கள்; நெடுநாள் ஒரே தாரையாய் ஸுரதஸுகத்தை அனுபவிக்குந் தன் மையுடையவர்கள். ஸ்த்ரீகள் ஸம்போகாவஸானத்தில் ஆயுள் ஒரு வர்ஷம் மிகுந்திருக்கும்பொழுது ஒரு கர்ப்பந் தரிப்பார்கள். அவ்வர்ஷங்களில் தேவஸ்ரேஷ்டர்கள் தத் தமது ஸேவகக் கூட்டத்தலைவர்களால் சிறந்த உபசாரங் கள் செய்யப்பெற்று எல்லா ருதுக்களிலும் உண்டாகக் கூடிய பூங்கொத்துகளும் பழங்களும் காய்களும் தளிர் களும் நிறைந்து அவற்றின் நிறைவினால் மிகுதியும் வணங் கின கிளைகளும் கொடிகளும் அமைந்த வ்ருக்ஷங்களால் விளக்கமுற்ற அழகிய வனங்களிலும் ஆஸ்ரமங்களிலும் பெரிய கட்டடங்களிலும் பலவகைத் தாமரைமலர்கள் மலர்ந்து அவற்றின் வாஸனையால் மனக்களிப்புற்ற ராஜஹம்ஸங்களும் நீர்க்கோழிகளும் நீர்க்காகங் களும் ஸாரஸப்பறவைகளும் சக்ரவாகங்களும் மற்றும் பல வகைப்பறவைகளும் பலவகை வண்டுகளும் கூட்டங் கூட்டமாய்க் கூவப்பெற்று மிகவும் அழகான தாம ரைக்குளங்களிலும் அப்ஸரமடந்தையர்களின் காம விலாஸங்களாலும் புன்னகை அமைந்த கண்ணோக்கங் களாலும் மனமும் கண்களும் பறியுண்டு ஜலக்ரீடை

முதலிய விளையாடல்களால் மனம் போனபடியெல்லாம் விளையாடிக்கொண்டிருப்பார்கள். இலாவ்ருதம் முதலிய ஒன்பது வர்ஷங்களிலும் அந்தந்த வர்ஷத்திற்கு நாதராகிய மஹா புருஷர்களால் ஆராதிக்கப்பட்டு அவர்களை அனுக்ரஹிக்கும்பொருட்டுக் கல்யாண குணங்கள் நிறைந்திருப்பதும் ஜீவாத்மாக்களுக்குச் சிந்திக்க முடியாததுமாகிய திவ்ய மங்கள விக்ரஹத்துடன் பகவான் இப்பொழுதும் ஸந்நிதானம் செய்கின்றான். இலாவ்ருத வர்ஷத்தில் மஹானுபாவனாகிய ருத்ரன் ஒரு புருஷனே வஸிக்கின்றான். மற்றொரு புருஷனும் அதற்குள் நுழைகிறதில்லை. அதில் நுழையும் புருஷன் பெண்ணாய் விடுவான். பார்வதி அதற்கு அங்ஙனம் சாபங் கொடுத்திருக்கிறாள். ஒருவன் சாபம் உண்டென்பதை அறியாமல் நுழைவானாயினும் அவனுக்கும் அது அங்ஙனமே பலித்துவிடும். அவ்விஷயத்தை மேல் விவரித்துச் சொல்லுகிறோம். அவ்விடத்தில் ருத்ரன் பார்வதியை ப்ரபுவாகவுடைய பலவாயிரம் மடக்கையர்களால் பணியப்பெற்று வாஸுதேவன் ப்ரத்யும்னன் அநிருத்தன் ஸங்கர்ஷணன் என்னும் நான்கு மூர்த்திகளையுடைய பரமபுருஷனுடைய ப்ரக்ருதியை அதிஷ்டானம் செய்கின்ற நான்காவதான ஸங்கர்ஷண மூர்த்தியை த்யானயோகத்தினால் ஸாக்ஷாத்கரித்து ‘ஓம். மஹாபுருஷனும் வாஸுதேவனென்று கூறப்படுகின்றவனும் வேதங்களால் மொழியப்பட்ட ஸமஸ்த கல்யாண குணங்களுடையவனும் அளவிட முடியாதவனும் இந்த்ரியங்களால் அறிய முடியாதவனுமாகிய பகவானுக்கு நமஸ்காரம்’ என்று சொல்லி ‘மீளவும் பரம புருஷா! அனைவராலும் பணியத்தகுந்தவனே! பக்தர்களுக்கு ரக்ஷகமான பாதாரவிந்தங்களையுடையவனும் ஞானம் சக்தி முதலிய ஆறுகுணங்களுக்கும் முக்ய ஸ்தா

னமும் ஜகத்காரணமான தன்னுருவத்தைத் தன் பக்தர்களுக்கு வெளியிடுகின்றவனும் தன்னைப் பணிகிறவர்களுடைய ஸம்ஸாரபந்தத்தைப்போக்குந் தன்மையனும் பணியாதவர்களுக்கு ஸம்ஸாரத்தை வளரச் செய்பவனும் ஸர்வேஸ்வரனுமாகிய உன்னைப் பணிகின்றேன். கோபவேகத்தை அடக்காத நமது ஜ்ஞானம்போல், ஸ்வயமாகவே ஸர்வத்தையும் ஸாக்ஷாத்கரிக்கின்ற ஸர்வேஸ்வரனுடைய ஜ்ஞானம் ப்ரக்ருதியின் குணங்களான ராக த்வேஷாதிகளால் சிறிதும் தீண்டப்படுகிறதில்லை. ஸம்ஸாரத்தை வெல்ல விரும்புவானாயின், எவன்தான் அந்த ஸர்வேஸ்வரனை உபாஸிக்கமாட்டான்? ப்ரக்ருதியின் பரிணாமமான தேஹத்தையே ஆத்மாவாக அபிமானிக்கின்ற மூடஜனங்களுக்கு அஜ்ஞானத்தினால், நீ மதிமயக்கத்தை விளைக்கும் மத்யத்தினால் சிவந்த கண்களையுடைய மதித்தவன் போல் தோற்றுகின்றனை. வாஸ்தவத்தில் நீ சுத்த ஸத்வமயமான திவ்யமங்கள விக்ரஹமுடையவன். நாக கன்னிகைகள் உனது பாதாரவிந்தங்களை ஸ்பர்சித்துக் காம விகாரத்தினால் மனக்கலக்கமுற்று வெட்கத்தினால் உன்னைப் பூஜிக்கவல்லமையற்றிருந்தார்கள். வேதாந்தங்கள் உன்னைச் சேதனசேதனரூபமான இந்த ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணனென்று மொழிகின்றன. நீ ஜகத்காரணனாயினும் ஸத்வரஜஸ்தமோ குணங்களுக்கு உட்பட்டவனல்லை. நீ ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவத்தினாலும் தேச கால வஸ்து பரிச்சேதமில்லாதவன். ஆயிரம் படங்களையுடைய உன் சிரஸ்ஸினிடையில் ஓரிடத்தில் கடுகுபோலிருக்கின்ற பூமண்டலத்தை நீ ஒரு பாரமாக நினைக்காமல் தரிக்கின்றனை; சரீரங்களிலுள்ள மஹத்தத்வத்திற்கு அபிமானியும் ஜகத்தைப் படைக்கை முதலியவற்றிற்கு வேண்டிய ஜ்ஞானமுடையவனும்

ருத்ராதிகளைக் காட்டிலும் முதல்வனும் மஹானுபாவனுமாகிய ப்ரஹ்மதேவன் உன்னிடத்தினின்று உண்டானான். தேவமனுஷ்யாதி தேஹங்களில் நீ கொடுத்த ஜ்ஞானத்தினால் ஸாத்விகம் தாமஸம் ராஜஸமென்று மூன்றுவகை அஹங்காரங்களை நடத்துகிற நான் அந்த ப்ரஹ்மதேவனிடத்தினின்று உண்டானவன். மஹத்தத்வமும் ஸாத்விகம் தாமஸம் ராஜஸமென்று மூன்றுவகை அஹங்காரமும் ப்ரஹ்மதேவனும் ஆகிய இந்த நாங்கள் அனைவரும் கயிற்றில் கட்டுண்ட பக்ஷிகள்போல் உன்வசத்திலிருந்து உனது அனுக்ரஹத்தினால் இந்த ப்ரஹ்மாண்டத்தையும் இதற்குள்ளிருக்கும் வஸ்துக்களையும் படைக்கின்றோம். இத்தகைய உன்னை எவன்தான் பணியமாட்டான்? இந்த ஜீவன் ஸத்வாதி குணங்களின் பரிமாணமான தேஹம் இந்த்ரியம் இவற்றின் ஸம்பந்தத்தினால் ஆத்மபரமாத்மாக்களின் உண்மையைப்பற்றின அறிவை இழந்து ஜனன மரணாதியான ஸாம்ஸாரிக தர்மங்களில் மூழ்கி உன்னால் நிர்மிக்கப்பட்டதும் கர்மமாகிற முடிச்சுகளையுடையதுமாகிய ப்ரக்ருதியின் ஸ்வரூபத்தையே அறியாதிருக்க, அதினின்று தன்னை மீட்கும் உபாயத்தை எளிதில் அறியமாட்டானென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? அந்தப்ரக்ருதிஸம்பந்தத்தை விளைக்கவும் அதினின்று மீட்கவும் உரிய அறிவுடையவன் நீ ஒருவனே. அத்தகைய உனக்கு நமஸ்காரம்' என்று ஸ்தோத்ரம் செய்கின்றான். பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

பத்ராஸ்வ வர்ஷம் முதலிய ஆறுவர்ஷங்களில் பகவான் அங்குள்ளவர்களால் ஆராதிக்கப் படுவதைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தர்மனுடைய புதல்வனாகிய பத்ரஸ்ரவனென்பவனும் அவனது வம்சத்தில் முக்யர்

களான மஹா புருஷர்களும் பத்ராஸ்வவர்ஷத்தில் ஷாட் குண்யம் நிறைந்த வாஸுதேவனுக்கு ப்ரியமாயிருப்பதும் தர்மஸ்வரூபமும் ஹயசீர்ஷனென்னும் பேருடையது மாகிய அவனது மூர்த்தியைச் சிறந்த ஸமாதியால் ஸாக்ஷாத்கரித்து 'ஓம். தர்மஸ்வரூபனும் ஜீவாத்மாக்களை ப்ரக்ருதி ஸம்பந்தத்தினின்று விடுவித்துத் தன்னை அனுபவிக்கையாகிற மஹாநந்தங் கொடுப்பவனுமாகிய பகவானுக்கு நமஸ்காரம்' என்று சொல்லி, மீளவும் 'இவ்வுலகத்திலுள்ள ஜனங்கள் தமது தந்தை முதலியவர்களைக் கொண்டுபோகின்ற ம்ருத்யுவைக் கண்டும் தமக்கும் அங்ஙனமே நேருமென்பதை அறிகிறதில்லை. தாம் சாஸ்வதமாயிருப்பதாகவே நினைக்கின்றார்கள். இது பகவானுடைய சேஷ்டையே. ஆ! என்ன விசித்ரம்! அவனுடைய மாயையால் மதிமயங்கியே ஜனங்கள் இங்ஙனம் தமக்கு வரப்போகிற ம்ருத்யுவை அறியாமல் திரிகின்றார்கள். தந்தை பிள்ளை முதலியவர் மரணம் அடைகையில் அவரது சரீரங்களைக் கொண்டுபோய்க் கொளுத்திவிட்டு வாஸ்தவத்தில் ஸுகத்திற்கிடமல்லாத ஶப்தாதி விஷயங்களை அனுபவிக்கவிரும்பிப் பாபங்களைச் செய்யமுயன்று அவர்கள் ஸம்பாதித்ததைக் கொண்டு ஜீவிக்கப் பார்க்கிறார்கள். வேதாந்த வித்யையை உணர்ந்தவரும் ஆத்ம பரமாத்மாக்களை உபாஸித்தவருமான பண்டிதர்கள் இந்த ஜகத்தெல்லாம் நஸ்வரமென்று பார்க்கின்றார்களாயினும், உன் மாயையினால் மதிமயங்கிப் புத்ரமரணாதி காலங்களில் சோகிப்பதும் புத்ரோத்பத்திமுதலிய காலங்களில் ஸுகிப்பதுமாயிருக்கிறார்கள். ஆகையால் உன் செயல் மிகவும் ஆச்சர்யமாயிருக்கின்றது. அந்த மோஹம் மாறுவதற்காக ஜன்ம மரணாதியான ஸாம்ஸாரிக தர்மங்கள் தீண்டப்பெறாத உன்னைச் சரணம் அடைகின்றோம். நீ

விசித்ரமான ஜகத்தைப் படைப்பது முதலிய கார்யங்களை நடத்துகின்றவனாயினும் அந்த ஜகத்திலுள்ள தேவமனுஷ்யாதி பேதங்களெல்லாம் அந்தந்த ஜீவாத்மாக்களின் புண்ய பாபகர்மங்களைப் பற்றினவையாகையால் நீ அவற்றைச்செய்கிறதில்லை. நீ இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துவது யுக்தமே. நீ அவித்யையால் விளையும் ஜ்ஞானஸங்கோசமற்றவன். ஆகையால், ஜீவாத்மாக்களுக்குச் செயல்கள் மேன்மேலும் ஸம்ஸார பந்தத்தை விளைப்பதுபோல், இச்செயல்கள் உனக்குப் பந்தத்தை விளைக்கவல்லவை யாகமாட்டா. நீ, ஸ்தூலமாயும் ஸூக்ஷ்மமாயுமுள்ள சேதனு சேதனங்களைச் சரீரமாகவுடையவன் ; ஸர்வர்க்கும் அந்தராத்மாவாயிருப்பவன் ; இயற்கையில் ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணன். நீ ஜகத்ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களைச் செய்வது லீலைக்காக. அதுவும் உன்னிச்சையாலன்றிக் கர்மத்தினாலன்று. ஆகையால் அது உனக்கு யுக்தமே. இங்ஙனம் விலக்ஷணனாகிய உனக்கு அச்செயல் பந்தத்தை விளைக்காமை ஆச்சர்யமன்று. நீ முன்பு ஒரு [1] நைமித்திகப்ரளயத்தில் தன்னிடத்தினின்று அஸுரன் பறித்துக்கொண்டுபோன வேதங்களை வேண்டுகிற ப்ரஹ்மதேவனுக்கு ஹயக்ரீவ ரூபியாய் அவற்றை மீட்டுக் கொண்டுவந்து கொடுத்தனை. உன் செயல்களெல்லாம் வீணாகாதவை. அத்தகைய உனக்கு நமஸ்காரம்' என்று இங்ஙனம் ஸ்தோத்ரம் செய்கின்றார்கள். மேருவின் தென்புறத்திலுள்ள ஹரிவர்ஷத்தில் பகவான் நரஸிம்ஹ ரூபியாய் ஸந்நிதானம் செய்கின்றான். அவன் அவ்வுருவங் கொண்டதற்குக் காரணம் மேல் சொல்லப்போகிறோம். பகவானுக்கு அவ்வுருவம் மிகவும்

---

[1] ப்ரஹ்மாவின் தினந்தோறும் நடக்கும் ப்ரளயங்களில் ஒன்றாகிய ப்ரளயத்தில்.

அன்பிற்கிடமாயிருக்கும். ப்ரஹ்லாதன் அவ்வர்ஷத்திலு ள்ள புருஷர்களுடன் எவ்வகை விக்னங்களாலும் தடைபடாத பக்தியோகமுடையவனுகி வேருெரு பலனையும் விரும்பாமல் அந்த நரஸிம்ஹ ரூபியான பகவானை ஆராதிக்கின்ருன். அந்த ப்ரஹ்லாதன் மஹாபுருஷனுன பகவானுடைய குணங்களுக்கெல்லாம் இருப்பிடம்; பகவானிடத்தில் பக்தியுடையவர்களில் சிறந்தவன்; தைத்யர் தானவர் இவர்களின் குணங்களையெல்லாம் பாவனம்செய்யவல்ல நல்லொழுக்க முடையவன்; யஜ்ஞ தான ஹோமாதி ரூபமான தர்மங்களெல்லாம் அமைந்தவன். அவன் ஓம்.'நரஸிம்ஹ ரூபியான பகவானுக்கு நமஸ்காரம். நீ தேஜஸ்ஸுக்களுக்கும் தேஜஸ்ஸைக்கொடுப்பவன். நீ ஸ்வயமாகவே ப்ரகாசிக்குத் தன்மையன். வஜ்ரம்போல் எங்கும் தடைபடாத நகங்களும் கோரைப் பற்களுமுடையவனே! நீ அடிக்கடி எமக்குத் தோற்றுவாயாக. எமது கர்ம வாஸனைகளைப் போக்குவாயாக. ஸம்ஸார பயம் நீங்கும்படி உன்னுருவத்தை எங்களுக்குக் காட்டுவாயாக. நாங்கள் உன்னருளால் மிகவும் பயமற்றிருப்போமாக' என்று மொழிந்து மீளவும் 'ஜகதீச! ஜகத்திற்கெல்லாம் க்ஷேமம் உண்டாகுக. ஜகத்திலுள்ள துஷ்டர்களெல்லாம் மனம் தெளிந்து கோபத்தைத் துறந்து நன்மதியுடையவராயிருப்பார்களாக.ப்ராணிகளெல்லாம் ஒன்றுக்கொன்று புத்தியால் க்ஷேமத்தையே சினைத்துக் கொண்டிருக்குமாக. அவற்றின் மனமும் சாந்திமுதலிய நன்மையைப் பெறுமாக. எங்கள் மதியும் மற்ற ப்ராணிகளின் மதியும் ஒரு பலனையும் விரும்பாமல் பகவானிடத்தில் ஆவேசித்திருக்குமாக. எமக்கு எதிலும் மனப்பற்று நேராதிருக்குமாக. ஒருகால் நேருமாயின், மனை மனைவி பிள்ளை பணம் பந்து இவற்றில் ஒருகாலும் நேராதிருக்குமாக.

பகவானுக்கன்பர்களான பாகவதர்களிடத்திலேயே எப்பொழுதும் ஸஹவாஸம் உண்டாகுமாக. அது நேருமாயின் மனம் வேறு விஷயங்களில் செல்லாமல் பகவானிடத்தில் நிலையுற்றிருக்கும். அது ஸம்ஸார துக்கங்களுக்குச் சலிக்கமாட்டாது. அவர்களோடு ஸஹவாஸம் கொண்டிருப்பவன் ப்ராணதாரணத்திற்கு வேண்டியவற்றைமாத்ரம்பெற்று அவ்வளவில் ஸந்தோஷ முற்றிருப்பான். அவன் சீக்ரத்தில் மோக்ஷ ஸித்தியைப்பெறுவான். இந்த்ரியங்களின் ப்ரீதிக்காகச் சப்தாதி விஷயங்களில் தாழ்ந்த மதியுடையவன் அந்த ஸித்தியைப் பெறவேமாட்டான். என் புத்திக்குப் பகவானை இடைவிடாமல் த்யானிக்குந் திறமை அப்பாகவதர்களின் ஸஹவாஸத்தினுல் தான் உண்டாயிற்று. கங்கைமுதலிய புண்யதீர்த்தம்போல் மிகவும் பரிசுத்தமான பகவானுடைய புகழை ஓயாமல் பணிகிறவர்களின் மனத்தில் ஸர்வேஶ்வரன் அவரது செவியின் வழியாக உள்ளே புகுந்து அம்மனத்திலுள்ள மலங்களையெல்லாம் போக்குவான். அத்தகையனுன முகுந்தனுடைய புகழை எவன் தான் துதிக்கமாட்டான்? ஒருவனுக்குப் பகவானிடத்தில் ஐஹிகாமுஷ்மிக ரூபமான எவ்வகைப் பலன்களையும் பொருள்செய்யாத மேலான பக்தி விளையுமாயின், இந்த்ரன் முதலிய தேவதைகள் அனைவரும் அவனைத் தொடர்ந்திருப்பார்கள். தர்மாதி குணங்களும் சம தமாதி குணங்களும் தாமே அவனைத் தொடர்ந்து வரும். தன்னைப் பற்றினருடைய பாபங்களைப் போக்குந் தன்மையனுன பகவானிடத்தில் பக்தியின்றிச் சப்தாதி விஷயங்களில் பெரிய ஆவலுடன் வெளியில் ஓடித்திரிகின்றவர்களுக்கு மஹிமையுள்ள பகவத் பக்தர்களின் குணங்கள் எங்ஙனம் உண்டாகும்? மீன்களுக்கு ஜலம் தாரகமாய் மிகவும் இஷ்டமாயிருப்பது போல், ஜீவாத்மாக்

களுக்குப் பகவானொருவனே தாரகனும்இஷ்டனுமாயிருக்கின்றான். ஆகையால் வயது உருவம் பசு அன்னம் பிள்ளை பணம் முதலியவற்றால் நிறைவாளராயினும் அத்தகைய பகவானைப் பணியாமல் துறந்து கேவலம் இல்லறவாழ்க்கையில் ஆழ்ந்திருப்பார்களாயின், ஆணும் பெண்ணுமாய்ச் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கிற அவர்களுக்கு அவ்வயது முதலியவற்றால் மேன்மையேயொழிய மேலான ஆநந்தத்தை விளைக்கவல்ல ஆத்மபரமாத்மாக்களின்உண்மையை அனுபவிக்கையாலுண்டாகும் மேன்மைகிடைக்க மாட்டாது. இங்ஙனம் பகவத்பக்தியே மேலான ஸுகத்தைக் கொடுக்குமாகையாலும் சப்தாதி விஷயங்களில் செய்யும் ப்ரீதி மேலான துக்கத்தையே விளைக்குமாகையாலும் காமம்ராகம் துக்கம் கோபம் அஹங்காரம் ஆசை பயம் அவற்றால் விளையும் மனச்சோர்வு மனோவியாதி முதலானவற்றிற்கிடமாயிருப்பதும் ஜனன மரணாதி ரூபமான ஸம்ஸாரம் மாறாதிருப்பதுமாகிய இல்லறவாழ்க்கையைத் துறந்து ஸ்ரீ நரஸிம்ஹ ரூபியான பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பணிகிறவர்களுக்கு எங்ஙனம் துக்கம் உண்டாகும்?" என்று ஸ்தோத்ரம் செய்கின்றான்.

கேதுமாலவர்ஷத்தில் பகவான்ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கும் ஸம்வத்ஸரனென்னும் ப்ரஜாபதியின் முப்பத்தாறாயிரம் பெண்களுக்கும் அவ்வர்ஷத்திற்கு ப்ரபுக்களான அவரது முப்பத்தாறாயிரம் பிள்ளைகளுக்கும் ப்ரியம் செய்யவிரும்பி ப்ரத்யும்னரூபியாய்ஸந்நிதானம்செய்கின்றான். அந்தப்ரஜாபதியின் பெண்கள்ராத்ரிக்கு அபிமானிதேவதைகள். அவருடைய பிள்ளைகள் பகலுக்கு அபிமானிதேவதைகள்: அப்பெண்கள். கர்ப்பந்தரித்து ப்ரஸவிக்குங் காலத்தில் அஸ்த்ரங்களில் தலைமையுள்ள ஸுதர்சனசக்ரத்தின்தேஜஸ்ஸினால்மனங்கலங்கிக் கர்ப்பசிசுக்கள் ப்ராணன்களை இழ

ந்து விழப்பெறுகின்றனர். அவ்விடத்தில்ப்ரத்யும்னபகவான் அழகிய நடையின் விலாஸத்தினுல்திகழ்கின்றபுன்னகை அமைந்த கடைக்கண்ணேக்கத்தினுல் சிறிது உயர்ந்தபுருவ வட்டத்துடன்கூடிரமணீயமான தாமரைமலர்போன்ற திருமுகமண்டலத்தின் சோபையால் ஸ்ரீமஹாலக்ஷ்மியைக்களிப்பித்துக் கொண்டு தன்னிந்த்ரியங்களைக் களிப்பிக்கின்ருன். ஸ்ரீமஹா லக்ஷ்மிஸம்வத்ஸரத்தின் ராத்ரிகளில் ராப்ஜபதியின் பெண்களோடும் பகல்களில் அவரது கணவர்களும் பகலுக்குஅபிமானி தேவதைகளுமான அந்த ப்ரஜாபதியின் புதல்வர்களோடுங் கூடிப் பகவான் தன் ஸங்கல்பத்தினுல் ஏற்றுக்கொண்டஅவ்வுருவத்தை ஆராதிக்கிருள். அவள் 'ஓம், இந்த்ரியங்களுக்கு நியாமகனும் ப்ரக்ருதி புருஷர்களுக்கு நேரக்கூடாத ஸத்ய ஜ்ஞானுதி குணங்களும்காம்பீர்யாதி குணங்களும் நிறைந்த ஸ்வரூபமுடையவனென்று வேதாந்தங்களால் ஓதப்படுகின்றவனும் கர்மேந்த்ரியம் ஜ்ஞானேந்த்ரியம் மனம் ஆகியஇவற்றின் வ்யாபாரங்களுக்கும் ப்ருதிவி முதலிய பஞ்சபூதங்களுக்கும் நியாமகனும்பஞ்சபூதங்களும் பதினெரு இந்த்ரியங்களுமாகிய பதினறும் சரீரமாகப்பெற்று அவையே தானென்னும்படி அமைந்திருப்பவனும் வேத ஸ்வரூபனும் அன்னமயனும் (வ்யஷ்டிதத்வஸ்வரூபனும்) ஜீவாத்மாக்களைச் சரீரமாகவுடையவனும் ஸர்வாத்மகனும் மனேபலம் இந்த்ரிய பலம் தேஹபலம் இவற்றிற்குக் காரணனும் மிகுந்த ப்ரீதிக்கிடமாயிருப்பவனும் தன் பக்தர்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய உனக்கு முன்னும் பின்னும் நமஸ்காரம் செய்வேனுக' என்று மொழிந்து,மீளவும் '[1]ஸ்வயமாகவே

1 ஸ்வயமாகவே யென்பதால் ஒருவனுடைய தூண்டுதலாலன்றென்று வெளியாகின்றது. ஸ்வதந்த்ரனென்று கருத்து.

இந்த்ரியங்களுக்கு ப்ரபுவாகிய உன்னை மடந்தையர்கள் வ்ரதங்களால் ஆராதித்து வேறொருவனைக் கணவனாக விரும்புகிறார்கள். அங்ஙனம் விரும்பிப்பெற்ற அக்கணவர்கள் அம்மடந்தையர்களின் அன்பிற்கிடமான புதல்வனையும் பணங்களையும் வாழ்நாளையும் பாதுகாத்துக் கொடுக்க வல்லர்களாகிறதில்லை. அவர்கள் கர்மத்திற்குட்பட்டவர்களாகையால் அவர்களுக்கு அத்திறமை கிடையாது. எங்கும் புகழ்பெற்ற குணகணங்களையுடைய நீயொருவனே அத்தன்மையுடையவன். நீ கர்மத்திற்குட்பட்டவனல்லையாகையால் எவ்விதத்திலும் பயமில்லாதவன். ஆனதுபற்றியே பயத்தினால் வருந்தின ஜனங்களை எல்லாப் பயங்களினின்றும் பாதுகாக்கின்றனை. ஆகையால் பதியென்று கூறப்படும் கணவன் நீயொருவனே. உன்னைப்போன்ற மற்றொருவன் உளனாயின் ராஜாக்களுக்கு ஒருவர்க்கொருவர் பயம் உண்டாவதுபோல், உங்களுக்கும் ஒருவர்க்கொருவர் பயம் உண்டாகும், ஆகையால் அது இல்லவேயில்லை. நீ ஜீவாத்மாக்களைப் பாதுகாப்பதற்கு 'நாம் பரமாத்மாவுக்குச் சேஷப்பட்டவர்' என்னும் ஜ்ஞானம் அவர்களுக்கு உண்டாவதை மாத்ரம் எதிர்பார்க்கின்றாயேயன்றி மற்றொன்றையும் எதிர்பார்க்கிறதில்லை. ஒருத்தி ஸமஸ்த புருஷார்த்த ஸ்வரூபனாகிய உன்னைப் பொருள் செய்யாமல் கணவன் பிள்ளை பணம் வாழ்நாள் முதலிய மற்ற எல்லாக்காமங்களிலும் விருப்புற்று உன் பாதங்களை ஆராதிப்பாளாயின், அவளுக்கு அந்த அற்ப பலன்களையே கொடுக்கிறாய். வாஸ்தவத்தில் நீயொருவனே ஆசைப்படத் தகுந்த வஸ்துவன்றி மற்ற எதுவும் ஆசைப்படத் தகுந்ததன்று. அங்ஙனம் ஆவலுடன் வேண்டிப்பெற்றவள் அவை அழிந்து போகையில் பரிதபிக்கிறாள். நீ ஒருகாலும் அங்

நனம் அழியுந்தன்மையனல்லை. உன்னைப்பெற்ற நான் ஒருகாலும் அவளைப்போல் வருந்தமாட்டேன். இந்த்ரியங்களின் ப்ரீதிக்காகச் சப்தாதி விஷயங்களில் மனம் சென்ற ப்ரஹ்மதேவனும் ருத்ரனும் இந்த்ரன் முதலிய மற்ற தேவதைகளும் என் கடாக்ஷம் பெறுவதற்காக, உன் பாதாரவிந்தங்களைச் சரணம் அடையாமல் கொடிய தவங்களைச் செய்கிறார்கள். அதனால், அவர்கள் என் கடாக்ஷம் பெறுகிறதில்லை. ஏனெனில், ஒருவராலும் வெல்லப்படாதவனே! நான் உன்னிடத்தில் நிலைநின்ற மனமுடையவள்; உன்னைக்காட்டிலும் வேறு பட்டவளல்லள். ஆகையால் உன் பாதாரவிந்தங்களைப் பணிகின்றவர்களை நான் தொடர்வேனேயன்றி மற்றவர் எத்தகைய தவம் செய்யினும் அவர்களை நான் கடாக்ஷிக்கமாட்டேன். ஸமஸ்த புருஷார்த்த ஸ்வரூபனாகிய நீ உன்னைப்பற்றினவர்களை ஒருகாலும் கைவிடாதவன். ஸமஸ்த புருஷார்த்தங்களையும் கொடுப்பதென்று அனைவராலும் புகழப்பெற்றதும் தாமரை மலர் போன்றதுமாகிய உன் கரத்தை உன்னிடத்தில் நிலைநின்ற மதியுடைய உன் பக்தர்களின் சிரத்தில் வைத்தாற்போல் என் சிரத்திலும் வைப்பாயாக. நீ ஸ்ரீவத்ஸமென்னும் அடையாளத்தைப் போல் என்னையும் ஓரடையாளமாக மார்பில் தரித்துக்கொண்டிருக்கிறாயன்றி உன் பக்தர்களிடத்தில் செய்யும் அனுக்ரஹத்தை என்னிடத்தில் செய்கிறதில்லை. ஈச்வரனாகிய உன்னுடைய நடத்தையையும் அபிப்ராயத்தையும் எவன்தான் ஊஹிக்க வல்லவன்? உன் பக்தர்களிடத்தில் செய்யும் அனுக்ரஹத்தை நீ என்னிடத்திலும் செய்வாயாகவென்று நான் வேண்டுகிறேன்' என்று ஸ்தோத்ரம் செய்கின்றாள்.

ரம்யகவர்ஷத்தில் அவ்வர்ஷத்திற்கு அதிபதியாகிய மனுவுக்கு முன்பு யுகாந்த ஸமயத்தில் காண்பிக்கப்பட்டதும் பகவானுக்கு மிகவும் ப்ரியமுமாகிய மத்ஸ்யாவதார உருவத்தை அம்மனு இப்பொழுதும் அவ்விடத்தில் மாறாத பக்தியோகத்தினால் ஆராதித்துக் கொண்டிருக்கிறான். அவன் 'ஓம். பகவானுக்கு நமஸ்காரம். அவதாரங்களில் முதன்மையான மத்ஸ்ய பகவானுக்கு நமஸ்காரம். சுத்த ஸத்வமூர்த்தியும் ப்ராணன் இந்த்ரியபலம் மனோபலம் தேஹபலம் இவற்றிற்கு அதிஷ்டாதாவும் உலகத்தில் புலப்படும் மத்ஸ்யங்களைக் காட்டிலும் விலக்ஷணமான மத்ஸ்யரூபங் கொண்டவனுமாகிய பகவானுக்கு நமஸ்காரம்' என்று மொழிந்து மீளவும் 'நீ லோக பாலர்களால் உள்ளும் புறமும் காணப்படாத உருவமுடையவனும் வேதஸ்வரூபமான பெரிய நாதமுடையவனுமாய்த் திரிகின்றனை. மனிதன் மரத்தினால் செய்த ஓர் பெண் பொம்மையைக் கையிற்கொண்டு ஆட்டுவதுபோல், சேதனா சேதன ரூபமான இந்த ஜகத்தை யெல்லாம் 'இங்ஙனம் செய் இங்ஙனம் செய்யாதே' என்று நியமிக்கிற வேதவாக்கினால் உன் வசத்திற் கொண்டு பாதுகாக்கிறாய். இந்த்ராதிலோக பாலர்கள் அனைவரும் பிறனுடைய மேன்மையைப் பொறாமையாகிற ஜ்வரத்தைத் துறந்து ஒன்று சேர்ந்து எவ்வளவு ப்ரயத்னம் செய்யினும் இரண்டுகால் ஜந்துக்கள் நாற்கால் ஜந்துக்கள் ஜங்கமம் ஸ்தாவரம் ஆகிய இவை அமைந்த இந்த ப்ரபஞ்சத்தைப் பாதுகாக்க வல்லராகவில்லை. நீ மிகப் பெரிய அலைகளின் வரிசை அமைந்த ப்ரளய ஸமுத்ரத்தில் கொடிகளும் புதர்களும் அமைந்த இப்பூமியை என்னுடன் தரித்துக்கொண்டு வீர்யத்துடன் உலாவினாய். நீ கர்மத்தினால் விளையும் பிறவியற்றவன்; ஜகத்

தில் சரீரங்கள்தோறுமுள்ள ப்ராணஸ்வரூபி, மூன்று அடிகளால் உலகங்களை அளந்தவனே! அத்தகைய உனக்கு நமஸ்காரம்' என்று ஸ்தோத்ரம் செய்கின்றான்.

ஹிரண்மயவர்ஷத்தில் பகவான் கூர்மரூபியாய் வாஸம் செய்கின்றான். அந்தப் பகவானுக்கு மிகவும் ப்ரியமான அவ்வுருவத்தைப் பித்ருகணத்தின் தலைவனாகிய அர்யமனென்பவன் அவ்வர்ஷத்திலுள்ள புருஷர்களுடன் ஆராதிக்கிறான். அவன் 'ஓம். ஷட்குண பூர்ணனும் ஸமஸ்த ஜந்துக்களும் அவற்றின் குணங்களும் தன்னிடத்தில் அமையப்பெற்றவனும் ஸமுத்ரத்திற்குள் மந்தர பர்வதத்தின் அடியில் இருப்பவனாகையால் பிறர்க்குப் புலப்படாத இருப்பிடமுடையவனும் ப்ராக்ருத சரீரமற்றவனும் மஹிமையுடையவனும் ஆதாரபூதனும் கூர்மரூபியுமான உனக்கு நமஸ்காரம்' என்று மொழிந்து மீளவும் 'உன் மாயையினால் ஏற்பட்டதும் போக்யம் போல் தோற்றுவதும் ஜாதி குணம் முதலிய பலவற்றால் நிரூபிக்கத் தகுந்ததும் முழுவதும் கண்டறிய முடியாமையால் கணக்கற்றதுமாகிய இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் சரீரமாகவுடையவனும் நித்யஜ்ஞானஸ்வரூபனுமாகிய உனக்கு நமஸ்காரம். தேவனே! ஜங்கமம் ஸ்தாவரமென்று இருவகைப்பட்டதும் [1] ஜராயுஜம் ஸ்வேதஜம் அண்டஜம் உத்பிஜ்ஜமென்று நான்கு வகைப்பட்டதுமாகிய இந்த ஜகத்தெல்லாம் உன் சரீரமே. த்யுலோகம் ஆகாசம் பூமி பர்வதங்கள் நதிகள் ஸமுத்ரங்கள் த்வீபங்கள் சந்த்ரன் ஸூர்யன் முதலிய க்ரஹங்கள் அவ்

1. கர்ப்பப் பையிலிருந்துண்டாகின்றவை ஜராயுஜம். வேர்வையில் உண்டாகின்றவை ஸ்வேதஜம். முட்டையினின்றுண்டாகின்றவை அண்டஜம். பூமியினின்று மேல் முளைத்துக் கிளம்பும் மரம் செடி கொடி முதலியவை உத்பிஜ்ஜம்.

வினி முதலிய நக்ஷத்ரங்கள் என்னும் இச்சப்தங்களால் நீயே சொல்லப்படுகின்றனே. கணக்கிட முடியாதவைகளும் ஒன்றைவிட ஒன்று விலக்ஷணமாயிருப்பவைகளுமான தேவாதி நாமங்களும் தேவாதிசரீரங்களும் ப்ருதிவி முதலிய த்ரவ்யங்களும் அமைந்த உன்னிடத்தில் இருபத்து நான்கு தத்வங்களென்றும் இருபத்தைந்துதத்வங்களென்றும் சொல்லப்பட்ட இவை முதலிய ஸங்க்யை மந்தபுத்திகளுக்கு ஸுலபமாகத் தெரியும் பொருட்டுக் கபிலர் முதலிய பண்டிதர்களால் ஏற்படுத்தப்பட்டது. அளவற்ற வைபவமுடையவனுயிருக்கும் உனது உண்மையைப் பற்றின அறிவு நேருமாயின் அந்த ஸங்க்யை பறந்துபோம். நீ ஸாங்க்ய சாஸ்த்ரத்தினுல் அறியத்தகுந்தவன். அத்தகைய உனக்கு நமஸ்காரம்' என்று ஸ்தோத்ரம் செய்கின்ருன்.

உத்தரகுரு வர்ஷத்தில் பகவான் வராஹ உருவங்கொண்டு ஷாட்குண்ய பூர்ணனும் யஜ்ஞத்தைச் சரீரமாகவுடையவனும் யஜ்ஞங்களால் ஆராதிக்கப்பட்டு அவற்றின் பலன்களைக் கொடுப்பவனுமாயிருக்கின்ருன். அந்த வராஹபகவானை இப்பூமிதேவி குருவர்ஷத்திலுள்ளவர்களுடன் மாருத பக்தியோகத்தினுல் ஆராதிக்கின்ருள். அவள் 'ஓம். மந்த்ரங்களால் கூறப்படுகிற இந்த்ராதி தேவதைகளைச் சரீரமாகவுடைய பகவானுக்கு நமஸ்காரம். ஸோமமில்லாதயாகங்களையும்ஸோமமுள்ளயாகங்களையும் தனக்குச் சரீரமாகப்பெற்றவனும் அவற்ருல் ஆராதிக்கப்பட்டுப் பலன் கொடுப்பவனும் மஹாயாகஸ்வரூபனும் யாகங்களில் உபயோகப்படுமவைகளும் மேன்மையுடையவைகளுமான ஸ்ருக்கு ஸ்ருவம் முதலியவற்றைச்சரீரமாகவுடையவனும் புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட பெருமையுடைய மஹாபுருஷனுமாகிய உனக்கு நமஸ்காரம்.

பரிசுத்தமான செயலுடையவனும் ஜ்ஞானபலங்கள் ஐஸ்வர்யவீர்யங்கள் சக்திதேஜஸ்ஸுக்களென்கிற மூன்று இரட்டைகளுடையவனும் கண்களில் செந்தாமரை மலர்போல் சிவந்தவனுமாகிய உனக்கு நமஸ்காரம்' என்று பரம ரஹஸ்யமான இம்மந்த்ரத்தை மொழிந்து மீளவும் 'தத்வங்களின் உண்மையை அறிந்த பெரியோர்கள், அரணிக்கட்டையில் அக்னிபோல் தேவாதி சரீரங்களையுடைய ஜீவாத்மாக்களிடத்தில் அவர்களது கர்மத்தினால் அவர்களுக்குத்தெரியாமல் மறைந்திருக்கிற ஸர்வஜ்ஞனாகிய உன்னுருவத்தைக் காண விரும்பி மனமாகிற மத்தினால் கடைகின்றார்கள். நீ ஸர்வேஸ்வரன், ஜீவாத்மாக்களுக்கு நியாமகன். அத்தகைய உனக்கு நமஸ்காரம். ஓ பகவானே! ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை நன்குணர்ந்த புருஷர்கள் பஞ்சபூதங்களும் ஜ்ஞானேந்திரியங்களுமாகிய இவற்றின் ஸமுதாயரூபமான சரீரத்தில் உள்ள கர்த்தாக்களான ஜீவாத்மாக்களையும் ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களையும் நிபுணபுத்தியுடன் ஆராய்ந்தறிந்து, நீ இவற்றிற்கெல்லாம் நியாமகனாய் இவையெல்லாம் தானே யென்னும்படி இவற்றுடன் அமைந்திருப்பினும் ப்ரக்ருதியின் கார்யங்கள் எவையும் தீண்டப்பெறாமல் ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷண ஸ்வரூபனாயிருப்பவனென்பதைக் காண்கிறார்கள். அத்தகைய உனக்கு அடிக்கடி நமஸ்காரம். நீ ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களால் ஜகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகின்றனை' ஜீவாத்மாக்களின் க்ஷேமத்திற்காக நீ அச்செயல்களை விரும்புகிறாயன்றி உன் ப்ரயோஜனத்திற்காக விரும்புகிறதில்லை. அயஸ்காந்தத்தின் எதிரிலிருக்கும் இரும்பு அதன்வழியே சுற்றுவதுபோல், ப்ரக்ருதி உன்

ஸங்கல்பத்தின்படி ஸ்ருஷ்டிமுதலிய கார்யங்களை நடத்து கின்றது. ஸத்வாதிகுணங்களுக்கும் அனாதியான புண்ய பாப கர்மங்களுக்கும் நீ ஸாக்ஷியாயிருப்பவன். ஆகை யால் ஜன்ம ஜரா மரணாதி துக்கஹேதுவான ஸ்ருஷ்ட் யாதி கார்யங்களைப் பற்றி உனக்குப் பக்ஷபாதமாவது தயையில்லாமையாவது நேராது. அத்தகைய உனக்கு நமஸ்காரம். ஜகத்திற்கெல்லாம் காரணனான நீ வராஹ உருவங்கொண்டு என்னை உன்கோரைப்பல்லின்மேல் வை த்துப் பாதாளத்தில் யானைபோல் எதிர்த்து வந்த ஹிரண்யாக்ஷனைக் கொன்று அவலீலையாகவே ப்ரளய ஜலத்தினின்று மேற்கிளம்பினை. அத்தகைய பெருந்திற மைகள் அமைந்த உனக்கு நமஸ்காரம்' என்று ஸ்தோத் ரம் செய்கிறான். பதினெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ கிம்புருஷ வர்ஷம் பாரத வர்ஷம் இவற்றில் பகவான் எழுந்தருளியிருக்கும் விதத்தை யும், பாரதவர்ஷத்தின் மேன்மையையும் கூறுதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—கிம்புருஷ வர்ஷத்தில் ஆதி புருஷனாகிய பகவான் லக்ஷ்மணனுக்குத் தமைய னும் ஸீதையின் மனத்திற்கினியனுமாகிய தாசரதிராம னாய் வாஸம் செய்கிறான். அவனுடைய பாதாரவிந்தங் களில் மிக்க விருப்பமுடையவனும் பாகவதர்களில் சிறந் தவனுமாகிய ஹனுமான் அக்கிம்புருஷவர்ஷத்திலுள்ள வர்களுடன் அந்த ஸ்ரீராமபிரானை மாறாத பக்தியினால் ஆராதிக்கின்றான். கிம்புருஷவர்ஷத்திலுள்ள புருஷர் களில் சிறந்த ஆர்ஷ்டிஷேணரும் கந்தர்வர்களும் அந்த ஸ்ரீராமபிரானுடைய மிக்கமங்களமான கதையை அரு காமையில் நின்று பாடிக்கொண்டிருக்கையில் ஹனுமான் பக்தியுடன் கேட்டுக்கொண்டிருக்கிறான். தானும் 'ஓம்.

உலகத்தில் சிறந்த ப்ரஹ்மாதிகளால் துதிசெய்யப் பெற்ற வனும் சிறந்த புகழுடையவனும் ஷாட்குண்ய பூர்ணனு மாகிய ஸ்ரீராமனுக்கு நமஸ்காரம். பெரியோர்கள் ஆதரிக் கும் அடையாளங்களையும் நடத்தைகளையும் வ்ரதங்களை யும் உடைய ஸ்ரீராமபகவானுக்கு நமஸ்காரம். மன அடக்க முடையவனுக்கு நமஸ்காரம். உலகங்களை அனுஸரித்தி ருக்குந் தன்மையனுக்குநமஸ்காரம். ஸாதுவென்னும் ப்ர ஸித்திக்கு உறைகல் போன்றவனுக்கு நமஸ்காரம். ப்ரா ஹ்மணர்களின் விருப்பத்தை ஈடேற்றும் ப்ரபுவும் வேதா ந்த வேத்யனும் கர்மஸம்பந்தமின்றித் திகழ்கின்றவனும் கல்யாண குணங்களெல்லாம் அமைந்த மஹாபுருஷனும் ராஜாதி ராஜனுமாகிய ஸ்ரீராமனுக்கு நமஸ்காரம்' என்று ஜபித்து மீளவும் 'ராகாதிதோஷங்களால் தீண்டப்படா மல் கேவல ஜ்ஞான ஸ்வரூபனும் என்றும் குறுகாத ஜ்ஞான ப்ரகாசத்தினால் ரஜஸ்ஸு முதலிய குணங்களும் அவற்றால் விளையும் உற்பத்தி ஸ்திதி மரணங்களென்கிற மூன்று அவஸ்தைகளும் தீண்டப்பெறாதவனும் தனக்குத் தானே தோன்றுந் தன்மையனும் யோக பரிசுத்தமான புத்தியால் அடையத்தகுந்தவனும் தேவாதி நாமரூபங்க ளற்றவனும் புருஷோத்தமனுமாகிய ஸ்ரீராமனைச் சர ணம் அடைகிறேன். ஸர்வசக்தியாகிய பரம புருஷனே ராமனென்னும் பேர்பூண்டு மனுஷ்யனாய் அவதாரம் செய்தமை, மனுஷ்யர்களுக்கு ஸம்ஸாரத்தின் தோஷங் களை அறிவித்துத் தர்மத்தை நிலை நிறுத்துவதற்கும் ஸாது ஜனங்களைப் பாதுகாப்பதற்குமேயன்றி ராக்ஷஸ வதத்திற்காக மாத்ரமேயன்று. அப்படி இல்லாத பக்ஷத் தில் ஸர்வேஸ்வரனும் மஹாநந்த ஸ்வரூபனான தன்னைத் தான் அனுபவிக்கையால் நித்ய ஸந்துஷ்டனுமாகிய அப்பரமபுருஷனுக்கு ஸீதையைப் பிரிந்தமை முதலியவற்

ளுண்டான வருத்தங்களெல்லாம் எங்ஙனம் கூடும்? ஸ்ரீ ராம ரூபியான அப்பரம புருஷன் ஸாம்ஸாரிக தர்மங்களை யெல்லாம் உதறின சிறந்த மனமுடைய ஸனகாதிகளுக்கும் அந்தராத்வாமாயிருப்பவன்; தன்னைப் பற்றினவர்களிடத்தில் மிகுந்த நட்புடையவன்; அவர்களுக்கு மிகவும் ப்ரியமானவன்; ஷாட்குண்ய பூர்ணன்; எல்லா இடங்களிலும் நிறைந்திருப்பினும் அவ்வவற்றின் தோஷங்களை வையும் தீண்டப்பெறுமல் நித்ய சுத்தனுய்த் திகழுந்தன்மையன்; எல்லாம் தன்னிடத்தில் அமையப்பெற்றவன்; மூன்று லோகங்களிலுள்ள எத்தகைய சப்தாதி விஷயங்களிலும் பற்றுடையவனல்லன்; ஆகையால் பெண்மணியைப் பிரிந்தமையாலுண்டாகுந் துக்கத்தை அடையமாட்டான்; மற்றும் லக்ஷ்மணனையும் ஸீதையையும் விடமாட்டான். மனுஷ்யர்களுக்குக் கற்பிக்கும் பொருட்டு ஸாம்ஸாரிகபுருஷர்களின் நடத்தையை அனுஸரித்துக் காட்டினனன்றி வேறில்லை. மேன்மையையுடைய ஸ்ரீராமபிரானுக்குச் சிறப்புடைய ப்ராஹ்மணுதி ஜாதியில் பிறவியாவது அழகாவது புத்தியாவது ஜாதியாவது ஸந்தோஷத்தை விளைக்காது. லக்ஷ்மணனுக்குத் தமையனுன அந்த ஸ்ரீராமன் கீழ்ச்சொன்னவற்றில் எதுவுமில்லாத திர்யக்கு ஜாதியில் பிறந்த வானரங்களாகிய எங்களோடு ஸ்நேஹம் செய்தான். ஆ! என்ன ஆச்சர்யம்? இவனுடைய சீலம் இத்தகையதென்று யாவரால் சொல்ல முடியும்? ஸ்ரீராமனுய் அவதரித்த இந்தப் புருஷோத்தமன் முன்பு உத்தர கோஸலத்திலுள்ள புல்லெறும்பு முதலிய எல்லாவற்றையும் வானுலகமேறச்செய்த மஹானுபாவன்; பிறர்செய்த உபகாரத்தை ஒன்று பத்தாக நினைக்குந் தன்மையன்; புருஷோத்தமன். மனுஷ்யரூபனுய் அவதரித்த இந்த ஸ்ரீராமபிரானைத் தேவனுவது அஸுரனுவது நரனுவது

வானரனுவது பணிவாயினுன், அவ்வளவில் அவன் அனு க்ரஹிப்பான்' என்று ஸ்தோத்ரம் செய்கின்றுன்.

பாரத வர்ஷத்தில் பகவான் பதரிகாஶ்ரமத்தில் நாராயணனென்று பேர் பூண்டு கருணை மேற்கொண்டு மோக்ஷத்தில் விருப்பமுடையவர் இங்ஙனம் தவம் செய்ய வேண்டுமென்று தெரிவித்து அவ்வழியில் அவர்களை அனுக்ரஹிக்கும் பொருட்டுத் தர்மம் ஜ்ஞானம் வைராக்யம் அணிமாதி ஐஶ்வர்யம் வெளியிந்த்ரியங்களை வெல்லுகை முதலிய ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு வேண்டிய கருவிகளெல்லாம் நிரம்பப்பெற்றுத் தன் கதி பிறர்க்குத் தெரியாதபடி கல்பாவஸானம் வரையில் தவம்செய்துவருகிருன். பகவானுடைய அனுபவத்தை விவரித்துச் சொல்லுகிற பஞ்சராத்ர சாஸ்த்ரத்தை ஸாவர்ணி மனுவுக்கு உபதேசிக்கப்போகிற மஹானுபாவராகிய நாரதமுனிவர் வர்ணுஶ்ரம தர்மங்களை அனுஸரிக்குந் தன்மையுடைய பாரதவர்ஷத்துப்ரஜைகளுடன், பகவான் மொழிந்த கர்மயோக ஜ்ஞான யோகங்களால் உதவிசெய்யப் பெற்ற பக்தியோகத்தினுல் ஆராதிக்கின்றுர். அவர் 'ஓம். இந்த்ரியங்களை அடக்குந் தன்மையனும் மிகுந்த ஸௌசீல்யமுடையவனும் ஆத்மாவில் வேறுபட்ட தேஹத்தின் தர்மங்களான பசி தாஹம் முதலிய ஊர்மிகள் தீண்டப்பெருதவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய பரமபுருஷனுக்கு நமஸ்காரம். தமக்கென்று யாசித்துப் பெறவேண்டியதொன்றுமில்லாத முமுக்ஷுக்களுக்கு நிதிபோன்றவனும் நர நாராயணனுய் அவதரித்த பரமஹம்ஸனும் கல்யாண குண கணங்கள் நிறைந்தவனும் தோஷங்களேவையும் தீண்டப்பெருதவனும் ஹிதோபதேசம் செய்பவர்களில் சிறந்தவனும் அபரிச்சின்ன ஜ்ஞானநந்தஸ்வரூபனுன தன்னைத் தான் அனுபவிக்கையில் ஆழ்ந்தவனும் ஸமஸ்த

பூதங்களுக்கும் அதிபதியுமாகிய பரமபுருஷனுக்கு நமோ நம:' என்று இம்மந்த்ரத்தை ஜபித்து மீளவும் 'சேதனு சேதன ரூபமான இந்த ஜகத்தின் ஸ்ருஷ்டி முதலியவற்றிற்குத் தான் கர்த்தாவாயினும் ஈஸ்வரன், ஜீவாத்மாக்களுடைய தேவமனுஷ்யாதி சரீரங்கள் உண்டாவதற்கு அவரவருடைய கர்மங்களே ப்ரதானகாரணமாகையால் தன்னை அதற்குக் கர்த்தாவாக அபிமானிக்கிறதில்லை. தேவமனுஷ்யாதி தேஹங்களில் அக்தராத்மாவாயிருப்பினும் அவற்றின் ஸம்பந்தத்தினுல் விளையும் ஸுகதுக்கங்கள் அவனைத் தீண்டுகிறதில்லை. அவன் ப்ரக்ருதியைச்சரீரமாக வுடையவனுயினும் அதன் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களால் ஜ்ஞானஸங்கோசம் உண்டாகப்பெறுகிறதில்லை. ஆகையால் ராகாதிதோஷங்களற்றவனும் இணையெதிரில்லாதவனும் சேதனுசேதனரூபமான ஜகத்திற்கு ஸாக்ஷியுமாகிய பகவானுக்கு நமஸ்காரம். ஓ யோகேஸ்வர! ஜீவன், பலவகைத் துக்கங்களுக்கிடமாகையால் நிந்தைக்கிடமான தேஹத்தையும் தேஹானுபந்திகளையும் உபேக்ஷித்துப் பிறந்த நாள் முதல் அவஸான காலம் வரையில் த்யானயோகத்தினுல் மனத்தை உன்னிடத்தில் நிலை நிறுத்தவேண்டுமென்னு மிவ்வளவே யோகசாஸ்த்ராப்பாஸத்தினுல் விளையுந்திறமையாம். இதையே ப்ரஹ்மதேவன் எனக்குச் சொன்னுன். ஜீவன் உன்னிடத்தில் பக்தியின்றி இவ்வுலகத்திலுள்ள பிள்ளை பசு அன்னம் முதலிய போகங்களிலும் பரலோகத்திலுள்ள ஸ்வர்க்காதிபோகங்களிலும் விருப்பமுற்று அவற்றைப் பெறுதற்குரிய உபாயங்களைச் சிந்தித்துக் கொண்டிருப்பானுயின் பலவகைச் சாஸ்த்ரங்களை ஓதியுணர்ந்த பண்டிதனுயினும் நிந்திக்கத் தகுந்த இச்சரீரத்தைத் துறக்கையாகிற மரணத்தினின்றுபயப்படுவான். அவன் செய்த சா

ஸ்த்ராப்யாஸாதி ரூபமான யத்னங்களெல்லாம் யபனாற்றதேயாம். ப்ரபூ! அதோக்ஷஜனே! ஆகையால் நீயே உன்னிடத்தில் வேறு காமங்களை விரும்பாத ஸ்வாபாவிகமான பக்தியோகத்தை எங்களுக்கு விளைப்பாயாக. பல துக்கங்களுக்கிடமாகையால் நிந்திக்கத்தகுந்த இச்சரீரத்தில் எங்களுக்கு உன் மாயையால் விளைந்ததும் வேறு உபாயங்களால் எவ்வகையிலும் போக்க முடியாததும் அஹங்கார மமகாரரூபமுமான அவித்யையை அப்பக்தியோகத்தினுல் சீக்ரத்தில் துறப்போமாக உன் அனுக்ரஹத்தினுல் உன்னிடத்தில் உண்டாகும் பக்தியோகமே அந்த அவித்யையைப் போக்கும் உபாயமன்றி மற்றொன்றுமன்று. ஆகையால் எங்களை அனுக்ரஹிப்பாயாக' என்று ஸ்தோத்ரம் பண்ணுகிறுர். இந்தப் பாரதவர்ஷத்திலும் பல நதிகளும் பல பர்வதங்களும் இருக்கின்றன. மலயம் மங்களப்ரஸ்தம் மைநாகம் த்ரிகூடம் ருஷபம் கூடரம் கோல்லம் ஸஹ்யம் வேதகிரி ருஶ்யமூகம் ஸ்ரீசைலம் வேங்கடம் மஹேந்த்ரம் வாரிதாரம் விந்த்யம் சுக்திமான் ருக்ஷகிரி பாரியாத்ரம் த்ரோணம் சித்ரகூடம் கோவர்த்தனம் ரைவதகம் ககுபம் நீலம் காகமுகம் இந்த்ரகீலம் ராமகிரி என்னும் இப்பர்வதங்களும், மற்றும் அனேகம் ஆயிரம் பர்வதங்களும்,அவற்றின் தாழ்வரைகளினின்றுண்டான கணக்கில்லாத நதங்களும் நதிகளும் இருக்கின்றன. இந்நதிகளின் ஜலம் பாரத வர்ஷத்திலுள்ள ப்ரஜைகளைத் தமதுபேரைச்சொன்ன மாத்ரத்தில் பாவனமாக்குகின்றன. அத்தகைய ஜலத்தை அந்த ப்ரஜைகள் சரீரத்தினுலும் ஸ்பர்சிக்கிறுர்கள். ஆகையால் அவர்கள் மேல் பாபம் எங்ஙனம் தங்கும். சந்த்ரவசை தாம்ரபர்ணி அவடோதை க்ருதமாலை வைஹாயஸி காவேரி வேணி பயஸ்வினி பயோதை சக்ராவர்த்தை துங்கபத்ரை

க்ருஷ்ணவேணி பீமரதி கோதாவரி நிர்விந்த்யை பயோஷ்ணி தாபி ரேவை ஸிலை ஸுரஸை நர்மதை சர்மண்வதி என்னும் நதிகளும், ஸிந்து சோணம் என்னும் நதங்களும், மஹாநதி வேதஸ்ம்ருதி ருஷிகுல்யை த்ரிஸமை கௌசிகி மந்தாகினி யமுனை ஸரஸ்வதி த்ருஷத்வதி கோமதி ஸரயு போகவதி ஸுஷமை சதத்ரு சந்த்ரபாகை மருத்வ்ருதை விதஸ்தை விஶ்வை என்னும் மஹா நதிகளும் இவ்வர்ஷத்தில் விளங்குகின்றன. இவ்வர்ஷத்தில் பிறந்த புருஷர்கள் ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்று மூன்று வகையான தாம் செய்த கர்மத்தினுல் திவ்யம் மானுஷம் நாரகம் என்று மூன்று வகையான கதிகளைப் பெறுகிருர்கள். வர்ணுஶ்ரமங்களுக்கு உரிய தர்மங்களை அனுஷ்டித்து அதனுல் பக்தியோகம் வளரப்பெற்று மோக்ஷத்தையும் அடைகிருர்கள். வர்ணுஶ்ரம தர்மானுஷ்டானத்தினுல் ஸ்வர்க்காதிகதிகளை விளைக்கும்படியான புண்யபாப கர்மங்களாகிற முடிச்சுகள் தொலைந்து பகவானிடத்தில் வேறு ப்ரயோஜனங்களை எதிர்பாராத பக்தியோகமென்னும் மனப்பற்று விளையுமாயின், அப்பொழுதுதான் அம்மோக்ஷம் உண்டாகும். பகவானிடத்தில் விளையும் மனப்பற்று ஸ்வர்க்காதி கதிகளைத் தடுத்து மோக்ஷத்தையே விளைக்கும். அத்தகைய மனப்பற்று மஹாபுருஷர்களுக்கு நிலை நின்றிருக்கும். பகவான் ஸர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாகையால் அவனை உபாஸிப்பதற்குத் தேடிக்கொண்டு போகவேண்டிய அவஶ்யமில்லை. தத்தமது ஹ்ருதயங்களில் எப்பொழுதும் அவன் பேராமல் வீற்றிருப்பவன்; சரீரத்தைக் காட்டிலும் வேறுபட்டவன்; சரீரங்களின் தர்மங்களெவையும் தீண்டப்பெருதவன் ; தேவமனுஷ்யாதி நாமரூபங்களால் சொல்லப்படாதவன் ; தனக்குத் தானே ஆதாரமன்றி வேறுஆதா

ரத்தை எதிர்பாராதவன் ; பரமாத்மாவென்றும் வாஸு தேவனென்றும் கூறப்படுகிறவன். இந்தப் பாரதவர்ஷத்தி லுள்ளவர்கள் இத்தகைய பரமபுருஷனிடத்தில் பக்தி யோகம்செய்து மோக்ஷத்தைப் பெறுகின்றார்கள். ஆனது பற்றியே தேவதைகள் இவ்வர்ஷத்தைப் புகழ்ந்து பாடுகி றார்கள். "இவர்கள் என்ன ஸுக்ருதம் செய்தார்களோ? ஆ! அல்லது இவர்களுக்குப் பகவான் ஸ்வயமாகவே அருள் புரிந்தானோ? பாரதவர்ஷத்தில் முகுந்தனைப் பணிதற்குரிய மானிடப்பிறவியைப் பெற்றவர்களின் பெரு மையை என்னவென்று சொல்லலாம்? நமக்கு இப்பிறவி யில் மனோரதமே. ஆயினும் இது நமக்குக்கிடைக்கவில்லை. வருந்தியும் அனுஷ்டிக்கமுடியாத யாகங்களாலும் தவங் களாலும் வ்ரதங்களாலும் தானாதிதர்மங்களாலும் அற்ப மும் அஸ்திரமுமான ஸ்வர்க்காதிபோகத்தைப் பெறுவத னால் என்ன உபயோகம்? ஸ்வர்க்காதி லோகங்களில் இந் த்ரியங்களுக்கு வேண்டிய ஸுகங்களெல்லாம் நிரம்பவும் கிடைக்குமாகையால் அதில் மனம் சென்று ஸ்ரீமந் நாரா யணனுடைய பாதாரவிந்தங்களைப்பற்றின நினைவு அடி யோடு அழிந்துபோய் விடும். கல்பாவஸானம்வரையில் ஸுகங்களை அனுபவித்து மீளவும் பிறக்கும்படியான ஊர்த்வலோகத்தைக்காட்டிலும் அல்பமான ஆயுளையுடை ய மானிடர் வஸிக்கும்படியான பாரதபூமியில் பிறப்பது மேலானது. பாரதவர்ஷத்தில் பிறந்த மானிடர்கள் நிலையற்றதான மனுஷ்ய சரீரத்தினால் செய்யும் செயல் களைப் பகவானிடத்தில் அர்ப்பணம் செய்து மனச்சிறப்பு டன் அவனை உபாஸித்து ஜன்மஜரா மரணாதி பயங்களுக் கிடமில்லாத அவ்விஷ்ணுவின் ஸ்தானமாகிய வைகுண்ட லோகத்தை அடைகிறார்கள். ப்ரஹ்மலோகத்தில் அந்தப் பகவானுடைய கதைகளாகிற அம்ருத நதிகள் கிடைக்க

மாட்டா. அக்கதிகளைப் பணியுந் தன்மையரும் ஸாதுக்க ளின்லக்ஷணம் அமைந்தவருமாகிய பாகவதர்கள்கிடைக்க மாட்டார்கள். யஜ்ஞேஶ்வரனான பகவானுடைய பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவாதி விபவங்களும் மஹோத்ஸவங்களும்அவனுடைய ஆராதனரூபமான யஜ்ஞங்களும் நடக்க மாட்டா. அத்தகைய ப்ரஹ்மலோகத்தை எவன்தான் ப்ராப்யமாக நினைப்பான்? ஜீவாத்மாக்கள் இந்தப் பாரத வர்ஷத்தில் பஞ்சபூதங்களும் கர்மேந்த்ரியங்களும் ஜ்ஞானேந்த்ரியங்களும் ஆகிய இவற்றின் ஸமுதாயம் நிறைந்த மனுஷ்ய ஜன்மத்தைப் பெற்றும் மோக்ஷத்திற்கு யத்னம் செய்யார்களானல், காட்டுப்பறவைகள் வேடனால் கட்டுண்பதுபோல மீளவும் ஸம்ஸார பந்தத்தையே பெறுவார்கள். இப்பாரத வர்ஷத்திலுள்ள மானிடர்களால் யாகத்தில் சாஸ்த்ரங்களில் சொல்லிய விதியின்படி ஶ்ரத்தையுடன் மந்த்ரங்களைச் சொல்லி ஹோமம் செய்யப்பட்டதும் சரு வென்றும் புரோடாசமென்றும் பலவாறு பேதித்திருப்பதும் அக்னிக்கென்றும் இந்த்ரனுக்கென்றும் பாகம்பாகமாய்ப் பிரிக்கப்பட்டதுமாகிய ஹவிஸ்ஸைப் பகவான் தானொருவனேயாயினும் அக்னியென்றும் இந்த்ரனென்றும் பலவடிவங்களைக்கொண்டு அந்தந்த நாமங்களால் அழைக்கப்பெற்றுத் தான் அவாப்தஸமஸ்தகாமனாயினும் புருஷார்த்தங்களையெல்லாம் கொடுக்கும் ப்ரபுவாகையால் யாகம் செய்கிறவர்களுக்கு வேண்டிய பலன்களைக் கொடுக்கும் பொருட்டு அங்கீகரிக்கிறான். பகவான் அந்தந்த புருஷார்த்தங்களை விரும்பும் ஜனங்களால் ப்ரார்த்திக்கப்பட்டு அவர்கள் வேண்டுகின்றவற்றைக் கொடுக்கிறானென்பது வாஸ்தவம்; ஆயினும் பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தைக் கொடுக்கிறதில்லை. ஜனங்கள் தாங்கள் வேண்டின புருஷார்த்தங்களைப் பெற்றபின்பும் வே

ளொரு புருஷார்த்தத்தை வேண்டுகிறார்கள். ஆகையால் மோக்ஷத்தையொழிய மற்ற புருஷார்த்தங்களை விரும்புகின்றவர்களுக்கு விருப்பம் என்றும் முடிகிறதில்லை. அவர்கள் நித்யதரித்ரர்களே. ஒன்றையும் விரும்பாமல் தன்னைப் பணிகின்றவர்களுக்கு விருப்பங்களை யெல்லாம் நிறைக்குந்தன்மையுள்ள தளிர்போன்ற தன் பாதத்தைத் தானே கொடுக்கின்றான். நாம் குறைவறச் செய்த யாகம் ப்ரவசனம் முதலிய புண்யகர்மம் ஸ்வர்க்க ஸுகத்தைக் கொடுத்து மிகுந்திருக்குமானால், அப்புண்ய கர்மத்தினால் நமக்குப் பாரதவர்ஷத்தில் பகவானை நினைக்கும்படியான மனுஷ்யஜன்மம் உண்டாகுமாக. பகவான் அந்நினைவுடன் தன்னைப் பணிகிறவர்களுக்கு மோக்ஷஸுகத்தைக்கொடுக்கிறானல்லவா?'' என்கிறார்கள்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! சில பெரியோர்கள் ஜம்பூத்வீபத்திற்கு எட்டு உபத்வீபங்கள் உண்டென்றும், அவை யாகக்குதிரையைத் தேடும்பொழுது இப்பூமண்டலத்தை ஆங்காங்குத் தோண்டிப்போன ஸகர புத்ரர்களால் ஏற்படுத்தப்பட்டவை யென்றும் சொல்லுகிறார்கள். அவை ஸ்வர்ணப்ரஸ்தம், சந்த்ர சுக்லம், ஆவர்த்தனம், ரமணகம், மந்தேஹாருணம், பாஞ்சஜன்யம், ஸிம்ஹளம், லங்கை என்னும் பேருடையவை, பரதவம்சாலங்காரனே! இங்ஙனம் ஜம்பூத்வீபத்திலுள்ள வர்ஷங்களை க்ரமமாக விவரித்துச் சொன்னேன்.

பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

ப்லக்ஷம் முதலிய ஆறு த்வீபங்கள் அவற்றைச் சூழ்ந்த ஸமுத்ரங்கள் லோகாலோக பர்வதம் ஆகிய இவற்றின் நிலைமையைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—இனிமேல் ப்லக்ஷம் முதலிய த்வீபங்களிலுள்ள வர்ஷங்களின் பிரிவுகளையும் அவற்றின் பரிமாணத்தையும் லக்ஷணத்தையும் ஆகாரத்தையும் க்ரமப்படி விவரித்துச் சொல்லுகிறேன். ஜம்பூத்வீபம் தான் எவ்வளவு விஸ்தாரமுடையதோ அவ்வளவு விஸ்தாரமுடைய லவண ஸமுத்ரத்தினால் சூழப்பட்டிருப்பது போலவும், அந்த த்வீபத்தினிடையிலுள்ள மேருபர்வதம் ஜம்பூத்விபத்தினால் சூழப்பட்டிருப்பதுபோலவும் லவண ஸமுத்ரமானது, பட்டணத்தைச் சுற்றியிருக்கும் அகழி தனக்கு வெளியிலுள்ள உத்யான வனத்தினால் சூழப்பட்டிருப்பதுபோல், தன்னைக் காட்டிலும் இருமடங்கதிக விஸ்தாரமுடைய ப்லக்ஷத்வீபத்தினால் சூழப்பட்டிருக்கின்றது. அந்த த்வீபத்தினிடையிலுள்ள ப்லக்ஷ வ்ருக்ஷம் ஜம்பூ வ்ருக்ஷத்தின் அளவுடையது. அதைப் பற்றியே அந்த த்வீபத்திற்கு ப்லக்ஷத்வீபமென்னும் பேர் விளைந்தது. அந்த வ்ருக்ஷம் ஸ்வர்ணம்போல் பளபளவென்று விளக்கமுற்றிருக்கும். அந்த வ்ருக்ஷத்தின் அடியில் ஏழு ஜ்வாலைகளையுடைய அக்னி இருக்கின்றது அந்த த்வீபத்திற்கு ப்ரியவ்ரதனுடைய பிள்ளையாகிய இத்மஜிஹ்வன் அதிபதி. அவன் அந்த த்வீபத்தை ஏழு வர்ஷங்களாகப் பிரித்து அவ்வர்ஷங்களின் பேர்களையே பேராகவுடைய தன் பிள்ளைகளுக்குக் கொடுத்துத் தான் ஆத்மயோகத்தினால் ஸம்ஸாரத்தினின்று மோக்ஷத்தை அடைந்தான். அவ்வர்ஷங்கள் சிவம், யசஸ்யம், ஸுபத்ரம், சாந்தம், க்ஷேமம், அபயம், அம்ருத

மென்னும் பேருடையவை. அவ்வர்ஷங்களில் ஏழு பர்வ தங்களும் ஏழு நதிகளும் பேர்பெற்றவை. எல்லையைத் தெரிவிக்கிற அப்பர்வதங்களேழும் மணிகூடம், வஜ்ர கூடம், இந்த்ரஸேனம், ஜ்யோதிஷ்மான், தூம்ரவர்ணம், ஹிரண்யக்ரீவம், மேகமாலமென்னும் பேருடையவை. அங்குள்ள மஹாநதிகள் அருணை, ஸ்ருமனே, ஆங்கிரஸி, ஸாவித்ரி, ஸுப்ரபாதை, ருதம்பரை, ஸத்யம்பரை என் னும் பேருடையவை. அந்நதிகளின் ஜலத்தில் ஸ்நான பானுதிகளைச் செய்கையால் ரஜஸ் தமஸ்ஸுக்கள் கழியப் பெற்றவர்களும் ஆயிரமாண்டு வாழ்நாளுடையவர்களும் தேவதைகளோடொத்த காட்சி யமைந்த ஸந்தான முடையவர்களும் ஹம்ஸர் பதகர் ஊர்த்வாயனர் ஸத்யாங் கர் என்னும் பேர்களுடையவர்களுமான நான்குவர்ணத் தவர்கள் வேதோக்தமான கர்மயோகாதிகளாலும் அவ் வேதத்தை ஒட்டின ஸ்ம்ருதி முதலியவற்றில் சொ ன்ன வழிகளாலும் ஷாட்குண்ய பூர்ணனும் வேத ப்ரதி பாத்யனும் ஸூர்யனைச் சரீரமாக வுடையவனுமாகிய பர மாத்மாவை ஆராதிக்கிறார்கள். 'அனுதியும் நிர்விகார னும் புண்ய கர்மங்களின் பலன்களைக் கொடுப்பவனும் தன்னைப் பற்றினார்க்கு மோக்ஷத்தைக் கொடுப்பவனும் பற்றாதவர்க்கு ஸம்ஸாரத்தை விளைப்பவனும் பரப்ரஹ்ம மென்று கூறப்படுகின்றவனுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவுக் குச் சரீர பூதனான ஸூர்யனென்னும் ஜீவனைச் சரணம் அடைகிறோம்' என்னும் இம்மந்த்ரத்தை அவர்கள் ஜபிக்கின்றார்கள்.' ப்லக்ஷம் முதலிய ஐந்து த்வீபங்களில் ஸாமான்யமாய் ஸமஸ்த புருஷர்களும் ஆயுள் மனோபலம் இந்த்ரியபலம் தேஹபலம் புத்திபராக்ரமம் ஆகிய இவற்றின் பெருமை ஸ்வபாவஸித்தமா யிருக்கப்பெற் றவர்கள். ப்லக்ஷத்வீபம் இக்ஷுஸமுத்ரத்தினால்

சூழப்பட்டிருப்பதுபோல, அதைக்காட்டிலும் இருமடங் கதிகமான விஸ்தாரமுடைய சால்மலித்வீபமும் தன்னோ டொத்த விஸ்தாரமுடையதும் வட்டமாயிருப்பதுமாகிய ஸுராஸமுத்ரத்தினால் சூழப்பட்டிருக்கின்றது. அந்த த்வீபத்தில் சால்மலி வ்ருக்ஷம் ப்லக்ஷ வ்ருக்ஷத்தோ டொத்த பரிமாண முடையதாயிருக்கின்றது. வேதங் களால் துதி செய்யப்பட்ட பக்ஷிராஜனாகிய கருத்மா னுடைய வாஸஸ்தானம் அந்த வ்ருக்ஷத்தில் ஏற்பட்டிருக் கிறதென்று சொல்லுகிறார்கள். அந்த வ்ருக்ஷத்தைப் பற்றியே அந்த த்விபம் சால்மலித்வீபமென்று கூறப்படு கின்றது. ப்ரியவ்ரதனுடைய பிள்ளையாகிய யஜ்ஞபாஹு வென்பவன் அந்த த்வீபத்திற்கு அதிபதி. அவனுக்கு ஏழு பிள்ளைகள். அவன் அந்த த்வீபத்தை ஏழு வர்ஷங்களாகப் பிரித்துத் தன் பிள்ளைகளின் பேர்களை இட்டு அவர்களுக்குக் கொடுத்தான். அவை ஸுரோ சனம் ஸௌமனஸ்யம் ரமணகம் தேவபர்ஹம் பாரிபர் ஹம் ஆப்யாயனம் அபிஜ்ஞாதமென்னும் பேருடைய வை. அவற்றில் ஏழு பர்வதங்களும் ஏழு நதிகளும் ப்ரஸித்தமானவை. பர்வதங்கள் ஸ்வரஸம் சதஸ்ருங் கம் வாமதேவம் குமுதம் முகுந்தம் புஷ்பவர்ஷம் ஸதஸ்ருதி என்னும் பேருடையவை. நதிகள் அனுமதி ஸினீவாலி ஸரஸ்வதி குஹூ ரஜனி நந்தை ராகை என் னும் பேருடையவை. ஸ்ருததரர் வித்யாதரர் வஸுந்தரர் ஈஷந்தரர் என்னும் பேருடைய அவ்வர்ஷங்களிலுள்ள புருஷர்கள் வேதங்களால் ஓதப்படுகின்ற பகவத் ஸ்வ ரூபனான ஸோமனென்னும் தேவனை ஆராதிக்கிறார்கள்; "தன் கிரணங்களால் சுக்லபக்ஷத்தில் தேவதைகளுக்கும் க்ருஷ்ணபக்ஷத்தில் பித்ருக்களுக்கும் அன்னத்தைப் பங் கிட்டுக்கொடுக்கிற சந்த்ரன் தன் ப்ரஜைகளாகிய எங்கள்

அனைவர்க்கும் அம்ருதம்போல் ஸுகத்தை விளைப்பானாக'' என்ற இம்மந்த்ரத்தை அவர்கள் ஜபிக்கிறார்கள். அந்தச்சால்மலித்வீபம் போல, ஸுராஸமுத்ரத்திற்கு வெளியில் அதைக் காட்டிலும் இருமடங்கதிகமான விஸ்தாரமுடைய குசத்வீபமும் தன்னோடொத்தபரிமாணமுடைய [1] க்ருதஸமுத்ரத்தினால் சூழப்பட்டிருக்கிறது. அந்த த்வீபத்தில் பெரிய தாளுடைய ஒரு [2] குசம் ப்ரஹ்மதேவனால் நிர்மிக்கப்பட்டுள்ளது. அது மற்றொரு அக்னிபோல் பேரொளியுடன் ப்ரகாசிக்கின்றது. அதைப்பற்றி அந்த த்வீபத்திற்குக் குசத்வீபமென்று பெயர். அந்தக்குசம் தன் அவயவங்களான புற்களின் ஒளியினால் பத்துத் திசைகளையும் விளங்கச்செய்கின்றது. அந்தக் குசத்வீபத்திற்கு ப்ரபு ப்ரியவ்ரதனுடைய பிள்ளையாகிய ஹிரண்யரேதனென்பவன்; அவன் தனது த்வீபத்தை ஏழு வர்ஷங்களாகப்பிரித்துத் தன் பிள்ளைகளுக்குக் கொடுத்துத் தவஞ்செய்யச் சென்றான். அவனுடைய பிள்ளைகள் வஸுதானன் த்ருடருசி நாபிகுப்தன் ஸ்துத்யவ்ரதன் விப்ரன் வாமதேவன் என்னும் பேருடையவர்கள். அந்த வர்ஷங்களும் அதே பெயர் உடையன. அவற்றில் ஏழு எல்லைப் பர்வதங்களும் ஏழு நதிகளும் ப்ரஸித்தி பெற்றவை. பர்வதங்கள் பப்ரு சதுஶ்ருங்கம் கபிலம் சித்ரகூடம் தேவானீகம் ஊர்த்வரோமம் த்ரவிணம் என்னும் பேருடையவை. மஹாநதிகள் ரஸகுல்யை மதுகுல்யை ஶ்ருதவிந்தை தேவகர்ப்பை க்ருதச்யுதை மந்த்ரமாலையென்னும் பேருடையவை. குசலர் கோவிதர் அபியுக்தர் குலகர் என்னும் பேருடைய அந்த த்வீபத்திலுள்ளவர்கள் அந்நதிகளின் ஜலத்தை உபயோகப்படுத்துவதினால் மனமலங்கள் கழியப்பெற்று அக்னியைச் சரீரமாகவுடைய பகவானை

---

1. நெய் ஸமுத்ரத்தினால். 2. தர்ப்ப விசேஷம்.

யஜ்ஞாதிகர்மங்களில் தமக்குள்ள திறமையினால் ஆராதிக்கிறார்கள். "ஓ அக்னியே! நீ பரப்ரஹ்மத்தோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமுடையவன். நீ யாகங்களில் பகவத் ஸ்வரூபர்களான இந்த்ராதிகளுக்குக் கொடுக்கும் ஹவிஸ்ஸைக் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கும் அதிகாரமுடையவன். பரமபுருஷனுக்குச் சரீரபூதர்களான இந்த்ராதி தேவதைகளைக் குறித்துச்செய்யும் யஜ்ஞத்தினால் அவர்களுக்கு அந்தராத்மாவான பரமாத்மாவை ஆராதிப்பாயாக" என்னும் இம்மந்த்ரத்தை அவர்கள் ஜபிக்கிறார்கள். குசத்வீபத்திற்கு வெளியிலிருக்கிற க்ரௌஞ்சத்வீபமும் அதைக்காட்டிலும் இருமடங்கதிகமான விஸ்தாரமுடையது அது தன்னோடொத்த விஸ்தாரமுடைய ததிஸமுத்ரத்தினால் சூழப்பட்டிருக்கின்றது. அந்த த்வீபத்திற்கு அந்தப்பேர் விளைந்ததற்குக் காரணமாக க்ரௌஞ்சமென்னும் மஹாபர்வதம் அதில் இருக்கின்றது. அந்தப் பர்வதம் முன்பு ஸுப்ரஹ்மண்யனுடைய ஆயுதத்தினால் தன் தாழ்வரைகளும் குகைகளும் பிளவுண்டு ததிஸமுத்ரத்தில் மறைந்து வருணனால் காக்கப்பெற்று நிர்ப்பயமாயிற்று. அந்த த்விபத்திற்கு ப்ரியவ்ரதனுடைய பிள்ளையாகிய க்ருத ப்ருஷ்டனென்பவன் அதிபதி. அவன் தன் த்வீபத்தை ஏழுவர்ஷங்களாய்ப் பிரித்து அவற்றிற்குத் தன் பிள்ளைகளின் பேர்களை வைத்து அவர்களை அவற்றிற்கு ப்ரபுக்களாக ஏற்படுத்தி மிக்கமங்களமான புகழுடையவனும் ஸர்வாந்தராத்மாவும் தன்னைப் பற்றினாருடைய பாபங்களைப் போக்குந் தன்மையனுமாகிய பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பெற்றான். க்ருதப்ருஷ்டனுடைய பிள்ளைகள் ஆமோதன் மதுவஹன் மேகப்ருஷ்டன் ஸுதாமன் ருஷிஜ்யன் லோஹிதார்ணன் வனஸ்பதியென்னும் பேருடையவர்கள். அவ்வர்ஷங்களில் சுக்லம்

வர்த்தமானம் போஜனம் உபபர்ஹணம் ஆநந்தம் நந்தனம் ஸர்வதோபத்ரம் என்னும் ஏழுபர்வதங்களும், அபயை அம்ருதௌகை ஆர்யகை தீர்த்தவதி த்ருப்திருபை பவித்ரவதி சுக்லை என்னும் ஏழுநதிகளும் ப்ரஸித்தமானவை. அவ்வர்ஷத்திலுள்ள புருஷர்கள் நிர்மலமும் பரிசுத்தமுமான அந்நதிகளின் ஜலத்தை உபயோகப்படுத்துகிறார்கள். குருக்கள் ருஷபர் த்ரவிணகர் தேவகர் என்னும் பேருடைய அவர்கள் ஜலத்தைச் சரீரமாகவுடைய பகவானை ஜலம் நிறைந்த அஞ்சலியினால் ஆராதிக்கிறார்கள். "ஜலங்களே! நீங்கள் பரமபுருஷனுடைய சக்திருபமாயிருப்பவர்கள். பூலோகம் புவர்லோகம் ஸ்வர்லோகமென்ற மூன்று லோகங்களையும் பரிசுத்தஞ் செய்பவர்கள். ஆகையால் பாபங்களைப் போக்குந் திறமையுடையவர்களும் பரமாத்மாவினிடத்தினின்று உண்டானவர்களுமாகிய நீங்கள் உங்களை ஸ்பர்சிக்கின்ற எங்கள் ஜன்மத்தைப்பவித்ரம் செய்வீர்களாக" என்னும் இம்மந்த்ரத்தை அவர்கள் ஜபித்துக்கொண்டிருக்கிறார்கள். ததிஸமுத்ரத்திற்கு அப்புறத்தில் ஏற்பட்டிருக்கின்ற சாகத்வீபம் முப்பத்திரண்டு லக்ஷ யோஜனை விஸ்தாரமுடையது. அது தன்னோடொத்த விஸ்தாரமுடைய க்ஷீரஸமுத்ரத்தினால் சூழப்பட்டிருக்கிறது. அந்தத்வீபத்தில் சாகமென்னும் வ்ருக்ஷம் இருக்கின்றது. அதைப்பற்றியே அந்த த்வீபத்திற்குச் சாகத்வீபமென்று பேர் விளைந்தது. அதன் வாஸனை உயர்ந்தது. அது அந்த த்வீபத்தையெல்லாம் பரிமளிக்கச் செய்கின்றது. அதற்கும் ப்ரியவ்ரதனுடைய புதல்வனே அதிபதி; அவன் மேதாதிதி யென்னும் பேருடையவன். அவனும் அந்த த்வீபத்தை ஏழுவர்ஷங்களாகப் பிரித்துத் தன் புதல்வர்களுடைய நாமங்களை வைத்து புரோஜவன்மனோஜவன் வேபமானன் தூம்ரானீ

கன் சித்ரரதன் பஹுரூபன் விஸ்வவாரன் என்னும் பேருடைய தன் புதல்வர்களை அவ்வர்ஷங்களுக்கு அதிபதிகளாக ஏற்படுத்தி, தான் அபரிச்சின்னாநந்த ஸ்வரூபனாகிய பகவானிடத்தில் மனம் செல்லப்பெற்றுத் தபோவனத்திற்குச் சென்றான். அவற்றில் ஈஸானம் உருஸ்ருங்கம் பலபத்ரம் சதகேஸரம் ஸஹஸ்ரஸ்ரோதம் தேவபாலம் மஹானஸம் என்னும் ஏழு எல்லைப் பர்வதங்களும், அனகை ஆயுர்த்தை உபயஸ்ருஷ்டி அபராஜிதை பஞ்சபரி ஸஹஸ்ரஸ்ருதி நிஜத்ருதி என்னும் ஏழு மஹாநதிகளும் ஏற்பட்டிருக்கின்றன. ருதவ்ரதர் ஸத்யவ்ரதர் தானவ்ரதர் ஸுவ்ரதர் என்னும் பேருடைய அவ்வர்ஷத்திலுள்ள புருஷர்கள் ப்ராணாயாமத்தினால் ரஜஸ்தமஸ்ஸுக்களை உதறி வாயுவைச் சரீரமாகவுடைய பகவானை த்யான யோகத்தினால் ஆராதிக்கிறார்கள். "முக்யப்ராணரூபனாகி உள்ளே புகுந்து தனது அடையாளங்களான ப்ராணம் அபானம் முதலிய பஞ்சவ்ருத்திகளால் (ஐந்து வ்யாபாரங்களால்) ஸமஸ்தப்ராணிகளையும் தரிக்கின்றவனும் ஜகத்தெல்லாம் தன் வசத்திலிருக்கப்பெற்றவனும் ஸர்வாந்தர்யாமியுமாகிய ஸாக்ஷாத்ஸர்வேஸ்வரன் எங்களைப் பாதுகாப்பானாக" என்னும் இம்மந்த்ரத்தை அவர்கள் ஜபிக்கின்றார்கள். க்ஷீரஸமுத்ரத்திற்கு அப்புறத்தில் அதைக்காட்டிலும் இரண்டுமடங்கதிகமான விஸ்தாரமுடைய புஷ்கரத்வீபம் ஏற்பட்டிருக்கின்றது. அது தன்னோடொத்த விஸ்தாரமுடைய சுத்தஸமுத்ரத்தினால் சூழப்பட்டிருக்கின்றது. அந்த த்வீபத்தில் அக்னிஜ்வாலைகள் போல நிர்மலமான பதினாயிரம் பொன்னிதழ்களையுடைய ஒரு தாமரைமலர் இருக்கின்றது. அங்குள்ளவர்கள் அதைப் பகவானுடைய அம்சமாகிய ப்ரஹ்மதேவனுக்கு ஆஸனமாக த்யானிக்கிறார்கள். அந்த த்வீபத்தினி

டையில் ஒரேபர்வதம் இருக்கின்றது. அதுமானஸோத்தரமென்னும் பேருடையது. அது தனக்கு உள்ளும்புறமுமுள்ளவர்ஷங்களுக்கு எல்லைப் பர்வதமாயிருக்கின்றது; பதினாயிரம் யோஜனை உயரமும் அவ்வளவு விஸ்தாரமுமுடையது. அந்தப் பர்வதத்தின்மேல் நான்குதிக்குக்களிலும் இந்த்ரன் முதலிய நான்கு லோகபாலர்களின் பட்டணங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மேருவைச் சுற்றுகின்ற ஸூர்யரதத்தின் ஸம்வத்ஸர ரூபமான சக்ரம் அப்பர்வததின்மேல் தேவதைகளின் பகலும் இரவுமாகிய உத்தராயண தக்ஷிணாயனங்களால் லோகத்திலுள்ள சக்ரம் போல் சுழல்கின்றது. அந்த த்வீபத்திற்கு அதிபதி ப்ரியவ்ரதனுடைய பிள்ளையாகிய வீதிஹோத்ரனென்பவன். அவன் அந்த த்வீபத்தை இரண்டு வர்ஷங்களாகப் பிரித்துத் தன்பிள்ளைகளின் பேர்களை இட்டு, ரமணனென்றும் தாதகதகனென்றும் பேருடைய அவர்களை அவ்வர்ஷங்களுக்கு ப்ரபுக்களாக ஏற்படுத்தித் தான் தமையனாகிய மேதாதிதியைப்போலப் பகவதாராதன ரூபமான கர்மங்களைச் செய்துகொண்டிருந்தான். அவ்வர்ஷங்களிலுள்ள புருஷர்கள் கர்மபந்தத்தைப் போக்குவதற்காகக் கர்மயோகத்தோடு கூடின த்யான யோகத்தினால் ப்ரஹ்மதேவனைச் சரீரமாகவுடைய பகவானை ஆராதிக்கிறார்கள். "வர்ணாஸ்ரமாதி பேதங்களையுடைய ஜனங்கள் ப்ரஹ்மத்திற்குச் சரீரமாயிருப்பவனும் வேதங்களால் அறியத் தகுந்தவனும் ஜகத் ஸ்ருஷ்டியாகிற கார்யத்தையே நடத்தும் தன்மையனுமாகிய எவனை, ஜகத்தெல்லாம் இவனே யென்னும் அபேத புத்தியுடன் மாறாமல் ஆராதிக்கின்றார்களோ அப்படிப்பட்ட மாஹானுபாவனாகிய ப்ரஹ்மதேவனுக்கு நமஸ்காரம்" என்னும் இம்மந்த்ரத்தை ஜபிக்கிறார்கள். அந்தச் சுத்த ஸமுத்

ரத்திற்கு அப்புறத்தில் ஜனஸஞ்சாரமுள்ள உள்பாகத்திற்கும் ஜன ஸஞ்சாரமில்லாத வெளிபாகத்திற்கும் இடையில் சுற்றிலும் லோகாலோகமென்னும் பர்வதம் ஏற்பட்டிருக்கின்றது. மானஸோத்தர பர்வதத்திற்கும் மேருபர்வதத்திற்கும் இடையில்எவ்வளவு பூமிஇருக்கின்றதோ அவ்வளவு பூமி சுத்தஸமுத்ரத்திற்கு அப்புறத்தில் இருக்கின்றது. அதற்கப்புறமுள்ள பூமி ஸ்வர்ணமயமாய்க் கண்ணுடிப்புறம் போன்றிருக்கும். அப்பூமியில் வைத்த பொருள் எதுவும் மீளவும் புலப்படுகிறதில்லை. ஆகையால் அந்தப் பூமி ஒரு ப்ராணியுமின்றிச் சூன்யமாயிருக்கிறது. அதை அலோகமென்கிறுர்கள்.தன்வரையிலுமுள்ள பூமிலோகமென்றும் தனக்கு வெளியிலுள்ள பூமி அலோகமென்றும் கூறப்படுகின்றனவாகையால் இடையிலுள்ள பர்வதம் லோகாலோகமென்றுபேர்பெற்றது. அப்பர்வதம் மூன்று லோகங்களுக்கும் வெளியில் சுற்றிலும் ஈச்வரனல் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கின்றது. ஸூர்யன் முதல் த்ருவன் வரையிலுள்ள ஜ்யோதிஸ்ஸமூஹங்களின் ஒளிகள் கீழிருக்கின்ற பூலோகம் முதலிய மூன்று லோகங்களையும் விளங்கச் செய்கின்றன. லோகாலோக பாவதம் தடுக்கின்றமையால் அதற்கு வெளியில் சென்று விளக்கம் செய்யமாட்டா. அப்பர்வதம் த்ருவனையும் மறைக்கும்படியான அவ்வளவு உயரமும் விஸ்தாரமும் உடையது. இப்பூமண்டலத்தின் நிலைமை இவ்வளவே அளவோடும் அடையாளத்தோடும் ஆகாரத்தோடும் பண்டிதர்களால் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. இந்த லோகாலோகபர்வதம் ஐம்பதுகோடி யோஜனை விஸ்தாரமுடைய பூமியின் நான்கில் ஒருபாகமாகிய பன்னிரண்டரைகோடி யோஜனை உயரமும் அவ்வளவு விஸ்தாரமுமுடையது.அப்பர்வதத்தின்மேல் நான்கு

திக்குக்களிலும் ஸமஸ்த லோகங்களுக்கும் குருவாகிய ப்ரஹ்மதேவனால் லோக க்ஷேமத்தின் பொருட்டு ருஷபம் புஷ்கரசூடம் விமானம் அபராஜிதம் என்னும் பேருடைய மேலான யானைகள் நான்கு ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அந்த யானைகளுக்கும் தனது அம்சபூதர்களான இந்த்ராதிலோகபாலர்களுக்கும் பலவகையானஸாமர்த்யங்கள் வளர்கைக்காகவும் ஸமஸ்த லோகங்களின் க்ஷேமத்திற்காகவும் தன் மாயையால் ஏற்பட்ட பலவகை லோகயாத்ரைகளைப் பாதுகாப்பதற்காகவும் பெரிய மேன்மைக்கிடமான கல்யாண குணங்கள் நிறைந்தவனும் நித்யவிபூதி லீலாவிபூதி ஆகிய இரண்டு விபூதிகளுக்கும் ப்ரபுவும் ஸர்வாந்தராத்மாவுமாகிய ஸர்வேஶ்வரன் சுத்தஸத்வ மயமாயிருப்பதும் கர்மயோகம் ஜ்ஞானயோகம் வைராக்யம் இவைகளால் உதவி செய்யப்பெற்ற அணிமாதி அஷ்டைஶ்வர்யஸித்திபர்யந்தமான உபாஸனத்தினால் காணத்தகுந்ததுமாகிய திவ்ய மங்களவிக்ரஹத்துடன் கூடி விஷ்வக்ஸேனர் முதலிய தன் பரிஜனங்களால் சூழப்பட்டுச் சங்கு சக்ரம் முதலிய தன் ஆயுதங்களால் திகழ்கின்ற பாஹுதண்டங்கள் விளங்கப்பெற்றுக் கல்பாவஸானம் வரையில் அந்த லோகாலோக பர்வதத்தில் நாற்புறத்திலும் வீற்றிருக்கிறான். மன்னவனே! லோகாலோகத்திற்கு வெளியிலுள்ள அலோகமென்னும் பூமி லோகத்தோடொத்த விஸ்தாரமுடையது. அதற்கு அப்புறத்தில் பரிசுத்தமான யோக ப்ரபாவமுடைய யோகீஶ்வரர்களின் ஸஞ்சாரமேயன்றி மற்ற ஜனங்களின் நடையாட்டம் கிடையாது. அண்டத்தினுடைய அடிபாகத்திற்கும் மேல் பாகத்திற்கும் இடையில் ஸூர்யன் இருக்கிறான். ஸூர்யனுக்கும் அண்டப் பித்திக்கும் இடையில் இருபத்தைந்து கோடி

யோஜனைகள் இருக்கின்றன. இந்த ஸூர்யன் நிலையற்றதாகிய இவ்வண்டத்தின் இடையில் இருக்கிறானகையால் [1]மார்த்தண்டனென்று கூறப்படுகிறான். ஸ்வர்ணம்போல் ரமணீயமான இவ்வண்டத்திற்குள் கர்ப்பம்போன்றிருக்கிறானகையால் ப்ரஹ்மதேவன் ஹிரண்யகர்ப்பனென்று பேர்பெற்றான். கிழக்கு முதலிய திசைகளும் ஆகாயம் த்யுலோகம் பூமி என்னும் பேதங்களும் ஸ்வர்க்கமும் மோக்ஷஸ்தானமும் நரகங்களும் அதலம் முதலிய பாதாள லோகங்களும் ஆகிய இவையெல்லாம் ஸூர்யனால் தான் பிரிக்கப்படுகின்றன. பகவத்ஸ்வரூபனாகிய இந்த ஸூர்யன் தேவர்கள் திர்யக்குகள் மனுஷ்யர்கள் ஸர்ப்பங்கள் பறவைகள் கொடிகள் செடிகள் ஆகிய ஸமஸ்தமான ஜீவ ஸமூஹங்களுடைய சக்ஷுரிந்த்ரியங்களையும் விளங்கச் செய்கிறான். இருபதாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸூர்யகதியை நிரூபித்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பூமண்டலத்தின் நிலைமை இவ்வளவுதான். த்யுலோகத்தின் பரிமாணமும் இவ்வளவேயென்று அதை அறிந்த பெரியோர்கள் சொல்லுகிறார்கள். கோதுமை முதலியவற்றை அறைக்கும் பொருட்டுச் செய்த கல் யந்த்ரத்தின் அடிபாகத்தின் அளவைச் சொன்னால் அதனேடொத்த அதன்மேல் பாகத்தின் அளவையும் அறியலாமல்லவா? இன்னமும் இரண்டு பாகமாயிருக்கின்ற உளுந்து பயறு

---

1. ம்ருதே அண்டே பவ:—மார்த்தண்ட:-ம்ருதமென்றால் நிலையற்றதென்று பொருள். அத்தகைய அண்டத்தில் உண்டானவன் மார்த்தண்டன்.

முதலியவற்றின் அடிப்பாகம் இவ்வளவென்று தெரிந்தால் அதன் மேல்பாகமும் அவ்வளவென்று தெரிந்துகொள்ளலாமல்லவா? அங்ஙனமே ப்ரஹ்மாண்டத்தின் அடிபாகமாகிய பூமண்டலத்தின் அளவைச்சொன்னமாத்ரத்தினுல் அதன்மேல் பாகமாகிய த்யுலோகத்தின் அளவையும் சொன்னுற் போலவேயாகின்றது. அந்தப் பூமண்டலத்திற்கும் த்யுமண்டலத்திற்கும் இடையில் அந்தரிக்ஷலோகம் இருப்பதாகச் சொல்கிருர்கள். அவ்வந்தரிக்ஷலோகம் அவ்விரண்டு லோகங்களிலும் கீழும்மேலும் ஸம்பந்தித்திருக்கின்றது. எரியுந்தன்மையுள்ள அக்னிமுதலிய வஸ்துக்களில் சிறந்த மஹானுபாவனுகிய ஸூர்யன் அவ்வந்தரிக்ஷலோகத்தினிடையில் இருந்துகொண்டு வெயிலால் மூன்று லோகங்களையும் எரிக்கிருன்; தன்னுளியால் விளங்கவும் செய்கிருன். அத்தன்மையுள்ள அந்த ஸூர்யன் உதகயனம் தக்ஷிணுயனம் வைஷுவதமென்னும் பேருடைய மந்தகதி சீக்ரகதி ஸமகதியென்னும் மூன்று கதிகளால் ஆரோஹணம் அவரோஹணம் ஸமவஸ்தானமென்று சொல்லப்படுகிற மகரம்முதலிய ராசிகளில் ஈஶ்வரனுல் ஏற்படுத்தப்பட்ட காலத்தின்படி ஏறுவதும் இறங்குவதுமாய்ச் சென்று அஹோராத்ரங்களை வளர்ந்தவைகளாகவும் குறுகினவைகளாகவும் ஸமங்களாகவும் செய்கிருன். ஸூர்யன் மேஷம் துலை இந்த ராசிகளில் இருக்கும்பொழுது அஹோராத்ரங்கள் ஸமங்களாயிருக்கின்றன. வ்ருஷபம் முதலிய ஐந்து ராசிகளில் ஸஞ்சரிக்கும்பொழுது பகல் மாத்ரமே வளர்கின்றது. ராத்ரிகளில் மாஸங்தோறும் ஒவ்வொரு நாழிகை குறைகின்றது. வ்ருச்சிகம் முதலிய ஐந்து ராசிகளில் இருக்கும்பொழுது ராத்ரிகள் வளர்கின்றன. பகல்களில் மாஸங்தோறும் ஒவ்வொரு நாழிகை குறைகின்றது. தக்ஷிணுயனம்

வரையில் பகல் வளர்ந்துகொண்டே வரும். உத்தராய ணம் வரையில் ராத்ரி வளர்ந்துகொண்டே வரும். மான ஸோத்தர பர்வதத்தில் இருந்துகொண்டு மேருவைச் சுற்றி வருகின்றஸூர்யன் தினமும் ஒன்பது கோடியே ஐம்பத்தோருலக்ஷம் யோஜனைகள் சுற்றுகிறுனென்று பெரியோர்கள் சொல்கிருர்கள். அம்மானஹோத்தரபர்வ தத்தில் மேருவுக்குக் கிழக்கில் தேவதானி யென்கிற இந்த்ரபட்டணம் உள்ளதென்றும், அதற்கு வடக்கில் ஸம் ஸயமனியென்கிற யமபட்டணம் உள்ளதென்றும், அதற்கு மேற்கில் நிம்லோசனியென்கிறவருணபட்டணம்உள்ளதெ ன்றும், அதற்கு வடக்கில் விபாவரி யென்கிற ஸோமபட்ட ணம் உள்ளதென்றும் சொல்லுகிருர்கள். மேருவுக்கு நாற் புறங்களிலுமுள்ள அந்தத் தேவதானிமுதலிய நான்கு பட்டணங்களில் கால விசேஷத்தினல் பூமண்டலத்தி லுள்ள ப்ராணிகளின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்குக் காரணங்களான ஸூர்யோதயம் மத்யாஹ்னம் ஸூர்யா ஸ்தமயம் நிசிதம் முதலியன உண்டாகின்றன. (மேருவுக் குத் தென்புறத்திலிருப்பவர்க்கு இந்த்ர பட்டணமான தேவதானியில் ஸூர்யோத்யமும் யமபட்டணமான ஸம்ய மனியில் மத்யாஹ்னமும், வருணபட்டணமான நிம்லோச னியில் அஸ்தமயமும், ஸோமபட்டணமாகிய விபாவரியில் நிசிதமும் உண்டாகின்றன. உதயம் மத்யாஹ்னம் அஸ்தம யம் இவைப்ராணிகளின் [1]ப்ரவ்ருத்தி காலங்கள். அப்பொ ழுது பிராணிகள் தொழில் செய்கின்றன. நிசீதமும் அதற்கு முன் பின்பாகங்களும் [2] நிவ்ருத்தி காலங்கள். அப்பொழுது ப்ராணிகள் உறங்குகின்றன. மேருவுக்கு மேற்கிலிருப்பவர்களுக்கு ஸம்யமனியைத் தொடங்கிக்

1. நடையாட்ட முள்ள காலங்கள்.
2. நடையாட்ட மில்லாத காலங்கள்.

கிழக்கு முதலிய திக்குக்கள் ஏற்படுகின்றன. ஸூர்யோதயாதிகளும் அந்தக்ரமத்திலேயே உண்டாகின்றன. மேருவுக்கு வடக்கிலிருப்பவர்களுக்கு நிம்லோசனியைத் தொடங்கிக் கிழக்கு முதலிய திக்குகளும் உதயாதிகளும் ஏற்படுகின்றன. மேருவுக்குக் கிழக்கிலிருப்பவர்களுக்கு விபாவரியைத் தொடங்கிக் கிழக்கு முதலிய திக்குகளும் உதயாதிகளும் ஏற்படுகின்றன).மேருவிலிருப்பவர்களுக்கு உதயாதிகள் கிடையா. ஸூர்யன் அவர்களுக்கு எப்பொழுதும் மத்யாஹ்னத்திலேயே இருந்து ப்ரவ்ருத்தியை விளைத்துக்கொண்டு வருகிறுன். ஸூர்யன் ஆகாயத்தில் திரியும்பொழுது தன்னை எதிர் முகமாகப் பார்க்கும் ஜனங்களுக்கு மேரு இடப்பக்கத்திலும் தனக்கு வலப்பக்கத்திலும் இருக்கும்படி செய்வான். ஸூர்யனை நாம் எவ்விடத்தில் உதிக்கக் காண்கிறோமோ அதுவே நமக்குக் கிழக்கு. அப்பொழுது நமக்கு மேருபர்வதம் இடப்பக்கத்திலிருக்கின்றது; ஸூர்யனுக்கு வலப்பக்கத்திலிருக்கின்றது. ஸூர்யன எவ்விடத்தில் உதிக்கிறுனே அவ்விடத்திற்கு நூல் பிடித்தாற் போல நேரான இடத்தில் வந்துசேரும்பொழுது கண்ணுக்குத் தெரியாமல் மறைகிறுன். அதுவே அஸ்தமயம். ஸூர்யன் எவ்விடத்தில் இருந்துகொண்டு வேர்வை உண்டாகும்படி மத்யாஹ்னவேளையை விளைத்து எரிக்கிறுனே அவ்விடத்திற்கு நூல்பிடித்தாற்போல் நேரான இடத்தில்போய்ச் சேரும்பொழுது அர்த்தராத்ரியாய் ப்ராணிகள் உறங்கும்படி செய்கிறுன். ஸூர்யனுடைய உதயத்தையும் அஸ்தமயத்தையும் பார்க்கிறவர்கள் தமக்கு அர்த்தராத்ரியை விளைக்கும் ஸூர்யனைப் பார்க்கமாட்டார்கள். (யமதிக்கில் இருக்கிறவர்களுக்கு ஸூர்யோதயமாகும்பொழுது இந்த்ர திக்கிலிருக்கிறவர்களுக்கு மத்யாஹ்னமாயிருக்கும். வரு

ண திக்கில் அர்த்தராத்ரியாயிருக்கும். யம திக்கில் மத்யாஹ்னமாகும்பொழுது இந்த்ர திக்கில் அஸ்தமயம். வருண திக்கில் உதயம். ஸோம திக்கில் அர்த்தராத்ரம். யம திக்கில் அஸ்தமயமாகும்பொழுது இந்த்ர திக்கில் அர்த்தராத்ரம். வருண திக்கில் மத்யாஹ்னம். ஸோம திக்கில் ஸூர்யோதயம் யம திக்கில் அர்த்தராத்ரமாகும்பொழுது இந்த்ர திக்கில் உதயம். வருண திக்கில் அஸ்தமயம். ஸோம திக்கில் மத்யாஹ்னம். ஸூர்யன் இந்த்ரபட்டணத்தினின்று புறப்பட்டுப் பதினைந்து நாழிகைக்குள் இரண்டு கோடியே முப்பத்தேழுலக்ஷத்து எழுபத்தையாயிரம் யோஜனைகள் கடந்து யமபட்டணம் சேருவான். யமபட்டணத்தினின்று புறப்பட்டு அதே நாழிகைக்குள் அவ்வளவு யோஜனைகள் கடந்து வருணபட்டணம் சேருவான். அங்ஙனமே ஸோம பட்டணத்திற்கும் இந்த்ர பட்டணத்திற்கும் போவான். அங்கிருந்து மீளவும் முன்போலவே சுற்றிக்கொண்டு வருவான். மற்ற சந்த்ரன் முதலிய க்ரஹங்களும் அஸ்வினி முதலிய நக்ஷத்ரங்களும் மற்ற ஸாதாரண நக்ஷத்ரக் கூட்டங்களும் அங்ஙனமே உதிப்பதும் அஸ்தமிப்பதுமாயிருக்கின்றன. வேதஸ்வரூபமாக உபாஸிக்கத் தகுந்த ஸூர்யரதம் ஒரு மூஹூர்த்த காலத்தில் முப்பத்து நான்கு லக்ஷத்து எண்ணூறு யோஜனை தூரம் தேவதானி முதலிய நான்கு பட்டணங்களிலும் சுற்றுகின்றது. அந்த ரதத்தின் ஒரு சக்ரம் பன்னிரண்டு இலைகளும் ஆறுகட்டுகளும் மூன்று நாபிகளும் உடையது. அதை ஸம்வத்ஸரஸ்வரூபமாகவும், பன்னிரண்டு இலைகளைப் பன்னிரண்டு மாதங்களாகவும், ஆறுகட்டுகளை ஆறு ருதுக்களாகவும், மூன்று நாபிகளைச் சாதுர்மாஸ்யங்களாகவும் உபாஸிக்கிறார்கள். அந்த ரதத்தின் இருசிலிருக்

கும் ஏர்க்கால் மேருவின் நுனியில் கட்டுண்டிருக்கின்றது. அந்த ரதத்தின் மற்றொரு பாகம் மானஸோத்தர பர்வதத்தில் ஐம்பதினாயிரம் யோஜனைகளுக்கு மேல் கட்டுண்டிருக்கின்றது. ஸூர்ய ரதத்தின் சக்ரம் அந்த மற்றொரு பாகத்தில் கோக்கப்பெற்றுத் தைலயந்த்ரம்போல் மானஸோத்தர பர்வதத்தின்மேல் சுற்றுகின்றது. இரண்டாவது இருசிலிருக்கும் ஏர்க்கால் அந்தச் சக்ரத்தின் ஓரத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும். முதலேர்க்கால் மேருவினின்று மானஸோத்தரம் வரையில் நீண்டிருக்கும்; அது ஒரு கோடியே ஐம்பத்தேழு லக்ஷத்து ஐம்பதினாயிரம் யோஜனை அளவுடையது. இரண்டாவது ஏர்க்கால் அதில் நான்கில் ஒரு பாகமுடையது (முப்பத்தொன்பது லக்ஷத்து முப்பத்தேழாயிரத்து ஐந்நூறு யோஜனை அளவுடையது). அதன்மேல்பாகம் த்ருவனிடத்தில் தைலயந்த்ரத்தின் ஏர்க்கால்போலக் கட்டுண்டிருக்கின்றது. அந்த ரதத்தில் ரதிகன் உட்காருமிடம் முப்பத்தாறு லக்ஷயோஜனை நீண்டிருக்கும். அதில் நான்கில் ஒரு பாகமாகிய ஒன்பது லக்ஷயோஜனை விஸ்தாரமுடையது. அந்த ஸூர்ய ரதத்தின் நுகத்தடியும் ஒன்பது லக்ஷயோஜனை நீளமுடையது. அதில் ஏழு குதிரைகள் அருணனால் கட்டப்பட்டிருக்கின்றன, அவை காயத்ரி முதலிய சந்தங்களின் நாமங்களுடையவை, ஸூர்யனை அவன் போகவேண்டிய இடத்திற்குக் கொண்டு போய்ச் சேர்க்கின்றன. அருணன் ஸூர்யனுக்கு முன்னே மேற்கு முகமாய்க் குதிரைகளை நடத்தும் வ்யாபாரத்தில் இருக்கிறான். அங்ஙனமே கட்டைவிரல் கணுவின் உயரமுடைய வாலகில்யரென்று ப்ரஸித்தர்களான அறுபதினாயிரம் ரிஷிகள் நல்லுரைகளைச் சொல்லும்படி நியமிக்கப்பட்டு ஸூர்யனுக்கு முன்னே அந்த

ரதத்தில் இருந்து கொண்டு அவனை ஸ்தோத்ரம் செய்கி றார்கள். அங்ஙனமே மற்ற ரிஷிகள் கந்தர்வர்கள் அப் ஸரஸ்த்ரீகள் நாகர்கள் யக்ஷர்கள் ராக்ஷஸர்கள் தேவர் கள் என்கிற இவ்வேழு கூட்டத்தவர்களும் ஒவ்வொரு கூட்டத்திலும் இரண்டிரண்டு பேர்களாய்ச் சேர்ந்து பதினான்கு பேர்கள் வெவ்வேறு நாமங்கள் பூண்டு பரமாத்மஸ்வரூபனும் வெவ்வேறு நாமங்களுடையவனும் மஹானுபாவனுமாகிய ஸூர்யனை மாஸந்தோறும் தனித் தனி வ்யாபாரங்களால் உபாஸிக்கின்றார்கள். இப்பூமண்ட லம் ஒன்பது கோடியே ஐம்பத்தோரு லக்ஷம்யோஜனை சுற்றளவுடையது. அதில் ஸூர்யன் ஒரு க்ஷணத்தில் இரண்டாயிரம யோஜனைகளும் இரண்டு கூப்பிடு தூரமும் போகிறான். இருபத்தோராவது அத்யாயம் முற்றிற்று.

---

## சந்த்ர சுக்ராதிகளின் ஸ்தானத்தைக் கூறுதல்.

பரிக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—'பகவத் ஸ்வரூபனாகிய ஸூர்யன் மேருவையும் த்ருவனையும் ப்ர தக்ஷிணமாய்ச் சுற்றுகிறானென்றும், நக்ஷத்ரங்களுக்கு எதிர்முகமாய் ராசிகளில் ஸஞ்சரிக்கிறானென்றும் சொன்னீர். இவ்விரண்டும் ஒன்றோடொன்று பொருந்த வில்லை. இது பொருந்தும் விதத்தை அறிய விரும்பு கிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— குயவனுடைய சக்ரம் சுற்றும்பொழுது அதிலிருக்கிற எறும்பு முதலியவை களும் அதனுடன் சுழலுகின்றன. அதுவன்றித் தாமும் போகின்றன. ஓரிடத்தில் இருக்கின்றவை சிறிது

க்ஷேத்துக்குள் மற்றோரிடத்தில் புலப்படுகின்றன வாகையால் சக்ரத்துடன் சுற்றுவது தவிர அவற்றிற்கு வேறு நடையாட்டமும் உண்டென்பதில் ஸந்தேகமில்லை. இங்ஙனமே நக்ஷத்ரராசிகளோடுகூட த்ருவனையும் மேருவையும் ப்ரதக்ஷிணமாய்ச் சுற்றுகிற கால சக்ரத்துடன் அதிலுள்ள ஸூர்யன் முதலிய க்ரஹங்கள் சுற்றிக்கொண்டிருப்பினும் ஒரு நக்ஷத்ரத்திலும் ஒரு ராசியிலுமிருக்கிற அவை மற்றொரு நக்ஷத்ரத்திலும் மற்றொரு ராசியிலும் புலப்படுகின்றன வாகையால் அவற்றிற்கு வேறு கதியும் உண்டென்பதில் ஸந்தேஹமில்லை. ஷாட்குண்ய பூர்ணனும் ஆதிபுருஷனுமாகிய ஸாக்ஷாத் நாராயணனே இந்த ஸூர்ய ஸ்வரூபனாய் வேதங்கள் தன் ஸ்வரூபகுணாதிகளை விவரித்துச் சொல்லவும் பண்டிதர்கள் தன்னை உபாஸிக்கவும் பெற்றுக் கர்மங்களின் சுத்திக்காகத் தன்னைப் பன்னிரண்டு விதமாகப் பிரித்து இவ்வுலகங்களின் க்ஷேமத்திற்காக வஸந்தம் முதலிய ஆறு ருதுக்களில் குளிர் வெய்யில் காற்று மழை முதலிய ருதுகுணங்களை விளைக்கின்றான். உலகத்திலுள்ளவர்கள் வேத சாஸ்த்ரத்தில் சொன்ன வர்ணாஸ்ரமாசாரங்களை அனுஸரித்து யஜ்ஞாதி கர்மங்களாலும் அத்தகைய உபாஸன விசேஷங்களாலும் இந்த ஆதித்யஸ்வரூபனாகிய பகவானை ஆராதித்து அனாயாஸமாகச் சீக்ரத்தில் ஸ்வர்க்க மோக்ஷாதி ரூபமான நன்மையைப் பெறுகிறார்கள். ஓ மன்னவனே! லோகங்களுக்கு அந்தராத்மாவாகிய பகவான் இந்த ஆதித்யஸ்வரூபனாயிருந்து த்யுலோகத்திற்கும் பூலோகத்திற்கும் இடையில் அந்தரிக்ஷ லோகத்தின் மத்யத்திலுள்ள சிம்சுமார சக்ரமென்கிற காலசக்ரத்தில் அடங்கின மேஷம் முதலிய ராசிகளில் நக்ஷத்ரங்களுக்கெதிர்முகமாய் ஸஞ்சரிக்கையில்

ஒவ்வொரு ராசியில் ஸஞ்சரிக்கும் காலம் ஒரு மாதம் வித மாக ஸம்வத்ஸரத்தின் அவயவங்களான பன்னிரண்டு மாதங்கள் ஏற்படுகின்றன. அவையே ராசிகளென்னும் பேருடையவை. இரண்டு பக்ஷங்கள் ஒருமாஸமென்றும் இரண்டேகால் நக்ஷத்ரம் ஒரு அஹோராத்ர மென்றும் சொல்லுகிறார்கள். ஸூர்யன் பன்னிரண்டு ராசிகளின் ஆறிலொருபாகமாகிய இரண்டு ராசிகளில் எவ்வளவு காலத்தில் ஸஞ்சரிக்கிறானோ அக்காலம் ருதுவென்று கூறப்படும். அது ஸம்வத்ஸரத்தின் ஆறிலொரு பாகம். அவன் எவ்வளவு காலத்தில் ஆறு ராசிகளில் ஸஞ்சரிக்கிறானோ, அக்காலம் அயனமென்கிறார்கள்; அது ஸம்வத்ஸரத்தின் இரண்டில் ஒரு பாகம்: ஆகாசமண்டலத்திற்கும் பூமண்டலத்திற்கும் இடையி லுள்ளதும் பன்னிரண்டு ராசிகள் அடங்கினதுமாகிய அந்தரிக்ஷலோகம் முழுவதும் மந்தகதி சீக்ர கதி ஸம கதி ஆகிய இம்மூன்று கதிகளால் எவ்வளவு காலத்தில் ஸஞ்சரிக்கிறானோ அக்காலம் ஸம்வத்ஸர மென்றும் பரி வத்ஸரமென்றும் இளாவத்ஸரமென்றும் அநுவத்ஸர மென்றும் இத்வத்ஸரமென்றும் வழங்கி வருகிறதென்று சொல்லுகிறார்கள். ஸூர்யமண்டலத்தினின்று லக்ஷயோ ஜனைகளுக்கு மேல் சந்த்ரன் புலப்படுகிறான். அவன் வெகு வேகமாக ஸஞ்சரிப்பவன். ஆகையால் உக்ரசாரியென்று கூறப்படுவான் ஸூர்யன் ஒரு ஸம்வத்ஸரத்தில் ஸஞ்ச ரிக்கிற அந்தரிக்ஷமண்டலத்தைச் சந்த்ரன் இரண்டு பக்ஷங்களடங்கின ஒரு மாதத்திற்குள் ஸஞ்சரிக்கிறான். ஸூர்யன் ஒரு மாதத்தில் ஸஞ்சரிக்கும் மார்க்கத்தைச் சந்த்ரன் அவன் இரண்டேகால் நக்ஷத்ரங்களில் ஸஞ்சரிக் கும் காலத்திற்குள் ஸஞ்சரிக்கிறான். அவன் ஒரு பக்ஷத்தில் ஸஞ்சரிக்கும் மார்க்கத்தை இவன் ஒரு தினத்

தில் ஸஞ்சரிக்கிறுன். மற்றும், ஓ மன்னவனே! சந்த்ரன் வளர்வதும் தேய்வதுமான கலைகளால் சுக்லபக்ஷ க்ருஷ்ணபக்ஷங்களை விளைத்துப் பித்ருக்களுக்குப் பகலும் இரவுமாகிய தினத்தை ஏற்படுத்திக்கொண்டு ஸமஸ்த ப்ராணிகளுடைய ப்ராணன்களுக்கும் த்ருப்தியை விளைத்து ஜீவனஹேதுவாய் முப்பது முஹூர்த்தங்களுக்குள் ஒரு நக்ஷத்ரத்தில் ஸஞ்சரிக்கின்றுன். பதினுறு கலைகளையுடைய இந்தச் சந்த்ரரூபியான பகவான் மனத்திற்கு அதிஷ்டான தேவதையாகையால் மனேமயனென்றும் ஓஷதிகளுக்கு ப்ரபுவாகையால் அன்னமயனென்றும் ஸமஸ்த ப்ராணிகளுடைய ஜீவனத்திற்கும் காரணனுகையால் அம்ருதமயனென்றும் தேவதைகள் பித்ருக்கள் மனுஷ்யர்கள் பூதர்கள் பசுக்கள் பக்ஷிகள் ஆகிய அனைவரின் ப்ராணன்களுக்கும் த்ருப்தியை விளைக்கின்றமையால் ஸர்வமயனென்றும் சொல்லுகிறுர்கள். அந்தச் சந்த்ரமண்டலத்தினின்று மூன்று லக்ஷயோஜனைகளுக்கு மேல் அபிஜித்துடன் சேர்ந்து இருபத்தெட்டு நக்ஷத்ரங்கள் கால சக்ரத்தில் அந்தராத்மாவான ஈச்வரனல் தூண்டப்பட்டு மேருவுக்குத்தென்புறத்திலேயே சுற்றிக்கொண்டிருக்கின்றன. ஸூர்யாதிகளைப்போல் அவற்றிற்குக் கால சக்ரத்துடன் சுற்றுவதொழிய வேறுகதி கிடையாது. அந்த நக்ஷத்ர மண்டலத்தினின்று இரண்டு யோஜனைகளுக்கு அப்புறத்தில் சுக்ரன் புலப்படுகிறுன். அவன் ஸூர்யனுக்கு முன்னும் பின்னும் கூடவும் ஸஞ்சரிக்கிறுன். ஸூர்யனேடு கூட ஸஞ்சரிக்கும்பொழுது அவனைப்போலவே மந்தம் சீக்ரம் ஸமம் என்கிற மூன்று கதிகளால் ஸஞ்சரிக்கிறுன். அவன் எப்பொழுதும் உலகங்களுக்கு அனுகூலனுகவே இருப்பான். க்ரமமாயிருக்கிற நக்ஷத்ரம் முதலியவற்றைக் கடந்து போகையாகிற கதிவிசேஷத்தினல்

பெரும்பாலும் மழை ஊஹிக்கப்படுகின்றது. அவன் மழையை நிறுத்தும் க்ரஹத்தையும் தடுத்து மழை பெய்விக்குந்தன்மையுடையவன். அந்தச்சுக்ரனுடைய கதியை நிரூபித்துச் சொன்னதால் புதனுடைய கதியும் கூறப்பட்டதாம். சுக்ரமண்டலத்திற்குமேல் இரண்டுலக்ஷயோஜனையில் சந்த்ரனது புதல்வனாகிய புதன் புலப்படுகின்றான். அவன் பெரும்பாலும் உலகங்களுக்கு அசுபத்தையே விளைத்துக் கொண்டிருப்பான். அவன் ஸூர்யனைப் பிரிந்து ஸஞ்சரிக்கும்பொழுது பெருங்காற்று அதிகமழை மழையில்லாமை முதலிய பயத்தை அறிவிப்பான். அந்தப் புதமண்டலத்திற்குமேல் இரண்டு லக்ஷ யோஜனையில் அங்காரகன் புலப்படுகின்றான். அவன் வக்ரமாக ஸஞ்சரிப்பானாயின் ஒவ்வொரு ராசியையும் மும்மூன்று பக்ஷங்களில் ஸஞ்சரிப்பான். இல்லாத பக்ஷத்தில் பன்னிரண்டு ராசிகளையும் க்ரமமாகவே ஸஞ்சரிப்பான். அவன் பெரும்பாலும் அசுபக்ரஹம். துக்கத்தையே தெரிவிப்பான். அவ்வங்காரக மண்டலத்திற்குமேல் இரண்டுலக்ஷ யோஜனையில் மஹானுபாவராகிய ப்ருஹஸ்பதி இருக்கிறார். அவர் ஒவ்வொரு ராசியிலும் ஒரு ஸம்வத்ஸரம் ஸஞ்சரிக்கிறார். அவர் வக்ரசாரமில்லாதிருப்பாரானால், ப்ராஹ்மணகுலத்திற்குப் பெரும்பாலும் அனுகூலராகவே யிருப்பார். அந்த ப்ருஹஸ்பதி மண்டலத்திற்குமேல் இரண்டுலக்ஷ யோஜனை தூரத்தில் சனி தோற்றுகிறான். ஒவ்வொரு ராசியிலும் முப்பது மாதங்கள் மெல்ல மெல்ல ஸஞ்சரித்துக்கொண்டு எல்லாராசிகளையும் க்ரமமாகவே சுற்றிவருகின்றான். ஜன்மராசிக்கு முன்னும் பின்னும் ஜன்மராசியிலும் ஸஞ்சரிக்குங் காலத்தினால் ஏற்படுகின்ற ஏழரை வர்ஷங்களில் அவன் அனைவர்க்கும் அசுபத்தையே விளைப்பான். அந்தச் சனிமண்டலத்திற்குமேல் பதினொ

ருயோஜனை தூரத்தில் ஸப்தரிஷிகள் புலப்படுகின்றார்கள். அவர்கள் உலகங்களுக்கு க்ஷேமத்தை விளைத்துக் கொண்டு ஷாட்குண்ய பூர்ணனாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவின் சிறந்த ஸ்தானமாகிய த்ருவமண்டலத்தை ப்ரதக்ஷிணமாய்ச் சுற்றுகின்றார்கள். இருபத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

த்ருவமண்டலத்தின் ஸ்வரூபத்தைக் கூறுதலும், சிம்சுமார சக்ரஸ்வரூபனாகிய பரமபுருஷனுடைய லீலைமையை விவரித்தலும்

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—ரிஷிமண்டலத்திற்குமேல் பதின்மூன்று லக்ஷம்யோஜனை தூரத்தில் ப்ரஸித்தி பெற்றதும் சிறப்புடையதுமாகிய ஸ்ரீமஹா விஷ்ணுவின் ஸ்தானமென்று சொல்கிறார்கள். உத்தான பாதனுடைய பிள்ளையும் மஹாபாகவதனுமாகிய த்ருவன் அவ்விஷ்ணுவின் ஸ்தானத்தில் இருக்கிறான். அக்னி இந்த்ரன் கஶ்யபப்ரஜாபதி யமன் ஆகிய இவர்கள் ஒரே காலத்தில் சேர்ந்து அவனை இப்பொழுதும் வெகுமதியுடன் ப்ரதக்ஷிணம் செய்கிறார்கள். அவன் கல்பாந்த ஜீவிகளான புருஷர்களுக்கு ஆஶ்ரயமாயிருப்பவன். அவனுடைய ப்ரபாவத்தை முன்னமே மொழிந்திருக்கிறோம். அவன், கண்கொட்டாமல் விழித்துக் கொண்டிருப்பதும் அறியக் கூடாத வேகமுடையதும் பகவத் ஸ்வரூபமுமாகிய கால சக்ரத்தினால் சுற்றப்படுகிற ஸமஸ்தமான ஸாதாரண நக்ஷத்ரக்கூட்டங்களுக்கும் ஸூர்யன் முதலிய க்ரஹங்களுக்கும் அஶ்வினி முதலிய விசேஷ நக்ஷத்ரங்களுக்கும் மற்றுமுள்ளவற்றிற்கும் மொட்டை மரம்போல் அசையாத ஆதாரமாய் ஈஶ்வரனால் ஏற்படுத்தப்பட்டு ஸர்வ காலமும் விளங்குகிறான். புணையடிக்கு மிடத்தில் எருது

மாடுகள் புணைக்கம்பத்தில் கட்டுண்டு தத்தம் இடத்தை விட்டு மாருமலே அந்தப் புணைக்கம்பத்தைச் சுற்றி வலம் வருவதுபோல, நக்ஷத்ரக்கூட்டங்களும் ஸூர்யாதி க்ரஹங்களும் கால சக்ரத்தில் உள்ளும் புறமும் கட்டுண்டு வாயுவாகிற பாசத்தினுல் தரிக்கப்பட்டுக் கல்பாவஸானம் வரையில் த்ருவனையே ப்ரதானமாய்க் கொண்டு அவனைச் சுற்றி வருகின்றன. மேகங்களும் பருந்து முதலிய பறவைகளும் காற்ருகிற பாசத்திற்குட்பட்டுக் கர்மத்தை ப்ரதானமாகக் கொண்டு கிழே விழாமல் ஆகாயத்திலேயே சுழலமிடுவதுபோல, நக்ஷத்ரக்கூட்டங்களும் கர்மமூலமாய் ப்ரக்ருதிக்கும் தமக்கும் உண்டான ஸம்பந்தத்தினுல் அனுக்ரஹம் செய்யப் பெற்று நக்ஷத்ரசரீரங்களுடையவையாகி ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும்படியான தமது கர்மத்தினுல் ஆகாசகதியைப் பெற்றுக் கிழே விழாதிருக்கின்றன. இந்த க்ரஹ நக்ஷத்ரக்கூட்டங்களுக்காதாரமான சிம்சுமாரமென்னும் காலசக்ரத்தை ஸமஸ்தசேதனுசேதனரூபமான ஜகத்திற்கெல்லாம் தாரகனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய வாஸுதேவஸ்வரூபமாக த்யானிக்கவேண்டுமென்று சில வேதபாகங்களும் வைதிகரான சில பெரியோர்களும் சொல்லுகிருர்கள். சிம்சுமாரசக்ரத்தைச் சரீரமாகவுடைய வாஸுதேவபகவானைப் பற்றின யோகதாரணையில் இந்த நக்ஷத்ரகணத்தைச் சிலயோகிகள் ஸாக்ஷாத்கரிக்கிருர்கள். ஸர்ப்பம்போல் சுற்றிக்கொண்டிருக்கிற சரீரமுடையதும் கிழ்முகமாயிருப்பதுமாகிய இந்தச் சிம்சுமாரசக்ரத்தின் வால்நுனியில் த்ருவன் இருக்கிருன். அதன் கிழ்ப்பாகத்தில் ப்ரஜாபதி அக்னி இந்த்ரன் தர்மன் என்னும் இந்நால்வர் இருக்கிருர்கள். அதன் அடியில் தாதா விதாதா என்னும் இருவர்களும், இடை

யில் ஸப்தரிஷிகளும் இருக்கிறார்கள். அந்தச் சிம்சுமாரசக்ரத்தின் அவயவங்களில் எவ்வெவ்விடங்களில் எவரெவர் இருக்கின்றார்களோ, அவரவர்களோடு அந்தந்த அவயவத்தைச் சிலயோகிகள் த்யானித்தார்கள். அங்ஙனமே இப்பொழுதும் த்யானிக்கவேண்டும். ஸர்ப்பம் போல் சரீரத்தை ப்ரதக்ஷிணமாய்ச் சுற்றிக்கொண்டிருக்கிற அந்தச் சிம்சுமாரசக்ரத்தின் வலப்பக்கத்தில் உத்தராயணநக்ஷத்ரங்களான அபிஜித்து முதல் புனர்வஸுவரையிலுள்ள பதினான்கு நக்ஷத்ரங்களும், இடப்பக்கத்தில் தக்ஷிணாயன நக்ஷத்ரங்களான புஷ்யம் முதல் உத்திராடம் வரையிலுள்ள பதினான்கு நக்ஷத்ரங்களும் இருக்கின்றன. சுற்றிக்கொண்டிருக்கிற ஸர்ப்பம் போன்ற சிம்சுமாரசக்ரத்தின் இரண்டு பக்கங்களிலுள்ள அவயவங்களும் ஸமமான அளவுடையவை. அதன்பின் பாகத்தில் அஜவீதி. அஜவீதியாவது ஸூர்யன் சீக்ரமாய்ச் செல்லும் மார்க்க விசேஷம். அதுவே தக்ஷிணாயனமென்று கூறப்படும். அதன் மத்யபத்தில் ஆகாச கங்கை இருக்கிறது. உத்தராயண நக்ஷத்ரங்களில் கடைசியாகிய புனர்வஸுநக்ஷத்ரம் வலது நிதம்பத்திலும், தக்ஷிணாயன நக்ஷத்ரங்களில் முதன்மையாகிய புஷ்ய க்ஷத்ரம் இடது நிதம்பத்திலும், திருவாதிரை வலக்காலிலும், ஆஸ்ரேஷை இடக்காலிலும், அபிஜித்து வலமூக்கிலும், உத்திராடம் இடமூக்கிலும், திருவோணம் வலக்கண்ணிலும், பூராடம் இடக்கண்ணிலும், அவிட்டம் வலக்காதிலும், மூலம் இடக்காதிலும், மகம் முதல் தக்ஷிணயன நக்ஷத்ரங்கள் எட்டு இடப்பக்கத்து முகங்களிலும் த்யானிக்கத்தக்கவை. அங்ஙனமே ம்ருகசீர்ஷம் முதலிய உத்தராயண நக்ஷத்ரங்கள் வலப்பக்கதில் ப்ரதிலோமமாக த்யானிக்கத் தக்கவை. சதயம் வலத்தோ

ளிலும், கேட்டை இடத்தோளிலும், த்யானிக்கத் தக்கவை. அகஸ்த்ய நக்ஷத்ரம் மேல்கன்னத்திலும், யமநக்ஷத்ரம் அடிக்கன்னத்திலும், முகத்தில் அங்காரகனும், சனி உபஸ்தத்திலும், ப்ருஹஸ்பதி பிடரியிலும், மார்பில் ஸூர்யனும், ஹ்ருதயத்தில் நாராயணனும், நெஞ்சில் சந்த்ரனும், நாபியில் சுக்ரனும், ஸ்தனங்களில் அச்வினி தேவதைகளும், ப்ராண அபானங்களில் புதனும், கழுத்தில் ராஹுவும், கேது நக்ஷத்ரங்கள் ஸமஸ்த அங்கங்களிலும், மயிர்க்கால்களில் மற்ற எல்லா நக்ஷத்ரக்கூட்டங்களும் த்யானிக்கத் தக்கவை. ஸர்வதேவதாமயமான அந்தக்கால சக்ரம் எங்கும் நிறைந்திருக்குந் தன்மையனான பகவானுடைய உருவம். அதைத் தினந்தோறும் ஸந்த்யாகாலத்தில் பரிசுத்தனாய் மௌனத்துடன் பார்த்துக்கொண்டு 'காலத்திற்கு ஆதாரமாயிருப்பதும் ப்ரஹ்மாதி தேவதைகளுக்கு ப்ரபுவும் மஹா புருஷனுடைய சரீரமுமாகிய காலசக்ரமென்கிற ஜ்யோதிர்லோகத்திற்கு நமஸ்காரம்' என்னும் மந்த்ரத்தைச் சொல்லி ஸ்தோத்ரம் செய்யவேண்டும். ஸூர்யாதி க்ரஹங்களும் அச்வினி முதலிய நக்ஷத்ரங்களும் மற்ற ஸாதாரண நக்ஷத்ரங்களும் அடங்கப்பெற்றுத் தேவதைகளுக்கு மேற்பட்டிருப்பதும் பகவானுடைய உருவமுமாகிய சிம்சுமாரமென்னும் காலசக்ரத்தை மூன்று காலங்களிலும் நமஸ்கரித்தாலும் நினைத்தாலும் மந்த்ரத்தை ஜபித்தாலும் பாபங்கள் சீக்ரத்தில் பறந்து போகும். இருபத்து மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸூர்யனுக்குக் கீழுள்ள ராஹு முதலிய வர்களின் நிலைமையையும், பூமிக்குக் கீழு ள்ள அதலாதிலோகங்களின் நிலைமை யையும் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஸூர்யனுக்குக் கீழ்ப் பதினாயிர யோஜனை தூரத்தில் ராஹு நக்ஷத்ரம்போல் ஸஞ்சரிக்கிறானென்று சிலர் சொல்லுகிறார்கள். இவன் பகவானுடைய அனுக்ரஹத்தினால் தேவத்வத்தையும் க்ரஹமாயிருக்கையையும் பெற்றான். இவன் ஸிம்ஹிகையின் புதல்வன். பாப புத்தியுள்ள அஸுரர்களிலும் அதமனாயிருப்பவன். இவன் அத்தன்மை பெறுதற்கு உரியவனல்லன். ஆயினும் பகவானுடைய க்ருபையினால் பெற்றான். இவனுடையபிறவியையும் செயலையும்பற்றி மேல் சொல்லப்போகிறோம். நமக்கு ப்ரத்யக்ஷமாய் எரிகின்ற ஸூர்யனுடையமண்டலம் பதினாயிரம்யோஜனைவிஸ்தாரமுடையதென்றும், சந்த்ர மண்டலம் பன்னீராயிரம்யோஜனை விஸ்தாரமுடையதென்றும், ராஹுமண்டலம் பதின்மூவாயிரம் யோஜனை விஸ்தாரமுடையதென்றும் சொல்லுகிறார்கள். இந்த ராஹு அம்ருதபானஸமயத்தில் ஸூர்யனுக்கும் சந்த்ரனுக்கும் இடையில் நுழைந்து மறைத்தான். ஆகையால் அவர்கள் அவனைக் காட்டிக்கொடுத்தார்கள். அதனால் அவன் அவர்களிடத்தில் மாறாதவைரமுடையவனாயிருக்கிறான். ஒருகால் பர்வத்தில் ஸூர்யனோடும் சந்த்ரனோடும் கலஹத்திற்காக அவர்களை எதிர்த்தோடுகிறான். பகவான் அதைக் கண்டு அவ்விருவரையும் பாதுகாக்கும் பொருட்டு ஸுதர்சனமென்னும் பேருடையதும் தனக்கு ப்ரியமாயிருப்பதும் தேஜஸ்ஸினால் பொறுக்கமுடியாததுமாகிய தன் சக்ராயுதத்தை ப்ரயோகிக்கிறான். தேஜஸ்ஸினால் ஜ்வலித்துக்கொண்டு அடிக்கடி சுழலமிடுகின்ற அவ்வஸ்த்ரத்தைக் கண்டு ராஹு

முஹூர்த்தகாலம் எதிரே நின்று பயந்து மனநிலைமை யில்லாமல் தூரத்திலேயே திரும்பிவிடுகிறான். அவன் ஓடும்பொழுது அவனுடைய மண்டலத்தினால் ஸூர்ய சந்த்ரர்களின் மண்டலம் மறைகின்றது. நேராகப்போவானாயின் முழுவதும் மறைகின்றது. வக்ரமாகப் போவானாயின் பாதியாகவும் ஏற்றக்குறைவாகவும் மறைகின்றது. ஜனங்கள் அதையே க்ரஹணமென்று சொல்கிறார்கள். அந்த ராஹுமண்டலத்திற்குக் கீழ் பதினாயிரயோஜனை யில் ஸித்தர் சாரணர் வித்யாதரர் இவர்களின் ஸ்தானங்கள் இருக்கின்றன. அதற்குக்கீழ் யக்ஷர் பிசாசர் ப்ரேதர் பூதர் ஆகிய இவர்கள் விளையாடுமிடமாகிய அந்தரிக்ஷலோகம் இருக்கின்றது. அது, காற்று எதுவரையில் மிகவும் வேகமாய் வீசுகின்றதோ மேகங்கள் எது வரையில் புலப்படுகின்றனவோ அது வரையில் வ்யாபித்திருக்கின்றது. அதற்குக் கீழ் நூறுயோஜனை தூரத்தில் இப்பூமண்டலம் இருக்கின்றது. ஹம்ஸம் பாஸம் பருந்து கருத்மான் முதலிய சிறந்த பறவைகள் எது வரையில் பலத்துடன் பறக்கின்றனவோ அது வரையில் பூலோகமென்று கூறப்படும். இப்பூமியின் நிலைமையை உள்ளபடி மொழிந்தேன். பூலோகத்திற்குக்கீழ் பூமியிலேயே ஏழு விவரங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒவ்வொன்றும் பதினாயிர யோஜனை விஸ்தாரமும் அவ்வளவு உயரமும் உடையது. ஒவ்வொன்றும் போகத்தில் தாரதம்யம் உடையதாயிருக்கும். அவை அதலம் விதலம் ஸுதலம் ரஸாதலம் தலாதலம் மஹாதலம் பாதாலம் என்னும் பேருடையவை. அவற்றைப் பிலஸ்வர்க்கமென்றும் கூறுகிறார்கள். அவற்றில் ஸ்வர்க்கத்தைக் காட்டிலும் மேற்பட்டகாமபோகம் ஐஸ்வர்யாநந்தம் ஸம்பத்து பரிஜன பரிவாரங்கள் இவைநிறைந்தவீடுகளும் உத்யானங்களும்விளை

யாடு மிடங்களும் ஸ்த்ரீ ஸம்போகத்திற்குரிய இடங்களும் விளக்கமுற்றிருக்கும். அத்தகைய உலகங்களில்தைத்யர்களும்தானவர்களும் காத்ரவேயர்களும் நித்யஸந்தோஷமுற்று மிக்க அனுராகமுடைய மனைவிகளும்பிள்ளைபெண்டிர்களும் பந்துக்களும் நண்பர்களும் வேலைக்காரர்களுமுடையவர்களாகி இல்லறவாழ்க்கையில் மகிழ்ந்து ஈஶ்வரனிடத்திலும் தமது மனவிருப்பம் தடைபடப் பெறுமல் மாயையால் விநோதமுற்று வாஸம் செய்கிறார்கள். ஓ மஹாராஜனே! பிலஸ்வர்க்கங்களென்கிற இவ்வதலாதி லோகங்களில் மாயாவியான மயனென்னும் அஸுரனால் நிர்மிக்கப்பட்ட ஆச்சர்யமான பட்டணங்கள் பல இருக்கின்றன. அப்பட்டணங்கள் சிறப்புடைய பலவகை ரத்னங்களால் இயற்றப்பட்ட ஆச்சர்யமான வீடுகளும் ப்ராகாரங்களும் (கோட்டைகளும்) கோபுரங்களும் ஸபைகளும் தேவாலயங்களும் முற்றங்களும் மற்றும் பலவகை இடங்களும் நிறைந்து இணை யிணையான புறுக்களும் கிளிகளும் பலவாறு ஒலிக்கப் பெற்றுத் தொழில் முற்றுப்பெற்ற மாடகூடங்கள் அமைந்த விவரேஶ்வரர்களின் சிறப்புடைய மாளிகைகளும் அமைந்து அலங்காரமுற்று விளங்குகின்றன. பூங்கொத்துகளும் காய்க்கொத்துகளும் தளிர்களும் நிறைந்து அவற்றின் பாரத்தினால் வணங்கின அழகான கொடிகளையுடைய வ்ருக்ஷங்கள் அடர்ந்த உத்யானங்கள், மனத்தையும் மற்ற இந்த்ரியங்களையும் களிக்கச்செய்கின்ற [1] விவரேஶ்வர ஸ்த்ரீகளின் ஸஞ்சாரத்தினாலும், பலவகையான பறவைக்கூட்டங்கள் கோலாஹலம் செய்யப்பெற்று நிர்மலமான தண்

---

1. பூமியின் கீழ்ப்பாழிகள் போன்றிருக்கையால் அதலாதி லோகங்களை விவரமென்று சொல்லுகிறார். விவரம் பாழி அவற்றின் ப்ரபுக்கள் விவரேஶ்வரர்கள்.

ணீர் நிறைந்த ஜலாதாரங்களில் மீன்களின் துள்ளல்களால் அசைகின்ற தாமரை ஆம்பல் நெய்தல் செங்கழுநீர் கருநெய்தல் செந்தாமரை முதலிய பூங்காடுகளில் பலவாறு விளையாடுகின்ற வண்டினங்களின் பலவகை மதுரஸ்வராதிகளாலும் ஸ்வர்க்கலோகத்தின் சோபையைக் கடக்கின்றன. அவ்வுலகங்களிலுள்ளவர்கள் நீண்ட வாழ்நாளுடையவர்களாகையால் அவர்களுக்குக் காலத்தின் பிரிவுகளான அஹோராத்ராதிகள் கடப்பதனால் சிறிதும் பயம் புலப்படுகிறதில்லை. அங்குப் பெருமையுடைய ஸர்ப்பஸ்ரேஷ்டங்களின் சிரங்களிலுள்ள ரத்னங்கள் இருள்களைப் பறக்கடிக்கின்றன. அவ்வுலகங்களில்வாஸம் செய்பவர்கள் திவ்யமான ஔஷதங்களையும் திவ்யமான ரஸாயனங்களையும் திவ்யமான ஆஹாரங்களையும் உபயோகிக்கிறார்கள்; திவ்யமான ஜலங்களில் ஸ்நானம் செய்கிறார்கள். மற்றும் பலவும் அவர்களுக்குத் திவ்யமாயிருக்கின்றன. ஆகையால் அவர்களுக்கு மனோவ்யாதிகள் சரீரவ்யாதிகள் சதைச் சுருக்கம் மயிர் நரைத்தல் கிழத்தனம் பல்விழுதல் முதலியவைகளும் நிறம்மாறுதல் துர்க்கந்தம் வேர்வை இளைப்பு உத்ஸாஹமில்லாமை முதலிய வயதினால் விளையும் பலவகை அவஸ்தைகளும் உண்டாகிறதில்லை. பூமியின்பிலங்களான அவ்வுலகங்களில் துக்கமின்றி க்ஷேமமாய் வாஸம் செய்கின்றவர்களுக்கு ஸுதர்சனமென்னும் சக்ராயுதமாகிய பகவானுடைய தேஜஸ்ஸைத் தவிர மற்ற எதினின்றும் ம்ருத்யு உண்டாகமாட்டாது. இப்பூமி விவரங்களில் ஸுதர்சனாஸ்த்ரம் ப்ரவேசிக்குமாயின், அஸுர ஸ்த்ரீகளின் கர்ப்பங்கள் அந்தப் பயத்தினால் ஸ்ரவிக்கின்றன; நிறைந்திருக்குமாயின் விழுகின்றன. ஓ மன்னவனே! அதலமென்னும் விவரத்தில் மயபுத்ரனாகிய பலனென்னும்

அஸுரன் வஸிக்கிறான். அவன் தொண்ணூற்றாறு மாயைகளைப் படைத்தான். அவற்றில் சில மாயைகளை இப்பொழுதும் சில மாயாவிகள் தரித்துக்கொண்டிருக்கிறார்கள். அவன் கொட்டாவி விடும்பொழுது அவனுடைய முகத்தினின்று மூன்று பெண்கள் கூட்டங்கள் உண்டாயின. அவர்களுக்கு ஸ்வைரிணிகளென்றும் காமினிகளென்றும் பும்ஶ்சலிகளென்றும் பெயர். அவர்கள் பிலமார்க்கத்தில் நுழைந்த புருஷனை ஹாடகமென்னும் ரஸாயனத்தினால் தம்வசப்படுத்திக்கொண்டு அவனைப் போகஸமர்த்தனாகச் செய்து தமது விலாஸங்களோடு கூடின கண்ணோக்கத்தினாலும், ஸ்நேஹம் வழியப்பெற்ற புன்னகையினாலும், ரஹஸ்யமான பேச்சுக்களாலும், ஆலிங்கனம் முதலிய மற்றும் பலவகையான போகாரம்பங்களாலும் யதேஷ்டமாக மனங்களிக்கச் செய்வார்கள். அவர்கள் கொடுக்கும் ரஸாயனத்தை உட்கொண்ட புருஷன் தன்னைப் பதினாயிரம் யானைப் பலமுடையவனாக நினைத்து மதாந்தன் போன்று நான் ஈஶ்வரனென்றும் நான்ஸித்தனென்றும் தன்னை ஶ்லாகித்துக்கொள்வான். அதற்குக் கீழுள்ள விதலமென்னும் விவரத்தில் மஹானுபாவனாகிய ருத்ரன் ஹாடகேஶ்வரனென்று பேர்பூண்டு ப்ரஹ்மதேவனால் ஸ்ருஷ்டியை வளர்க்கும்படி நியமிக்கப்பட்டுப் பார்வதியுடன் சேர்ந்திருக்கிறான். அந்தப் பார்வதீ பரமேஶ்வரர்களின் வீர்யத்தினால் ஹாடகினியென்னும் ஒரு நதி அவ்விடத்தில் உண்டாயிருக்கிறது. ஹாடகமென்று சொல்லப்படுகிற ஸுவர்ணத்தை உண்டாக்கினாகையால் அவன் ஹாடகேஶ்வரனென்று பெயர்பெற்றான். அந்த ஹாடகினியென்னும் நதியில் அக்னி காற்றினால் வளர்க்கப்பட்டுத் தன் பலத்தினால் ஹாடகினியைப் பருகினான். அவ்

வக்னியால் கக்கப்பட்டதெல்லாம் ஹாடகமென்னும் ஸுவர்ணமாயிற்று. அந்த ஸுவர்ணத்தை விவர வாஸிகளான அஸுர ஸ்ரேஷ்டர்களின் அந்தப்புரத்திலுள்ள ஸ்த்ரீகளும் புருஷர்களும் ஆபரணங்களாகச் செய்து தரிக்கின்றார்கள். அதற்குக் கீழுள்ள ஸுதலமென்னும் விவரத்தில் பெரும்புகழுடையவனும் புண்யஸ்லோகனும் பாகவதர்களில் சிறந்தவனும் விரோசனனுடைய புதல்வனுமாகிய பலி யென்பவன் இப்பொழுதும் இருக்கின்றான். முன்பு ஒரு காலத்தில் அவன் இந்திரனைத் தோற்பித்து மூன்று லோகங்களையும் பறித்துக்கொண்டு போகையில், பகவான் அவ்விந்த்ரனுக்கு ப்ரியம் செய்ய விரும்பி அதிதியிடத்தில் அவதரித்து வடுவாமனனாய்ச் சென்று மூன்று லோகங்களையும் உபாயத்தினால் மீட்டு இந்த்ரனுக்குக் கொடுத்தான். முதலில் அங்ஙனம் ஐஸ்வர்யம் பறிக்கப்பெற்றஅப்பலி மீளவும் பகவானுடைய அனுக்ரஹத்தினாலேயே இந்த்ராதிகளுக்கும் கிடைக்க அரியதும் மிகவும் ஸம்ருத்தியுடையதுமான ஸம்பத்தைப் பெற்று நிர்ப்பயனாகி அந்தப் பகவானைத் தனக்குரிய தர்மத்தினால் ஆராதித்துக் கொண்டிருக்கிறான். பிலஸதானத்தில் அவன் அத்தகைய ஐஸ்வர்யத்தைப் பெற்றமை பரமபுருஷனுக்குச் செய்த பூதானத்தின் பலனென்று சங்கிக்கலாகாது. ஏனெனில், ஷாட்குண்ய பூர்ணனும், ஸமஸ்த பூத ஸமூஹங்களிலுமுள்ள ஜீவாத்மாக்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவனும், மிகவும் பரிசுத்தனும், தானத்திற்குரிய ஸத்பாத்ரனுமாகிய வாஸுதேவன் ஸமீபித்து வருகையில் அவனிடத்தில் மிகுந்த ஸ்ரத்தையுடன் நிலைநின்ற மனமுடைய பலி சக்ரவர்த்தி அம்மஹானுபாவனுக்குச் செய்த பூமிதானத்திற்கு ஸாக்ஷாத் மோக்ஷமன்றோ பலனாகவேண்டும். இருமல் தும்மல் விழுதல்

தடுக்குதல் முதலிய தசைகளில் அந்தப்பகவானுடைய நாமத்தை ஒருகால் மெய்ம்மறந்து சொல்லுவானாயினும், அப்புருஷன் அனாயாஸமாகக் கர்மபந்தத்தைத் துறப்பான். மோக்ஷத்தில் விருப்பமுடைய பெரியோர்கள் கர்மயோக ஜ்ஞானயோகாதிகளால் அக்கர்ம பந்தத்தை விடுவிக்கும் உபாயத்தை ஆராய்ந்தறிகின்றார்கள். அவனுடைய நாமவைபவம் அப்படியிருக்க, ஸர்வாந்தராத்மாவும், பாகவதர்களுக்குத் தன்னைக் கொடுப்பவனும், ப்ரியனுமாகிய பகவானிடத்தில் செய்த பூதானத்திற்கு விவரைஶ்வர்யம் பலனென்று சொல்லலாகாது. ஈஶ்வரன் அவனுக்குத் தன் நினைவை மறைப்பதும் தன் மாயையினால் ஏற்பட்டதுமாகிய போகரூபமான ஐஶ்வர்யத்தைக் கொடுத்தானன்றி, அப்பொழுதே அநுக்ரஹிக்கவில்லை. இது நிச்சயம். மோக்ஷம் கொடுக்கையன்றோ அவன் செய்யும் அநுக்ரஹமாம். பலி பகவானிடத்தில் மிகுந்த பக்தியுடையவனாயிருந்தான். அவன் இந்த்ரனை ஜயித்து த்ரிலோகராஜ்யத்தைப் பறித்தமைக்காகப் பக்தனாகிய அவனைத் தண்டிக்க முடியாமையாலும், வேறு உபாயம் ஏற்படாமையாலும், பகவான் அவனிடம் சென்று யாசித்து மூன்று லோகங்களையும் பிடுங்கிக்கொண்டு அவன் சரீரத்தை மாத்ரமே மிகுத்தி விட்டுத் தான் வேண்டினபடி மூன்றடி நிலங்கள் கொடுக்கிறேனென்று ஒப்புக்கொண்டும் மூன்றாவதடிக்கு நிலமில்லாமையால் செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றாமைக்காக அவனை வருணபாசங்களால் கட்டிப் பர்வத குஹையில் எறிந்தான். அங்ஙனம் எறியப்பட்ட பலி பகவானைப் பார்த்து “ஆ! என்ன வருத்தம்? மஹானுபாவனாகிய இவ்விந்த்ரன் தெரிந்தவனாயினும் புருஷார்த்தங்களின் தாரதம்யத்தை அறிந்தவனல்லன். இது நிச்சயம். இவ

னுல் ஏகாந்தமந்த்ராலோசனைகளில் ஸஹாயமாக வரிக்கப்பட்ட ப்ருஹஸ்பதியும் புருஷார்த்தங்களின் தாரதம்யத்தை நன்றாக அறிந்தவனல்லன். இதுவும் நிச்சயம். பரம புருஷார்த்த ஸ்வரூபனுகிய பகவானை உபேக்ஷித்துத் தனக்குத் தம்பியாய் அவதரித்த வாமனரூபனுன பகவானைக் கொண்டு இந்த்ரன் என்னிடத்தில் மூன்று லோகங்களை யாசித்தான். அந்தப் பகவானுடைய தாஸ்யத்தை வேண்டிப் பெறவில்லை. காலம் மிகவும் கம்பீரமான வேகமுடையது. அது போய்க்கொண்டே யிருக்குமாயினும் போவது தெரியாது. மூன்று லோகங்களும் காலத்திற்கு உட்பட்டவை. அவை மன்வந்தரம் வரையிலுமே இருப்பவை. அதற்கு மேல் அழியப்போகின்றன. அத்தகைய லோகங்களுக்கு ப்ரபுவாயிருக்கையாகிற ஐஸ்வர்யம் எவ்வளவு? அது ஒரு பொருளாகமாட்டாது. அற்பமான ஐஸ்வர்யத்தை எவன் யாசிப்பான்? அதை அபேக்ஷித்த இந்த்ரன் புருஷார்த்தங்களை நன்குணர்ந்தவனல்லன். எங்கள் பாட்டனுகிய ப்ரஹ்லாதன் பகவானுடைய தாஸானுதாஸத்வத்தையே வேண்டினுன். நரஸிம்ஹ ஸ்வரூபியாகிய பகவான் தன் தந்தையாகிய ஹிரண்ய கசிபுவைக் கொன்று அவனுடைய ராஜ்யத்தைத் தனக்குக் கொடுக்கினும், அது அற்பமென்று நினைத்து அதை அபேக்ஷிக்கவில்லை. எவ்விதத்திலும் பயத்திற்கிடமல்லாத மோக்ஷத்தையே அபேக்ஷித்தான். கர்மபந்தம் தீராதவனும் பகவானுடைய அனுக்ரஹம் க்ஷீணிக்கப் பெற்றவனுமாகிய என்னைப்போன்ற புருஷன் மஹானுபாவனுகிய அந்த ப்ரஹ்லாதனுடைய வழியை எங்ஙனம் தொடர விரும்புவான்?'' என்று மொழிந்தான். அவனுடைய சரித்ரத்தை மேல் விஸ்தாரமாகச் சொல்லப் போகிறோம். ஸமஸ்த லோகங்களுக்கும் குருவும் ஸர்வ

சேஷியுமாகிய நாராயணன் தன் பக்தர்களிடத்தில் மிக்க மன இரக்க முடையவனுகையால் அந்தப் பலி சக்ரவர்த்தியின் வீட்டு வாசலில் கதாபாணியாயிருக்கிறுன். முன்பு ஒரு காலத்தில ராவணன் திக்விஜயம் செய்துகொண்டு பலியின் வாசலில் நுழைய, அப்பலியின் வாசற்காப்பவனுகிய பகவான் கால்கட்டை விரலால் அவனை லக்ஷயோஜனை தூரத்திற்கு அப்புறத்தில் விழத்தள்ளினுன். அதற்குக் கீழுள்ள தலாதல மென்னும் விவரத்தில் மயனென்னும் தானவஸ்ரேஷ்டன் வாஸம் செய்கிறுன். அவன் முன்பு மூன்று பட்டணங்களுக்கு ப்ரபுவாயிருந்தான். அப்பட்டணங்களுடன் ஆகாயத்தில் பறந்து லோகங்களுக்குப் பயத்தை விளைத்துக்கொண்டிருந்தான். ருத்ரன் உலகங்களின் க்ஷேமத்திற்காக அம்மூன்று பட்டணங்களையும் கொளுத்தித் தலாதலமென்னும் விவரத்தை அவனுக்கு வாஸஸ்தானமாக அனுக்ரஹித்துக் கொடுத்தான். அவன் மாயைகளின் நுட்பங்களை அறிந்து பிறர்க்கும் உபதேசிக்குந் திறமையுடையவனுகையால் மாயாவிகளுக்கெல்லாம் ஆசார்யனுயிருப்பவன். ஸுதர்சனனிடத்தில் பக்தியுடைய மஹாதேவனுல் பாதுகாக்கப்பெற்று ஸுதர்சனபயமின்றித் தலாதலத்திலுள்ள புருஷர்களால் வெகுமதிக்கப் பெற்றிருக்கிறுன். அதற்குக்கீழ் மஹாதலமென்னும் விவரத்தில் பலசிரங்களையுடையவைகளும் கத்ருவின் பிள்ளைகளுமான ஸர்ப்பங்களின் கூட்டங்கள் க்ரோதவசமென்று பேர் பெற்று வாஸம் செய்கின்றன. குஹகன் தக்ஷகன் காளியன் ஸுஷேணன் முதலிய ஸர்ப்பங்கள் அந்தக் கூட்டத்தில் முக்கியமானவை. பெரிய உடலுடையவை. மஹாபுருஷனுடைய வாஹனமும் பக்ஷிராஜஸ்ரேஷ்டனுமாகிய கருத்மானிடத்தில் எப்பொழுதும் பயப்படுந்தன்மையுடை

யவை. அவை பெண்டிர் பிள்ளை நண்பர் முதலிய குடும்பத்தில் மனம் செல்லப்பெற்று மதிமயங்கி அவ்விடத்தில்விளையாடிக்கொண்டிருக்கின்றன. அதற்குக் கீழ் ரஸாதலமென்னும் விவரத்தில் தைதேயர்களும் தானவர்களும் பணிகளென்று ப்ரஸித்தர்களான தேவசத்ருக்களும் வாஸம் செய்கிறார்கள். அவர்களில் பணிகள் நிவாதகவசரென்றும் காலகேயரென்றும் ஹிரண்யபுரநிவாஸிகளென்றும் மூன்று வகைப்பட்டவர்கள். அவர்கள் பிறக்கும்பொழுதே மஹாபலசாலிகள். ஸாஹஸமான கார்யங்களைச் செய்வதில் ஈடெதிரில்லாதவர்கள். அவர்களுடைய ப்ராபவம் ஸமஸ்த லோகங்களிலும் தடைபடாமல் செல்லும். அவர்கள் தேஜோமயமான பகவானுடைய ஸுதர்சனாஸ்த்ரத்தினாலும் தடைபடாத பல கர்வமுடையவர்கள். ஸர்ப்பங்கள்போல அந்த விவரத்தில் வஸிக்கிறார்கள். அவர்கள் இந்த்ரனுடைய தூதியாகிய பெண்நாய் மொழிந்த மந்த்ரவர்ண ரூபமான வாக்யங்களைக் கேட்டு இந்த்ரனிடத்தில் பயப்படுகின்றார்கள். அதற்குக் கீழ்ப் பாதாளமென்னும் விவரத்தில் ஸர்ப்பலோகங்களுக்கு ப்ரபுக்களும் வாஸுகியைத் தலைவனாகவுடையவைகளுமான சங்கன் குளிகன் மஹாசங்கன் ச்வேதன் தனஞ்சயன் த்ருதராஷ்ட்ரன் சங்கசூடன் கம்பளன் அச்வதரன் தேவதத்தன் முதலிய மஹா ஸர்ப்பங்கள் வஸிக்கின்றன. அவை பெருங்கோபமுடையவை. அவற்றில் சில ஐந்துதலையுடையவை; சில ஆறு தலையுடையவை; சில ஏழுதலையுடையவை; சில பத்துத் தலையுடையவை; சில நூறுதலையுடையவை; சில ஆயிரந் தலையுடையவை. அவற்றின் படங்களிலுள்ள பேரொளியுடைய மஹாரத்னங்கள் பாதாள விவரத்திலுள்ள அந்தகாரத்தை யெல்லாம் தமது தேஜஸ்ஸினால் த்வம்ஸம் செய்கின்றன. இருபத்து நான்காவது அத்யாயம் முற்றிற்று.

பாதாளத்தினடியில் பூமியைத் தரித்துக் கொண்டிருக்கிற ஆதிசேஷனுடைய நிலைமையைக் கூறுதல்

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—அந்தப் பாதாளவிவரத்தின் அடிப்பாகத்தில் முப்பதினாயிர யோஜனைகளுக்கு அப்புறத்தில் தாமஸாஹங்காரத்தை அதிஷ்டானம் செய்யும் பகவானுடைய அம்சமாகிய அநந்தன் இருக்கிறான். இந்த்ரியங்களுக்குப் புலப்படாத வஸ்துக்களைப் பற்றின அறிவையும் ஜீவாத்மாக்களுக்கு விளைப்பதாலும், ஆத்மாவினிடத்தில் நானென்னும் சித்த வ்ருத்தியை உண்டாக்குவதாலும் அவனை ஸங்கர்ஷணனென்று ஸாத்வதமென்கிற பஞ்சராத்ரசாஸ்த்ரத்தை அறிந்த பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அவன் அளவிடமுடியாத பெரிய சரீரமுடையவன். ஷாட்குண்ய பூர்ணன். ஆயிரந்தலைகளுடையவன். பூமண்டலமெல்லாம் அவனுடைய ஒரு சிரஸ்ஸில் தரிக்கப்பட்டுக் கடுகுபோல் புலப்படுகின்றன. ஆகையால் அவனுக்கு அனந்தனென்னும் பேர் யதார்த்தமானது. அந்த ஸங்கர்ஷணபகவான் இரண்டு பரார்த்தங்களும் முடிந்து ப்ரளயகாலம் வருகையில் உலகங்களை யெல்லாம் ஸம்ஹரிக்கவிருப்பிக் கோபத்தினால் புருவங்களைக் கோணலாக நெரித்தான். அதினிடையினின்று முக்கண்ணர்களும் த்ரிசூலத்தை மேல் தூக்கிக் கொண்டிருப்பவர்களுமாகிய ஏகாதசருத்ரர்களின் கூட்டம் உண்டாயின. அது ஸங்கர்ஷணமென்னும்பற்றுடையது. தலைமையுள்ள ஸர்ப்பங்கள் ஸாத்வதஸ்ரேஷ்டர்களுடன் கலந்து அந்த ஸங்கர்ஷண பகவானுடைய தாமரை மலர்போன்ற இரண்டு பாதங்களிலுள்ள சிவந்த நகங்களாகிற ரத்ன ஸமூஹங்களின் மண்டலங்களில் மாறுதபக்தியுடன் வணங்கி ஜ்வலிக்கின்ற அழகிய குண்டலங்களால்

அலங்காரஞ் செய்யப்பெற்ற தமது கபோலஸ்தலங்கள் அவற்றில் ப்ரதிபலிக்கையில் மனக்களிப்புடன் பார்த்துக் கொண்டிருக்கின்றன. நாகராஜ கன்னிகைகள் புருஷார்த்தங்களை விரும்பித் தோள்வளைகளால் திகழ்பவைகளும், நிர்மலங்களும், நீண்டு மென்மைக்கிடமாயிருப்பவைகளும், ஸுந்தரங்களுமான ஸங்கர்ஷண பகவானுடைய புஜங்களாகிற வெள்ளிக்கம்பங்களில் குங்குமங் கலந்த சந்தனக்குழம்பைப் பூசி அந்தப் புஜங்களைத் தொட்ட மாத்ரத்தினுல் மனம் கலங்கி மன்மதவிகாரமுற்று அதனுல் அழகிய புன்னகையுடையவர்களாகி, தன் பக்தர்களிடத்தில் அநுராகத்தினுலும் தன்னைத் தான் அனுபவிக்கையாலுண்டான ஸந்தோஷத்தினுலும் மலர்ந்து மதத்தினுல் சுழல்கின்றவைகளும், சிறிது சிவந்தவைகளும், கருணைகடாக்ஷம் நிறைந்தவைகளுமான கண்கள் அமைந்த செந்தாமரை மலர்போன்ற அவருடைய முகத்தை வெட்கத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிருர்கள். ஸங்கர்ஷணனென்று பேர் பெற்றவனும் அளவிறந்த கல்யாண குணங்களுடையவனும் ஆதிதேவனுமாகிய அவ்வனந்தன் பொறுக்கமுடியாத கோபவேகத்தை அடக்கிக்கொண்டு லோகங்களின் க்ஷேமத்திற்காக வீற்றிருக்கிருன். தேவர் அஸுரர் உரகர் ஸித்தர் கந்தர்வர் வித்யாதரர் முனிவர் ஆகிய இவர்கள் கூட்டங் கூட்டமாயிருந்து அம்மஹானுபாவனை த்யானிக்கின்ருர்கள். அவன் ஸர்வகாலமும் தன்னைத் தான் அனுபவிக்கையாலுண்டான ஸந்தோஷத்தினுல் தழதழத்துச் சுழலமிடுகின்றவைபோன்ற கண்களுடையவன். மிகவும் அழகியதும் உட்கருத்தை வெளியிடுவதுமாகிய புன்னகையினுலும் அம்ருதம்போன்ற வசனத்தினுலும் தன் பரிவாரங்களையும் தேவர் கூட்டத்தலைவர்களையும் களிப்பித்துக்

கொண்டு மாருத செவ்வியையுடைய புதிய துழாய் வாஸனையாலும் அதிலுள்ள மதுவாகிற மத்யத்தினாலும் மதித்து மேல்விழுகின்ற வண்டினங்களின் இனிய பாடல்களால் அழகான வைஜயந்தி யென்னும் பேருடைய தன் வனமாலையைத் தரித்தவனும் கறுத்த வஸ்த்ரங்களை உடுத்திருப்பவனும் ஒற்றைக்குண்டலம் அணிந்தவனும் மேன்மையும் அழகுமான தன் புஜத்தைக் கலப்பையின் பின் புறத்தில் வைத்துக் கொண்டிருப்பவனும் கம்பீரமான விலாஸங்களுடையவனுமாகிய அந்த ஸங்கர்ஷணபகவான் தேவேந்த்ரனுடைய யானையாகிய ஐராவதம் ஸ்வர்ணமயமான ஜேணத்தைத் தரிப்பதுபோல, ஸ்வர்ணமயமான யோகபட்டையைத் தரிக்கிருன். மோக்ஷத்தில் விருப்பமுடையவர்கள் ஸங்கர்ஷண பகவானுடைய ஸ்வரூபத்தைக் குருமுகமாகக் கேட்டு த்யானிப்பார்களானல், அப்பகவான் அவருடைய ஹ்ருதயத்தில் ஸந்நிதானம் செய்து அநாதிகாலமாக ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் ஸம்பந்தத்தினுல் உண்டான கர்ம வாஸனைகளால் அறுக்க முடியாமல் வேரூன்றி யிருக்கிற தேஹாத்மப்ரமம் முதலிய அஞ்ஞானமாகிற முடிச்சை விரைவில் அறுத்து விடுகிருன். அந்த ஸங்கர்ஷண பகவானுடைய மஹிமையை ப்ரஹ்ம புத்ராகிய நாரதமுனிவர் தும்புருவும் தானுமாய் ப்ரஹ்மாவின் ஸபையில் வர்ணிக்கிருர். ஜகத்தின் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணங்களான ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் அவனுடைய ஸங்கல்பத்தினுல் அந்த ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களை நிறைவேற்ற வல்லவையாயின. தேவமனுஷ்யாதி நாம ரூபங்களின்றித் தன்னிடத்தில் மறைந்திருப்பதும் நித்யமுமாகிய ப்ரக்ருதி புருஷர்களாகிற தன் சரீரத்தைத் தன் ஸங்கல்பத்தினுல்

தேவமனுஷ்யாதி நாமரூபங்களால் பலவாறு பிரிவுற்ற தாகச் செய்கிறான். அப்படிப்பட்ட மஹானுபாவனுடைய லோகவிலக்ஷணமான ஸ்வரூபத்தை என்னைப் போன்ற வன் எங்ஙனம் அறிவான்? சேதனு சேதனரூபமான ஜகத்தெல்லாம் அவனிடத்தில் விளங்குகின்றது. அந்தப் பகவான் நம்மிடத்தில் க்ருபையால் ரஜஸ் தமஸ்ஸுக் களால் தீண்டப்படாத சுத்த ஸத்வமயமான திவ்ய மங்கள விக்ரஹத்தைத் தரித்தான். ஸிம்ஹம்போலக் கம்பீரமான வீர்யமுடையவனும், உலகத்தில் மேன்மை யையுடைய ப்ரஹ்மாதி தேவதைகளுக்கு ப்ரபுவும், ஜகத் ஸ்ருஷ்டி முதலிய மஹாஸாமர்த்யங்களுடையவனுமாகிய அந்த ஸர்வேஸ்வரன் தன்பக்தர்களான நமது மனத் தைத் தன் வசமாக்கும் பொருட்டு, நாகராஜ கன்னிகை முதலியவர்களுக்கும் எளிதில் ஆராதிக்கத் தகுந்தவனு யிருக்கை, ஸாத்வத மாஸ்த்ரத்தை இயற்றுகை, பூமண்ட லத்தைத் தரிக்கை முதலிய திருவிளையாடல்களை ஏற்றுக் கொண்டான். அவை அவனுக்குக் கர்மத்தினால் விளைந் தவையன்று. அவனுடைய ஸங்கல்பத்தினாலேயே ஏற் பட்டவைகள். ஆகையால், அவன் நம்மை அனுக்ரஹிப்ப தற்காகவே அவ்வுருவத்தைத் தரித்தா னென்பதில் ஸந் தேஹம் உண்டோ? ரோகாதிகளால் பீடிக்கப்பட்டவ னும் மஹாபாதகனுயிருப்பவனும்கூட அவ்வநந்தனுடைய நாமத்தைச் சொல்லுவானுயின், தெய்வாதீனமாயாவது பரிஹாஸத்தினாலாவது அவனுடைய நாமத்தைக் கேட் பானுயின், அவன் ரோகங்களாலும் பாதகங்களாலும் விடுபட்டுத் தன்னைச் சேர்ந்த மற்றவர்களுடைய பாபத் தையும் போக்குவான். ஆகையால், மோக்ஷத்தில் விருப்ப முடையவன் அந்த ஆதிசேஷனைத் தவிர மற்ற எவனையும் ஆஸ்ரயிக்கமாட்டான்? பர்வதங்களும் நதிகளும் ஸமுத்

ரங்களும் பலவகை ஜந்துக்களும் நிறைந்த பூமண்டலம் முழுவதும் ஆயிரந்தலைகளையுடைய அவ்வனந்தனுடைய தலையில் அணுபோல் இருக்கின்றன. அவன் அளவிட முடியாத ஸ்வரூபங்களுடையவன். ஆகையால், அவனுடைய ப்ரபாவத்தை ஒருவராலும் அறிய முடியாது. அவ்வனந்தனுடைய வீர்யங்களை ஆயிரநாக்குடையவனாயினும் எவன்தான் இவ்வளவென்று கணக்கிடவல்லவனாவான்? மஹாப்ரபாவங்களுடையவனும், அனந்தனென்ற யதார்த்தமான பெயர்பூண்டவனும், எல்லையில்லாத வீர்யம் அத்தகைய பலம் பலவகைக் குணங்கள் அவற்றின் ப்ரபாவங்கள் இவையுடையவனுமாகிய அந்த ஸங்கர்ஷண பகவான் ஸ்வதந்த்ரன்; தானொருவனே ஜகத்தின் ரக்ஷணத்திற்காகப் பூமண்டலத்தை அவலீலையாகத் தரிக்கிறான்.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—காமங்களை விரும்புகிற புருஷர்களால் அடையத்தகுந்தவைகளும் பலபோகத்திற்காக ஏற்பட்டவைகளுமான உலகங்கள் இவ்வளவே. அவரவர் கர்மங்களை அனுஸரித்து இந்த ப்ரஹ்மாண்டத்தில் ஈச்வரனால் ஸ்ருஷ்டிக்கப் பட்டிருக்கின்றன. அவற்றையெல்லாம் நான் பெரியோர்களிடத்தில் கேட்டபடி உனக்கு மொழிந்தேன். மன்னவனே! ஸாம்ஸாரிக புருஷனுக்குக் காமங்களோடு கூடின ப்ரவ்ருத்தி ரூபமான தர்மத்திற்குப் பலனாக ஏற்படும் கதிகள் பலவாறாயிருக்கும். ஸுகதுக்கங்களின் தாரதம்யத்தினால் ஒன்றைவிட ஒன்று விலக்ஷணமாயிருக்கும். அவையெல்லாம் இவ்வளவே, நீ கேட்டபடி அவற்றை உனக்குக் கூறினேன். இன்னம் என்ன சொல்லவேண்டுமோ அதைக் கேட்பாயாக. இருபத்தைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

அதற்குக் கீழுள்ள நரகத்தின் நிலைமையைக் கூறுதல்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்.—மஹர்ஷீ! இவ்வுலகங்கள். ஸுக துக்கங்களின் தாரதம்யத்தினால் ஒன்றுக்கொன்று விலக்ஷணமாயிருக்குமென்று மொழிந்தீர். அது எப்படிப் பொருந்தும்? ஜீவாத்மாக்கள் ஒருவாறாகச்செய்யும் புண்யகர்மங்களால் பூலோகம் முதலிய லோகங்களை அடைகையில், சிலர்க்கு ஸுகமேயென்றும், சிலர்க்கும் துக்கமேயென்றும், சிலர்க்கு இரண்டும் கலந்திருக்குமென்றும சொன்னதற்குக் காரணமென்ன? தெரியவில்லை. அதை மொழிவீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அனைவரும் பூராதி லோகங்களைப் பெறுதற்காகச் செய்யுந்தர்மங்கள் ஒரே வகையாயிருந்தாலும், அவற்றைச் செய்யும் ஜீவாத்மாக்கள் ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸென்கிற மூன்று வகைக் குணங்களுடையவர்களாகையால், அவர்களுடைய ஶ்ரத்தைகளும் அக்குணங்களால் மூன்றுவகைப் பட்டிருக்கும் ஆகையால் கர்மங்களின் பலன்களாகிய எல்லா லோகங்களும் எல்லோர்க்கும் தாரதம்ய முடையவைகளாகவே உண்டாகின்றன அங்ஙனமே சாஸ்த்ரங்களில் இதைச் செய்யலாகாதென்று நிஷேதிக்கப்பட்ட கார்யங்களைச் செய்கையாகிற அதர்மமும் அதைச் செய்பவனும் அவனுடைய ஶ்ரத்தையும் பலவாறாயிருக்குமாகையால் அவ்வதர்மத்தின் பலனான துக்கமும் தாரதம்யத்தையுடையதாகவேயிருக்கும். அநாதியான அஜ்ஞானத்தினால் பலன்களை விரும்பிச் செய்யும் பாபகர்மங்கள் பலவாகையால் அவற்றின் பலன்களான கதிகளும் எல்லையற்றிருக்கும். அவற்றில் முக்யமானவற்றைச் சொல்லுகிறோம் கேட்பாயாக.

மன்னவன் சொல்லுகிறுன் :—மஹானுபாவரே! நரகமென்பவை பூமியிலடங்கின சில தேசவிசேஷங்களா? அல்லது மூன்று லோகங்களுக்கும் வெளிப்பட்டவைகளா? அல்லது மத்யத்தில் இருக்கின்றனவைகளா?

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:—நரகமென்னும் தேசங்கள் மூன்று லோகங்களடங்கின இந்த ப்ரஹ்மாண்டத்திற்குள் தென்திக்கில் பூமியின் கீழ்ப்பாகத்தில் அண்டஜலத்திற்குமேல் இருக்கின்றன. தென்திசையில் அக்னிஷ்வாத்தர் முதலிய பித்ருகணங்கள் தமது கோத்ரங்களுக்கு உண்மையான ஆசீர்வாதங்களைச் செய்துகொண்டு சிறந்த ஸமாதி யோகத்துடன் இருக்கிறுர்கள். அந்தத் தென்திக்கில் பித்ருக்களுக்கு அதிபதியாகிய யமன் உலகத்தில் மரணம் அடைந்தவர்களைத் தூதர்கள் தன் தேசத்திற்குக் கொண்டு வருகையில்,பகவானுல் ஆஜ்ஞை செய்யப்பட்டு அதை உல்லங்கனம் செய்யமுடியாமல் தன் தூதர்களுடன்கூடி அவர்கள் செய்த பாபகர்மங்களுக்குத் தகுந்தபடி தண்டனை விதித்துக் கொண்டிருக்கிறுன். மன்னவனே! சிலர் நரகங்கள் இருபத்தொன்றென்று சொல்லுகிறுர்கள். அவற்றின் பேர்களையும் ஸ்வரூபத்தையும் அடையாளங்களையும் க்ரமமாகச் சொல்லுகிறேம். தாமிஸ்ரம், அந்த தாமிஸ்ரம், ரௌரவம், மஹாரௌரவம், கும்பீபாகம், காலஸூத்ரம், அஸிபத்ரவனம், ஸூகரமுகம், அந்தகூபம், க்ரிமிபோஜனம், ஸந்தம்சம், தப்தோர்மி, வஜ்ரகண்டகசால்மலி, வைதரணி, பூயோதம், ப்ராணரோதம், விசஸனம், லாலாபக்ஷம், ஸாரமேயாதனம், அவீசி, அய:ப்பானம் என்பவைகளாம். மற்றும், க்ஷாரகர்த்தமம், ரக்ஷோகணபோஜனம், சூலப்ரோதம், தந்தசூகம், அவடநிரோதனம், பர்யாவர்த்தனம், ஸூசீமுகம் என்னும் இவ்வேழும் சேர்ந்து இருபத்தேழு

நரகங்கள். இவை பலவகையான துக்கங்களை அனுபவிக்கும் பூமிகள். எவன் இவ்வுலகத்தில் பிறனுடைய பணம் பிள்ளை பெண்டிர் இவைகளில் ஏதேனுமொன்றைப் பறிக்கிறானோ, அவன் மிகவும் பயங்கரர்களான யமதூதர்களால் யமபாசத்தினால் கட்டுண்டு பலாத்காரமாகத் தாமிஸ்ரமென்னும் நரகத்தில் தள்ளப்படுகிறான். அதில் தள்ளுண்ட புருஷன் பசியெடுத்து ஆஹாரம் நேராமை, தண்ணீர் தாஹம் எடுத்துத் தண்ணீர் நேராமை, தடியடி விரட்டுதல் முதலிய பலயாதனைகளால் பீடிக்கப்பட்டு மிகவும் துக்கித்து அப்பொழுதே இருள்மூடிய அவ்விடத்தில் மூர்ச்சை அடைவான். பிறனை வஞ்சித்து அவனுடையதாரம் முதலியவற்றை அனுபவிப்பவன் அந்ததாமிஸ்ர நரகத்தில் யமபடர்களால் தள்ளுண்பான். அதில் தள்ளப்பட்ட புருஷன் க்ரூரமான யாதனைகளால் பீடிக்கப்பட்டு அவ் வேதனையைப் பொறுக்கமுடியாமல் நினைவு தப்பிக் கண் தெரியாமல் வேரறுந்த வ்ருக்ஷம்போல விழுவான். ஆகையால் அந்நரகத்தை அந்ததாமிஸ்ரமென்று சொல்லுகிறார்கள். உலகத்தில் சரீரத்தை அஹம்புத்திக்கு விஷயமான ஆத்மாவென்றும், பிள்ளை பெண்டிர் முதலியவர்களை என்னுடையதென்றும் நினைத்து ப்ராணிகளுக்கு த்ரோஹம் செய்தே தன் குடும்பத்தை மாத்ரம் தினந்தோறும் போஷிக்கிறவன் தன் குடும்பத்தை இங்கேயே துறந்து தானொருவன் மாத்ரமே அந்தப் பாபகர்மத்தினால் ரௌரவமென்னும் நரகத்தில் விழுகிறான். அவன் இவ்வுலகத்தில் எந்தெந்த ஜந்துக்களை எங்ஙனம் ஹிம்ஸித்தானோ, அவையெல்லாம் ருருக்களென்னும் ஜந்துக்களாய் வந்து யமயாதனைகளை அனுபவிக்கின்ற அவனை அங்ஙனமே ஹிம்ஸிக்கின்றன. ருருக்களாவன:—ஸர்ப்பங்களைக் காட்டிலும் மிகவும் க்ரூரமான ஜந்துக்கள். ஆகையால்

அந்நரகத்தை ரௌரவமென்கிறார்கள். மஹா ரௌரவத்திலும் இப்படியே. அதில் விழுந்த புருஷனுடைய மாம்ஸத்தை அந்த ருருக்கள் தாமும் பிடுங்கித்தின்று அவனையும் தன்மாம்ஸத்தைத் தானே தின்னும்படி செய்கின்றன. இவ்வுலகத்தில் தன் தேஹத்தை மாத்ரம் போஷிக்கிறவனும் மனஇரக்கமின்றிக் கொடுந்தன்மையனாய்ப் பசுக்கள் பக்ஷிகள் முதலிய ப்ராணிகளைப் பக்வம்செய்து புசிக்கிறவனும் புருஷர்களைப்பிடுங்கிப் பக்ஷிக்குந்தன்மையுள்ள ராக்ஷஸர்களால் நிந்திக்கப்பட்டுப் பர லோகத்தில் கும்பீபாகநரகத்தில் காய்ச்சின எண்ணெயில் யமபடர்களால் தள்ளுண்டு பசனம் செய்யப்படுவான். கொதித்துக்கொண்டிருக்கிற எண்ணெய்க் கொப்பறையில் பாகம் செய்கின்றார்களாகையால் அந்நரகம் கும்பீபாகமென்று பேர்பெற்றது. இவ்வுலகத்தில் எவன் மாதாவையாவது பிதாவையாவது ப்ராஹ்மணனையாவது வதிக்கிறானோ, அவன் காலஸூத்ரமென்னும் நரகத்தில் பதினாயிரம் யோஜனை சுற்றளவுடையதும் தாம்ரத்தினால் செய்யப்பட்டதும் களம்போல் மேடுபள்ளமில்லாமல் ஸமமாயிருப்பதும் மேலே ஸூர்யனாலும் கீழே அக்னியாலும் தபிக்கப்படுவதுமாகிய ஓரிடத்தில் தள்ளுண்டு பசிதாஹங்களால் சரீரம் உள்ளும் புறமும் தஹிக்கப்பட்டு உட்காருவதும் படுத்துக் கொள்வதும் நிற்பதும் ஓடுவதும் ஐயோ என்னை விடுவீர்களாகவென்று வேண்டுவதுமாகிப் பசுவின் சரீரத்தில் எத்தனை ரோமங்கள் உண்டோ அத்தனையாயிரம் வர்ஷங்கள் வரையில் அந்நரகத்தில் இருப்பான். துக்கானுபவகாலம் பலவாயிருக்கையால் அந்த நரகத்திற்குக் காலஸூத்ரமென்னும் பேர்விளைந்தது. இவ்வுலகத்தில் எவன் ஆபத்தில்லாத காலத்தில் வைதிகமான வர்ணாச்ரம ஆசாரத்தினின்று நழுவிப் போகிறானோ,

அல்லது வேதங்களிலும் ஸ்ம்ருதிகளிலும் சொல்லப்படாததும் கேவலம் தன் புத்தியினால் கற்பிக்கப்பட்டதும் குத்ஸிதமார்க்கமும் ஆபாஸ தர்மமுமாகிய பாஷண்ட தர்மத்தைக் கைப்பற்றுகின்றனே, அவனை யமபடர்கள் அஸிபத்ரவனமென்னும் நரகத்தில் தள்ளி அதில் நடந்து வரும்படி அடிப்பார்கள். அவன் அவ்வேதனையைப் பொறுக்க முடியாமல் ஓடுவான். இருபுறத்திலும் கூருடைய கத்திகள்போன்ற அப்பனங்காட்டிலுள்ள பனையோலைகளால் அங்கங்களெல்லாம் அறுப்புண்டு 'ஐயோ ஐயோ பாழானேன்' என்று மொழிந்துகொண்டு பெருவேதனையால் அடிக்கடி மூர்ச்சித்து விழுவான். இங்ஙனமே தனது வர்ணாஸ்ரம தர்மத்தைத் துறந்தவன் பாஷண்ட தர்மத்தில் நுழைந்தவன் அனுபவிக்குந் துக்கத்தையே அனுபவிப்பான். இந்நரகத்தில் கத்திபோன்ற இலைகளையுடைய பனங்காடுகள் இருக்கின்றமையால் இதற்கு அஸிபத்ரவனமென்னும் பேர் யதார்த்தமாயிருக்கும். இவ்வுலகத்தில் ராஜனாவது ராஜபுருஷனாவது தண்டிக்கத்தகாதவனைத் தண்டிப்பானாயின், அல்லது ப்ராஹ்மணனுக்குச் சரீரதண்டனை விதிப்பானாயின், பாபிஷ்டனாகிய அவன் பரலோகத்தில் ஸூகரமுகமென்னும் நரகத்தில் விழுவான். பன்றியின் முகம்போன்ற முகமுடையவைகளும் பலிஷ்டங்களுமான ஜந்துக்கள் கரும்புத்தண்டை யானை முறிப்பதுபோல், அவனுடைய அவயவங்களையெல்லாம் பீடிக்கும். அவன் பெருங்குரல் பாய்ச்சிப் புலம்பி, முன்பு இவ்வுலகத்தில் தோஷமில்லாதவர்கள் அவனால் பீடிக்கப்பட்டு வருந்தி எங்ஙனம் மூர்ச்சித்தார்களோ அங்ஙனமே மோஹத்தை அடைவான். இவ்வுலகத்தில் பரமபுருஷனால் வர்ணாஸ்ரமதர்மங்களுக்குரியபடி கற்பிக்கப்பட்ட ஜீவனமுடையவனும் பிறனுடைய துக்கத்தை நன்

குணர்ந்தவனுமாகிய புருஷன் மனுஷ்யனுடைய ரக்தத்தைப் பானம் பண்ணுகை முதலியவற்றையே ஜீவனமாகப் பெற்றவைகளும் பிறனுடைய துக்கத்தை அறியாதவைகளுமான மூட்டுப் பூச்சி கொசு முதலிய ப்ராணிகளை ஹிம்ஸிப்பானாயின், அவன் அங்ஙனம் ப்ராணிகளுக்கு த்ரோஹம்செய்த பாபத்தினால் அந்தகூபமென்னும் நரகத்தில் விழுவான். ஐயோ! இவன் தான் முன்பு ஹிம்ஸித்த பசு பக்ஷி ஸர்ப்பம் கொசு பேன் மூட்டுப் பூச்சி ஈ முதலிய ஜந்துக்களால் நாற்புறத்திலும் ஹிம்ஸிக்கப்பட்டு நித்ரையிலுண்டாகும் ஸுகம் சிறிதுமின்றி ஓரிடத்திலும் நிற்கப்பெறாமல், வ்யாதி முதலியவற்றால் பீடிக்கப்பட்டு ஸஞ்சரிக்கமுடியாத சரீரத்தில் அடைப்புண்ட ஜீவன் நித்ராஸுகமின்றி வருந்துவதுபோலப் பெரிய அந்தகாரத்தில் சுற்றிக்கொண்டிருப்பான். இவ்வுலகத்தில் தனக்குக் கிடைத்த அன்னாதிகளை அதிதிகளுக்குக் கொடாமல் தானே புசிக்கின்றவனும் பஞ்ச மஹா யஜ்ஞங்களை நடத்தாதவனும் வாயஸம் போன்றவனென்று நிந்திக்கப்பட்டுப் பரலோகத்தில் க்ரிமிபோஜனமென்னும் பாபிஷ்டமான நரகத்தில் விழுவான். அதில் நூறாயிர யோஜனையளவுடைய க்ரிமிகுண்டத்தில் தானும் ஒரு புழுவாய் அங்குள்ள புழுக்களால் பக்ஷிக்கப்பட்டுத் தானும் அந்தப் புழுக்களைப் பக்ஷித்துக்கொண்டு அந்த க்ரிமிகுண்டம் எத்தனை யோஜனையுள்ளதோ அத்தனை வர்ஷங்கள் வரையில் ‘நான் அதிதிகளுக்குக் கொடாமையாலும் பஞ்சமஹாயஜ்ஞாதிகளை அனுஷ்டிக்காமையாலும் இப்படி அனுபவிக்கிறேன்’ என்கிற பரிதாபமுமின்றி துக்கத்தை அனுபவிப்பான். இவ்வுலகத்தில் எவன் தனக்கு ஆபத்தில்லாத ஸமயத்தில் திருட்டுத்தனத்தினாலாவது பலாத்காரமாயாவது ப்ராஹ்மணனுடைய ஸ்வர்ண ரத்னாதிகளையாவது மற்றவனு

டைய ஸ்வர்ணரத்னுதிகளையாவது அபஹரிக்கிருனே அவனைப் பரலோகத்தில் யமபடர்கள் ஸந்தம்சமென்னும் நரகத்தில் தள்ளி நெருப்புப்போலப் பழுக்கக்காய்ச்சின இருப்புச் சூலங்களால் குத்துவார்கள். இவ்வுலகத்தில் எந்தப் புருஷனுவது ஸ்த்ரீயாவது புணரத்தகாத ஸ்த்ரீயை அல்லது புருஷனைப் புணர்கின்ருர்களோ, அவர்களைப் பரலோகத்தில் தப்தஸூர்மியென்னும் நரகத்தில் தள்ளிச் சாட்டையால் அடித்து இரும்பினுல் ஆண்போலும் பெண்போலும் இயற்றி நெருப்பில் காய்ச்சப்பட்டு ஜ்வலிக்கின்ற ஸ்தம்பத்தை அணையும்படி செய்வார்கள். இவ்வுலகத்தில் எவன் பணியத்தகுந்தவரென்றும் தகாதவரென்றும் பாராமல் எல்லோரையும் பணிகின்ருனே அவனைப் பரலோகத்தில் வஜ்ரகண்டக சால்மலி யென்னும் நரகத்தில் தள்ளி வஜ்ரம்போன்ற முட்களையுடைய சால்மலி வ்ருக்ஷத்தில் ஏற்றி உடம்பெல்லாம் பீறச் செய்வார்கள். எந்த க்ஷத்ரியர்களாவது அவர்களுடைய புருஷர்களாவது தாங்கள் தர்ம மர்யாதைகளைக் கடந்து பிறரையும் ஆசரிக்க வொட்டாமல் அவற்றைப் பாழ் செய்கின்ருர்களோ அவர்கள் பரலோகம் சென்று வைதரணியென்னும் நரகத்தில் விழுகின்ருர்கள். நரகத்திற்கு அகழிபோன்ற வைதரணி யென்னும் அந்நதியில் மகரமீன் முதலை முதலிய கொடிய ஜலஜந்துக்களால் பக்ஷிக்கப்பட்டும் தமது பாபத்தினுல் தேஹம் நீங்கப்பெருமல் ப்ராணன்களோடு கூடி 'இது நாம் செய்த பாபகர்மத்தின் பலன்' என்று நினைத்து விஷ்டை மூத்ரம் சீ ரக்தம் மயிர் நகம் எலும்பு மேதஸ்ஸு மாம்ஸம் மஜ்ஜை இவற்றின் வெள்ளம் நிறைந்த அந்நதியில் வருந்துவார்கள். இவ்வுலகத்தில் மேன்மையுள்ள ப்ராஹ்மணுதி வர்ணங்களில்

பிறந்து சூத்ர வர்ணத்துப் பெண்ணை மணம் புரிந்து ஸ்நாநாதி கர்மங்களையும் ஸந்த்யாவந்தனாதி ஆசாரத்தையும் பக்ஷ்யாப க்ஷ்யாதி நியமங்களையும் துறந்து வெட்கமின்றிப் பசுக்களைப்போல மனம்போன படி நடக்கின்றவர்கள், பரலோகத்தில் சீ விஷ்ட்டை மூத்ரம் கோழை சொள்ளு முதலியவை நிறைந்து ஸமுத்ரம் போல் விஸ்தாரமா யிருப்பதாகிய பூயோத மென்னும் மடுவில்விழுந்து மிகவும் அஸங்க்யமான அந்த விஷ்டை முதலியவற்றைப் புசித்துக் கொண்டிருப்பார் கள். இவ்வுலகத்தில் ப்ராஹ்மணாதி வர்ணத்தில் பிறந் தும் நாய் கழுதை முதலியவற்றை வளர்த்துக்கொண்டு தீர்த்தங்களில்லாத இடத்தில் ம்ருகங்களை வதிப்பார் களாயின், அவர்கள் மரணம் அடைந்து யமபடர்களால் ப்ராண நிரோதமென்னும் நரகத்தில் தள்ளுண்பார் கள். யமபடர்கள் அவர்களை ப்ராணன் ஒடுங்கும்படி பாணங்களால் அடிப்பார்கள். இவ்வுலகத்தில் ஜனங் களை வஞ்சிக்க முயன்று நாமும் யஜ்ஞம் செய்தோ மென்கிற ப்ரஸித்திக்காக யாகங்களைச் செய்யத் தொ டங்கிப் பசுக்களை ஹிம்ஸிக்கிறவர்கள் பரலோகத்தில் வைசஸன மென்னும் நரகத்தில் விழுவார்கள். அவர் களை யமபுருஷர்கள் துக்கப்படுத்தி ஹிம்ஸிப்பார்கள். இவ்வுலகத்தில் தன் வர்ணத்தில் பிறந்த பார்யையைக் காமத்தினால் மதிமயங்கித் தன் ரேதஸ்ஸைப் பானம் செய்விக்கிறவன் பரலோகத்தில் லாலாபக்ஷமென்னும் நரகத்தில் விழுவான். அவனை யமபடர்கள் ரேதஸ்ஸு நிறைந்த கால்வாயில் தள்ளி ரேதஸ்ஸைப் பானம் செய் விப்பார்கள். இவ்வுலகத்தில் எவர்கள் வீடுகளில் நெருப் பை வைத்துக்கொளுத்துகிறார்களோ, எவர்கள் தெரியா மல் விஷங்கொடுத்துக் கொல்லுகிறார்களோ, எவர்கள்

தாங்கள் ராஜபடர்களாயிருந்து அதிகாரத்தினால் கொழுத்துக் கருணையின்றிப் பட்டணம் கனிக்ராமம் முதலிய இடங்களிலிருக்கும் ப்ராணிகளையும் மற்ற ஜீவ ஸமூஹங்களையும் ஹிம்ஸிக்கிறார்களோ, அவர்கள் மரணம் அடைந்து ஸாரமேயாதனமென்னும் நரகத்தில் விழுவார்கள். அவர்களை வஜ்ரம்போன்ற கோரைப் பற்களுடையவைகளாகிய எழுநூற்றிருபது நாய்கள் பரபரப்புடன் மேல் விழுந்து பக்ஷிக்கின்றன. இவ்வுலகத்தில் ஸாக்ஷயம் சொல்லும் பொழுதாவது க்ரய விக்ரயாதிரூபமான வர்த்தக வ்யாபாரத்திலாவது எவன் பொய்சொல்லுகிறானோ அவன் மரணம் அடைந்து பெருவருத்தத்துடன் அவீசியென்னும் நரகத்தில் விழுவான். அவனை யமபடர்கள் நூறு யோஜனை தூரத்திற்கு மேல் எவ்விதத்திலும் பிடிப்பில்லாத இடத்தினின்று பர்வதத்தின் சிகரத்தில் விழும்படி தலை கிழாய்த் தள்ளுவார்கள். இந்நரகத்தில் தரையெல்லாம் கல்லாயிருக்கும். அது அலையெறிகிற ஜலம் போல்தோற்றும். இந்நரகத்தை அவீசியென்று சொல்லுவார்கள். அங்ஙனம் உயரத்தினின்று தள்ளுண்டபாபி எள்ளு ப்ரமாணமான துண்டங்களாய்ச் சரீரம் முழுவதும் சிதரப்பெற்றும் மரணம் அடையமாட்டான். மீளவும் அங்ஙனமே தூக்கித் தள்ளுவார்கள். இவ்வுலகத்தில் எந்த ப்ராஹ்மணனாவது ப்ராஹ்மண பத்னியாவது வ்ரதத்திலிருக்கிற மற்ற வர்ணத்தவனாவது ஸுராபானம் செய்கிறார்களோ, எந்த க்ஷத்ரியனாவது வைஸ்யனாவது மதிமயங்கி ஸோமபானம் செய்கிறானோ, அவர்கள் அனைவரும் அயப்பானமென்னும் நரகத்தில் விழுவார்கள்; யமபடர்கள் அவர்களைக் கீழ்விழத் தள்ளி மார்பில் காலால் மிதித்துக் கொண்டு உருக்கின இரும்பை அவர்கள் வாயில் கொட்டிக் குடிக்கச் செய்வார்கள். இவ்வுல

கத்தில் ஜன்மம் வித்யை ஆசாரம் வர்ணம் ஆஶ்ரமம் இவைகளால் தாழ்ந்தவனுயிருந்தும் அவற்ருல் மேன்மையுற்ற பெரியோர்களை வெகுமதிக்காதிருப்பானுயின், அவன் ஜீவித்திருக்குங் காலத்தில் செத்தாற்போலவே யிருந்து மரணம் அடைந்து க்ஷாரகர்த்தமமென்னும் நரகத்தில் தலைகீழாய் விழுந்து அபாரமான யாதனைகளை அனுபவிப்பான். இவ்வுலகத்தில் புருஷர்களை வதித்துப் பலிகொடுத்துப் பத்ரகாளி முதலிய தேவதைகளைப் பூஜிக்கிற புருஷர்களும், நர பசுக்களை வதிக்கிற மடந்தையர்களும் ரக்ஷோகணபோஜனமென்னும் நரகத்தில் விழுவார்கள். அந்தப் புருஷர்களாலும் ஸ்த்ரீகளாலும் முன்பு இவ்வுலகத்தில் நர பசுக்களாகக் கொண்டு வதிக்கப்பட்ட புருஷர்கள் அனைவரும் யமலோகத்தில் ராக்ஷஸக்கூட்டங்களாய் வந்து கொலைக்காரர்போல அவர்களைப் பலவாறு ஹிம்ஸித்துக் கத்தியினுல் வெட்டி ரக்தத்தைப் பானம் செய்து, முன்பு அவர்கள் நரபலி கொடுத்த ஸந்தோஷத்தினுல் நர்த்தனம் செய்தாற் போலவும் பாட்டுக்கள் பாடினுற் போலவும் நர்த்தனம் செய்து பாட்டுக்கள் பாடுவார்கள். இவ்வுலகத்தில் க்ராமத்திலாவது அரண்யத்திலாவது நிரபராதிகளாய் ஜீவிக்கும் ஜந்துக்களை எவர்கள் விஶ்வாஸத்தை விளைக்கும் உபாயங்களால் நம்பச் செய்து சூலம் ஸூத்ரம் முதலியவற்றில் மாட்டி விளையாட்டிற்காகப் பீடிக்கின்ருர்களோ, அவர்கள் மரணம் அடைந்து சூலப்ரோதமென்னும் நரகத்தில் விழுந்து யமயாதனைகளை அனுபவித்துச் சூலம் ஸூத்ரம் முதலியவற்றில் கோக்கப்பட்ட சரீரமுடையவர்களாகிப் பசி தாஹங்களால் பீடிக்கப்பட்டு ஊசிபோலக் கூரான முகமுடைய காக்கை கங்கம் கொக்கு முதலிய ஜந்துக்களால் குத்தப்பட்டுத்

தமது பாபத்தை நினைப்பார்கள். இவ்வுலகத்தில் க்ரூர ஸ்வபாவமுடைய ஸர்ப்பங்கள்போன்று ப்ராணிகளைப் பயப்படுத்துந் தன்மையுடையவர்கள் மரணம் அடைந்து பரலோகத்தில் தந்தசூகமென்னும் நரகத்தில் விழுவார்கள். மன்னவனே! இந்நரகத்தில் விழுந்தவனை ஐந்து தலைப் பாம்புகளும் ஏழுதலைப்பாம்புகளும் வந்து எலிகளைப் போலமேல் விழுந்து பிடுங்கும். இவ்வுலகத்தில் எவர்கள் பாலர்களையும் குருடர்களையும் காய்க் கண்ணர்களையும் பலஹீனமான மற்ற ப்ராணிகளையும் பள்ளம் கூடு புதர் முதலிய இடங்களில் தள்ளி வெளியில் போகவொட்டாமல் தடுக்கின்றார்களோ, அவர்களைப் பரலோகத்தில் யமபடர்கள் அந்தப் பள்ளம் முதலிய இடங்களில் தள்ளி விஷத்தோடு கூடின அக்னியாலும் புகையினாலும் வெளிவர வொட்டாமல் தடுப்பார்கள். ஆகையால் இந் நரகம் அவட நிரோதமென்று பேர்பெற்றது. இவ்வுலகத்தில் எவன் தானாகவே வீடேறி வந்த[1] அதிதிகளையும் அப்யாகதர்களையும் அடிக்கடி பெருங் கோபத்துடன் தஹிக்க விரும்பினாற் போலப் பாபிஷ்டமான கண்ணால் குறுக்கே பார்க்கிறானோ, அவன் மரணம் அடைந்து பரலோகம் போய் அக்ஷிபர்யாவர்த்தமென்னும நரகத்தில் விழுவான். அங்குக் கூரான முகமுடைய காக்கை கொக்கு முதலிய பலிஷ்ட ஜந்துக்கள் பலாத்காரமாக மேல் விழுந்து அவன் கண்களைப் பிடுங்கும். இவ்வுலகத்தில் எவன் பணக்காரனென்று கர்வித்துத் தன்னைச் சிறந்தவனாகப்பாவித்துக் குறுக்குப்பார்வையுடையவனாகிக் குரு முதலியவர்களிடத்திலும் தன் பணத்தைத் திருடுவார்களோ என்னவோ என்று ஸந்தேஹித்துப் பணச்செலவை

1. அதிதிகள் - முகம் பழகின விருந்தாளிகள் - அப்யாகதர் - முகந்தெரியாத விருந்தாளிகள்

யும் பணம் காணுமல் அழிந்து போவதையும் பற்றிப்பெரு ஞ்சிந்தையில் ஆழ்ந்து ஹ்ருதயமும் முகமும் வாடி வதங் கப்பெற்றுச் சிறிதும் ஸுகம் நேரப்பெருமல் பிசாசம்போ லப் பணத்தைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிருனே, அவன் அந்தப் பணத்தை ஸம்பாதிப்பதற்காகவும், அதை வ்ருத்தி செய்வதற்காகவும், அதைப் பாதுகாப்பதற்காக வும் தான் செய்த பாபங்களையெல்லாம் மூட்டை கட்டி யெடுத்துக்கொண்டு பரலோகத்தில் ஸூசீமுகமென்னும் நரகத்தில் விழுவான். பணத்தைப் பிசாசம்போல் பாது காத்துக் கொண்டிருந்தவனும் பாபமே ஒரு புருஷனுக வடிவங்கொண்டு வந்தாற்போலிருப்பவனுமாகிய அவனை யமபடர்கள் ஊசியில் கோத்த நாலினுல் துணி தைப்பவர் கள்போல உடம்பெல்லாம் ஊசியில் கோத்த நூல்களால் தைப்பார்கள். இப்படிப்பட்ட நரகங்கள் யமபுரியில் ஆயிரமாயிரமா யிருக்கின்றன. அந்த நரகங்களில் இங் குச் சொன்ன அதர்மிஷ்டர்களும் மற்றும் பலவகை அதர் மங்களைச் செய்தவர்களும் எல்லோரும் க்ரமமாகப் புகு வார்கள். அங்ஙனமே தர்மம் செய்தவர்கள் ஸ்வர்க்காதி லோகங்களில் சென்று ஸுகங்களை அனுபவிப்பார்கள். இருவகைப் பட்டவர்களும் அங்கனுபவித்த புண்ய பாப சேஷத்தை அனுபவிக்கும் பொருட்டு மீளவும் இந்த மனுஷ்ய லோகத்தில் வந்து பிறப்பார்கள். இங்ஙனம் ப்ரவ்ருத்தி தர்மத்திலிருப்பவர்களின் மார்க்கத்தை மொ ழிந்தேன். நிவ்ருத்தி தர்ம நிஷ்டர்களுடைய மார்க்கம் முதலிலேயே கூறப்பட்டது. ப்ரஹ்மாண்ட கோசம் முழு வதும இவ்வளவே உள்ளது. மூன்று லோகங்கள் அடங் கின இவ்வண்ட கோசத்தையே புராணங்களில் பதி னுன்கு லோகங்கள் அடங்கினதாகச் சொல்லுகிருர்கள். அதலாதி லோகங்களைப் பூலோகத்திலும் மஹர்லோ

காதியான ஊர்த்வ லோகங்களை த்யுலோகத்திலும் சேர்த்து அந்தரிக்ஷ லோகத்துடன் அண்டகோசம் மூன்று லோகங்கள் அடங்கினதென்று இங்கு மொழியப்பட்டது. அவாந்தர லோகங்களின் பிரிவைப்பற்றிப் புராணாந்தரங்களில் அண்டகோசம் பதினான்கு லோகங்கள் அடங்கினதென்று கூறப்பட்டது. மஹாபுருஷனாகிய ஸ்ரீமந்நாராயணனுக்கு ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வாதிகளால் நிறைந்த ஸ்தூலரூபம் ஒன்று உண்டென்றும், அதுவே இந்த ப்ரஹ்மாண்டமென்றும் முன்னமே மொழிந்தேன். அத்தகைய ப்ரஹ்மாண்டத்தை இப்பொழுது விரிவாகக்கூறினேன். பகவானுடைய ஸ்தூல ரூபமாகிய இந்த ப்ரஹ்மாண்டத்தை விரித்துரைக்கிற இப்ரபந்தத்தை ப்ரீதியுடன் படிக்கிறவன் கேட்கிறவன் கேட்பிக்கிறவன் ஆகிய மூவரும் உபநிஷத்துக்களால் அறியத்தகுந்ததும் எல்லா விடங்களிலும் வ்யாபித்திருப்பதும் திவ்யமங்கள விக்ரஹத்தோடு கூடியதுமாகிய திவ்யாத்ம ஸ்வரூபத்தை ஶ்ரத்தையாலும் பக்தியாலும் பரிசுத்தமான மதியுடையவர்களாகி நன்றாக அறிவார்கள். பகவானுடைய ஸ்தூல ஸூக்ஷ்ம ரூபங்களிரண்டையும் உள்ளபடி குருமுகமாகக் கேட்டு முதலில் ஸ்தூலரூபத்தில் நிலைநிற்கும்படி மனத்தை வசப்படுத்திக்கொண்டு அப்பால் மெல்ல மெல்ல திவ்யாத்ம ஸ்வரூபத்தை விவேகித்தறிந்த புத்தியால் அம்மனத்தை ஸூக்ஷ்மரூபத்தில் செலுத்தவேண்டும். பூமி அதிலுள்ள த்வீபங்கள் அவற்றிலுள்ள வர்ஷங்கள் அவற்றிலுள்ள பலவகை நதிகள் நதங்கள் பர்வதங்கள் அந்தரிக்ஷலோகம் ஸமுத்ரங்கள் பாதாளம் வரையிலுள்ள பூமியின் விவரங்கள் திக்குகள் நரகங்கள் நக்ஷத்ர கணங்கள் அடங்கின த்யுலோகம் ஆகிய இவற்றின் நிலைமைகளை யெல்லாம்

உனக்குக் கூறினேன். மன்னவனே! பூலோகம் முதல் த்யுலோகம் வரையிலுள்ள இந்த ஜகத்தே ஸகல ஜீவ ஸமூஹங்களுக்கும் ஆதாரமான பகவானுடைய ஆச்சர்ய மான ஸ்தூலசரீரமாம். இருபத்தாறுவது அத்யாயம் முற்றிற்று.

பஞ்சம ஸ்கந்தமும் முற்றுப்பெற்றது.

---



ஸ்ரீ க்ருஷ்ணாய நம:.

# ஸ்ரீபாகவதம்.

## ஷஷ்ட ஸ்கந்தம்.

அஜாமிளோபாக்யானம்.
விஷ்ணு தூதர்களுக்கும் யமதூதர்களுக்கும் ஸம்வாதம்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—மஹானுபாவரே! வர்ணாஶ்ரமங்களுக்குரிய கர்மங்களை அனுஷ்டிக்கையாலும், ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறிகையாகிற ஆத்மஜ்ஞான யோகத்தினாலும் உதவி செய்யப்பெற்ற பக்தி யோகத்தினால் பரம புருஷனுடைய அனுக்ரஹத்தைப் பெற்று ஸம்ஸாரத்தினின்று விடுபடுகையாகிற மோக்ஷத்தின் ஸ்வரூபத்தை முன்னமே விவரித்துச் சொன்னீர். ப்ராக்ருதி ஸம்பந்தம் தீரப்பெறாமல் ஸுக துக்கங்களை அனுபவிப்பதற்காக ஸத்வ ரஜஸ் தமோ குணமயமான தேஹங்களை அடிக்கடி பெறுகையாகிற ப்ரவ்ருத்தி மார்க்கத்தையும் மொழிந்தீர். அதர்மங்களைச் செய்கையால் விளையக்கூடிய பலவகை நரகங்களையும், முதன்மையான ஸ்வாயம்புவ மன்வந்தரத்தையும், அந்த ஸ்வாயம்புவ மனுவின் புதல்வர்களான ப்ரியவ்ரதன் உத்தானபாதன் ஆகிய இவர்களின் வம்சத்தையும், அவரது சரித்ரங்களையும், த்வீபங்கள்

அவற்றிலுள்ள வர்ஷங்கள் ஸமுத்ரங்கள் பர்வதங்கள் நதிகள் உத்யானவனங்கள் ஜம்பு முதலிய வ்ருக்ஷங்கள் பூமண்டலம் ஆகிய இவற்றின் நிலைமையையும், அவற்றின் பிரிவுகளையும், அடையாளங்களையும், அளவுகளையும், நக்ஷத்ரமண்டலம் முதலியவை அடங்கின த்யுலோகத்தின் ஸ்வரூபத்தையும், அதலம் முதல் பாதாளம் வரையிலுமுள்ள பூமியின் விவரங்களையும் ப்ரஹ்மதேவன் படைத்தபடியே விவரித்து மொழிந்தீர். பேரறிஞரே! கொடிய பல யாதனைகளுக்கிடமான நரகங்களை இப்பொழுதே மனுஷ்யன் எந்தக் காரணத்தினால் அடையாமல் தப்பித்துக்கொள்ள முடியுமோ அதை எனக்கு மொழிவீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மனத்தினாலும் வாயாலும் காயத்தினாலும் செய்த பாபத்தை இவ்வுலகத்திலேயே ப்ராயச்சித்தாதிகளால் போக்கிக்கொள்ளானாயின், அவன் மரணம் அடைந்த பின்பு என்னால் மொழியப்பட்டவைகளும் பொறுக்கமுடியாத பல யாதனைகளுக்கிடங்களுமாகிய நரகங்களை அவச்யம் அனுபவித்தே தீருவான். இது நிச்சயம். ஆகையால் மரணம் அடைவதற்கு முன்னமே மனோவாக்காயங்களென்கிற மூன்று கரணங்களும் வலிவுடன் இருக்கும் பொழுதே இவ்வுலகத்திலேயே தான் செய்த பாபத்திற்கு ப்ராயச்சித்தத்தைப்பற்றி யத்னம் செய்யவேண்டும். ரோகங்களின் நிதானத்தை அறிந்த வைத்யன் அந்த ரோகங்களின் பலாபலத்தை அனுசரித்து அவற்றிற்குச் சிகித்ஸை செய்வதுபோல், பாபங்களின் குருலாகவங்களை ஆலோசித்து அவற்றிற்கு ஏற்பட்ட ப்ராயச்சித்தங்களில் முயற்சி கொள்ள வேண்டும்.

மன்னவன் சொல்லுகிறான்:—பெரியோர்கள் நிந்திப்பது முதலிய ப்ரத்யக்ஷத்தினாலும், சாஸ்த்ரங்களில்

இதைச் செய்யலாகாதென்று கேட்டமையாலும், தனக்கு அரிஷ்டத்தை விளைக்குமென்று அறிந்தவன் சப்தாதி விஷயங்களில் மனம் சென்று மெய்ம் மறந்து பாபத்தைச் செய்வானாயின், அவன் செய்த ப்ராயச்சித்தம் பாபத்தை எங்ஙனம் போக்க வல்லதாகும்? ஒருகால் நாம் பாபத்தைச் செய்யலாகாதென்று தோன்றி அதினின்றும் மீள்கிறான். மற்றொருகால் விஷயங்களில் மனம் சென்று மெய்ம்மறந்து அந்தப் பாபத்தையே மீளவும் செய்கிறான். அவன் செய்த ப்ராயச்சித்தமும் கஜ ஸ்நானம்போல வீணேயென்று நான் நினைக்கிறேன், ஆகையால் அதற்குத் தகுந்த மற்றொரு உபாயத்தை மொழிய வேண்டும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ப்ராயச்சித்த ரூபமான கர்மத்தினால் பாபத்திற்கு அடியோடு பரிஹாரம் உண்டாகமாட்டாது. பரமாத்மோபாஸனத்தில் இழியாமல் அஹங்கார மமகாரங்களாலும் ராக த்வேஷாதிகளாலும் மனக்கலக்கமுற்ற புருஷனுக்கு ப்ராயச்சித்தம் விதித்ததேயன்றிப் பரமாத்மோபாஸகனான ஆத்மஜ்ஞானிக்கு ஜ்ஞானமே பூர்வபாபங்களையும் மேல்வரும் பாபங்களையும் போக்குகின்றது. ஆனால் ஆத்மஜ்ஞானமில்லாதவன் மேன்மேலும் பாபம் செய்வானாயின், ஒருதரம் செய்த ப்ராயச்சித்தத்தினால் மேல் செய்யப்போகிற பாபங்களும் கீழ்செய்த பாபங்களும் தீரமாட்டாவாயின், ப்ராயச்சித்தம் வீணேயென்று நினைக்கவேண்டாம். அப்பொழுதுள்ள ரோகத்தை ஔஷதத்தினால் போக்கிக்கொள்வதுபோல அந்தப் பாபங்களுக்கு அந்த ப்ராயச்சித்தங்களால் பரிஹாரம் நேரும். ஆகையால் ப்ராயச்சித்தங்களை விதித்தமை வீணாகமாட்டாது. ஓ மன்னவனே! பத்யமான அன்னத்தைப் புசிக்கும் புருஷர்

களை வ்யாதிகள் பீடிக்கமாட்டாவல்லவா? அங்ஙனமே மேற்சொல்லப்போகிற நியமங்களை அனுஷ்டிக்கும் புருஷன் மெல்லமெல்ல மஹாநந்தரூபமான மோக்ஷத்தைப் பெறுகையாகிற க்ஷேமத்தைப் பெறுவான். உபவாஸம் முதலிய தவம், ருதுகாலம் தவிர மற்றகாலங்களில் ஸ்த்ரீ ஸம்போகமில்லாமை முதலிய ப்ரஹ்மசர்யம், உள்ளிந்த்ரியமான மனத்தை அடக்குகை, வெளியிந்த்ரியங்களான செவி வாய் கண் மூக்கு பாணி பாதம் பாயு உபஸ்தம் முதலியவற்றை அடக்குகை, ஸத்பாத்ரங்களில் தானம் செய்கை, ப்ராணிகளுக்கு ஹிதம் செய்கை, பொய்பேசாமை, நல்லொழுக்கம், காமத்தில் விருப்பின்மை, பஞ்சமஹாயஜ்ஞாதி வர்ணாஸ்ரம தர்மங்களை அனுஷ்டிக்கை ஆகிய இவற்றால் சீதம் உஷ்ணம் ஸுகம் துக்கம் முதலிய த்வந்த்வங்களைப் பொறுக்குந் தன்மையுள்ளவர்களும் மோக்ஷஸாதனமான உபாஸனரூப தர்மத்தை அறிவிக்கிற சாஸ்த்ரங்களைக் கற்றுணர்ந்தவர்களுமாகிய பெரியோர்கள் ச்ரத்தையுடன்கூடி, அக்னி மூங்கிற் புதரை அழிப்பதுபோல, மனோவாக்காயங்களால் செய்த மஹத்தான பாபத்தையும் போக்கிக் கொள்கிறார்கள். சிலர் வாஸுதேவனையே ப்ராப்யனாகவும் ப்ராபகனாகவும் பற்றிக் கேவல பக்தியால், ஸூர்யன் பனியைப் போக்குவதுபோலப் பாபத்தை யெல்லாம் போக்கிக்கொள்கிறார்கள். மன்னவனே! பாபம் செய்தவன், ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களில் ஆத்ம ஸமர்ப்பணம் செய்து அவனுடைய பக்தர்களான பெரியோர்களைப் பணிகையால் தன்பாபங்களை யெல்லாம் போக்கிக் கொள்வதுபோலத் தவம் முதலியவற்றால் அப்பாபங்களைப் போக்கிக் கொள்ள வல்லவனாகமாட்டான். இவ்வுலகத்தில் நன்மையைப் பெறுதற்கு ஸாதனமாக விசாரிக்கப்படும் உபாயங்களில்

இந்தப் பகவத் பக்திரூபமான உபாயமே மிகவும் அழகியது. ஏனென்றால், இதனால் எவ்விதத்திலும் பயத்திற்கிடமில்லாததும் மஹாநந்த ரூபமுமாகிய மோக்ஷம் அநாயாஸமாக உண்டாகின்றது. ஆனது பற்றியே நன்னடத்தையுடைய பெரியோர்கள் ஸ்ரீமந்நாராயணனை முக்யமாகப்பற்றி அவனிடத்தில் பக்தி செய்கையாகிற இம்மார்க்கத்தில் நிலைநின்றிருக்கிறார்கள். இத்தகைய பகவத் பக்தியோகமே பலவகையான கொடிய நரகங்களை விளைக்கும் பாபங்களினின்று தன்னை மீட்டுக் கொள்வதற்குரிய உபாயமாகுமன்றி மற்றொன்றுமன்று. ராஜஶ்ரேஷ்டனே! ஒருகாலும் ஸ்ரீமந்நாரயணனை நெஞ்சிலும் நினையாத பாபிஷ்டர்கள் எத்தனை ப்ராயச்சித்தங்களை அனுஷ்டிக்கினும், மத்யம் நிறைந்த குடத்தைக் கங்கை முதலிய நதிகள் பவித்ரம் செய்யமாட்டாததுபோல அவை அவர்களைப் பவித்ரம் செய்யமாட்டா. இவ்வுலகத்தில் எத்தகைய பாபிஷ்டர்களாயினும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய குணங்களில் ப்ரீதியுடைய மனத்தை அவனுடைய பாதாரவிந்தங்களில் ஒருகால் நுழைப்பார்களாயின், அவர்கள் அதுவே தாம் செய்த பாபங்களுக்கெல்லாம் ப்ராயச்சித்தமாகப்பெற்று யமனையாவது பாசாயுதங்களைத் தரித்த யமபடர்களையாவது ஸ்வப்னத்திலும் காணமாட்டார்கள். பகவானுடைய நாமத்தை அந்த அபிப்ராயமின்றிச் சொல்லினும் கூட அவன் யமனுக்காவது யமபடர்களுக்காவது உட்படமட்டான். இவ்விஷயத்தில் விஷ்ணுகிங்கரர்களுக்கும் யமகிங்கரர்களுக்கும் நடந்த ஸம்வாதமாகிற ஒரு பழைய வ்ருத்தாந்தத்தைக் கூறுகிறார்கள். அதைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. கன்யாகுப்ஜமென்னும் தேசத்தில் அஜாமிளனென்னும் ஒரு ப்ராஹ்மணன் இருந்தான். அவன் சூத்ர ஸ்த்ரீயைப் புண

ருந்தன்மையுடையவன்; வர்ணாஶ்ரம தர்மானுஷ்டான ரூபமான ஸதாசாரமற்று அத்தாஸியின் ஸம்பந்தத்தினால் பதிதனாயிருந்தான். அவன் பந்தயம் வைத்தாடுகிற சூதாட்டங்களாலும் கபடங்களாலும் திருட்டுத்தனத்தினாலும் குடும்பத்தைப் போஷித்துக்கொண்டு பெரியோர்களால் நிந்திக்கப்பட்ட வ்ருத்தியைக் கைப்பற்றியிருந்தான். அவற்றாலும் குடும்பத்தைப் போஷிக்க முடியாதபொழுது பசு பக்ஷி ம்ருகம் முதலிய ப்ராணிகளையும் ஹிம்ஸித்துக்கொண்டு எப்பொழுதும் அபரிசுத்தனாகவேயிருப்பான். இங்ஙனம் ஜீவிக்குந்தன்மையுள்ள அந்த ப்ராஹ்மணன் அத்தாஸியிடத்தில் தனக்குப் பிறந்த பிள்ளைகளைச் சீராட்டிக் கொண்டிருக்கையில், மஹாராஜனே! அவனுடைய வாழ்நாளில் எண்பத்தெட்டு வர்ஷங்கள் கடந்தன. அங்ஙனம் வயது முதிர்ந்த அவ்வந்தணனுக்குப் பத்துப் பிள்ளைகள் பிறந்திருந்தார்கள். அவர்களில் கடைசிப்பிள்ளை நாராயணனென்று பேரிடப்பட்டவன். அவன் அப்பொழுது இளைஞனாயிருந்தான். அவன் தாய் தந்தைகளிருவர்க்கும் மிகவும் அன்பிற்கிடமானவன். கிழவனாகிய அந்த ப்ராஹ்மணன் அவ்யக்த மதுரமாய்ப் பேசுகின்ற இளம்பிள்ளையாகிய அந்நாராயணனிடத்தில் மனம் செல்லப்பெற்று அவனுடைய விளையாடல்களைப் பார்த்து மிகவும் ஆநந்தித்திருந்தான். அவன் தான் சாப்பிடும் பொழுது அக்குழந்தையையும் ப்ரீதியால் சாப்பிடுவிப்பதும், தான் தண்ணீர் முதலியன பருகும்பொழுது அவனையும் பருகச்செய்வதுமாகி ஒன்றும் தெரியாமல் ம்ருத்யு ஸமீபித்து வந்திருப்பதையும் அறியாதிருந்தான். இப்படி ஒன்றுமறியாத மூடனாய்க் காலத்தைக் கழிக்கின்ற அவ்வந்தணன் மரணகாலம் மிகவும் ஆஸன்னமாயிருக்கையில், நாராயணனென்னும் பேருடைய அவ்விளம்



1355. அஜாமிளனை யமதூதர்கள் பாசங்களால் கட்டியிருக்கையில், விஷ்ணு தூதர்கள் அவனை விடுவித்தல்.

பிள்ளையிடத்தில் மதியைச் செலுத்தியிருந்தான். அவ்வ ஜாமிளன், பாசஹஸ்தர்களும் மிகப் பயங்கரர்களும் கோணலான முகமுடையவர்களும் உடம்பெல்லாம் மேல் நோக்கின ரோமங்கள் அடர்ந்தவர்களும் தன்னை யமலோகத்திற்குக் கொண்டுபோக வந்தவர்களுமாகிய மூன்று புருஷர்களைக் கண்டு மனவ்யாகுலமுற்றுத் தூரத்தில் விளையாடிக் கொண்டிருக்கிற நாராயணனென்னும் புதல்வனை மிகவும் நீண்ட குரலுடன் உரக்க அழைத்தான். மஹாராஜனே! மரணம் அடையமுயன்றிருக்கிற அவ்வந்தணன் பகவானை அறிவிக்கவல்ல நாமத்தை வாயால் மொழியக்கேட்டுப் பகவானுடைய தூதர்கள் விரைந்தோடி வந்தார்கள். அந்த விஷ்ணுதூதர்கள் தாஸிக்குப் பதியான அஜாமிளனை ஹ்ருதயத்தினின்று பலாத்காரமாகப் பிடித்திழுக்கிற யமதூதர்களைத் தடுத்தார்கள். அங்ஙனம் தடுக்கப்பட்ட யமதூதர்கள் அந்த விஷ்ணுதூதர்களைப் பார்த்து மேல்வருமாறு மொழிந்தார்கள். 'தர்மராஜனான யமனுடைய ஆஜ்ஞையைத் தடுக்கின்ற நீங்கள் யார்? யாரால் அனுப்பப்பட்டவர்கள்? எங்கிருந்து வந்தீர்கள்? இவனிடத்தில் நீங்கள் எந்தக் குணத்தைக் கண்டு யமனுடைய ஆஜ்ஞையைத் தடுக்கின்றீர்கள்? நீங்கள் தேவதைகளா? அல்லது கந்தர்வர்களா? அல்லது ஸித்தஸ்ரேஷ்டர்களா? நீங்களெல்லோரும் தாமரையிதழ்போன்ற கண்கள் அமைந்து பொன்நிறமான பட்டுவஸ்த்ரம் உடுத்துக் கிரீடம் குண்டலம் முதலிய ஆபரணங்களை அணிந்து தாமரை மாலையைத் தரித்துத் திகழ்கின்றீர்கள். நீங்களெல்லோரும் புதிய வயதுடையவர்களும் அழகான நான்கு தோள்கள் அமைந்தவர்களும் தனுஸ்ஸு அம்பறுத்தூணி கத்தி கதை சங்கு சக்கரம் பத்மம் இவற்றைத்தரித்தவர்களுமாகி அழகுடன்விளங்கு

கிறீர்கள். உங்கள் தேஹகாந்தியால் திசைகள் எல்லாம் இருளற்று ஒளியுடன் விளங்குகின்றன. இப்படிப்பட்ட நீங்கள் யமனுடைய கிங்கரர்களான எங்களை ஏன் தடுக்கிறீர்கள்?' என்றார்கள். இங்ஙனம் யமதூதர்களால் மொழியப்பெற்ற விஷ்ணு தூதர்கள் சிரித்து அவர்களைநோக்கி மேககர்ஜனம்போன்ற கம்பீரமான மொழியுடன் இவ்வாறு கூறினார்கள். 'நீங்கள் தர்மராஜனாகிய யமனுடைய தூதர்களாயிருப்பீர்களாயின்,நீங்களும் தர்ம அதர்மங்களின் ஸ்வரூபத்தை உணர்ந்தவர்களாயிருக்க வேண்டும். ஆகையால் தர்மத்தின் உண்மையையும் அதர்மத்தின் உண்மையையும் எமக்குச் சொல்வீர்களாக. தண்டனை எங்ஙனம் விதிக்கப்படுகின்றது? இந்தத் தண்டனைக்கு இடம் யாவன்? கர்மம் செய்தவர்கள் அனைவரும் தண்டிக்கத் தகுந்தவர்களா? அல்லது அவர்களில் சிலர் தானா?' என்று கேட்டார்கள். யமதூதர்கள் விஷ்ணு தூதர்களை நோக்கி 'வேதத்தினால் விதிக்கப்படுவது தர்மம். அதனால் நிஷேதிக்கப்படுவது அதர்மம். தர்ம அதர்மங்களுக்கு வேதமே முக்ய ப்ரமாணம். வேதம் ஸ்ரீமந் நாராயணனிடத்தினின்று நேரே உண்டானது. அவ்வேதம் தான் முன் கல்பத்தில் எப்படி இருந்ததோ, அப்படியே இந்தக் கல்பத்திலும் நிகழ்கின்றது. ஆகையால் இதனிடத்தில் புருஷபுத்திமூலமான தோஷங்கள் எவற்றையும் சங்கிக்க இடமில்லையென்று நாங்கள் கேட்டிருக்கிறோம். இவ்வேதத்தின் தோற்றத்திற்கிடமான அந்நாராயணன் யாவனென்றால், எவன் அனைத்திலும் உட்புகுந்து தரிக்குந்திறமையுடைய தன் ஸ்வரூபத்தில் வேதம் தேவதைகள் முதலிய ரஜஸ்தமோ குணங்கள் நிறைந்த பதார்த்தங்களையெல்லாம் குணம் நாமம் க்ரியை உருவம் இவற்றுடன் தனித்தனியே பிரிங்

திருக்குமாறு அவ்வவற்றின் கர்மத்தை அனுஸரித்து வெளியிடுகிறானோ அவனே அந்தநாராயணன். ஸம்ஸாரத்திலுள்ள ஜீவாத்மாக்கள் அனுஷ்டிக்கிற தர்மங்களும் அதர்மங்களும் அபாரமானவை. அவற்றை எப்படி அறிய முடியுமென்றால், ஸூர்யன் அக்னி ஆகாயம் காற்று ஸரஸ்வதி சந்த்ரன் ஸந்த்யைகள் பகல் ராத்ரி திக்குகள் ஜலம் பூமி காலம் தர்மம் ஆகிய இவற்றின் அபிமானி தேவதைகள், ஜீவாத்மாக்கள் செய்யும் புண்யபாப கர்மங்களுக்கு ஸாக்ஷிகளாயிருக்கிறார்கள். இவர்களால் பாபம் செய்தவனென்று அறிவிக்கப்பட்ட புருஷன் தண்டனைக்கிடமாவான். ஸம்ஸாரத்தில் உள்ளவர் அனைவரும் பாபகர்மம்செய்கிறவர்களே. ஆகையால் எல்லோரும் அவரவர் செய்த பாபத்திற்குத் தகுந்தபடி தண்டிக்கத் தகுந்தவர்கள். தர்மம் செய்கிறவர்களும் சப்தாதி விஷயங்களில் மனம் செல்லப்பெற்றவர்களாகையால் அவர்களுக்கும் பாபகர்மம் நேராதிருக்கமாட்டாது. அதர்மத்தின் பலனை அனுபவிக்கவேண்டிய வேளையில் அவர்களும் தண்டிக்கத் தகுந்தவர்கள்தான். நிர்த்தோஷர்களே! உங்களுக்குப் பாபத்தின் ஸங்கதியே தெரியாதுபோலத் தோன்றுகிறது. புண்யங்களும் பாபங்களும் ப்ராணிகளுக்கு ஸம்பவிக்கின்றன. ஏதேனுமொன்றைச் செய்து கொண்டேயிருக்கும் ப்ராணிகளுக்குச் சப்தாதி விஷயங்களில் விருப்பம் மாறாமலேயிருக்கின்றது. அவ்விருப்பத்தினால் அவற்றைப் பெறுதற்குரிய கார்யங்களைச் செய்வார்கள். அப்பொழுது அவர்கள் பாபங்களைச் செய்தே தீரவேண்டியதாயிருக்கும். தேஹமுடையவன் எவனும் ஒன்றும் செய்யாமல் வெறுமனே யிருக்கவல்லனாக மாட்டான். ஸத்வ ரஜஸ் தமோகுண ஸம்பந்தமுடைய ஜீவன் அவற்றில் ஏதேனுமொன்று தலையெடுக்கப்

பெற்றுத் தர்மத்தையாவது அதர்மத்தையாவது செய்து அவற்றிற்குத் தகுதியான ஸ்வர்க்க நரகாதி பலன்களைப் பரலோகத்தில் அனுபவிக்கிறான். தர்மம் செய்கிறவன் நரகத்தை அனுபவிக்கமாட்டான். அதர்மம்செய்கிறவனும் ஸ்வர்க்கத்தை அனுபவிக்கமாட்டான். மற்றும், அற்பமான பாபத்தினால் மஹத்தான துக்கத்தையும், அற்ப தர்மத்தினால் மஹத்தான ஸுகத்தையும் அனுபவிக்கமாட்டான். ஓ தேவஸ்ரேஷ்டர்களே! இவ்வுலகத்திலுள்ள ப்ராணிகள் ஜன்மாந்தரத்தில் ஸத்வாதிகுணங்களில் ஏதேனுமொன்று தலையெடுக்கப் பெற்றுச் செய்த ஸாத்விகம் ராஜஸம் தாமஸமென்று மூன்றுவகையான கர்மங்களின் பேதத்தினால் ஸுகிகள் துகிகள் மூடர்களென்று மூன்று விதமாகப் பிரிந்திருப்பது புலப்படுகின்றதல்லவா? அங்ஙனமே பரலோகத்திலும் ஸத்வாதி குணங்கள் தலையெடுத்துச் செய்யும் ஸாத்விகாதி கர்ம பேதத்தினால் ஸுகிகள் துகிகள் மூடர்களென்கிற மூன்று விதமான பேதம் உண்டென்று ஊஹிக்கலாம். நிகழ் காலத்திலுள்ள ஸுக துக்க மோஹங்கள் தமக்குக் காரணமான தர்மாதர்மங்கள் ஸத்வாதி குணங்களின் உன்மேஷத்தினாலுண்டானவையென்று தெரியப்படுத்துவதுபோலக் கீழ்மேலுள்ள ஜன்மங்களில் நேரும் ஸுக துக்க மோஹங்களும், தமக்குக் காரணமான தர்மாதர்மங்கள் ஸத்வாதி குணங்களின் உன்மேஷத்தினாலுண்டானவையென்பதைத் தெரியப்படுத்துகின்றன. சரீரத்தில் தன்தேஜஸ்ஸினால் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற பரமாத்மாவான ஸர்வேஸ்வரன் என்றும் மாறாது மலர்கின்ற தன் ஜ்ஞானத்தினால் பூர்வ ஜன்மத்தில் ஜீவன் செய்த புண்ய பாப கர்மங்களை ஆராய்ந்தறிகிறான். பகவான்தன் ஜ்ஞானத்தினால் பூர்வகர்மத்தை அனுஸரித்து

அவற்றிற்குப் பலன் கொடுக்கவேண்டியதை நிரூபிக்கிறான். ஜீவன் செய்த கர்மங்கள் அடுத்த க்ஷணத்தில்மறைந்து போகின்றனவாயினும், அவற்றை நிரூபித்து நிக்ரஹானுக்ரஹங்களை ஸங்கல்பித்திருக்கும் பகவான் அதை அநுஸரித்து ஸுகதுக்காதி பலன்களைக் கொடுக்கிறான். இருட்டில் கண்தெரியாத புருஷன் முன்னும் பின்னும் இருக்கும் வஸ்துக்கள் எவையும் தெரியப்பெறாமல் தன் சரீரத்தை மாத்ரமே சிந்தித்துக்கொண்டிருப்பான். ஸ்வப்னம் காண்கிறவன் அந்த ஸ்வப்னத்தில் ஏற்பட்ட தேஹாதிகளைமாத்ரமே அநுஸந்திப்பானன்றி விழித்துக் கொண்டிருக்கும்பொழுதுள்ள தேஹாதிகளை அநுஸந்திக்க மாட்டான். அங்ஙனமே ஜீவன் தேஹாத்மாபிமானம் முதலிய அஜ்ஞானங்களுடையவனுகிக் கர்மத்தினால் ஜ்ஞானஸங்கோசம் உண்டாகப்பெற்று அப்பொழுது ஸ்பஷ்டமாய்த் தெரிகிற தேஹத்தை மாத்ரம் நினைப்பானேயன்றிக் கீழ்ப்போன தேஹத்தையாவது மேல் வரப்போகிற தேஹத்தையாவது நினைக்கமாட்டான்; ஜீவனுக்குக் கீழ்மேலுள்ள ஜன்மங்களைப் பற்றின நினைவு அழிந்துபோகின்றது. ஆகையால், அப்பொழுதுள்ள தேஹத்தின் போஷணத்திற்குரிய கர்மங்களைச் செய்வானேயன்றிப் பரமபுருஷனுடைய அனுக்ரஹத்தை விளைக்கும்படியான கர்மத்தைச் செய்யமாட்டான். ஜீவன் ஐந்து கர்மேந்த்ரியங்களால் போதல் வருதல் எடுத்தல் முதலிய கார்யங்களைச் செய்கிறான். ஐந்து ஜ்ஞானேந்த்ரியங்களால் ஐந்து விஷயங்களை அறிகிறான். பஞ்ச பூதங்களும் பத்து இந்த்ரியங்களுமாகிய பதினைந்தைக் காட்டிலும் வேறுபட்டுப் பதினாறுவதாகிய மனம் செய்கைக்கும் அறிகைக்கும் உதவியாயிருக்கின்றது. கீழ்ச் சொன்ன பதினாறு தத்வங்களைக்காட்டிலும் வேறுபட்

டுப் பதினேழாவனுகிய ஜீவன் தானெருவனுகவே பதி னுருவதாகிய மனத்துடன் கூடிய ஜ்ஞானேந்த்ரியங்களால் சப்தாதி விஷயங்களை அறிவதும் அம்மனத்தோடு கூடிய கர்மேந்த்ரியங்களால் செயல்களைச் செய்வதுமாகி ஸுக துக்க மோஹங்கள் மூன்றையும் அனுபவிக்கிருன். பஞ்சபூதங்களும் பத்து இந்த்ரியங்களும் மனமும் ஆகப் பதினறு அவயவங்களுடையதும் அவித்யை கர்மம் வாஸனையென்கிற மூன்று சக்திகளுடையதும் கார்ய தசையில் ஸ்தூலாகாரமாயிருப்பதுமாகிய ஸூக்ஷ்ம சரீரம், ஹர்ஷம் சோகம் பயம் இவற்றை விளைப்பதும் கர்ப்ப ஜராமரணுதிகள் மாறி மாறி வரப்பெறுவதுமாகிய ஸம்ஸாரத்தை ஜீவனுக்கு விளைக்கின்றது. தேஹஸம்பந்தமுடைய ஜீவன் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து ஆறு இந்த்ரியங்களையும் வெல்ல முடியாமல் அவற்றின் வழியே சென்று தான் இஷ்டப்படாமற்போயினும் பலாத்காரமாகப் புண்யகர்மங்களையும் பாபகர்மங்களையும் இரண்டுங் கலந்த மிச்ர கர்மங்களையும் செய்விக்கப்படுகிருன். இங்ஙனம் தான் செய்த கர்மத்தினுல் கோசகாரம் என்ற புழுபோலத் தன் ஸ்வரூபத்தைத் தானே மறைத்துக்கொண்டு தேஹத்தையே ஆத்மாவென்று ப்ரமிக்கிருன். ஒரு ப்ராணியும் கர்மத்தைச் செய்யாமல் இருக்கமாட்டாது. ஒன்றுமில்லாமற் போயினும் கடைசியில் துரும்பையாவது கிள்ளிக்கொண்டிருக்கும். அனுதியாக ஏற்பட்டிருக்கின்ற ஸத்வாதிகுணங்களால் ஜீவன் பலாத்காரமாக ஏதேனுமொரு கார்யத்தைச் செய்யும்படி தூண்டப்படுகிருன். மூலப்ரக்ருதியென்கிற ப்ரதானம் ஜன்ம மரணங்களுக்குக் காரணமான கர்மத்தைப்பற்றி ஒருகால் பதினுறு தத்வஸ்வரூபமாய் அவ்யக்தமாகவும், ஒருகால் தேவமனுஷ்யாதி தேஹரூபமாய் வ்யக்தமாகவும்

இருக்கின்றது. எறும்பு முதலிய ஸூக்ஷ்ம சரீரங்களும் யானைமுதலிய ஸ்தூலசரீரங்களும் கர்ம தாரதம்யத்தைப் பற்றியே உண்டாகின்றன. அத்தேஹங்களெல்லாம் தாய் தந்தைகளின் சாயையை அனுஸரித்தேயிருக்கும். ஸாத்விகம் ராஜஸம் தாமஸமென்று மூன்று வகையான கர்ம வாஸனையாகிற ஸ்வபாவத்தைக் கடக்க முடியாமல் ஜீவாத்மாக்கள் ஸாத்விகாதி கர்மங்களைச் செய்து பல வகைச் சரீரங்களைப் பெறுகிறார்கள். ஜீவனுக்கு ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் விளையும் ஸம்ஸாரம் இத்தகையது. அவனுக்கு இயற்கையில் ஏற்படாமல் வந்தேறியாய்க் கிடைத்த அந்த ஸம்ஸாரம் பரமபுருஷனிடத்தில் செய்யும் பக்தியால் அடியோடு மாறிப்போகின்றது. இந்த அஜாமிளன் வேத சாஸ்த்ராதிகளை நன்குணர்ந்தவன்; நல்லியற்கையும் நன்னடத்தையும் சமதமாதிகுணங்களும் அமைந்தவன்; ஸ்த்ரீஸம்போக மில்லாமையாகிற ப்ரஹ்ம சர்யவ்ரதமுடையவன்; ம்ருதுவான ஹ்ருதயமுடையவன்; வெளியிந்த்ரியங்களை வென்றவன்; ப்ராணிகளின் ஹிதத்தையே பேசுவான்; பொய் பேசாதவன்; ஸாவித்ரி முதலிய மந்த்ரங்களை உணர்ந்தவன்; எப்பொழுதும் பரிசுத்தனாயிருப்பவன்; குரு அக்னி அதிதிகள் பெரியோர்கள் இவர்களுக்குச் சுஶ்ரூஷை செய்யுந் தன்மையன்; குணங்களால் விளையும் அஹங்காரம் தீண்டப் பெறாதவன்; ஸமஸ்த பூதங்களுக்கும் ப்ரியத்தையே செய்யுந் தன்மையன்; பிறருடைய கார்யங்களை நிறைவேற்றிக் கொடுப்பவன்; மிதமாய்ப் பேசுபவன்; குணங்களில் தோஷங்களை யேறிடுந்தன்மையாகிற அஸூயை யற்றவன்; இத்தன்மையுள்ள இவ்வந்தணன் ஒருகால் தந்தையின் கட்டளையைத் தலைக்கட்டமுயன்று வனத்திற்குச்சென்று பழம் புஷ்பம் ஸமித்து தர்ப்பம் முதலியவற்றை எடுத்துக்

கொண்டு அங்கிருந்து திரும்பி வந்தான். அப்பொழுது அவ்வனத்தில் தாஸியுடன் காமக்கலவியிலாழ்ந்திருக்கின்ற ஒரு சூத்ரனைக் கண்டான். அந்தத்தாஸி மத்ய பானம்செய்து மதத்தினால் கண்கள் சுழலப்பெற்று யௌவன மதம் அமைந்து அரை யாடையின் முடிச்சு அவிழ்ந்திருந்தாள். அச்சூத்ரனும் நல்வழியினின்று நீங்கி வெட்கமற்று அத்தாஸியுடன் கலந்து விளையாடுவதும் பாடுவதும் சிரிப்பதுமாயிருந்தான். காமவிகாரத்தினால் கொழுத்திருக்கின்ற அச்சூத்ரன் தன் புஜத்தினால் அணைத்துக் கொண்டிருக்கிற அந்தத் தாஸியைக் கண்டு அவ்வந்தணன் திடீரென்று மதிமயங்கிக் காமனுக்குட்பட்டான். அவ்வந்தணன் தான் குருவினிடத்தில் மனத்தை அடக்குவதற்குக் கேட்ட வழிகளை யெல்லாம் அனுஸரித்துப் பல முள்ளவளவு விவேகத்தினால் மனத்தை அடக்கப் பார்த்தாலும் மன்மத விகாரத்தினால் நடுக்கமுற்றபடியால் அதை அடக்க வல்லமை யற்றிருந்தான். அந்தத் தாஸியை நிமித்தமாகக் கொண்டு வளர்ந்தெழுகின்ற மன்மதனாகிற கபடபிசாசத்தினால் பிடியுண்டு முன் நினைவெல்லாம் மாறப்பெற்று அந்தத் தாஸியை மனத்தினால் சிந்தித்துக்கொண்டு ஸந்த்யாவந்தனம் முதலிய தன் வர்ணாஶ்ரமதர்மத்தினின்று நழுவினான். ஐயோ! அப்படியிருந்தவனுக்கு இப்படிப்பட்ட தசை நேரிட்டது. ஒன்றும் அறியாத மூடர்களால் விரும்பத்தக்கவைகளும் மனத்திற்கினியவைகளுமான ஆடை ஆபரணம் முதலிய வஸ்துக்களால் அவளுக்குத் தன்னிடத்தில் ப்ரீதி உண்டாகும்படி தன் தந்தை ஸம்பாதித்து வைத்த பணத்தை யெல்லாம் கொண்டு அவளையே ஸந்தோஷப் படுத்திக் கொண்டிருந்தான். பாபிஷ்டனாகிய அந்தணன் கள்ள புருஷனைத் தேடுங் கருத்துடைய அத்தாஸியின் கடைக்

கண்ணோக்கத்தினால் அடியுண்டு விவேகமெல்லாம் தொலையப் பெற்று ப்ரௌடையாகாதவளும் அழகியவளும் பெரிய வம்சத்தில் கிடைத்தவளுமாகிய தன் பார்யையைச் சீக்ரத்தில் துறந்தான். ந்யாயமாகவும் அந்யாயமாகவும் இங்குமங்கும் திரிந்து பணத்தை ஸம்பாதித்துக்கொண்டு வந்து பல பிள்ளைகளைப் பெற்ற அத்தாஸியின் குடும்பத்தைப் போஷித்துக்கொண்டு வந்தான். இங்ஙனம் இவன் சாஸ்த்ரமார்க்கத்தைக் கடந்து மனம் போனபடி திரியுந் தன்மைகொண்டு பெரியோர்களால் நிந்திக்கப்படும் வழியில் இழிந்து பாபகர்மத்தினால் தன் வாழ்நாள்களை யெல்லாம் கடத்திக்கொண்டு தாஸியைப் புணர்ந்த பாபத்தினால் அசுத்தனாகவே வெகு காலமிருந்தான். ஆகையால் இவன் பாபம் செய்தவன். அதற்கு ப்ராயச்சித்தத்தையும் இவன் செய்யவில்லை. இத்தகையனான இவனை நாங்கள் யமனுடைய ஸந்நிதானத்திற்குக் கொண்டு போகிறோம். அங்கு நரகங்களை அனுபவிக்கையாகிற தண்டனையால் இவன் சுத்தனாவான்' என்றார்கள். முதல் அத்யாயம் முற்றிற்று.

---

விஷ்ணுதூதர்கள் விஷ்ணுநாமத்தின்
மஹிமையைக் கூறி அவனை விடுவித்தலும்,
அவன் தான் செய்த பாபத்தைப்பற்றி
வருந்தி வைராக்யம் பெறுதலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—விஷ்ணுதூதர்கள் அந்த வார்த்தைகளைக்கேட்டு ந்யாய நிபுணர்களாகையால்அவர்களை நோக்கி 'ஆ! என்ன கஷ்டம் நேர்ந்தது? தர்மதர்சிகளின் ஸபையை அதர்மம் தீண்டுகின்றதே! பாபமற்றவரும் தண்டிக்கத் தகாதவருமான புருஷர்மேல் தர்மதர்சியின் ஸபையிலுள்ள உங்களைப் போன்றவர் வீணு

கவே தண்டனை விதிக்கிறார்களே. இதைக் காட்டி லும் வேறு அதர்மம் என்ன வேண்டும்? ப்ரஜைகளைத் தண்டிக்கும் அதிகாரத்திலிருப்பவர்களும் பக்ஷபாதமி ன்றி ஸமமாயிருப்பவர்களும் பிறருடைய தோஷத்தைப் போக்குவதில் ஸமர்த்தர்களும் ப்ரஜைகளுக்குத் தந் தையைப்போல் ஹிதம் செய்பவர்களுமாகிய உங்களைப் போன்றவர்கள் வைஷம்யம் செய்தால், ப்ரஜைகள் மற்ற யாரைச் சரணம் அடைவார்கள்? எல்லாம் அறிந்த பெரியோர்கள் எந்தெந்தக் கார்யங்களைச் செய்வார் களோ அந்தக் கார்யங்களையே தெரியாத ஜனங்களும் செய்யப் பார்ப்பார்கள். ஆகையால் தமது அனுஷ்டா னத்தினுல் உலகத்தில் தர்மத்தை நடத்துகின்றவர்களும் வேதத்தை அனுஸரித்து நடப்பவர்களுமான பெரியோர் கள் தண்டிக்கத் தகாதவர்களைத் தண்டிப்பது யுக்த மன்று. ஒருவன் மடியில் ஜனங்கள் நம்பிக்கையுடன் தலையை வைத்துப் படுத்து ஸுகமாய் உறங்குவார் களாயின், அங்ஙனம் விஸ்வாஸ பாத்ரமாயிருப்பவனும் மன இரக்க மூடையவனுமாகிய அவன் அந்த ஜனங் களுக்கு எங்ஙனம் த்ரோஹத்தை நினைக்கலாம்? யமன் அபராதமுள்ள ஜனங்களைத் தண்டிப்பானேயன்றி நிரப ராதிகளைத் தண்டிக்கமாட்டானென்று ஜனங்கள் அவ னிடத்தில் விஸ்வாஸ முற்றிருக்கிறார்கள். அவனும் ப்ராக்ருதனைப்போல வைஷம்யத்தினுல் நிரபராதிகளைத் தண்டிப்பானுயின், அவனுக்கு விஸ்வாஸ காதக தோ ஷம் வரும். 'இவ்வஜாமிளன் பாபிஷ்டனன்றோ? இவ னைப் பற்றி என்ன விசாரம்?' என்கிறீர்களோ? கே ளுங்கள். இவன் கோடி ஜன்மங்களில் செய்தபாபங் களுக்கும் ப்ராயச்சித்தம் பண்ணினுன். இவன் ஸ்வா தீனமற்றிருப்பினும் மங்களத்திற்கிடமான ஸ்ரீ விஷ்ணு

வின் நாமத்தை மொழிந்தானல்லவா? அதுவே இவன் செய்த ப்ராயச்சித்தமாம். நான்கு அக்ஷரங்கள் அடங்கின நாராயணுவென்னும் நாமத்தை இவன் மொழிந்தானுகையால் அதனுலேயே பாபிஷ்டனுகிய இவனுடைய பாபங்களுக்கெல்லாம் ப்ராயச்சித்தம் நடத்தினதாம். ஸ்வர்ணம் திருடினவன் ஸுராபானம் செய்தவன் மித்ரத்ரோஹி ப்ரஹ்மஹத்யை செய்தவன் குருபத்னியைப் புணர்ந்தவன் ஸ்த்ரீயைக் கொன்றவன் ராஜனைக்கொன்றவன் தாய் தந்தைகளைக் கொன்றவன் இவர்களும் மற்றும் பல வகைப்பாபங்கள்செய்தவர்களும் இந்த ஸ்ரீமஹாவிஷ்ணுவின் நாமத்தை ஒருகால் உச்சரிப்பார்களாயின், அவர்கள் அனைவருடைய பாபத்திற்கும் அதுவே பொருந்தின ப்ராயச்சித்தமாம். விஷ்ணுவினுடைய நாமத்தை எவ்விதத்திலாயினும் உரைப்பார்களானுல், அவனை நினைக்கும் மதி உண்டாகும். அதனுல் அவர்கள் பாபமெல்லாம் தீர்ந்து மோக்ஷத்தை அடைவார்கள். பகவானுடைய நாமங்களைச் சொல்வதனுல் பாபங்களெல்லாம் தீர்ந்து பரிசுத்தர்களாவதுபோலப் பாபம் செய்தவன் வேதங்களை உணர்ந்த பெரியோர்களான மனு முதலியவர்கள் மொழிந்த சாந்த்ராயணம் முதலிய வ்ரதாதி ரூபமான ப்ராயச்சித்தங்களால் பாபம் தீர்ந்து சுத்தனுக மாட்டான். பகவானுடைய நாமங்களில் ஏதேனுமொன்றைப்பேசினுல், அது அவனையும் அவன் குணங்களையும் நினைவு மூட்டிப் பாபங்களை யெல்லாம் போக்கி மோக்ஷத்தைக் கொடுக்கும். அந்த ப்ரஹ்மவாதிகள் சொன்ன ப்ராயச்சித்தங்கள் பாபங்களை அடியோடு போக்கவல்லவையன்று. அந்த ப்ராயச்சித்தங்கள் செய்த பின்பும் மனம் அடிக்கடி பாபமார்க்கத்தில் போகவேபோகும். ஆகையால் பாபங்களை வேரோடு போக்கவேண்டுமென்னும்

விருப்பமுடையவர்களுக்குப் பகவானுடைய குணங்களை வெளியிடுந்தன்மையுள்ள அவனது நாமங்களைப் பேசுகையே பொருந்தின ப்ராயச்சித்தமாம். அது நல்லறிவை விளக்கும்படியான ஸத்வகுணத்தை வளர்க்கும். ஆகையால், ஓ யமதூதர்களே! ஸமஸ்த பாபங்களுக்கும் ப்ராயச்சித்தம் அனுஷ்டித்த இவ்வஜாமிளனை நீங்கள் யமலோகத்திற்குக் கொண்டுபோவது யுக்தமன்று. இவன் மரணம் அடையும் ஸமயத்தில் பகவானுடைய நாமத்தை மொழிந்தானல்லவா? 'இவன் நாராயணனென்று பிள்ளையை அழைத்தானேயன்றிப்பகவானை அழைக்கவில்லையே. அது இவனுடைய பாபங்களுக்கு எங்ஙனம் ப்ராயச் சித்தமாம்?' என்று நினைக்கவேண்டாம். நெருப்பை அதை அறியாதவன் தொட்டாலும் அது அவனைத் தஹிக்குமேயன்றி வெறுமனேயிருக்குமா? அங்ஙனமே ஸங்கேதமாயாவது பரிஹாஸமாயாவது [1] ஸ்தோபமாயாவது அவமதியாகவாவது வைகுந்தனுடைய நாமத்தைச்சொல்வார்களாயின், அது அவர்களுடைய ஸமஸ்த பாபங்களையும் போக்குமென்று பெரியோர்கள் நிர்ணயித்திருக்கிறார்கள். உப்பரிகை முதலிய உயர்ந்த இடங்களினின்று விழுந்தவன் வழியில் தடுக்கப்பெற்றவன் தன் வர்ணாஸ்ரம தர்மத்தினின்று நழுவினவன் கை கால் முதலியன முரிந்தவன் ஸர்ப்பாதிகளால் கடியுண்டவன் ஜ்வரம் முதலியவற்றால் எரிக்கப்பெற்றவன் தடி முதலியவற்றால் அடியுண்டவன் ஆகிய இவர்களில் எவனாயினும் ஸ்வாதீனமற்றிருப்பினும் ஹரியென்று சொல்வானாயின், அவன் எவ்வளவு பாபிஷ்டனாயினும் யமயாதனைகளுக்குரியவனல்லன். பேரறிஞரான மஹர்ஷிகள் பாபங்களின் குருலாகவங்

---

1. ஸ்தோபம் நாக்குத் தழதழத்து ஸ்வாதீனமில்லாமல் சொல்லும் வார்த்தை.

களை ஆலோசித்து அவற்றிற்குத் தகுந்தபடி ப்ராயச்சித் தங்களை விதித்திருக்கிறார்கள். ஆயினும் அந்தத்தவம் முதலிய ப்ராயச்சித்தங்கள் தந்தமக்கு ஏற்பட்ட பாபங் களையே போக்குமன்றி அதர்மத்தில் செல்கின்ற மனத் தைப் பரிசுத்தம் செய்யமாட்டா. பகவானுடைய நாம த்தை நினைக்கை முதலிய அவனுடைய ஸேவையில் ஸமஸ்தபாபங்களும் அவற்றிற்கிடமான மனமும் பரிசுத் தமாம். பாபத்தைப் போக்கு மென்னும் ஜ்ஞானத் துடனாவது அந்த ஜ்ஞானமில்லாமலாவது எப்படிப்பட்ட பாபிஷ்டனாயினும் உத்தமஶ்லோகனாகிய பகவானுடைய நாமத்தைச் சொல்லுவானாயின், அது அவனுடைய ஸம ஸ்த பாபங்களையும் பஸ்மம்செய்து விடும். ஒருவன் மிகுந்த வீர்யமுடைய ஔஷதத்தைத் தெரிந்தாவது தெரியா மலாவது உபயோகப் படுத்துவானானால் ஆரோக்யத்தை அடைவதுபோலப் பகவானுடைய நாமமாகிற மந்த்ர மும் அதன் திறமையை அறியாத புருஷனால் கூறப் படுமாயினும் பாபத்தை யெல்லாம் பஸ்மம் செய்து விடும். ஓ தூதர்களே! இங்ஙனம் நாங்கள் மொழிந்த தர்மத்தில் உங்களுக்குச் சம்சயம் உளதாயின், உங்கள் ப்ரபுவாகிய யமனைக் கேட்பீர்களாக. பேரறிஞனாகிய அந்த யமதர்மராஜன் மேன்மைக் கிடமான தர்ம ரஹஸ் யத்தை நன்றாக அறிந்தவன்' என்றார்கள். ஓ மன்னவனே! இவ்வாறு விஷ்ணுதூதர்கள் மொழிந்த பகவந்நாமோச் சாரணரூபமான தர்மத்தின் மஹிமையை நிச்சயித்து அந்த ப்ராஹ்மணனை யமபாசத்தினின்று விடுவித்து மர ணத்தினின்று நீக்கினார்கள். இவ்வண்ணம் விஷ்ணு தூதர்களால் திரஸ்கரிக்கப்பட்ட யமதூதர்கள் யமனு டைய ஸந்நிதானத்திற் சென்று யமதர்மராஜனுக்கு நட ந்த விஷயத்தை யெல்லாம் உள்ளபடி தெரிவித்தார்கள்.

அந்த ப்ராஹ்மணன் யமபாசத்தினின்று விடுபட்டு நிர்ப்பயனுகி முன் நிலைமையைப் பெற்று ஜீவித்தான். அவன் விஷ்ணுகிங்கரர்களைக் கண்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்து தலைவணங்கி நமஸ்காரம் செய்தான். பாபமற்றவனே! அவ்வந்தணன் ஏதோ ஒன்று சொல்ல விரும்பியிருப்பதை அறிந்த விஷ்ணுகிங்கரர்கள் அவன் பார்த்துக்கொண்டேயிருக்கையில் திடீரென்று அதே இடத்தில் மறைந்தார்கள். பிறகு யமதூதர்கள் மொழிந்ததும் வேதங்களின் பூர்வபாகத்தில் விதிக்கப்பட்டதும் ஸத்வராஜஸ்தமோ குணங்களுக்குட்பட்ட ஜனங்கள் அனுஷ்டிப்பதுமான கர்மயோகத்தையும் சுத்தஸத்வம் தலையெடுத்த பெரியோர்கள் அனுஷ்டிப்பதும் வேதாந்தங்களில் விதிக்கப்பட்டதுமான பாகவததர்மத்தையும் கேட்டு மனத்தில் நிச்சயித்துக்கொண்டு பகவானுடைய மஹிமையைக் கேட்டமையால் அவனிடத்தில் மிகுந்த பக்தியோகம் உண்டாகப்பெற்றுத் தன்னுடைய பாபத்தை நினைத்து மிகவும் பரிதபித்தான். ‘நான் மனத்தை வெல்லமுடியாமல் பெருங் கஷ்டத்தை அடைந்தேன். ஐயோ! நான் சூத்ர ஸ்த்ரீயிடத்தில் பிள்ளைகளைப் பெற்று என்னுடைய ப்ராஹ்மண்யத்தை அடியோடு பாழாக்கிக் கொண்டேன். பெரியோர்களால் மிகவும் நிந்திக்கத் தகுந்த என்னை நான் எவ்வளவு நிந்தித்தாலும் போராது. என்னைச் சுடினும் என்பாவம் தீராது. நான் மஹாபாபிஷ்டன்; குலத்தைக் கெடுக்கவந்த பாபி. மற்றும், பரிசுத்தமான வம்சத்தில் பிறந்தவளும் பரிசுத்தையும் ப்ரௌடையாகாத இளம்பருவத்தளுமான என் பார்யையைத் துறந்து ஸுராபானம் செய்யுந்தன்மையளும் அசுத்தையுமான சூத்ர ஸ்த்ரீயைப் புணர்ந்தேன். வயது சென்றவர்களும் நாதனற்றவர்களும் பிள்ளை முதலிய வேறு பந்துக்

களற்றவர்களும் பெருந்தவமுடையவர்களுமான தாய்தந்தைகளை நான் அவர்கள் செய்த உபகாரத்தை அறியாமல் நீசன்போலத் துறந்தேன். எவ்விடத்தில் தர்மஜ்ஞர்களான யமன் முதலியவர்கள் இருக்கின்றார்களோ, எவ்விடத்தில் என்னைப்போன்றகாமிகள் யமயாதனைகளை அனுபவிக்கின்றார்களோ, அப்படிப்பட்ட பயங்கரமான நரகத்தில் நான்விழுவேனென்பதில் ஸந்தேஹமில்லை. இது நிச்சயம். இப்பொழுது யமதூதர்களும் விஷ்ணு தூதர்களும்வந்து ஸம்பாஷணம் செய்யக்கண்டேனே; இதுஸ்வப்னமா? அல்லது நான் நன்றாக விழித்துக் கொண்டிருக்கும்பொழுது கண்டதுதானா? பெரிய ஆச்சர்யமாயிருக்கிறது. இப்பொழுது அந்தத் தூதர்கள் எங்குப்போனார்களோ தெரியவில்லையே. கையில் பாசாயுதத்தைக் கொண்டு என்னைப் பிடித்திழுத்தார்களே. மற்றும், அழகர்களும் அழகிய காட்சியுடையவர்களுமான நான்கு ஸித்தர்கள் புலப்பட்டார்களே. என்னை யமதூதர்கள் பாசங்களால் கட்டி நரகத்திற்கு இழுத்துக்கொண்டு போகையில் அவர்கள் விடுவித்தார்களே. இப்பொழுது அவர்கள் எங்குப் போனார்களோ தெரியவில்லையே. நான் மந்தபாக்யன். ஆயினும் தேவஸ்ரேஷ்டர்கள் எனக்குப் புலப்பட்டதற்குக் காரணமான மங்களம் ஏதோவொன்று என்னிடத்தில் இருக்கவேண்டும். அதனால் தான் என் மனம் தெளிவுற்றிருக்கின்றது. பரமபுருஷனும் என்னிடத்தில் அனுக்ரஹம் செய்திருக்கிறான். இல்லாதபக்ஷத்தில் சூத்ர ஸ்த்ரீயைப் புணர்கின்றவனும் அசுத்தனும் மரணம் அடையமுயன்றவனுமாகிய என்னுடைய நாக்கு வைகுந்தனுடைய நாமத்தை உச்சரிக்கமாட்டாது. நான் மூர்க்கன்; துஷ்டன், பாபிஷ்டன்; சூத்ரஸ்த்ரீ ஸம்பந்தத்தினால் ப்ராஹ்மண்யத்தை அடியோடு அழித்துக்

கொண்டவன்; இவ்வளவு நிலைமையிலிருந்தும் வெட்க மற்றவன். இப்படிப்பட்ட நான் எங்கே? மங்களங்களுக் கெல்லாம் இடமான நாராயணுவென்னும் பகவானுடைய நாமம் எங்கே? இப்படிப்பட்ட எனக்கு மரணகாலத்தில் அவனுடைய நாமோச்சாரணம் புண்யமில்லாமல் எங்ஙனம் உண்டாகும்? ஸித்தர்களைக் கண்டமையாலும் பகவானுடைய நாமத்தை உச்சரித்தமையாலும் புண்யமுடையவனென்று ஊஹிக்கத்தகுந்த நான் மனத்தையும் மற்ற இந்த்ரியங்களையும் ப்ராணவாயுவையும் அடக்கிக் கொண்டு, என்னை நான் மீளவும் பாபிஷ்டமான நரகத்தில் அழுத்தாதிருக்குமாறு யத்னம் செய்யவேண்டும். தேஹாத்மாபிமானம்முதலியவற்றிற்கிடமான அஞ்ஜானம் சப்தாதி விஷயங்களை விரும்புகையாகிற காமம் கர்மம் ஆகிய இவற்ருல் உண்டானதும் கர்ப்ப ஜன்ம ஜரா மரணுதி ரூபமுமான ஸம்ஸாரத்தைத் துறந்து ஸமஸ்தபூதங்களிடத்திலும் நட்பும் கருணையும் மனச்சிறப்புமுடையவனுகி மடந்தையென்னும் பேருடைய பகவானுடைய மாயையால் பிடியுண்ட என்னை அதினின்று விடுவித்துக் கொள்ளவேண்டும். பகவானுடைய மாயையே ஓர் வடிவங்கொண்டாற்போன்ற இம்மடந்தையாலல்லவோ நான் ஞான சூன்யனுகி விளையாட்டு ம்ருகம்போலப் பல ஆட்டங்களைப்பெற்றேன். தேஹத்திலுள்ள அஹங்காரமும் அதைத் தொடர்ந்த மற்றவைகளிடத்திலுண்டான மமகாரமும் ஆகிய அயதார்த்தமான புத்தியைத் துறந்து மனத்தைப் பகவானுடைய குணகீர்த்தனுதிகளால் பரிசுத்தமாக்கி அந்தப் பகவானிடத்தில் அதை நிலைநிறுத்தப்போகிறேன்' என்று தனக்குள் சிந்தித்துக்கொண்டான். இங்ஙனம் பெரிய நிர்வேதம் உண்டாகப்பெற்ற அவ்வஜாமிளன் க்ஷணகாலம் மாத்ரமே ஸாதுக்களோடு

ஸஹவாஸம் உண்டானமையால் பிள்ளை பெண்டிர் முதலிய ஸமஸ்த பந்தங்களையும் துறந்து கங்காத்வாரத்திற்குச் சென்றான். அவ்வஜாமிளன் தேவர்க்கும் தேவனாகிய பரமபுருஷனுடைய ஸந்நிதானம் மாறாதிருக்கப்பெற்ற அந்தக் கங்காத்வாரத்தில் உட்கார்ந்து பக்தியோகம் செய்ய ஆரம்பித்து இந்த்ரியங்களையெல்லாம் சப்தாதி விஷயங்களில் போகவொட்டாமல் இழுத்தடக்கி முதலில் ப்ரத்யகாத்மாவினிடத்தில் மனத்தைச் செலுத்தினான். அப்பால் ஸத்வ ரஜஸ் தமோகுணங்களின் பரிணாமமாகிய தேஹாதிகளைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டு விலக்ஷணனென்பதை அறிந்து அவ்வாத்மாவுக்கு அந்தர்யாமியான பரமாத்வாவை த்யானித்து ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அபரிச்சின்னனும் நித்ய ஜ்ஞான ஸ்வரூபனும் பரந்தாமனுமாகிய பகவானிடத்தில் அம்மனத்தை நிலைநிற்கச் செய்தான். இங்ஙனம் பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடைய அவ்வஜாமிளன் சப்தாதி விஷயங்களினின்று மதி நீங்கப்பெற்று, முன்பார்த்த விஷ்ணுதூதர்கள் எதிரே வந்து நிற்கக் கண்டான். அவன் 'நாம் இவர்களை முன்பு கண்டோமே' என்று தெரிந்துகொண்டு தலைவணங்கி அவர்களை நமஸ்கரித்தான். அவர்களைக் கண்டபிறகு கங்கையின் தீர்த்தத்தில் தேஹத்தைத் துறந்து அந்த க்ஷணமே அவ்விஷ்ணு தூதர்களின் தேஹம் போன்ற திவ்யதேஹத்தைப் பெற்றான். அவ்வந்தணன் பரம புருஷனுடைய கிங்கரர்களுடன் ஸ்வர்ண மயமான விமானத்தில் ஏறிக்கொண்டு ஆகாசமார்க்கத்தினால் ஸ்ரீய:பதியான ஸர்வேஸ்வரன் வீற்றிருக்கிற வைகுண்ட லோகம் போய்ச்சேர்ந்தான். இங்ஙனம் அவ்வந்தணன் தனது வர்ணாச்ரம தர்மங்களையெல்லாம் அழித்துத் தாஸியைப் புணர்ந்து பதிதனாகி நிந்தைக்கிடமான கார்

யங்களையே செய்துகொண்டு வ்ரதங்களெல்லாம் பாழாகப்பெற்று மரணகாலம் ஸமீபிக்க நரகத்தில் விழும்படி யமபடர்களால் இழுக்கப்படும் ஸமயத்தில் பகவானுடைய நாமத்தை உச்சரித்து உடனே அவ்வாபத்தினின்று விடுபட்டான். ஸம்ஸாரபந்தத்தினின்று விடுபடவேண்டுமென்று விரும்புகின்றவர்களுக்கு அந்த ஸம்ஸாரத்திற்கடியான கர்ம பந்தத்தை வேரோடறுப்பது பகவானுடைய நாமோச்சாரணத்தைக்காட்டிலும் வேறொன்றும் இல்லை. ரஜஸ் தமோகுணங்களால் அழுக்கடைந்த மனம் பகவானுடைய நாமோச்சாரணத்தினால் பரிசுத்தமாகி ஸம்ஸார ஹேதுவான கர்மங்களில் பற்றாது. மனத்திற்கு இந்நிலைமை வேறு எவ்வழியாலும் உண்டாகாது. இந்த உபாக்யானம் பரம ரஹஸ்யம். பாபங்களைப் போக்கும். இதை ஶ்ரத்தையுடன் படிக்கிறவனும் பக்தியுடன் சொல்லுகிறவனும் எப்படிப்பட்ட பாபிஷ்டனாயினும் நரகத்தை அடையமாட்டான். யமகிங்கரர்கள் அவனைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டார்கள். அவன் விஷ்ணு லோகம் சென்று அங்குள்ளவர்களால் வெகு மதிக்கப்பெறுவான். அஜாமிளன் மரணகாலத்தில் நாராயணாவென்று பிள்ளையை அழைத்தானன்றி அப்பொழுது அவனுக்குப் பகவானைப் பற்றின நினைவே கிடையாது. ஆயினும் அது பகவானுடைய நாமமாகையால் அதைச்சொன்ன மாத்ரத்தில் அவன் விஷ்ணுலோகத்தை அடைந்தான். பகவானுடைய குணங்களை வெளியிடுகின்ற நாராயணாதி நாமங்களை ஒருவன் ஶ்ரத்தையுடன் உச்சரிப்பானாயின், அவன் விஷ்ணுலோகத்தை அடைவானென்பதில் சொல்லவேண்டுமோ? இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

யமதூதர்கள் யமனைக்கேட்க அவன் அவர்களுக்கு ஸமாதானம் கூறுதல்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—ஸம்ஸாரத்திலுள்ள ஜனங்களெல்லாம் தன்வசமாயிருக்கப் பெற்ற யமதர்மராஜன் விஷ்ணுதூதர்களால் தன் தூதர்கள் நிராகரிக்கப்பட்ட வ்ருத்தாந்தத்தை அவர்கள் சொல்லக் கேட்டு என்ன மொழிந்தான்? மஹர்ஷீ! யமனுடைய ஆஜ்ஞை ஓரிடத்தில் பங்கப்பட்டதாக இது வரையில் எப்பொழுதும் கேட்டதில்லை. இவ்விஷயத்தில் எல்லோர்க்கும் ஸம்சயம் உண்டாகக்கூடியது. முனிவரே! இந்த ஸந்தேஹத்தைத் தீர்ப்பவர் உம்மைவிட மற்றொருவரும் இல்லையென்று நிச்சயித்திருக்கிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—விஷ்ணுதூதர்களால் தம் முயற்சி தடைபடப்பெற்ற யமதூதர்கள் தம் ப்ரபுவாகிய யமனிடம் சென்று விண்ணபபம்செய்தார்கள். 'ப்ரபூ! இவ்வுலகத்தில் புண்யகர்மம் பாபகர்ம்ம் மிச்ரகர்மம் என்று மூன்றுவகையான கர்மங்களைச்செய்கிற ஜீவலோகத்திற்குக் கர்மபலன்களைக்கொடுக்கும் ப்ரபுக்கள் எத்தனைபேர்கள் இருக்கிறார்கள்? தண்டனை விதிக்கும் ப்ரபுக்கள் பலர் உளராயின், ஸுகதுக்கங்கள் எவனுக்கு உண்டாகும்? எவனுக்கு உண்டாகாது? அந்த ப்ரபுக்கள் ஒருவர்க்கொருவர் ஒத்துமையின்றி ஒருவன் கட்டளையை மற்றொருவன் தடுப்பானாயின், ஜீவலோகத்தில் ஒருவனுக்கும் ஸுகமாவது துக்கமாவது உண்டாகமாட்டாது. தண்டனை விதிக்கும் ப்ரபுக்கள் பலராயினும், அவர்கள் ஒத்திருப்பார்களாயின், ஜீவலோகத்திற்கு ஸுகதுக்கங்கள் உண்டாகக்கூடும். ஆயினும் அவர்களுடையப்ரபுத்வம் சிலதேசங்களுக்குப்ரபுக்களாகியராஜாக்களின்ப்ரபுத்வம் போன்று முக்யமாயிராது. உலகத்தில் சிலர் பலப்ராணி

களைத் தம்வசங்கொண்டு ப்ரபுக்களாயிருக்கின்றார்கள். நீ அந்த ப்ராணிகளுக்கும் அவர்க்கு ப்ரபுக்களான மற்றவர்க்கும் மேலான ப்ரபு. நீ நன்மை தீமைகளை ஆராய்ந்தறிந்தவன்; அவற்றை ப்ரஜைகளுக்கும் அறிவிப்பவன்; பாபஞ் செய்தவர்களுக்குத் தண்டனை விதிப்பவன். உன் கட்டளை பூலோகத்தில் இது வரையில் தடைப்பட்டதில்லை. இப்பொழுது அற்புதமான உருவமுடைய நான்கு ஸித்த புருஷர்கள் வந்து உன் கட்டளையைத் தடுத்து விட்டார்கள். நாங்கள் ஒரு பாதகனை நரகத்திற்கு இழுத்துக்கொண்டு வருகையில், அந்த ஸித்தர்கள் வந்து பாசங்களை அறுத்துப் பலாத்காரமாக அவனை விடுவித்தார்கள். நாராயணவென்று சொன்ன மாத்ரத்தில் பயப்படாதேயென்று விரைந்தோடி வந்தார்கள். அவர்கள் யாரென்பதை நாங்கள் அறிய விரும்புகிறோம். அவர்களை எங்களுக்குச் சொல்லவேண்டும்' என்றார்கள். ப்ரஜைகளைத் தண்டிக்கும் அதிகாரியாகிய யமதேவன் தன் படர்கள் இங்ஙனம் வினவக்கேட்டு ஸந்தோஷம் அடைந்து பகவானுடைய பாதாரவிந்தங்களை நினைத்துக்கொண்டு தன் தூதர்களைப் பார்த்து 'என்னைக் காட்டிலும் மேற்பட்டவன் மற்றொருவன் உளன். அவன் ஜங்கமஸ்தாவரரூபமான ஸமஸ்த ஜகத்திற்கும் ப்ரபு; வஸ்த்ரத்தில் நூல்போல அவனிடத்தில் இந்த ஜகத்தெல்லாம் கோக்கப்பட்டிருக்கிறது. ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றும் அவனுடைய ஸங்கல்பத்தினால் தான் நடக்கின்றன. மூக்கில் கயிறு கோக்கப்பெற்ற எருதுகள் மனிதரிடம் உட்பட்டிருப்பது போல, இவ்வுலகம் முழுவதும் அவன் வசத்தில் இருக்கின்றது. தாமணியில் கயிறுகளால் பசுக்களைக் கட்டுவதுபோல, அவன் வேதஸ்வரூபமான தன் வாக்கில்

வர்ணாஶ்ரம தர்மங்களால் ஜனங்களைக் கட்டுகிறான். ஜனங்கள் நாமங்களும் கர்மங்களும் நியதமாயிருக்கப் பெற்று அவனிடத்தில் பயந்து அவனுக்குப் பூஜை செய்கிறார்கள். யமனென்று பேர் பெற்ற நான் மஹேந்த்ரன் நிருதி வருணன் ஸோமன் அக்னி ருத்ரன் வாயு ஸூர்யன் ப்ரஹ்மதேவன் தேவதைகள் விஶ்வாவஸு முதலிய உபதேவதைகள் ஸாத்யர் மருத்கணங்கள் ருத்ரகணங்கள் ஸித்தர் ரஜஸ்தமோகுணங்கள் தீண்டப்பெறாத ப்ருகு முதலிய ப்ராஜாபதிகள் ஆகிய நாங்கள் அனைவரும் ஸத்வகுணம் தலையெடுத்திருப்பவராயினும் அந்தப் பகவானுடைய மாயையினால் தீண்டப்பெற்று அவனுடைய கருத்தை அறியவல்லரல்லோம். அவன் ஸமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன்; அவர்களுடைய ஹ்ருதயத்தில் வாஸம் செய்கிறான். அவனை ப்ராணிகள் இந்த்ரியங்கள் மனம் ப்ராணயாமம் ஹ்ருதயம் வாக்கின் திறமை இவற்றில் எதனாலும் காணமுடியா. உருவங்களைக் கண் பார்க்குமன்றிக் கண்ணை உருவங்கள் பார்க்கவல்லவையோ? அங்ஙனமே அந்தப் பகவான் அவரவர் ஹ்ருதயத்தில் நித்யவாஸம்செய்யினும் அவனைப்பார்க்கமுடியாது. அவன் ஸ்வதந்த்ரன், ப்ரக்ருதியை அடக்கியாள்பவன், ஸர்வேஶ்வரன்; பரமபுருஷன்; மஹானுபாவன்; தன்னைப் பற்றினாருடைய பாபங்களைப் போக்குந் தன்மையன். அத்தகையனான அந்தப் பகவானுடைய தூதர்கள் இவ்வுலகத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் மனத்திற்கினியராயிருப்பார்கள். அவர்களுடைய உருவமும் குணங்களும் ஸ்வபாவமும் பகவானோடொத்திருக்கும். அவ்விஷ்ணுதூதர்கள் தேவதைகளாலும் பூஜிக்கப்படும் பெருமையுடையவர்கள். அவர்களுடைய உருவம் பளபளவென்று ஜ்வலித்

துக் கொண்டிருக்கும். அவர்களுடைய காட்சி மிக்க அற்புதமாயிருக்கும். ஸாதாரணமாய் ஒருவர்க்கும் புலப் பட மாட்டார்கள். அவர்கள் பகவானிடத்தில் பக்தி யுடைய ஜனங்களை ம்ருத்யுவாகிய என்னிடத்தினின்றும் மற்ற ஸமஸ்தபூதங்களிடத்தினின்றும் பாதுகாக்கிறார் கள். பகவான் மொழிந்த தர்மஸூக்ஷ்மத்தை ரிஷிகளா வது தேவதைகளாவது ஸித்த ச்ரேஷ்டர்களாவது அஸுரர்களாவது மனுஷ்யர்களாவது அறியமாட்டார் கள். வித்யாதரர் சாரணர் முதலிய மற்றவர் இதை எங் ஙனம் அறியப்போகிறார்கள்? ஓ படர்களே! ஆனால் இதை அறிந்தவர் யாவரெனில், சொல்லுகிறேன், கேளுங்கள். நான் ப்ரஹ்மதேவன் நாரதர் ருத்ரன் ஸனத் குமாரர் கபிலர் ஸ்வாயம்புவமனு ப்ரஹ்லாதன் ஜகனர் பீஷ்மர் பலி ஸ்ரீசுகர் ஆகிய நாங்கள் பன்னிருவரும் பரம ரஹஸ்யமான இந்தப் பாகவததர்மத்தை அறி வோமன்றி மற்றவர்க்குத் தெரியாது. மற்றவர்க்கு இதை அறியவும் முடியாது; பரிசுத்தமானது இதை அறிந்தவன் மோக்ஷத்தை அடைவான். பகவா னுடைய நாமத்தை உச்சரிக்கை முதலியவற்றால் அவனிடத்தில் விளையும் பக்தியோகமே இவ்வுலகத்தி லுள்ள புருஷர்கள் ஸாதிக்கவேண்டிய மேலான தர்ம மாம். பிள்ளைகளே! பகவானுடைய நாமோச்சாரணத் தின்மஹிமையைப் பாருங்கள். அஜாமிளனுங்கூட ம்ரு த்யு பாசத்தினின்று விடுபட்டான். புருஷர்கள் தமது பாபங்கள் தீரவேண்டுமென்று விரும்புவார்களாயின், பக வானுடைய குணங்களையும் செயல்களையும் வெளியிடு கிற நாமங்களில் ஏதேனுமொன்றைச் சொல்லின் இவ் வளவே போதும். மஹாபாபிஷ்டனாகிய அஜாமிள னும் நாராயணாவென்று மரணகாலத்தில் பிள்ளையை

அழைத்த மாத்ரத்தில் மோக்ஷத்தை அடைந்தான். இவ்வுலகத்திலுள்ளவர் சாஸ்த்ரங்களைப் பரக்கக் கற்றுணரினும் பகவானுடைய மாயையால் மிகவும் மதிமயங்கி ஸ்வர்க்கம் முதலிய அற்ப புருஷார்த்தங்களை வெளியிட்டு வஞ்சிக்கிற வேதத்தில் அபிநிவேசம் கொண்டு மஹத்தான யாகாதி கர்மங்களை அனுஷ்டிக்க முயன்று பகவந்நாமோச் சாரணத்தின் மஹிமையை அறிகிறதில்லை. எவர்கள் நல்லமதி உண்டாகப்பெற்று பகவானுடைய நாமோச்சாரணத்தின் மஹிமையை ஆராய்ந்து அபரிச்சின்னனான பகவானிடத்தில் பக்தியோகம் செய்கின்றார்களோ, அவர்கள் என் தண்டனைக்குட்பட்டவர்களல்லர். அவர்களுக்கு ஏதேனும் சிறிது பாபம் உளதாயினும், அதை அவர்கள் செய்யும் பகவந்நாமோச்சாரணம் போக்கிவிடும். பகவானைச் சரணம் அடைந்து ஸாதுகுணங்கள் அமைந்து எல்லாம் பகவத்ஸ்வரூபமேயென்றுணர்ந்து ஜகத்தையெல்லாம் ஸமமாகப் பார்க்குந் தன்மையுடையவர் பெரியோர்கள். அவர்களுடைய புகழ் பரிசுத்தமானது. அதைத் தேவர்களும் ஸித்தர்களும் பாடுகிறார்கள். அவர்களைப் பகவான் தன் கதையால் பாதுகாக்கிறான். நீங்கள் அவர்களருகாமையில் செல்ல வேண்டாம். அவர்களுக்கு ஸம்ஸாரபயமே கிடையாது. மற்றும், அவர்களைத் தண்டிக்க நாம் ஸமர்த்தரல்லோம். ஸாம்ஸாரிக ஸுகங்களில் மனம் செல்லப் பெறாதவரும் ருசியறிந்தவருமான பரமஹம்ஸர்கள் ஸர்வகாலமும் ஆதரிக்கிற முகுந்தனுடைய பாதாரவிந்தங்களின் தேன் போன்ற அனுபவ ரஸத்தில் எப்பொழுதும் மனம் செல்லாமல் பாபிஷ்டர்களாகி நரகத்திற்கு வழிகாட்டுகிற இல்லற வாழ்க்கையில் விருப்புற்றிருக்கின்ற பாபிஷ்டர்களை மாத்ரமே இவ்விடம் கொண்டு வருவீர்களாக. நாக்கால்

பகவானுடைய குணங்களை வெளியிடுகிற அவன் நாமங்களைப் பேசாமல், மனத்தினால் அவன் பாதாரவிந்தங்களை நினைக்காமல், தலையினால் ஒரு காலும் அனுக்கு வணங்காமல் பகவானுடைய ஆராதனத்தை இம்மியும் அனுஷ்டிக்காத பாபிஷ்டர்களை மாத்ரமே இங்குக்கொண்டு வருவீர்களாக. ஸ்ரீமந்நாராயணன் புராண புருஷன்; ஷாட்குண்யபூர்ணன். என் தூதர்களாகிய நீங்கள் செய்த அபராதத்தை அவன் பொருத்தருள்வானாக. நாம் அவனுடைய தாஸர்கள்; ஒன்றுமறியாதவர்கள். நாம் அஞ்சலி செய்து வேண்டுவோமாயின், அவன் நம்மிடத்தில் பேரருள்செய்வான். அவன் அந்தர்யாமி. அவனுக்கு நமஸ்காரம்' என்றான். குருவம்ச ஶ்ரேஷ்டனே! ஆகையால் விஷ்ணுவின் நாமத்தை உச்சரிக்கை ஜகத்திற்கு மங்களங்களையெல்லாம் விளைக்கும். மஹத்தான பாபங்களுக்கும் இதுவே முக்யமான ப்ராயச்சித்தமென் றுணர்வாயாக. ஸ்ரீவிஷ்ணுவின் புகழ்கள் எல்லையில்லாதவை. ஸர்வகாலமும் அவற்றைக்கேட்கிறவர்களும் சொல்லுகிறவர்களும் அவனிடத்தில் பக்தி நன்றாக விளையப்பெறுவார்கள். அவரதுமனம் இந்தப்பக்தியினால் சுத்தமாவதுபோல் மற்ற வ்ரதாதி நியமங்களால் சுத்தமாகாது. ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களின் ரஸமறிந்தவன் பாபத்திற்கிடமான சப்தாதி விஷயங்களில் மனப்பற்று செய்யமாட்டான். அதை அறியாதவன் சப்தாதி விஷயங்களால் அடிபட்டுத் தன் பாபத்தைப் போக்க விரும்பி ப்ராயச்சித்த ரூபமான கர்மங்களைச் செய்வான். அவன் அதனால் மீளவும் பாபத்தையே ஏற்றுக்கொள்வானன்றிப் பாபத்தினின்று நீங்கமாட்டான். பரீக்ஷித்து மன்னவனே! இங்ஙனம் யமதூதர்கள் தம் ப்ரபுவான யமதர்மராஜன் மொழிந்த பகவானுடைய மஹிமையெல்லாம் விஷ்ணுதூதர்கள் சொன்னதோ

டொத்திருப்பதைக் கண்டு வியப்புற்றுப் பகவானுடைய பக்தர்களின் அருகாமையில் சென்றால் நம்மை ப்ரபு தண்டிப்பானென்று அந்த யமனிட்ட கட்டளைக்கஞ்சி அதுமுதல் அவர்களைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் பயப்படுகின்றார்கள். மலயபர்வதத்தில் பகவானை ஆராதித்துக் கொண்டிருக்கிற அகஸ்த்ய மஹர்ஷி பரமரஹஸ்யமான இந்த இதிஹாஸத்தை எனக்கு மொழிந்தார். மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

தக்ஷர் ப்ரஜைகளைப் படைக்க விரும்பிப் பகவானை ஆராதித்தல்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—மஹர்ஷி! ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் நடந்த தேவர்கள் அஸுரர்கள் மனுஷ்யர்கள் நாகர்கள் ம்ருகங்கள் பக்ஷிகள் இவர்களின் ஸ்ருஷ்டி க்ரமத்தைச் சுருக்கமாகச் சொன்னீர். பரம புருஷனாகிய பகவான் ப்ராணிகளை எந்தச் சக்தியினால் எப்படி ஸ்ருஷ்டித்தானோ, அதை விரிவாக அறிய விரும்புகிறேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ப்ராசேதஸர்களென்கிற ப்ராசீனபர்ஹியின் பிள்ளைகள் பதின்மர் ஸமுத்ரமத்யத்தினின்று கரையேறிப் பூமியெல்லாம் வ்ருக்ஷங்கள் நிறைந்திருக்கக் கண்டார்கள். அவர்கள் வ்ருக்ஷங்களின் மேல் கோபித்துக்கொண்டு தவத்தினால் கோபம் ஜ்வலிக்கப்பெற்று அந்த வ்ருக்ஷங்களையெல்லாம் தஹிக்க விரும்பி முகத்தினின்று வாயுவையும் அக்னியையும் ஸ்ருஷ்டித்தார்கள். கௌரவஶ்ரேஷ்டனே! அந்த வாயுவும் அக்னியும் சேர்ந்து வ்ருக்ஷங்களையெல்லாம் தஹிக்கையில், மஹானுபாவனாகிய சந்த்ரன் அதைக் கண்டு அவரது கோபத்தை அணைக்கமுயன்று 'ஓ மஹாபாக்ய

சாலிகளே! வ்ருக்ஷங்கள் மன இரக்கத்திற்கிடமானவை. இவற்றிற்கு நீங்கள் த்ரோஹம் செய்வது யுக்தமன்று. நீங்கள் உலகங்களை வ்ருத்திசெய்ய வேண்டுமென்று விரும்புகிறவர்களல்லவா? ப்ரஜைகளைப் பாதுகாப்பதற்காக ஏற்பட்டவர்கள். ஸர்வேஸ்வரன் ப்ரஹ்மதேவன் முதலிய ப்ரஜாபதிகள் அனைவர்க்கும் ப்ரபு. அவன் நீங்கள் கொளுத்துகிற வ்ருக்ஷங்களிலும் அந்தராத்மாவாய் நிறைந்திருப்பவன். ஆயினும் அவற்றின் விகாரம் தீண்டப் பெறுதவன். அப்படிப்பட்ட பகவான் பித்ருக்களையும் தேவதைகளையும் உத்தேசித்துக் கொடுக்கும் அன்னத்தை விளைப்பவைகளான வ்ருக்ஷங்களையும் ஔஷதிகளையும் முதலில் ஸ்ருஷ்டித்தான். பாதங்களால் ஸஞ்சரிக்கின்ற ஜங்கம பூதங்களுக்குக் காலில்லாத ஸ்தாவர பூதங்கள் ஆஹாரமாக ஏற்பட்டிருக்கின்றன. கையுள்ள இரண்டு கால் ப்ராணிகளுக்குக் கையில்லாத நாற்கால் ஜந்துக்கள் ஆஹாரமாகின்றன. ஸ்தாவரங்களில் ஒன்று மற்றொன்றுக்கு ஆஹாரமாகிறதில்லை. அவை ஜனங்களுக்கே ஆஹாரமாகப் படைக்கப்பட்டிருக்கின்றன. அவை எவ்வகை அபாதமுமில்லாதவை. ஆகையால் அவற்றிற்கு த்ரோஹம் செய்வது யுக்தமன்று. நீங்கள் இத்தனை காலமாய்த் தவம்செய்து பாபமற்றிருக்கிறீர்கள். நீங்கள் உங்கள் தந்தையான ப்ராசீனபர்ஹியாலும் தவத்தினால் ஸந்தோஷம் அடைந்த பகவானாலும் ப்ரஜைகளைப் படைக்கும்படி நியமிக்கப்பட்டீர்கள். அந்த ப்ரஜைகளுக்கு ஆஹாரமான வ்ருக்ஷங்களை எப்படி தஹிக்கலாம்? ஆகையால் பெரியோர்கள் நடக்கும்படியான வழியைக் கைப்பற்றுவீர்களாக. உங்கள் தந்தையும் பாட்டனும் முப்பாட்டன் முதலிய மற்ற உங்கள் பெரியோர்களும் இந்த ஸன்மார்க்கத்திலேயே நடந்தார்கள். கொழுந்து

விட்டெரிகின்ற கோபத்தை அடக்கிக் கொள்வீர்களாக. மற்றும் குழந்தைகளுக்குத் தாய் தந்தைகள் போலவும், கண்ணுக்கு இமைபோலவும், மடந்தையர்க்குக் கணவன் போலவும், பரமாத்மரஹஸ்யத்தை அறிய விரும்புகிற ஸந்நியாஸிகளுக்குப் பண்டிதன்போலவும், ஜங்கம ஸ்தாவர ரூபமான பூதங்களுக்கு மன்னவனே பந்துவும் ரக்ஷகனும் நண்பனுமாவான். ஆகையால் நீங்கள் உங்களை அடுத்த இந்த வ்ருக்ஷங்களுக்கு த்ரோஹம் செய்யலாகாது. மற்றும், பகவான் ஸமஸ்த பூதங்களுடைய ஹ்ருதயங்களிலும் உள்புகுந்து நியமித்துக் கொண்டிருக்கிறான். ஆகையால் ஜகத்தெல்லாம் அவனுக்குச் சரீரமென்று பாவிப்பீர்களாக. இப்படி செய்வீர்களாயின் அந்தப் பகவான் உங்கள் விஷயத்தில் ஸந்தோஷம் அடைவான். இங்ஙனம் பகவானுடைய சரீரங்களாகிய இந்த வ்ருக்ஷங்களுக்கு நீங்கள் த்ரோஹம் செய்வது யுக்தமன்று. மனத்தில் திடீரென்று கிளம்பின பெருங்கோபத்தை ஆத்ம விசாரத்தினால் அடக்குவானாயின், அவன் ஸத்வாதி குணங்களைக் கடந்து க்ரமத்தில் ஸம்ஸார பந்தத்தினின்று விடுபடுவான். ஆகையால் சிரபராதிகளான வ்ருக்ஷங்களைக் கொளுத்தினது போதும். மிகுந்த வ்ருக்ஷங்களுக்கு உங்களிடத்தினின்று க்ஷேமம் உண்டாகுக. இந்த வ்ருக்ஷங்கள் இப்பெண்மணியைப் பாதுகாத்து வந்தன. இவள் அழகிய லக்ஷணங்கள் அமைந்தவள். மாரிஷை யென்னும் பேருடையவள். இவளை நீங்கள் பார்யையாக அங்கீகரிப்பீர்களாக' என்றான். ஸோமராஜன் இங்ஙனம் அவர்களுக்கு நல்வார்த்தை சொல்லி அப்ஸரஸ்த்ரீகளின் புதல்வியும் மடந்தையர்மணியுமாகிய அக்கன்னிகையை அவர்களுக்குக் கொடுத்துப்போய்ச் சேர்ந்தான். அப்பால் அந்த ப்ராசேதஸர்கள் அனைவ

ரும் தர்மத்தின்படி அப்பெண்ணை மணம் புரிந்தார்கள். அவர்களுக்கு அந்த மாரிஷையிடத்தில் தக்ஷர் ப்ராசேதஸரென்று பேர்பூண்டு பிறந்தார். இவர் ஸ்ருஷ்டித்த ப்ரஜைகளால் மூன்று லோகங்களும் பெரும்பாலும் நிறைந்தன. அவர்க்குப் புதல்விகளிடத்தில் ப்ரீதி மிகுந்திருக்கும். அவர் வீர்யத்தினாலும் ஸங்கல்பதித்தினாலும் ப்ராணிகளைப் படைத்தவிதம் சொல்லுகிறேன். அதை என்னிடத்தில் ஊக்கத்துடன் கேட்பாயாக. ப்ராசேதஸரென்கிற அந்த ப்ரஜாபதி தேவர் அஸுரர் மனுஷ்யர் முதலிய ப்ரஜைகளை யெல்லாம் முதலில் ஸங்கல்பத்தினாலேயே படைத்தார். அவற்றில் சில ஆகாயத்திலுள்ளவை. சில பூமியிலுள்ளவை. சில ஜலத்திலுள்ளவை. ஸங்கல்பத்தினால் நடத்தின அந்த ப்ரஜாஸ்ருஷ்டி அவ்வளவாக மேன்மேலும் வளராதிருப்பதைக்கண்டு அந்த ப்ராசேதஸர் விந்த்ய பர்வதத்தின் தாழ்வரைகளிற் சென்று பிறரால் அனுஷ்டிக்க முடியாத கடுந்தவத்தை நடத்தினார். அந்த விந்த்யமலையின் தாழ்வரையில் அகமர்ஷணமென்னும் புண்யதீர்த்தம் ஒன்று இருக்கின்றது. அது பாபங்களையெல்லாம் போக்கும்; புண்ய தீர்த்தங்களெல்லாவற்றிலும் சிறந்தது. அதில் அந்தப்ராசேதஸர் மூன்று காலங்களிலும் ஸ்நானம்செய்து தவத்தினால் பகவானை ஆராதித்தார். அவர் ஹம்ஸ குஹ்யமென்னும் ஸ்தோத்ரத்தினால் இந்த்ரியங்களுக்குப் புலப்படாத பகவானை ஸ்தோத்ரம் செய்தார். அந்த ஸ்தோத்ரத்தை உனக்குச் சொல்லுகிறேன், கேட்பாயாக. அந்த ப்ராசேதஸர்க்குப் பகவான் அந்த ஸ்தோத்ரத்தினால் ப்ரஸன்னனானான்.

'பரமபுருஷனுக்கு நமஸ்காரம். அவன் சேதன அசேதனங்களைக்காட்டிலும் விலக்ஷணமானவன். அவன் ஸத்ய

ஸங்கல்பன்; ப்ரக்ருதியைச் சரீரமாகவுடையவன். ஜீவாத்மாக்கள் 'தேவன் மனுஷ்யன்' என்னும் புத்திகளுக்கு விஷயமாவதுபோல, அவன் அப்புத்திகளுக்கு விஷயமாக மாட்டான்; தேச கால வஸ்து பரிச்சேதமற்றவன்; தனக்குத் தானே காரணன். அவன் எல்லாச் சரீரங்களிலும் ஜீவாத்மாக்களுக்கு அந்தர்யாமியாய் வஸிக்கின்றான்; ஹிதத்தையே செய்பவன். ஜீவாத்மாக்கள் அனைவரும் அத்தகைய பரமாத்மாவுக்கு, ரத்னத்திற்குக்காந்திபோல் சேஷப்பட்டிருப்பவர்கள். அவர்களை அவன் அந்தராத்மாவாய்த்தரித்துக்கொண்டிருக்கிறான். அவர்கள் அவனுக்கு மேன்மையை விளைப்பதே ஸ்வரூபமாகப் பெற்றவராகையால் அவனுக்கு நண்பர்கள். ஆயினும் அவர்கள் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து ஜ்ஞானஸங்கோசத்தை அடைந்து தமக்குள்ள அத்தன்மையை அறியாமலேயிருக்கின்றார்கள். அத்தகைய ஸகாவான பரமபுருஷனுக்கு நமஸ்காரம் செய்கிறேன். தேஹம் ப்ராணன் மனம் ஜ்ஞானேந்த்ரியங்கள் பூமிமுதலிய பஞ்சபூதங்கள் கந்தம் முதலிய தன்மாத்ரங்கள் கர்மேந்த்ரியங்கள் ஆகிய இவை தம்மைக்காட்டிலும் வேறுபட்ட ஜீவாத்மாவை அறிய மாட்டா. ஜீவனோவென்றால், தேஹம்முதலிய அவற்றையெல்லாம் அறிகின்றான். ஆயினும் தேஹாதிகளையும் தன்னையும் அறிகிற ஸர்வஜ்ஞனான பகவானையும் அவன் குணங்களையும் அறிகிறதில்லை. அவன் அபரிச்சின்ன ஸ்வரூபன். அவனை நான் ஸ்தோத்ரம் செய்கிறேன். ஜீவன் உறங்கும்பொழுது பரமாத்மாவினால் அணைக்கப்படுகின்றான். அப்பொழுது ஜீவன் தேஹத்தையே அறியாதிருக்கத், தன்னை அணைக்கின்ற பரமாத்மாவை அறிய ப்ரஸக்தியே இல்லை. அந்தப் பரமபுருஷன் ராகாதி தோஷங்களால் வருங்கலக்கமற்ற உபாஸனரூப ஜ்ஞானத்தினால்

அறியக்கூடியவனேயன்றி மற்றபடி அவனை அறியமுடியாது. அவன் பரிசுத்த ஸ்வரூபன்; பரிசுத்தமான ஹ்ருதயத்தில் வாஸம் செய்பவன். இத்தகையனான பகவானுக்கு நமஸ்காரம். அவன் மும்மூன்றாகிய ஒன்பது சக்திகளுடன் ஸங்கல்பத்தினால் ஜீவாத்மாக்களுடைய ஹ்ருதயங்களில் வீற்றிருக்கிறான். அவனைக் கண் காது முதலிய வெளி இந்த்ரியங்களால் அறியமுடியாது. அரணிக்கட்டையை மத்தாகக்கொண்டு கடைந்து அதினின்று அக்னியை எடுப்பதுபோலப், பண்டிதர்கள் தர்சபூர்ணமாஸாதிகளால் ஆராதிக்கத் தகுந்தவனாகிய அந்தப் பரமபுருஷனை யோகபரிசுத்தமான புத்தியினால் ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணனென்று அறிகின்றார்கள். அவன் விகாரங்களுக்கெல்லாம் இடமான ப்ராக்ருதி ஸம்பந்தம் நீங்கப்பெறுகையாகிற மஹாநந்தரூபமான மோக்ஷத்தில் அனுபவிக்கத் தகுந்தவன். அவனே எல்லாச் சொற்களுக்கும் பொருளாயிருப்பவன். அவனுக்கு ஜகத்தெல்லாம் சரீரம். ஆயினும் அதன் தோஷங்களெவையும் தன்மேல் தீண்டப் பெறாதவன். அவன் ஆச்சர்யமான பல சக்திகளுடையவன். இத்தகையனான அப்பரமபுருஷன் எனக்கு அருள்புரிவானாக. நாம் சப்தத்தினால் சொல்லுகிறதும், புத்தியால் நிச்சயிக்கிறதும், இந்த்ரியங்களால் அறிகிறதும், மனத்தினால் ஸங்கல்பிக்கிறதுமாகிய அவையெல்லாம் பரமபுருஷனுக்குச் சரீரமேயன்றி ஸ்வரூபமன்று. அவை ஸத்வாதி குணங்களின் பரிணாமங்கள். ஆயினும் அவற்றின் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களே அவனுக்கு அஸாதாரணமான லக்ஷணமாம். உலகத்தில் அதிகாணம் அபாதானம் கரணம் ஸம்ப்ரதானம் கர்மம் கர்த்தா என்னும் இச்சக்திகளுக் கிடமான வஸ்துக்களும் ஸாதாரணமான

பலவகை ஸம்பந்தமுடைய வஸ்துக்களும் ப்ரயோஜக சக்திப்ரயோஜ்ய சக்தி இவையுடைய வஸ்துக்களும் காலமும் பரமபுருஷனே. பரமபுருஷன் இந்த ஜகத்தெல்லாம் உண்டாவதற்கு முன்பு கேவலம் காரணவஸ்துவாய் அழியாமலேயிருந்தான். அவனே இந்த ப்ரபஞ்சமாக விரிந்தான். ஆகையால் இந்த ப்ரபஞ்சமெல்லாம் அவனேயன்றி அவனைக்காட்டிலும் வேறுபட்டதன்று. அவனொருவனே, இத்தன்மையனன்றிமற்றொருவனும் இல்லை. அவன் தனக்குத் தானே காரணனன்றி அவனுக்கு மேற்பட்டவனும் இல்லை. ஸ்ருஷ்டிக்கு முன்பு நாமரூபங்களுக்கிடமல்லாத ஸூக்ஷ்ம சேதனசேதனங்களைச் சரீரமாகக்கொண்டிருந்த பரமபுருஷன் நாமரூபங்களுக்கிடமான ஸ்தூலசேதனசேதனங்களைச் சரீரமாகக்கொண்ட புருஷனாய் விரிகின்றான். ஸ்வபாவஸ்வரூபபரிணாமங்களெல்லாம் சரீரங்களாகிய சேதனசேதனங்களைச் சேர்ந்தவைகளேயன்றி அவனைத் தீண்டமாட்டா. உலகத்தில் பலபண்டிதர்கள் பகவானுடைய சக்திகளான ப்ருதிவி முதலிய தத்வங்களைப்பற்றிப் பலவாறு ஸித்தாந்தங்களை ஏற்படுத்திக்கொண்டு ஒருவர்க்கொருவர் விவாதப்படுவதும் ஒத்துப் பேசுவதுமாயிருக்கிறார்கள். அவனுடைய சக்திகள் பண்டிதர்களுக்கும் தமது உண்மை தெரியாதபடி அடிக்கடி மதியை மயக்குகின்றன. அவன் கணக்கில்லாத கல்யாண குணங்களுடையவன்; அபரிச்சின்ன ஸ்வரூபன். இத்தகைய பரமபுருஷனுக்கு நமஸ்காரம். வேதாந்தவாக்யங்களில் சில பரமபுருஷனுக்குக் குணங்கள் உண்டென்றும், சில இல்லையென்றும் சொல்லுகின்றன. உண்மையும் இன்மையும் ஒன்றோடொன்று பொருந்தாதவை. இவ் விருத்த தர்மங்கள் எங்ஙனம் பொருந்து மென்பதை அவ்வேதாந்த வாக்யங்களைக்கொண்டே ஆராய்ந்தறிய

வேண்டும். வேதாந்தவாக்யங்கள் ஸத்யஜ்ஞாநாநந்தரூப னென்றும் அபரிச்சின்னஸ்வரூபனென்றும் கெட்டகுண ங்கள் தீண்டப்பெறாதவனென்றும், சொல்லுகின்றன. ஆகையால் குணங்கள் உண்டென்னும் சொல் கல்யாண குணங்களைப் பற்றினதென்றும், இல்லையென்னும் சொல் கெட்ட குணங்களைப் பற்றினதென்றும் பிரித்தறியவேண் டும். யோகமதத்திலும் ஸாங்க்யமதத்திலும் ஈஸ்வரன் உண்டென்றும் இல்லையென்றும் விவாதத்தில் வேதாந்த வாக்யங்களைக் கொண்டு ஈஸ்வரன் உண்டென்று ஸித்தா ந்தம் செய்வதுபோல், அவ்வாக்யங்களே அவனுக்குக் குணங்களையும் சொல்லுகையால் குணங்கள் உண்டென் பது ஸித்தாந்தமாம். ஆகையால் ஈஸ்வரனில்லையென்ப தும் அவனுக்குக் குணங்கள் இல்லையென்பதும் ப்ரமமே. பரமபுருஷன் கர்மத்தினால் விளையும் நாமரூபங்களற்ற வனாயினும் தன் பாதமூலத்தைப் பணிகிறவர்களை அனு க்ரஹிக்கும்பொருட்டு அவதாரசேஷ்டிதங்களுடன் ராம க்ருஷ்ணாதி நாமங்களையும் அந்தந்த உருவங்களையும் அங் கீகரித்தான். அவன் இணையெதிரில்லாதவன்; அனந் தன். அவ்ன் எனக்கு அருள்புரிவானாக. ப்ரக்ருதியின் பரிணாமமான வஸ்துக்களை அறியுந்தன்மையுடைய இந்த் ரியங்களால் ஜனங்கள் மனோவ்ருத்தியின்படி அந்தந்த வஸ்துக்களைக் காணும்பொழுது தனக்குச் சரீரமாகிய சேதனாசேதனங்களில் அந்தர்யாமியாயிருக்கின்ற பரம புருஷனும் அவர்கட்குத் தோற்றுகிறான். ராஜாவின் சரீரத்தைக் கண்டால் ராஜனையும் கண்டாற்போலவே யல்லவா? அங்ஙனமே ஜகத்திலுள்ள வஸ்துக்களைக் காணும்பொழுது அவற்றிற்கு அந்தர்யாமியாயிருக்கின்ற ஈஸ்வரனையும் கண்டாற்போலவே. ஆனால் இக்காட்சி, எல்லாம் பரமாத்மாவுக்குச் சரீரமென்னும் பாவனை

யுடையவர்க்கேயன்றி மற்றவர்க்குக் கிடையாது. காற்று பூமியைக்காட்டிலும் விலக்ஷணவஸ்துவாயினும் பூமியின் பரிணாமமான புஷ்பத்தின் தூள்களை அடித்துக்கொண்டு அவ்வாஸனையுடன் வீசுகையில் கந்தவஹமென்று பேர் பெறுகின்றது. இங்ஙனமே பரமபுருஷன் ஜகத்தைக் காட்டிலும் விலக்ஷணனாயினும் அதைச் சரீரமாகவுடையவனாகையால் அதன் நாமரூபங்களைப் பெற்றுத் தோற்றுகிறான். அப்படிப்பட்ட ஸர்வேஸ்வரன் என் மனோரதத்தை நிறைவேற்றுவானாக.'

ஓ குரு ஶ்ரேஷ்டனே! இங்ஙனம் அந்த அகமர்ஷண தீர்த்தத்தில் தக்ஷர் ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டிருக்கையில் பகவான் பக்த வத்ஸலனாகையால் அவருக்கு ப்ரத்யக்ஷமானான். அவன் கருத்மானுடைய தோளின்மேல் பாதங்களைத் தொங்கவிட்டுக்கொண்டு முழந்தாள் வரையில் தொங்குகின்ற எட்டுப் புஜங்கள் விளங்கப்பெற்றுச் சங்கு சக்கரம் கத்தி கேடயம் பாணம் தனுஸ்ஸு பாசம் கதை இவைகளைத் தரித்துப் பீதாம்பரம் உடுத்து மேகம் போல் கறுத்துத்தெளிந்தழகிய முகமும் கண்களும் திகழ வனமாலை அணிந்து ஸ்ரீவத்ஸம் கௌஸ்துபம் பெரிய கிரீடம் கைவளை மகரகுண்டலம் அரைநாண்மாலை மோதிரம் கால்வளை சிலம்பு தண்டை தோள்வளை முதலிய ஆபரணங்கள் பூண்டு மூன்று லோகங்களையும் மயக்கும்படியான உருவத்துடன் தோற்றினான். நாரதர் நந்தர் முதலிய பரிவாரங்கள் த்ரிலோகேஸ்வரனான அவ்வாதி புருஷனைச் சூழ்ந்து வந்தனர். தேவர்கள் கூட்டங் கூட்டமாய் அவனைத் துதித்தார்கள். ஸித்தர் கந்தர்வர் சாரணர் முதலிய உபதேவதைகள் அவனைவரும் பாடினார்கள். மிகவும் ஆச்சர்யமான பகவானுடைய அவ்வுருவத்தைக் கண்டு தக்ஷப்ரஜாபதி பயம் தெளிந்து மனக்களிப்புற்றுப்

பூமியில் தண்டம்போல் விழுந்து நமஸ்கரித்தார். நதிகள் ப்ரவாஹங்களால் நிறைந்திருப்பதுபோல, இந்த்ரியங்களெல்லாம் மஹத்தான ஸந்தோஷத்தினல் நிரம்பப்பெற்ற அந்த ப்ராசேதஸர் ஒன்றும் சொல்ல முடியாதிருந்தார். அவர் ப்ரஜைகளை விரும்பி அவனை ஆராதித்தார். அவ்விருப்பத்தை ஆநந்தத்தின் மிகுதியால் சொல்ல முடியாமல் தலைவணங்கி நிற்கிற தன் பக்தரைப் பார்த்து ஸமஸ்த ப்ராணிகளின் அபிப்ராயத்தையும் அறிந்த ஜனார்த்தனன் இங்ஙனம் மொழிந்தான். 'ப்ராசேதஸ! மிகுந்த மதியுடையவனே! நீ தவத்தினல் நன்கு ஸித்திபெற்றனை. மிகுந்த ஶ்ரத்தையுடன் என்னை ஆராதித்து என்னிடத்தில் மேலான பக்தியோகம் உண்டாகப்பெற்றனை. ப்ரஜாபதி! உன்னிடத்தில் நான் மிகவும் ஸந்தோஷம் அடைந்தேன். இந்த ஜகத்தின் அபிவ்ருத்திக்காகவன்றோ நீ தவம் செய்தனை. ப்ராணிகள் வளர்ந்திருக்க வேண்டுமென்பதுவே என் விருப்பம். ப்ரஹ்மதேவன் ருத்ரன் ப்ரஜாபதிகளாகிய நீங்கள் ஸ்வாயம்புவர் முதலிய மனுக்கள் இந்த்ரன் முதலிய தேவதைகள் இவ்வனைவரும் என்னுடைய அம்சங்களே; ப்ராணிகளின் ஸம்ருத்திக்காகவே ஏற்பட்டவர்கள். ப்ராஹ்மணஶ்ரேஷ்டனே! தவம் என்னுடைய ஹ்ருதயம். வித்யை சரீரம். க்ரியைகள் ஆகாரம். ஸோமமுள்ள யாகங்களும் ஸோமமில்லாத யாகங்களும் எனது அங்கங்கள். தானுதி தர்மங்கள் என்மனம். தேவதைகள் என் ப்ராணன். ஸ்ருஷ்டிக்கு முன்பு நானொருவனே இருந்தேன். இச்சேதனசேதனங்களெல்லாம் அப்பொழுது எவையுமே இல்லை. ஜீவாத்மாக்கள் நாம ரூபங்களின்றி என்னிடத்தில் மறைந்திருந்தார்கள். ப்ரக்ருதியும் ஸூக்ஷ்மதசையை அடைந்து உறங்கினற்போல் என்னிடத்தில் முழுவதும் மறைந்தி

ருந்தது நான் அனந்தகல்யாணகுணாகரன். அபரிச்சின்ன ஸ்வரூபன். ஸத்வாதி குணமயமான ப்ரக்ருதியினின்று ப்ராஹ்மாண்டரூபமான என்தேஹம் உண்டாயிற்று. அதுவும் ஸத்வாதி குணங்களின் பரிணாமமே. அப்பொழுது அவ்வண்டத்தினின்று ஸமஷ்டிபுருஷனாகிய ப்ராஹ்மதேவன் உண்டானான். தேவர்களில் மேன்மையுடைய அந்நான்முகன் என்னுடைய ஸங்கல்பத்தினால் ஸ்ருஷ்டிக்க முயன்றும் தன்னை அஸமர்த்தனாக நினைத்தான். அனந்தரம் அவன் என்னால் தவம் செய்யும்படி சொல்லப்பெற்றுத் தாருணமான தவம் செலுத்தினான். தவம் செய்த அந்த ப்ராஹ்மதேவன் ஸ்ருஷ்டிக்க வல்லவனாகித் தவபலத்தினால் ப்ராஜாபதிகளான உங்களை ஸ்ருஷ்டித்தான். ஆகையால் தவமே ஜகத்தின் அபிவ்ருத்திக்குரிய உபாயம். ஓ தக்ஷனே! பஞ்சஜனரென்னும் ப்ராஜாபதிக்கு அஸிக்னியென்று ஓர் புதல்வி இருக்கிறாள். அவளை நீ பார்யையாக அங்கீகரிப்பாயாக. ஆணும் பெண்ணும் கலந்து ஸம்போகிக்கையாகிற தர்மத்தை ஏற்றுக்கொண்டு அதற்குரியவளாகிய அவ்வஸிக்னியிடத்தில் ப்ரஜாஸ்ருஷ்டியை மேன்மேலும் வளர்த்திக்கொண்டு வருவாயாக. உனக்குப் பின்னிட்ட ப்ராஜைகளெல்லாம் என் ஸங்கல்பத்தினால் ஆணும் பெண்ணுமாய்க் கலந்து ஸந்ததியை வ்ருத்திசெய்யப் போகிறார்கள். மற்றும், யஜ்ஞாதி கர்மங்களால் என்னை ஆராதிக்கப் போகிறார்கள்' என்று மொழிந்து ஜகத் ஸ்ருஷ்டி கர்த்தாவான அந்த ஸர்வேஶ்வரன், ப்ராசேதஸர் பார்த்துக்கொண்டேயிருக்கையில், ஸ்வப்னத்தில் கண்ட பொருள்போல் அவ்விடத்திலேயே மறைந்தான். நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

## தக்ஷர் தன் பிள்ளைகளை நாரதர் கெடுத்தாரென்று அவரைச் சபித்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தக்ஷப்ரஜாபதி பகவானுடைய ஸங்கல்பத்தினால் தூண்டப்பட்டுப்பஞ்சஜனருடைய புதல்வியை மணம்புரிந்து அவளிடத்தில் ஹர்யஸ்வரென்னும் பேருடைய பதினாயிரம் பிள்ளைகளைப்பெற்றார். மன்னவனே! அந்தத் தக்ஷருடைய பிள்ளைகள் அனைவரும் கலந்து ஒரே தர்மத்தை ஆசரிக்குந் தன்மை யுடையவர்கள். அவர்கள் தந்தையால் ப்ரஜைகளைப் படைக்கும்படி நியமிக்கப்பெற்று மேற்குதிக்குக்குப் போனார்கள். ஸிந்துநதம் ஸமுத்ரத்தில் போய்க்கலக்குமிடத்தில் நாராயண ஸரஸ்ஸென்று ஓர்புண்யதீர்த்தம் இருக்கின்றது. அது மிகுந்த பெருமையையுடையது.முனிவர்களும் ஸித்தர்களும்அதை ப்ரீதியுடன் பணிகின்றார்கள். ஹர்யஸ்வர்கள் அந்தப்புண்யதீர்த்தத்தைத் தொட்டமாத்ரத்தில் மனமலங்களெல்லாம் கழிந்து பரமஹம்ஸர்கள் ஆசரிக்குந்தர்மத்தில் மதி செல்லப் பெற்றார்கள். ஆயினும் அவர்கள் தந்தையாகிய ப்ராசேஸருடைய கட்டளைக்குட்பட்டுக் கடுமையான தவத்தை நடத்தினார்கள். இங்ஙனம் ப்ரஜைகளின் அபிவ்ருத்திக்காக யத்னஞ்செய்கிற அந்தஹர்யஸ்வர்களைத் தேவரிஷியாகிய நாரதர் கண்டார். அவர் அவர்களை நோக்கி 'ஓ ஹர்யஸ்வர்களே! நீங்கள் பாலர்களாயிருக்கின்றீர்கள். உங்களுக்கு ஒன்றும் தெரியவில்லையே. பூமியின் முடிவை அறியாமல் ஏன் ப்ரஜைகளைப் படைக்கத் தொடங்கினீர்கள். அதை அறிவீர்களாயின் நீங்கள் இச்செயலில் முயற்சிகொள்ளமாட்டீர்கள். ஜகத்திற்கெல்லாம் ஈஸ்வரனொருவனே நியாமகனென்பதையும், ஹ்ருதய பிலத்தினின்று வெளிப்பட்டு வர உபாயம் ஏற்படாமையையும், புத்தியாகிற பெண்மணியின் பலவாறான தோற்றங்களையும், சபல

மான அப்புத்தியுடன் கலந்த ஜீவனுடைய நிலைமையை யும், ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களாகிற இரண்டு கரைகளும் நிறைந்து பாய்கின்ற மாயையாகிற நதியையும், அற்புத மான இருபத்தைந்து தத்வங்களடங்கினதும் ஜீவனோடு கூடியதுமாகிய சரீரமாகிற க்ருஹத்தையும், ஸம்ஸாரபந் தம் மோக்ஷம் இவைகளாகிற இரண்டு இறகுகளையுடைய ஸர்வேஸ்வரனாகிற ஹம்ஸத்தையும், சிறிய கத்திகளாலும் வஜ்ரங்களாலும் நிர்மிக்கப்பட்டுத் திடமும் கூரியதும் சுற்றிக்கொண்டே யிருப்பதுமாகிய காலசக்ரத்தையும், எல்லாம் உணர்ந்து ஜன்மங்கள்தோறும் தந்தையைப் போல் ஹிதத்தையே உபதேசிக்கின்ற சாஸ்த்ரத்தின் அனுகூலமான கட்டளையையும் அறியாமல் நீங்கள் ஸ்ருஷ் டிக்கு யத்னம் செய்கிறீர்கள். இப்படியும் செய்வார் களோ? ஆ!' என்று மொழிந்தார். அந்த ஹர்யஸ்வர்கள் இயற்கையாகவே எல்லாவற்றையும் ஆராய்ந்தறிய வல்ல மதியுடையவர்கள். அவர்கள் நாரதருடைய வார்த்தை யைக் கேட்டுத் தம் புத்தியால் அந்நாரதருடைய[1] கூட மான வார்த்தையின் கருத்தை ஆலோசித்து நிச்சயித் துக் கொண்டார்கள். 'ஜீவனால் அறியக்கூடியதும் ப்ரு திவி முதலிய பஞ்சபூதங்களின் பரிணாமமுமான தேஹத் தைப் பூமியென்று மொழிந்தார். அது அனாதியான புண்ய பாபகர்மங்களைப்பற்றி ஏற்படுகின்றது. அத்தே ஹம் அழியுந்தன்மையுடையதென்பதை அறியாமல் அனாதியான கர்மபந்தத்தைப் போக்குந் திறமையற்று மேன்மேலும் ஸம்ஸாரத்தையே வளர்க்கின்ற கர்மங்க ளைச் செய்வதனால் என்ன உபயோகம்? பகவான், விழித் துக்கொண்டிருக்கை ஸ்வப்னம் காண்கை உறக்கம் என் கிற இம்மூன்று அவஸ்தைகளைக் கடந்தவன்; தனக்குத்

1. மறைந்த கருத்துடைய.

தானே ஆதாரமாயிருப்பவன். ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணன்; ஷாட்குண்ய பூர்ணன்; தோஷங்களெவையும் தீண்டப்பெறுதவன். அவனெருவனே எல்லாவற்றிலும் உட்புகுந்து தரித்து நியமிப்பவன்; கர்மத்தினல் விளையும் உற்பத்தியற்றவன். இத்தகைய ஸர்வேஶ்வரனை உபாஸிக்காமல் மற்ற கர்மங்களைச் செய்வதனல் என்னப்ரயோஜனம்? ஜீவன் குஹைபோன்ற ஹ்ருதயத்தில்சென்று, பாதாளத்தில் சென்றவன் போகங்களில் ஆழ்ந்து தன்னையும் மறந்து தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து அதினின்று வெளிப்படாமல் அவ்விடத்திலேயே இருப்பதுபோல், ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணமான தன் ஸ்வரூபத்தை அறியாமல் காமபோகங்களில் ஆழ்ந்து அதினின்று வெளிப்பட்டுவரத் தெரியாமல் அங்கேயே இருக்கிறுன். ஸ்வயம்ப்ரகாசமான அத்தகைய ஆத்மஸ்வரூபத்தை அறியாமல், மேன்மேலும் சரீரபந்தத்தையே விளைக்கும்படியான கர்மங்களைச் செய்வதனல் என்ன நன்மை உண்டாகும்? கள்ள புருஷனை விரும்பும் பெண்கள் காமமோஹத்தினல் தோன்றபடி திரிவதுபோல், ஜீவனுடைய புத்தி ராகாதி குணங்கள் மறைந்த, வெளியில் திரிகின்றது. அதன் நிலைமையாகிய விவேகம் உண்டாகப் பெறுதவன் அதற்கிடமில்லாத வீண் கர்மங்களைச் செய்வதனல் இவ்வுலகத்தில் என்ன க்ஷேமத்தை அடைவான்? நன்மதியில்லாத பார்யையையுடையவன் அவள் வேண்டுகிற ஆடை யாபரணம் முதலியவற்றைச் சம்பாதிக்கும் ஆயாஸத்தினல் வருந்துவதுபோல், அங்ஙனம் திரிகின்ற புத்திக்கு உட்பட்டுக் கர்மத்திற்கு உட்படாமையாகிற தன் ஐஶ்வர்யத்தை இழந்து ஜன்ம ஜரா மரணதிரூபமான ஸம்ஸாரத்தை அனுபவிக்கின்ற ஜீவனுடைய ஸ்வரூபத்தையும், அப்புத்தி

யின் மூலமாய் விளையும் ஸ்வர்க்க நரகாதிகளையும் அறியாமல் அற்பமும் அஸ்திரமுமான ஸ்வர்க்காதி போகங்களையும் துக்கரூபமான நரகங்களையும் விலக்கவல்ல வீண் கர்மங்களைச் செய்வதனால் என்ன உபயோகம்? மாயையென்னும் ப்ரக்ருதியே நதி. அதற்கு ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களே இருபுறத்து ப்ரவாஹங்கள். அந்நதி இஹலோக பரலோகங்களாகிற இக்கரை அக்கரையோரங்களில் பெருவேகமுடையது. அந்த ப்ரக்ருதியால் மதிமயங்கித் தன் ஸ்வரூபத்தை ஆராய்ந்தறியாமல், இஹபரலோகங்களை விளக்கும்படியான அஸத் கர்மங்களைச் செய்வதனால் என்ன உபயோகம்? ஜீவன் வரையிலுள்ள இருபத்தைந்து தத்வங்களின் ஸமுதாய ரூபமான இச்சரீரம் ஆச்சர்யத்திற்கிடமானது. ஈஶ்வரன் ஜீவன்மூலமாய் இதில் புகுந்திருக்கிறனாகையால் இது அவனுடைய சரீரமே. இது அவனால் தரிக்கப்பட்டிருக்கின்றது இத்தகைய சரீரத்தின் நிலைமையை அறியாமல் தேஹாத்மப்ரமம் ஸ்வதந்த்ராத்ம ப்ரமம் முதலியவற்றை விளக்கும்படியான அஸத் கர்மங்களைச் செய்வதனால் என்ன உபயோகம்? ஈஶ்வரன் தோஷங்கள் தீண்டப்பெறாத பரிசுதத்தன்; சாஸ்த்ரத்தினால் மாத்ரமே அறியத்தகுந்தவன்; ஸம்ஸார பந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும் காரணமான ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி கர்மங்களைக் காட்டுகிறவன்; ஏகாந்தமான ஹ்ருதய குஹையில் வாஸம் செய்பவன். இத்தகையனான ஸர்வேஶ்வரனை ஆராய்ந்தறியாமல் அவ்விடத்தில் மனப்பற்றை விளக்கமாட்டாத அஸத்கர்மங்களைச் செய்வதனால் என்ன உபயோகம்? காலசக்ரம் ப்ரஹ்மதேவன் முதல் பூச்சிப் புழு வரையிலுள்ள ஸமஸ்த ஜகத்தையும் அறுக்குந்தன்மையது; ஜன்ம ஜராமரணாதிகளுக்கு நிமித்தமாகையால் பொறுக்க முடி

யாதது; ஸர்வகாலமும் சுற்றிக்கொண்டேயிருக்கும்; ஒரு வர்க்கும் உட்படாதது. இதை அறியாமல், அஸத் கர்மங் களைச் செய்வதனால் என்ன உபயோகம்? சாஸ்த்ரம் ஹித த்தை உபதேசிக்கின்றதாகையால், அதுவே ஜகத்திற் கெல்லாம் தந்தை. ப்ரவ்ருத்தி தர்மங்களெல்லாம் ஸம் ஸாரத்தை வளர்க்குமாகையால் அதினின்று வெளிப்பட வேண்டுமென்பதுவே அதன்கருத்து. இத்தகைய சாஸ் த்ரத்தின் கட்டளையை உள்ளபடி அறியாமல், ஸத்வாதி குணங்களின் பரிணாமமான சப்தாதி விஷயங்களில் விஸ் வாஸமுற்று ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களைத் தொடங்கு வதால் என்ன உபயோகம்? சாஸ்த்ரத்தின் கருத்தை அறிந்து அதற்கு அனுகூலமாக நடக்கவேண்டுமாயின், அச்செயல்களினின்று மீளவேண்டும்' என்று நாரதரு டைய வாக்யங்களை ஆராய்ந்தறிந்தார்கள். மன்னவனே! இங்ஙனம் நிச்சயித்துக்கொண்ட ஹர்யஸ்வர்கள் அனைவ ரும் ஒத்தமதியுடையவர்களாகி அந்த நாரதரை ப்ரதக்ஷி ணம் செய்து மீளவும் இந்த ஸம்ஸாரத்திற்குத் திரும்பா மல் பரமபுருஷனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி யான மார்க்கத்தைக் கைப்பற்றினார்கள். நாரதமுனிவர் பரப்ரஹ்மத்தின் ஸாந்நித்யத்தை விளக்கின்ற வீணையின் ஸ்வரத்தில் தோற்றுகிற ஹ்ருஷீகேசனுடைய பாதார விந்தங்களில் மனத்தை மாறாதபடி நிறுத்தி உலகங்களில் திரிந்தார். அப்பால் தக்ஷப்ரஜாபதி நல்லொழுக்கமு டைய தன் புதல்வர்கள் நாரதர்மூலமாய் நாசம் அடைந் தார்களென்று (தான் நியமித்த ஸ்ருஷ்டியின் முயற்சி யைத் துறந்து மூக்தியை அடைந்தார்களென்று) கேள் விப்பட்டுச் சோகித்தார். நற்பிள்ளையைப் பெறுதல் சோ கத்திற்கிடமென்னும் பழமொழி யதார்த்தமாயிற்று. அத்தக்ஷர் ப்ரஹ்மதேவனால் நல்வார்த்தைகளால் ஸமா



1395. நாரதர் சபலாஸ்வர்களுக்கு நிவ்ருத்தி மார்க்கத்தை
உபதேசித்தலும், தக்ஷர் நாரதர்மேல் கோபித்தலும்

தானம் சொல்லப்பெற்று மீளவும் பாஞ்சஜன்யையிடத்தில் சபலாஸ்வரென்னும் பேருடைய ஆயிரம் பிள்ளைகளைப் பெற்றார். அந்தச் சபலாஸ்வர்களும் தந்தையினால் ப்ரஜைகளைப் படைக்கும்படி நியமிக்கப்பட்டுத் தந்தையின் சொல்லைத் தலைக்கட்டுகையாகிற வ்ரதத்தைக் கைப்பற்றித் தமது முன்தோன்றல்களாகிய ஹர்யஸ்வர்கள் ஸித்தியடைந்த நாராயணஸரஸ்ஸென்னும் புண்யதீர்த்தத்திற்குப் போனார்கள். அவர்கள் அப்புண்ய தீர்த்தத்தின் ஜலத்தை ஸ்பர்சித்த மாத்ரத்தில் மனமலங்களெல்லாம் தீரப்பெற்றுச் சிறப்புடைய ப்ரணவத்தை ஜபித்துக் கொண்டு அவ்விடத்தில் பெருந்தவம் செய்தார்கள். 'ஓம். நாராயணனுக்கு நமஸ்காரம். அவன் ப்ராணிகளுடைய ஹ்ருதயகமலத்தில் வாஸம் செய்பவன்; உட்புகுந்து ஜீவாத்மாக்களை நியமிக்கும் பரமாத்மன். அவனுக்குச் சுத்த ஸத்வமயமான பரமபதம் வாஸஸ்தானம். அவன் கல்யாண குணங்களெல்லாம் நிறைந்தவன்; ஸமஸ்த தோஷங்களும் தீண்டப்பெறாதவன். இத்தகையனான அவனை நாம் த்யானிப்போமாக' என்னும் இம்மந்த்ரத்தை ஜபித்துக் கொண்டு சில மாதங்கள் ஜலத்தையே ஆஹாரமாகக்கொண்டு மந்த்ரங்களால் கூறப்படுந் தேவதையாகிய பரமபுருஷனை ஆராதித்தார்கள். பிறகு சில மாதங்கள் வாயுவையே பக்ஷித்துக்கொண்டு அவனை ஆராதித்தார்கள். ராஜஸ்ரேஷ்டனே! நாரதமுனிவர், அவர்களும் படைக்கவேண்டுமென்ற எண்ணங் கொண்டிருப்பதைக்கண்டு அவ்விடம் வந்து முன்போலவே கூடமான வாக்யங்களைச் சொன்னார். 'தக்ஷகுமாரர்களே! என்னுடைய உபதேசத்தைக் கேட்பீர்களாக. நீங்கள் ப்ராதாக்களிடத்தில் அன்புடையவர்களல்லவா? ஆகையால் உங்கள் தமையன்மார்களாகிய ஹர்யஸ்வர்கள்

சென்ற வழியைத் தொடர்ந்து செல்வீர்களாக. ப்ராதா வாயிருப்பவன் தர்மத்தை அறிந்து தன் ப்ராதாக்கள் சென்ற நல்வழியைத் தொடர்ந்து செல்வானுயின், அவன் தான் செய்த புண்யகர்மமே பந்துவாகப் பெற்றுத் தேவதைகளுடன் கலந்து களிப்புறுவான்' என்றூர். நாரதருடைய காட்சி ஒருகாலும் வீணுகாது அவர் உண்மையான பொருளைக்கண்டறிந்தவர். அம்முனிவர் இவ்வளவு மாத்ரமே மொழிந்து புறப்பட்டுப்போனுர். தக்ஷரது புதல்வர்களான சபலாஸ்வர்களும் தமது முன்தோன்றல்களான ஹர்யஸ்வர்களுடைய மார்க்கத்தையே அனுஸரித்தார்கள். அப்பால் அவர்கள் பரப்ரஹ்ம ஸ்வரூபனுன ஆத்மாவின் ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்து ஆதிவாஹிகர்களுடன் செல்கின்ற ஸ்வயம்ப்ரகாசனுன ஜீவன் நடந்துபோவதும் பரமபுருஷனுக்கு அனுகூலமுமாகிய அர்ச்சிராதிமார்க்கத்தை அடைந்து கடந்த ராத்ரிகள்போல இன்னமும் திரும்பாமலேயிருக்கின்றூர்கள். இச்சமயத்தில் தக்ஷப்ரஜாபதி பலவகையான உத்பாதங்களைக் கண்டு முன்போலவே தன்பிள்ளைகள் நாரதர் மூலமாய் நாசம் அடைந்தார்களென்று கேள்விப்பட்டார். புத்ர சோகத்தினுல் மதிமயங்கின அந்தத் தக்ஷப்ரஜாபதி தெய்வாதீனமாய் நேரிட்ட தேவரிஷியாகிய நாரதரைக் கண்டு உதடு துடிக்கப்பெற்று எழுந்து அவர்மேல் கோபித்துக் கொண்டார். 'நீர் ஸாதுவைப்போல் வேஷம் பூண்டிருக்கிறீரன்றி, இயற்கையில் ஸாதுவன்று. நீர் என் குழந்தைகள் விஷயத்தில் தப்புக்கார்யம் செய்தீர். அவர்கள் தமக்குரிய தர்மத்தில் முயன்றிருக்கையில், அவர்களுக்கு ஸந்யாஸிகளின் வழியைக் காட்டியனுப்பினீர். அவர்கள் கர்மத்தை விவரிக்கிற வேதத்தின் பொருளை ஆராய்ந்த

றியவில்லை. ஆகையால் அவர்களுக்கு ரிஷிகளின் கடன் தீரவில்லை. அதற்குமேல் புத்ரோத்பத்தியால் தீரவேண்டிய பித்ருக்களின் கடனும் யஜ்ஞங்களால் தீரவேண்டிய தேவதைகளின்கடனும் தீருவதற்கு ப்ரஸக்தியே இல்லை. ஆகையால் மூன்று கடன்களினின்றும் விடுபடவில்லை. பாபிஷ்டனே! அவர்களுக்கு இஹலோகத்து நன்மை பரலோகத்து நன்மை இரண்டும் விளையாதபடி பாழ்செய்தனையே. இங்ஙனம் நெஞ்சில் இரக்கமில்லாமல் அறியாத பிள்ளைகளின் புத்தியைக் கலைத்த நீ பகவானுடைய புகழைப் பாழ்செய்துகொண்டு அவனுடைய பரிவாரங்களின் இடையில் வெட்கமின்றி எங்ஙனம் திரிகின்றனை? ஓ நாரதா! நீ ஒருவர்க்கொருவர் வைரமின்றி ஸ்நேஹத்துடன் கலந்திருப்பவர்க்கு வைரத்தை விளைத்து ஸ்நேஹ பங்கம் செய்யுந்தன்மையனல்லவா? உன்னைத்தவிர மற்ற பாகவதர்கள் அனைவரும் எப்பொழுதும் ப்ராணிகளிடத்தில் அனுக்ரஹம் செய்வதே தன்மையாயிருக்கின்றனர்கள். ப்ராணிகளுக்குக் கெடுதியையே தேடுகின்ற நீ அவர்களிடையில் எங்ஙனம் வெட்கமில்லாமல் திரிகின்றனை? சப்தாதி விஷயங்களின் அனுபவம் துச்சமென்றும் நஶ்வரமென்றும் ப்ராணிகளுக்கு உபதேசித்து அவர்களுக்கு அவ்விஷயங்களில் உண்டாயிருக்கிற மனப்பற்றாகிற பாசத்தை அறுத்து வைராக்யத்தை விளைப்பதாக நீ நினைக்கின்றனை. ஆயினும், ஜ்ஞானமில்லாமல் ஸாதுக்களின் வேஷத்தைப் பொய்யாகவே ஏற்றுக்கொண்டிருக்கின்ற நீ இங்ஙனம் புத்தியைக் கலைப்பதனால் வைராக்யம் முதலே உண்டாகாது. சப்தாதி விஷயங்களை அனுபவிக்காமல் ஒருவன் அவற்றின் கொடுமையை அறியமாட்டான். விஷயங்களை அனுபவித்த பின்பு அவற்றில் வெறுப்பு உண்டாவதுபோல், பிறர் புத்தியைக் கலைப்

பதனுல் உண்டாகாது. நாங்கள் கர்மத்தில் மனம் சென்று இல்லற வாழ்க்கையில் இழிந்து ஸாதுக்களாயிருக்கிறோம். நீ எங்களுக்குப் பொறுக்கமுடியாத அநிஷ்டத்தைச் செய்தனை. அதை நாங்கள் பொறுககமாட்டோம். எங்கள் ஸந்ததியைப் பாழ் செய்தவனே! நீ எங்களுக்கு மஹத்தான அப்ரியத்தைச் செய்தனை. மூடனே! நீ ஓரிடத்திலும் நெடுநேரம் நிற்காமல் மூன்று லோகங்களிலும் திரிந்துகொண்டேயிருப்பாயாக. எவ்விடத்திலும் உனக்கு ஒரு நிலை ஏற்படாதிருக்குமாக' என்று சபித்தார். ஸாதுக்களால் புகழப்பெற்ற நாரதர் அப்படியே ஆகட்டுமென்று அந்தச் சாபத்தை அங்கீகரித்தார். தான் பதில் செய்ய ஸமர்த்தராயினும் பிறர் செய்த அபகாரத்தைப் பொறுத்திருக்கையே ஸாதுக்களின் தன்மையாம். ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

### தக்ஷருடைய பெண்களின் வம்சத்தைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—தக்ஷப்ரஜாபதி மீளவும் ப்ரஹ்மதேவனுல் ஸமாதானம் செய்யப்பெற்றுத் தன் பார்யையிடத்தில் அறுபது பெண்களைப் பெற்றார். அவர்களெல்லோரும் தந்தையிடத்தில் மிகுந்த அன்புடையவர்கள். அவர்களில் தர்மர்க்குப் பத்துப் பெண்களையும், கஶ்யபப்ரஜாபதிக்குப் பதின்மூன்று பெண்களையும் சந்த்ரனுக்கு இருபத்தேழு பெண்களையும், ருத்ரன் அங்கிரஸ்ஸு க்ருஶாஶ்வர் இவர்களுக்கு இரண்டிரண்டு பெண்களையும், தார்க்ஷ்யனுக்கு மற்ற பெண்களையும் கொடுத்தார். இந்தத் தக்ஷரது பெண்களின் நாமங்களையும் அவர்களுடைய குழந்தைகளின் நாமங்களையும் சொல்லுகிறேன், கேள். இவர்களுடைய பிள்ளை பேரன்

முதலிய ஸந்ததியால் மூன்று லோகங்களும் நிறைந்திருக்கின்றன. தர்மருடைய பத்னிகள் பானு, லம்பை, ககுபு, ஜாமி, விஶ்வை, ஸாத்யை, மருத்வதி, வஸு, முஹூர்த்தை, ஸங்கல்பை என்னும் பேருடையவர்கள், அவர்களுடைய பிள்ளைகளைச் சொல்லுகிறேன், கேள். பானுவுக்கு வேதனென்றும் ருஷபனென்றும் இரண்டு பிள்ளைகள். ருஷபனுடைய பிள்ளை இந்த்ரஸேனன். ஓ மன்னவனே! லம்பையின் பிள்ளை வித்யோதன். அவனுடைய பிள்ளை ஸ்தனயித்னு. ககுபின் பிள்ளை ஸிகடன். அவன் பிள்ளை ஸங்கடன். ஜாமியின் பிள்ளைகள் பூமியிலுள்ள துர்க்கங்களுக்கு அபிமானி தேவதைகள். அவர்களுக்கு ஸ்வர்க்கனென்றும் நந்தியென்றும் இரண்டு பிள்ளைகள். விஶ்வையின் பிள்ளைகள் விஶ்வதேவர்கள். அவர்களுக்கு ஸந்ததி இல்லையென்று சொல்லுகிறார்கள். ஸாத்யையின் பிள்ளைகள் ஸாத்யரென்னும் தேவகணங்கள். அவர்களுடைய பிள்ளை அர்த்தஸித்தன். மருத்வதிக்கு மருத்வானென்றும் ஜயந்தனென்றும் இரண்டு பிள்ளைகள். ஜயந்தன் பகவானுடைய அம்சம். இவனை உபேந்த்ரனென்று சொல்லுகிறார்கள். முஹூர்த்தைக்கு மௌஹூர்த்திகரென்னும் தேவகணங்கள் பிறந்தன. அவர்கள் முஹூர்த்தாபிமானிதேவதைகள்; தத்தம் முஹூர்த்தத்திற்கு ஏற்பட்ட ஸுகதுக்காதிபலன்களை ப்ராணிகளுக்கு விளைக்கின்றார்கள். ஸங்கல்பையின் பிள்ளை ஸங்கல்பன்: அவனுடைய பிள்ளை காமன். வஸுவின் பிள்ளைகள் அஷ்டவஸுக்கள். அவர்களின் நாமங்களைக் கேள். த்ரோணன், ப்ராணன், த்ருவன், அர்க்கன், அக்னி தோஷன், வஸு, விபாவஸு என்பவர். த்ரோணனுடைய பத்னி அபிமதி யென்பவள். ஹர்ஷன் சோகன் பயன் முதலியவர்கள் அவளுடைய பிள்ளைகள். ப்ராணனு

டைய பார்யை ஊர்ஜஸ்வதி. ஸஹன், ஆயு, புரோஜவன் இவர்கள் அவளுடைய பிள்ளைகள். த்ருவனுடைய பார்யை தரணியென்பவள். அவள் பலவகையான பட்டணங்களின் அபிமானிதேவதைகளைப் பெற்றாள். அர்க்கனுடைய பார்யை அசனை யென்பவள். தர்ஷன் முதலியவர்கள் அவளுடைய பிள்ளைகள். அக்னியின் பார்யை வஸுதாரை. அவளுடைய பிள்ளைகள் த்ரவிணகன் முதலியவர். ஸ்கந்தன் அக்னிக்கு க்ருத்திகையிடத்தில் பிறந்தவன் விசாகன் மூதலியவர் அந்த ஸ்கந்தனுடைய பிள்ளைகள். தோஷனுடைய பார்யை சர்வரி யென்பவள். அவளுடைய பிள்ளை சிம்சுமாரன். அவன் பகவானுடைய அம்சம். வஸுவின் பார்யை ஆங்கிரஸி. அவளுடைய பிள்ளை விஸ்வகர்மா வென்பவன். அவன் தேவதைகளுக்குத் தச்சுவேலை செய்பவன். அந்த விஸ்வகர்மாவின் பிள்ளை சாக்ஷுஷமனு. விஸ்வர்களும் ஸாத்யர்களும் அம்மனுவின் பிள்ளைகள். விபாவஸுவின் பார்யை உஷையென்பவள். அவள் வ்யுஷ்டன் ரோசிஷன் ஆதபனென்று மூன்று பிள்ளைகளைப் பெற்றாள். அவர்களில் ஆதபனுடைய பிள்ளை பஞ்சயாமன். அவன் பகலுக்கு அபிமானிதேவதை. அவனால் ப்ரஜைகள் தத்தம் செயல்களில் விழித்துக்கொண்டிருக்கிறார்கள். ருத்ரனுடைய பார்யைகளிருவரில் ஒருத்தி ஸரூபை யென்பவள். அவள் ருத்ரர்களென்னும் கோடி பிள்ளைகளைப் பெற்றாள் அவர்களில் ரைவதன், அஜன், பவன், பீமன், வாமன், உக்ரன், வ்ருஷாகபி, அஜைகபாதன். அஹிர்ப்புத்ன்யன், பஹுரூபன், மஹான் என்னும் பதினொருவர்கள் முக்யமாயிருப்பவர்கள். ப்ரேதர் விநாயகர் முதலிய மற்றவர்கள். அந்த ருத்ரனுக்கு மற்றொரு பார்யையிடத்தில் பிறந்தவர்கள்; பயங்கரமான உருவமுடையவர்கள்.

அவர்கள் ருத்ரனுடையபரிவாரங்கள். அங்கிரஸ்ஸென்னும்ப்ரஜாபதியின் பார்யைகள் ஸ்வதையென்றும் ஸதியென்றும் இருவர். அவர்களில் ஸ்வதைபித்ருதேவதைகளைப் பெற்றாள். ஸதி அதர்வாங்கிரஸமென்னும் வேதத்தின் அபிமானிதேவதையைப்பிள்ளையாகப்பெற்றாள். க்ருஶாஶ்வருக்கு அர்ச்சிஸ்ஸென்றும் தீஷணையென்றும் இரண்டு பார்யைகள். அவர்களில் அர்ச்சிஸ்ஸு தூம்ரகேசனென்னும் பிள்ளையையும், தீஷணை வேதசிரன், தேவலன், வயுனன், மனு என்னும் நான்கு பிள்ளைகளையும் பெற்றார்கள். தார்க்ஷ்யனுக்கு வினதை, கத்ரு, பதங்கி, யாமினியென்று நான்கு பார்யைகள். அவர்களில் பதங்கி பக்ஷிகளையும், யாமினி விட்டில்களையும், ஸுபர்ணையென்னும் வினதை ஸாக்ஷாத் பரமபுருஷனுடைய வாஹனமான கருடனையும் ஸூர்யனுடைய ஸாரதியான அருணனையும், கத்ரு பல நாகங்களையும் பெற்றார்கள். பரதவம்சாலங்காரனே! க்ருத்திகைமுதலிய இருபத்தேழு நக்ஷத்ரங்களும் சந்த்ரனுடைய பார்யைகள். அவ்ன் மற்றவர்களை உபேக்ஷித்து ரோஹிணியிடத்தில்மாத்ரம் விசேஷப்ரேமத்துடன் இருந்தானாகையால் தக்ஷர் கோபித்துச் சபித்தார். அதனால் அவன் க்ஷயரோகத்தினால் பீடிக்கப்பட்டு அவர்களிடத்தில் ஸந்ததியை உண்டாக்கவில்லை. அந்தத் தக்ஷரை அருள் புரிவித்து அப்புறம் கலைகளைப்பெற்றான். அவை சுக்லபக்ஷத்தில் வளர்வதும் க்ருஷ்ணபக்ஷத்தில் தேய்வதுமாயிருக்கின்றன. கஶ்யபருடைய பத்னிகள் ஜகதத்திற்கெல்லாம் தாய்மார்கள். ஜகத்தெல்லாம் அவர்களுடைய ஸந்ததியே. அவர்களுடைய நாமங்களைச் சொல்லுகிறேன், கேள். அவை உலகங்களுக்கெலலாம் க்ஷேமத்தை விளைக்கும். அதிதி, திதி, தனு, காஷ்டை, அரிஷ்டை, ஸுரஸை, இளை, முனி, க்ரோதவசை, தாம்ரை, ஸுரபி, ஸரமை,

திமி என்பவைகள் அவர்களுடைய நாமங்கள். ஜல ஜந்துக்களெல்லாம் திமியிடத்தினின்றும், நாய் புலி பூனை முதலியவை ஸரமையிடத்தினின்றும், கிடாக்கள் பசுக்கள் இருகுளம்புடைய மற்ற நாற்கால்ஜந்துக்கள் இவையெல்லாம் ஸுரபியிடத்தினின்றும், பருந்துகள் கழுகுகள் இவை தாம்ரையிடத்தினின்றும், அப்ஸரஸ்த்ரீகளின் கூட்டங்கள் முனியிடத்தினின்றும், தந்தசூகம் முதலிய பல வகையான ஸர்ப்பங்கள க்ரோதவசையிடத்தினின்றும், வ்ருக்ஷங்களெல்லாம் இளையிடத்தினின்றும், யாதுதானர்கள் ஸுரஸையிடத்தினின்றும், கந்தர்வர்கள் அரிஷ்டையிடத்தினின்றும், ஒற்றைக்குளம்புடைய நாற்கால் ஜந்துக்கள் காஷ்டையிடத்தினின்றும் உண்டாயினர். தனுவுக்கு அறுபத்தோரு பிள்ளைகள். அவர்களில் ப்ரதானர்கள் பதினெட்டு பேர்கள். அவர்களைச் சொல்லுகிறேன், கேள். த்விமூர்த்தன். சம்பரன், அரிஷ்டன், ஹயக்ரீவன், விபாவஸு, அயோமுகன், சங்குசிரன், ஸ்வர்ப்பானு, கபிலன், அருணன், புலோமன், வ்ருஷபர்வன், ஏகசக்ரன், ஸுதாபனன், தூம்ரகேசன், விரூபாக்ஷன், விப்ரசித்தி, துர்ஜயன் என்னுமிவர்களே. ஸ்வர்ப்பானுவின்புதல்வியாகிய ஸுப்ரபையென்பவளை நமுசி மணம்புரிந்தான். வ்ருஷபர்வனுடைய பெண் சர்மிஷ்டை. அவளை யயாதி மன்னவன் மணம்புரிந்தான். அவன் நஹுஷனுடைய பிள்ளை; மஹா பலிஷ்டன். வைஸ்வாநரனுடைய பெண்கள் உபதானவி, ஹயசிரை, புலோமை, காலகை என்று நான்கு பேர்கள். நால்வரும் மிக்க ஸௌந்தர்யமுடையவர். அவர்களில் உபதானவியை ஹிரண்யாக்ஷனும், ஹயசிரையை க்ரது ப்ரஜாபதியும் மணம்புரிந்தார்கள். கஸ்யப ப்ரஜாபதி ப்ரஹ்மதேவனால் தூண்டப்பட்டுப் புலோமை காலகை என்னும் மற்ற வைஸ்வாநரன் பெண்களிருவரை

பௌலோமரென்பவர். இவர்களை நிவாத கவசரென்றும் வழங்குவதுண்டு. காலகையின் பிள்ளைகள் காலகேய ரென்பவர். அவர்களிருவகையரும் யுத்தத்தில் திறமை யுள்ள தானவர்களானார்கள். அவர்கள் அறுபதினாயிரம் பேர்கள்; யஜ்ஞங்களுக்கு விக்னம் செய்வதே தொழிலா யிருந்தார்கள். உன் பாட்டனாகிய அர்ஜுனன் ஒருகால் ஸ்வர்க்கலோகம் போகையில் இந்த்ரனுடைய ஆஜ்ஞை யினால் தானொருவனே அவர்களெல்லோரையும் வதித்து விட்டான். விப்ரசித்தி ஸிம்ஹிகையென்னும் தன் பார்யை யிடத்தில் நூற்றோரு பிள்ளைகளைப் பெற்றான். அவர்களில் முதல்வன் ராஹு. மற்ற நூறுபேர்களும் கேதுக்கள். இந்த ராஹு, தான் தானவர்களில் அதமனாயினும் பகவா னுடைய அநுக்ரஹத்தினால் க்ரஹமாயிருக்கையைப்பெற் றான். திதி முதலியவர்களின் வம்சத்தைச் சொன்னேன். இனி அதிதியின் வம்சத்தைச் சொல்லுகிறேன், கேள். தேவர்களுக்குத் தேவனும் ப்ரபுவுமாகிய நாராயணன் இவ்வதிதியின் வம்சத்தில் தனது அம்சத்தினால் அவதரித் தான். விவஸ்வான், அர்யமன், பூஷன், த்வஷ்டா, ஸவிதா, பகன், தாதா, விதாதா, வருணன், மித்ரன், சக்ரன், உரு க்ரமன் இப்பன்னிருவரும் அதிதியின் பிள்ளைகள். அவர் களில் விவஸ்வானுடைய பத்னி ஸம்ஜ்ஞை யென்பவள். இவள் ஶ்ராத்ததேவனென்றும் மனுவென்றும் இரண்டு பிள்ளைகளையும் யமன் யமி என்று ஒரு புத்திரனையும் புத் திரியையும் பெற்றாள். அந்த ஸம்ஜ்ஞாதேவியே பூமியில் பெண் குதிரையாகப் பிறந்து அஶ்விதேவதைகளைப் பெற்றாள். அவளே சாயையாகப் பிறந்து சனியையும் ஸாவர்ணியென்னும் மனுவையும் தபதியென்னும் பெண் ணையும் பெற்றாள். அப்பெண்மணி ஸம்வரணனென்பவனை மணம்புரிந்தாள். அர்யமனுடைய பார்யை மாத்ருகை

யென்பவள். அவர்களிடத்தினின்று வேலை செய்யுந் தன்மையுள்ள ஜனங்கள் உண்டாயின. ப்ரஹ்மதேவன் அவர்களை மனுஷ்யஜாதியாக ஏற்படுத்தினன். பூஷனுக்கு ஸந்ததியே இல்லை. அவன் தக்ஷர்மேல் கோபித்த ருத்ரனைப் பார்த்துப் பற்களைக் காட்டிக்கொண்டு சிரித்தானுகையால் அவனுடைய பரிவாரங்கள் பூஷனது பற்களை உடைத்தன. ஆகையால் அவன் பிஷ்டத்தையே சாப்பிடுந்தன்மையனுனன். தைத்யர்களின் தங்கை ரசனையென்பவள்; த்வஷ்டாவின் பார்யை. அவர்களுக்கு வீர்யமுடைய விஸ்வரூபன் பிறந்தான். முன்பு ப்ருஹஸ்பதி தேவதைகளால் அவமதிக்கப்பட்டு அவர்களைத் துறந்தார். அப்பொழுது தேவதைகள், இவன் நமது சத்ருக்களாகிய தைத்யர்களின் மருமகனென்பதையும் பாராமல் இவ்விஸ்வரூபனைத் தமக்குப் புரோஹிதனுக வரித்தார்கள். ஆறுவது அத்யாயம் முற்றிற்று.

---

ப்ருஹஸ்பதி தேவதைகளைத் துறந்ததின் காரணத்தையும், தேவதைகள் விஸ்வரூபனைப் புரோஹிதனுக ஏற்படுத்திக்கொண்டதையும் கூறுதல்.

மன்னவன் சொல்லுகிறுன்:—ப்ருஹஸ்பதி தேவதைகளுக்கு ஆசார்யனல்லவா? அவர் என்ன காரணத்தினுல் தேவதைகளைத் துறந்தார்? சிஷ்யர்களான தேவதைகள் தமது ஆசார்யனுகிய ப்ருஹஸ்பதிவிஷயத்தில் என்ன அக்ரமம் செய்தார்கள்? மஹானுபாவரே! அதைச் சொல்வீராக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:—மூன்று லோகங்களுக்கும் ப்ரபுவாகிய தேவேந்த்ரன் ஒருகாலத்தில் கொலுமண்டபத்திற்கு வந்தான். மன்னவனே! தேவதைகளும் அஷ்ட

வஸுக்களும் ஏகாதச ருத்ரர்களும் த்வாதச ஆதித்யர்களும் ரிஷிகளும் விஶ்வதேவர்களும் ஸாத்யர்களும் அஶ்விதேவதைகளும் அவனைச் சுற்றிச் சூழ்ந்திருந்தார்கள். ஸித்தர்களும் சாரணர்களும் கந்தர்வர்களும் அவனைப் பணிந்தார்கள். வேதத்தை ஓதுகின்ற முனிவர்கள் அவனைத் துதித்தார்கள். வித்யாதரர்களும் அப்ஸர ஸ்த்ரீகளும் கின்னரர்களும் பதகர்களும் உரகர்களும் அவனை அழகாகப் பாடினார்கள். சந்த்ர மண்டலம்போல் அழகிய வெண் கொற்றக்குடை அவனுக்குப் பிடித்தார்கள். சாமரம் விசிறி முதலிய மற்றும் பல மஹாராஜசிஹ்னங்களும் நிறைந்திருந்தன. அவன் தன் பக்கத்தில் பாதியாஸனத்தில் உட்கார்ந்திருக்கின்ற சசீதேவியுடன் மிகவும் திகழ்வுற்றிருந்தான், அப்பொழுது ப்ருஹஸ்பதி அக்கொலுமண்டபத்திற்கு வந்தார். அவர் தேவதைகளுக்கும் தேவேந்த்ரனுக்கும் கௌரவிக்கத்தகுந்தவர்; மேலான ஆசார்யன்; தேவதைகளும் அஸுரர்களும் விழுந்து வணங்கும்படியான பெருமையையுடையவர்; முனிவர்களில் தலைவர். அத்தகைய ப்ருஹஸ்பதி ஸபைக்கு வரும்பொழுது அத்தேவேந்த்ரன் எழுந்திருப்பது வணங்குவது ஆஸனமளிப்பது முதலிய உபசாரங்கள் எவையும் செய்யாமல் ஸபையில் அவர் வந்திருப்பதைப் பார்த்தும் ஐஶ்வர்ய மதத்தினால் பெரியோர்களின் மார்க்கத்தைக் கடந்து ஸிம்ஹாஸனத்தினின்று சிறிதும் அசையாமலேயிருந்தான். அப்பொழுது வித்வானும் ஸமர்த்தருமாகிய ப்ருஹஸ்பதி, இவன் ஐஶ்வர்ய மதத்தினால் கலக்கமுற்றிருக்கிறானென்பதை அறிந்து உடனே பேசாமல் புறப்பட்டுத் தன் க்ருஹத்திற்குப் போனார். அப்பொழுதே அவ்விந்த்ரன் ஆசார்யனை அவமதித்தோமென்பதை அறிந்து ஸபையில் தன்னைத் தானே

வெறுத்துக்கொண்டான். 'ஆ எனக்கு என்ன கஷ்டம் நேர்ந்தது? நான் தப்புக் கார்யம் செய்தேனல்லவா? நான் ஐஸ்வர்யத்தினால் மதித்து அற்ப புத்தியாகி ஸபையில் ஆசார்யனை அவமதித்தேன். விவேகமுடையவனா யிருப்பானாயின், ஸத்யலோகாதிபதியான ப்ரஹ்மதேவனுடைய ஐஸ்வர்யத்தையும் எவன் தான் ஆசைப்படுவான்? நான் தேவதைகளுக்கு ப்ரபுவாயிருந்தும் ஐஸ்வர்ய மதத்தினாலல்லவோ அஸுரர்களுக்கு இயற்கையில் ஏற்பட்ட மோஹத்தில் தள்ளுண்டேன். ராஜஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்திருக்கும் ப்ரபு ஒருவர்க்கும் எழுந்து மர்யாதை செய்யவேண்டியதில்லையென்று சிலர் சொல்லுவார்கள். அவர்கள் தர்மஸூக்ஷ்மம் அறிந்தவரல்லர். அவர்கள் தப்பு வழியை உபதேசிப்பவர்களே. ஆகையால் அவர்கள் நரகத்தில் விழுவார்களென்பது நிச்சயம். அவர்களுடைய வாக்யத்தை நம்புகிறவர்கள் கல்லோடங்கள்போல் அமிழ்ந்து போவார்கள். ப்ருஹஸ்பதி ஆழ்ந்த மதியுடையவர்; தேவதைகளுக்கு ஆசார்யன். ஆகையால் அவர் நான் செய்த அபராதத்தை நெஞ்சில் வைத்துக் கொள்ளமாட்டார். நான் கபடமில்லாமல் அவருடைய பாதங்களைத் தலையால் ஸ்பர்சித்து வேண்டிக் கொள்ளுகிறேன்' என்று தனக்குள் சிந்தித்தான். இங்ஙனம் அவ்விந்த்ரன் சிந்தித்துக்கொண்டிருக்கையில் மஹானுபாவராகிய ப்ருஹஸ்பதி அதை அறிந்து யோக ப்ரபாவத்தினால் க்ருஹத்தினின்று கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தார். பிறகு தேவேந்த்ரன் ப்ருஹஸ்பதியைக் காணும் உபாயத்தைப் பலவாறு ஆராய்ந்தும் அது ஏற்படாமல் எப்படி அவரைக் காணலாமென்று அதையே புத்தியில் சிந்தித்துக்கொண்டு சோகத்தினால் வருந்திச் சிறிதும் ஸுகம் அடையாதிருந்தான். அஸுரர்களெல்

லாரும் அந்த ஸங்கதியைக் கேட்டுத் தமது புரோஹித னை சுக்ரனுடைபய ஆலோசனையைக்கொண்டு தடுக்க முடியாத மதமுடையவர்களாகி அத்தேவர்களை வதிக்க விரும்பி அவர்களோடு யுத்தம்செய்யத்தொடங்கினார்கள். தேவதைகள் இந்த்ரனுடன் அவ்வஸுரர்கள் தொடுத்த கூரான பாணங்களால் தலைகளும் துடைகளும் புஜங்க ளும் பிளவுண்டு தலை வணக்கத்துடன் ப்ரஹ்மதேவனைச் சரணம் அடைந்தார்கள். மஹானுபாவனான ப்ரஹ்ம தேவனும் தேவதைகள் வருத்தமுற்றிருப்பது கண்டு மிகவும் மன இரக்க முற்று அவர்களை நல்லவார்த்தைக ளால் ஸமாதானப்படுத்தி 'ஓ தேவஸ்ரேஷ்டர்களே! ஆ! உங்களுக்கு மஹத்தான கஷ்டம் நேர்ந்ததே! நீங்கள் பெரிய தப்புக்கார்யம் செய்தீர்கள். ப்ருஹஸ்பதி ப்ரஹ்மஜ்ஞானிகளில் சிறந்தவர்; ப்ராஹ்மண ஶ்ரேஷ்டர்; ஜிதேந்த்ரியர். அவரை நீங்கள் ஐஶ்வர்ய மதத்தினால் கௌரவிக்காதிருந்தீர்கள். ஓ தேவர்களே! நீங்கள் ஸம்ருத்தர்களாயிருந்தும் ஸம்ருத்தியின்றி ஓய்ந்திருக் கிற உங்கள் சத்ருக்களிடத்தினின்று இப்பொழுது பரிப வம் நேரப் பெற்றீர்களல்லவா? இது அந்த அபராதத் தின் பலனே. தேவேந்த்ரனே! உன் சத்ருக்கள் முதலில் குருவைத் திரஸ்காரம் செய்தமையால் க்ஷீணித்ததை யும், இப்பொழுது சுக்ராசார்யனைப் பக்தியுடன் ஆரா தித்து ஸம்ருத்தர்களாயிருப்பதையும் காண்பாயாக. அவர்கள் சுக்ராசார்யனையே தெய்வமாகக்கொண்டு அவனை ஆராதித்துக்கொண்டு வருகின்றனர்கள்; கொழு ப்புடையவர்கள், மஹாபலசாலிகள். அவர்கள் இருக்கிற நிலைமையைக் கண்டால், இன்றைக்கோ நாளைக்கோ அதன் மறுநாளைக்கோ என் ஸ்தானத்தையுங் கூடக் கைப்பற்றுவார்களென்று தோன்றுகின்றது. இனி உங்

களை வருத்துகிறார்களென்பதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? அவர்கள் பிறர்க்குத்தெரியாதபடி ஆலோசனை செய்கின்றார்கள்; ப்ருகுகுலத்தில் பிறந்தவர்களுக்குச் சிஷ்யர்களாகி அவர்களிடத்தினின்று நீதிநுட்பங்களையெல்லாம் ஆராய்ந்தறிகின்றார்கள். அவர்கள் ஸ்வர்க்கத்தை ஒரு பொருளாக நினைப்பார்களோ? ப்ராஹ்மணர்களையும் பகவானையும் பசுக்களையும் ஆராதிக்கிறவர்களுக்கு எவ்விதத்திலும் கெடுதி உண்டாகாது. மற்றவர் எத்தகைய ப்ரபுக்களாயிருப்பினும், அவர்க்குக் கெடுதி நேரவே நேரும். ஆகையால் நீங்கள் சீக்ரத்தில் விஸ்வரூபனென்னும் ப்ராஹ்மணனை அனுஸரித்து அவனைப் புரோஹிதனாக ஏற்படுத்திக் கொள்வீர்களாக. அவன் த்வஷ்டாவின் புதல்வன், ஜிதேந்த்ரியன், தவமுடையவன். அவன் உங்கள் ப்ரயோஜனத்தைக் கைகூட்டுவிப்பான். அவனுக்கு அஸுரர்களிடத்தில் பக்ஷபாதம் முதலியன இருக்கக்கூடும். அதனால் அவன் உங்களுக்கு ஏதேனும் சிறிது அநிஷ்டம் செய்யினும் அதை நீங்கள் பொறுத்துக்கொள்ளவேண்டும்' என்றார். இங்ஙனம் ப்ரஹ்மதேவன் மொழிந்த வசனத்தைக் கேட்ட அத்தேவதைகள் மனக்கவலை தீர்ந்து த்வஷ்டாவின் புதல்வனும் ரிஷியுமாகிய விஸ்வரூபனிடம் சென்று அவனை அணைத்துக்கொண்டு இங்ஙனம் மொழிந்தார்கள். 'ஓ விஸ்வரூபனே! நாங்கள் அதிதிகளாக உனது ஆஸ்ரமத்திற்கு வந்திருக்கிறோம். உனக்கு க்ஷேமம் உண்டாகுக. நாங்கள் உனக்குத் தந்தைகளாகவேண்டும். இக்காலத்திற்கு உரியபடி நாங்கள் ஒரு விஷயத்தை ஆசைப் படுகின்றோம். அது உன்னால் நிறைவேற வேண்டும். ஓ அந்தணர் தலைவனே! பிள்ளைகள் பிள்ளை பெற்றவராயினும் தந்தைக்குச் சுஸ்ருஷை செய்யவேண்டியது அவஸ்யம். அதுவே

அவர்களுக்கு மேலான தர்மமாம். இனி ப்ரஹ்மசாரிகளா யிருப்பவர்களுக்குப் பித்ருஶ்ருஷை மேலான தர்மமென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? நீ எங்களுக்குப் பிள்ளையாகவேண்டும். ப்ரஹ்மசாரியுமாயிருக்கின்றனே. நீ எங்களுக்குச்சுஶ்ருஷைசெய்வது உரிய தர்மமே. மற்றும், ஆசார்யனை ஈஶ்வரனைப்போலவும், தந்தையை ப்ரஹ்மதேவனைப்போலவும், உடன் பிறந்தவனை இந்த்ரனைப்போலவும், மாதாவை ஒன்றான பூமிதேவியைப்போலவும், ஆராதிக்கவேண்டும். உடன் பிறந்தவர்களை த்தயையின்மூர்த்தியாகவும், அதிதியைத் தர்மத்தின் மூர்த்தியாகவும், அப்யாகதனை அக்னியின் மூர்த்தியாகவும், ஸமஸ்த பூதங்களையும் தானாகவும் பாவிக்கவேண்டும். அப்பனே! ஆகையால் உன் தந்தைகளாகிய நாங்கள் வருந்தி உன்னிடம் வந்திருக்கிறோம். எங்களுக்குச் சத்ருக்களிடத்தினின்று நேர்ந்திருக்கிற பரிபவத்தையும் அதனாலுண்டான எங்கள் மனவருத்தத்தையும் உன் தவமஹிமையால் போக்க முயன்று எங்கள் சொற்படி செய்வாயாக. நீ ப்ராஹ்மணன், ப்ரஹ்மஜ்ஞானி, ஸமஸ்தவர்ணங்களுக்கும் குரு. உன்னை நாங்கள் புரோஹிதனாயிருக்கும்படி வேண்டுகிறோம். நாங்கள் உன்தேஜஸ்ஸினால் அநாயாஸமாகச் சத்ருக்களை வெல்லுவோம். நீ எங்களிடம் அருள்புரியவேண்டும். நாங்கள் எங்கள் ப்ரயோஜனத்திற்காக நீ சிறியவனாயினும் உன்பாதங்களில் வணங்குகிறோம். ப்ரஹ்மணஶ்ரேஷ்டனே! பெரியவன் சிறியவனை வணங்குவது நிந்தைக்கிடமென்று நினைக்கவேண்டாம். வேதாத்யயனம் முதலியவை தவிர மற்ற விஷயங்களில் தான் வயதைப்பற்றின பெருமையைப் பாராட்டுவார்களன்றி வித்யா விஷயத்தில் வயதின் பெருமையைப் பாராட்ட மாட்டார்கள். நீ எங்களுக்கு வித்யோபதேசம் செய்யும் புரோஹிதனாகையால்.

உன்னிடத்தில் வயதைப்பற்றின சிறுமையை ஆராயலாகாது. நீ வேதங்களை ஓதியுணர்ந்தவனாகையால் நீயே பெரியவன்' என்று மொழிந்தார்கள். மஹாதபஸ்வியாகிய அவ்விஶ்வரூபன் இங்ஙனம் தேவகணங்களால் வேண்டப்பெற்றுச் சிரித்துக்கொண்டே இனிய உரையுடன் அந்தத் தேவதைகளை நோக்கித் 'தர்மசீலர்கள் புரோஹிதம் செய்வதைப் பழிப்பார்கள். மற்றும், அத்தொழில் ப்ரஹ்மதேஜஸ்ஸை அழிக்கும். உலகங்களுக்கெல்லாம் ப்ரபுக்களாகிய நீங்கள் வேண்டுகிறீர்கள். மற்றும், நீங்கள் எனக்குத் தந்தை முறையில் சேர்ந்தவர்கள். தந்தையைப் பணியுந்தன்மையுள்ள என்னைப் போன்றவன் மாட்டேனென்று அதை எங்ஙனம் தடுக்கமுடியும்? நான் உங்களுக்குச் சிஷ்யன். சிஷ்யனுக்குக் குருக்களால் தூண்டப்படுகையே பெரிய புருஷார்த்தமென்று பெரியோர்கள் கூறுகிறார்கள். சப்தாதி விஷயபோகங்களில் விருப்பமில்லாதவர்கள் தேஹ தாரணத்திற்கு வேண்டியதை மாத்ரமே விரும்புவார்கள். அவர்கள் கதிர்களையாவது உதிர்ந்த நெல்லுகளையாவது பொறுக்கி ஜீவிக்குந்தன்மையுடையவர்கள். அவர்களுக்கு அதுவே தனம். அவ்விரண்டில் ஒன்றால் அவர்கள் பஞ்ச மஹாயஜ்ஞாதி கர்மங்களைக் குறைவற அநுஷ்டித்துக்கொண்டுவருகிறார்கள். ப்ரபுக்களே! அங்ஙனம் நிந்தைக்கிடமான புரோஹிதத் தொழிலை நான் எங்ஙனம் பெற்றுக்கொள்வேன்? அத்தொழிலினால் மதிகெட்டமூர்க்கன் ஸந்தோஷம் அடைவானன்றிக் காமபோகங்களில் விருப்பமில்லாதவன் அதை ஆதரிக்கமாட்டான். அவனுக்கு உஞ்சவ்ருத்தியே உரியது. ஆயினும் தந்தைகளாகிய நீங்கள் வேண்டுகிறபடியால் நான் அதைத் தடுக்கமுடியாமல் ஏற்றுக்கொள்ளுகிறேன். உங்களுக்கு நான் இது செய்வது ஒரு பெரிதல்ல.

ஆகையால் நீங்கள் வேண்டினவற்றைத் தவம் முதலிய வற்றாலும் என் ப்ராணன்களாலும் நான் ஸாதித்துக் கொடுக்கிறேன்' என்றான். மஹா தபஸ்வியாகிய விஸ்வரூபன் அவர்களுக்கு இங்ஙனம் ஆகட்டுமென்று ப்ரதிஜ்ஞைசெய்து அவர்கள் வேண்டின புரோஹிதத்தொழிலை ஏற்றுக்கொண்டு மிக்க மனவூக்கத்துடன் கார்யங்களை நடத்திக்கொண்டு வந்தான். ஸமர்த்தனாகிய அவ்விஸ்வரூபன் சுக்ராசார்யனுடைய வித்யையால் பாதுகாக்கப்பட்டு அஸுரர்களிடத்தில் நிலை பெற்றிருக்கிற ஐஸ்வர்யத்தை நாராயண கவசமென்னும் தன்மந்த்ர வித்யையால் ஆகர்ஷித்துத் தேவேந்த்ரனுக்குக் கொடுத்தான். ஆழ்ந்த மதியுடைய விஸ்வரூபன் மஹேந்த்ரனுக்கு நாராயண கவசமென்னும் வித்யையை உபதேசித்தான். அவ்விந்த்ரன் அதனால் பாதுகாக்கப்பட்டு அஸுர ஸைன்யங்களையெல்லாம் அழித்து ஐஸ்வர்யத்தைப் பெற்றான். ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

---

விஸ்வரூபன் மஹேந்த்ரனுக்கு நாராயண கவசத்தை உபதேசித்தல்.

மன்னவன் சொல்லுகிறான் :—ஆயிரங்கண்ணனாகிய தேவேந்த்ரன் எந்த வித்யையினால் பாதுகாக்கப்பட்டுச் சத்ரு ஸைன்யங்களையெல்லாம் விளையாடுவதுபோல் வென்று மூன்று லோகங்களுக்கும் ப்ரபுவாயிருக்கையாகிற ஐஸ்வர்யத்தை அனுபவித்தானோ, அப்படிப்பட்ட நாராயண கவசமென்னும் மந்த்ர வித்யையை எனக்கு உபதேசிப்பீராக. இதை ஜபித்தல்லவோ தேவேந்த்ரன் யுத்தத்தில் சத்ருக்களை வென்றான்?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—புரோஹிதனாய் வரிக்கப்பட்ட விஸ்வரூபன் சத்ருக்களை ஜயிக்க உபாயமென்

னென்று வினவுகிற தேவேந்த்ரனுக்கு நாராயண வர்ம மென்னும் மந்த்ரத்தை உபதேசித்தான். அதை உனக்கு உபதேசிக்கிறேன். மனவூக்கத்துடன் கேட்பாயாக.

விஸ்வரூபன் சொல்லுகிறான்:—ஸ்நாநாதி கர்மங்களை முடித்துக்கொண்டு பரிசுத்தனாய்க் கைகால்களை அலம்பிக் கொண்டு கையில் தர்ப்பவித்ரம் அணிந்து வடக்குமுகமாய் உட்கார்ந்து ஆசமனம்செய்து மௌன வ்ரதத்துடன் திரு வஷ்டாக்ஷரம் திருத்வாதசாக்ஷரி விஷ்ணுஷடக்ஷரி இம் மந்த்ரங்களால் அங்கந்யாஸமும் கரந்யாஸமும் செய்து ஆத்யாத்மிகம் ஆதிதைவிகம் ஆதிபௌதிகமென்று மூன்றுவகையான பயங்களில் ஏதேனுமொன்று நேருமா யின், ஸ்ரீமந் நாராயணனை இடைவிடாமல் த்யானித்து அவனை விளங்க வெளியிடுகிற இந்நாராயணவர்மத்தை ஜபிக்கவேண்டும். பாதங்கள் முழந்தாள்கள் துடைகள் வயிறு ஹ்ருதயம் மார்பு முகம் தலை ஆகிய இவ்வெட்டு இடங்களிலும் பாதம் முதல் தலைவரையில் க்ரமமாகவாவது தலைமுதல் கால்வரையில் மாற்றியாவது திருவஷ் டாக்ஷரத்தின் எட்டு அக்ஷரங்களையும் முதலில் ப்ரணவத் தையும் கடைசியில் நமஸ்ஸையும் கூட்டிக்கொண்டு ந்யா ஸம் செய்யவேண்டும். பிறகு திருத்வாதசாக்ஷரியால் கரந்யாஸம் செய்யவேண்டும். ப்ரணவம் முதல் யகாரம் வரையிலுள்ள பன்னிரண்டு அக்ஷரங்களையும் இரண்டு கைகளிலுமுள்ள ஆள்காட்டிவிரல் முதல் நான்கு விரல் களும் கட்டை விரல்களின் இரண்டு கணுக்களும் ஆகிய பன்னிரண்டு ஸ்தானங்களிலும் ந்யாஸம்செய்யவேண்டும். பிறகு விஷ்ணு ஷடக்ஷரியால் ந்யாஸம் செய்யவேண்டும். ஹ்ருதயத்தில் ஓங்காரத்தையும், தலையில் விகாரத்தை யும், சிகையில் ஷகாரத்தையும், கண்களில் வேகாரத் தையும், ஸந்திகளெல்லாவற்றிலும் நகாரத்தையும்,

விஸர்க்கத்தோடு கூடின மகாரத்தைக் கிழக்கு முதலிய எல்லாத் திக்குக்களிலும் ந்யாஸம் செய்யவேண்டும். இம்மூன்று மந்த்ரங்களால் அங்கந்யாஸ கரந்யாஸங்களைச்செய்த புருஷன் மந்த்ர மூர்த்தியாகி மந்த்ரஜபத்திற்கு உரியவனுவான். பிறகு ஷாட்குண்ய பூர்ணனுன பரமபுருஷனை த்யானிக்கவேண்டும். எத்தகைய உருவத்துடன் த்யானித்தால் தன்மனம் தெளிவு பெறுமோ, அத்தகைய உருவத்துடன் த்யானிக்கவேண்டும். அனந்தரம் ஜ்ஞானம் ப்ரபாவம் நற்செயல் இவற்றிற் கிருப்பிடமான இம்மந்த்ரத்தைப் படிக்கவேண்டும்; ஓம். தன்னைப் பற்றினருடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையுள்ள பரமபுருஷன் என்னை எல்லா இடங்களிலும் காப்பானுக. கருத்மானுடைய முதுகின்மேல் பாதாரவிந்தங்களை வைத்துக்கொண்டு சங்கு சக்காம் கேடயம் கத்தி கதை பாணம் தனுஸ்ஸு பாசம் இவ்வெட்டு ஆயுதங்களையும் எட்டுப் புஜங்களால் தரித்து யானையைக் காக்க வந்தவனும் எட்டுக் குணங்களுடையவனுமகிய பரமபுருஷன் என்னைக் காக்கவேண்டும். மத்ஸ்யமூர்த்தியான ஸர்வேஶ்வரன் ஜலத்தில் ஜலஜந்துக்களாகிற வருணபாசத்தினின்று என்னைப் பாதுகாப்பானுக. கபடத்தினுல் மாணிக்குறளுருவங்கொண்ட ஸர்வேஶ்வரன் என்னைப் பூமியில் எல்லா இடங்களிலும் பாதுகாப்பானுக. உலகமெல்லாம் நிறைந்த உருவமுடைய த்ரிவிக்ரமன் என்னை ஆகாயத்தில் காக்கவேண்டும். அரண்யம் யுத்தம் முதலிய ஸங்கடங்களில் ந்ருஸிம்ஹமூர்த்தி என்னைக் காப்பானுக. அவன் ஸமர்த்தன்; அஸுரர் கூட்டத்தலைவர்களை அழிக்குந்தன்மையன். அவன் அட்டஹாசம் செய்யும் பொழுது திசைகளெல்லாம் ப்ரதித்வனி செய்தன. கர்ப்பங்களெல்லாம் விழுந்தன. வராஹ உருவங்கொண்ட அந்த

ஸர்வேஸ்வரன் என்னை மார்க்கங்களில் பாதுகாப்பானாக. அவன் யஜ்ஞஸ்வரூபி, வழியில் தன்னை எதிர்த்து வந்த ஹிரண்யாக்ஷனை வதித்தான். அவன் தன் கோரைப்பல்லால் பூமியைப் பாதாளத்தினின்று மேலுக்கெடுத்தான். பரசுராமன் பர்வதசிகரங்களில் என்னைப் பாதுகாப்பானாக. பரதனுக்குத் தமையனும் லக்ஷ்மணனோடு கூடினவனுமாகிய தாசரதிராமன் தேசாந்தரங்களுக்குப் போகுங்காலங்களில் என்னைப் பாதுகாப்பானாக. நாராயணன் அபிசாரம் முதலிய உக்ரதர்மங்களினின்றும் ஸமஸ்தமான ப்ரமாதத்தினின்றும் என்னைக் காப்பானாக. நராவதாரம் செய்த அந்த ஸர்வேஸ்வரன் கர்வத்தினின்றும், தத்தாத்ரேயரூபியான ஸர்வேஸ்வரன் யோகத்திற்கு விரோதம் செய்பவற்றினின்றும் என்னைக் காப்பார்களாக. பகவான் கபிலராக அவதரித்து யோக ரஹஸ்யத்தை வெளியிட்டான். அக்கபிலர் ஸித்தகணங்களுக்குத் தலைவர். அவர் ப்ராணிகளுக்கு ஜ்ஞான ப்ரதானம் செய்து கர்மபந்தத்தைப் போக்கினார். அந்த யோகேஸ்வரர் என்னைக் கர்மபந்தத்தினின்று காப்பாராக. ஸனத்குமாரபகவான் என்னை மன்மதனிடத்தினின்று காப்பானாக. ஹயக்ரீவாவதாரம்செய்து மதுகைடபாதிகளைக்கொன்ற பகவான் தேவதைகளிடத்தில் நான் படும் அபசாரத்தைப் பொறுத்து என்னை வழியில் காப்பானாக. பகவானை இடைவிடாமல் ஆராதிக்கின்ற நாரதமஹர்ஷி பகவதாராதனத்திற்கு நேரும் விக்னத்தினின்று என்னைக் காப்பாராக. கூர்மஸ்வரூபியான பகவான் என்னை எல்லா நரகத்தினின்றும் பாதுகாப்பானாக. தன்வந்த்ரிஸ்வரூபியான பகவான் அபத்யத்தினின்று என்னைக் காப்பானாக. ருஷபஸ்வரூபியான பகவான் குளிர் காற்று முதலிய வருத்தங்களினின்று என்னைக் காப்பானாக.

அவன் வெளியிந்த்ரியங்களையும் உள்ளிந்த்ரியங்களையும் வென்ற மஹானுபாவன். யஜ்ஞ ஸ்வரூபியான பகவான் லோகாபவாதத்தினின்று என்னைக் காப்பானாக. பலராமன் துர்ஜனங்களால் நேரும் உபத்ரவங்களினின்றும் ம்ருத்யுவினின்றும் என்னைக்காப்பானாக. ஆதிசேஷஸ்வரூபியான பகவான் கோபத்தையே இயற்கையாகவுடைய ஸர்ப்பங்களின் கூட்டத்தினின்று என்னைக் காப்பானாக. வ்யாஸரூபியான பகவான் என்னை அஜ்ஞானத்தினின்று காப்பானாக. புத்த ஸ்வரூபியான பகவான் மதிமயக்கத்திற்கிடமான பாஷண்டகணத்தினின்று என்னைக் காப்பானாக. தர்மத்தைக் காக்கும்பொருட்டு அவதரித்த கல்கிரூபியான பகவான் காலத்தின் மலமான கலிகாலத்தினின்று என்னைக் காப்பானாக. கதையை ஏந்தின கேசவன் ப்ராதக்காலத்திலும், வேணுவைத் தரித்த கோவிந்தன் [1]ஸங்கவத்திலும், கம்பீரமானசக்தியாயுதத்தைத் தரித்த நாராயணன் பூர்வாஹ்ணத்திலும், சக்ராயுதத்தைக் கையில் தரித்த விஷ்ணு மத்யாஹ்னத்திலும், கொடிய தனுஸ்ஸைத் தரித்துத் தேஜஸ்ஸினால் ஜ்வலிக்கின்ற மதுஸூதனன் அபராஹ்ணத்திலும், மூன்று இடங்களில் வீற்றிருக்கின்ற மாதவன் ஸாயங்காலத்திலும், இருடீகேசன் ப்ரதோஷகாலத்திலும், அஸஹாய சூரனாகிய பத்பநாபன் ப்ரதோஷம் முதல் அர்த்தராத்ரி வரையிலுள்ள காலத்திலும் அர்த்தராத்ரி காலத்திலும், ஸ்ரீவத்ஸமென்னும்அடையாளத்தையுடைய சிரீதரன் அபரராத்ரியிலும், கட்கத்தை ஏந்தின ஜனார்த்தனன் பின்மாலை

1 ஸூர்யோதமாய் ஆறுநாழிகை வரையில் ஸங்கவம். அதற்குமேல் ஆறுநாழிகை பூர்வாஹ்ணம். அதற்குமேல் மத்யாஹ்னம். அதற்குமேல் அபராஹ்ணம். அதற்குமேல் ஆறுநாழிகை ஸாயங்காலம்.

வேளையிலும், தாமோதரன் ஸந்த்யாகாலங்களிலும், கால மூர்த்தியும் ஜகத்திற்கெல்லாம் நியாமகனுமாகிய பகவான் விடியற்காலத்திலும் என்னைக் காப்பார்களாக. பகவானுடைய சக்ராயுதம் ப்ரளயகாலத்து வஜ்ராயுதம்போல் கூரிய நுனியுடையது. நாற்புறங்களிலும் சுற்றிக்கொண்டேயிருக்கும். அச்சக்ரம் பகவான் ப்ரயோகித்த மாத்ரத்தில் அக்னி உலர்ந்த புதரைக் கொளுத்துவதுபோல், சத்ரு ஸைன்யங்களையெல்லாம் அடியோடு பஸ்மம் செய்கின்றது. அதுவே அதற்கு இயற்கையாகையால் அதை நாம் ப்ரார்த்திக்கவேண்டியதில்லை. கதையே! நீ வஜ்ராயுதத்தோடொத்த ஊறலையுடைய நெருப்புத் துணுக்கைகள் கிளம்பப்பெற்று ஜ்வலிக்கின்றனை. நீ பகவானுக்கு மிகவும் அன்பிற்கிடமாயிருப்பவன். நான் அந்தப் பகவானுடைய தாஸன். ஆகையால் கூஷ்மாண்டம் வைனயகம் யக்ஷர் ராக்ஷஸர் பூதர் முதலிய க்ரஹங்களையும் மற்றுமுள்ள பலவகைச் சத்ருக்களையும் வேருடன் அழிப்பாயாக. சங்கங்களில் சிறந்த பாஞ்சஜன்யமே! நீ க்ருஷ்ணனால் ஊதப்பெற்றுப் பயங்கரமான ஒலியுடன் சத்ருக்களின் ஹ்ருதயங்களை நடுங்கச்செய்துகொண்டு யாதுதானர் ப்ரமதர் ப்ரேதர் மாதருகணங்கள் பிசாசர் ப்ரஹ்மராக்ஷஸர் முதலிய க்ரஹங்களையும் பயங்கரமான காட்சியுடைய மற்றும் பல க்ரஹங்களையும் பறந்தோடச் செய்வாயாக. கட்கங்களில் சிறந்த நந்தகமே! நீ கூரிய நுனியுடையவன். நீ பகவானால் ப்ரயோகிப்பட்டு என்னுடைய சத்ரு ஸைன்யங்களையெல்லாம் அழிப்பாயாக. சந்த்ரன்போன்ற பலகண்களையுடைய கேடயமே! பாபிஷ்டர்களான சத்ருக்களின் கண்களை மறைப்பாயாக. பாபிஷ்டமான கொடிய காட்சியுடையவர்களின் கண்களைப் பறிப்பாயாக. க்ரஹங்கள் தூமகேது முதலிய உத்பாதங்கள் மனுஷ்யர்கள் ஸர்ப்

பங்கள் கோரைப்பல்லுடைய ஜந்துக்கள் பாபிஷ்டமான பூதங்கள் ஆகிய இவற்றினின்று எங்களுக்கு நேரும் பயங்களெல்லாம் பகவானுடைய நாமங்கள் உருவங்கள் ஆயுதங்கள் இவற்றின் கீர்த்தனத்தினுல் உடனே பறந்து போமாக. எங்கள் நன்மைக்கு விக்னம் செய்பவை எவ்வெவை உண்டோ அவையெல்லாம் பகவானுடைய நாமோச்சாரணம் முதலியவற்றுல் அழிந்துபோமாக. கருத்மான் ரதந்தரம் முதலிய பல பிரிவுகளையுடைய ஸாமவேதத்தினுல் துதிக்கப்படுகின்றுன்; ஜ்ஞானுதி குணங்கள் நிறைந்தவன் ; வேதஸ்வரூபன் ; ஸமர்த்தன் ; விஷ்வக்ஸேன ஸ்வரூபன். அவன் தன்னுடைய நாமங்களைச் சொல்லுகிற எங்களை எல்லா ஆபத்துக்களினின்றும் பாதுகாப்பானுக. பகவானுடைய நாமங்களும் உருவங்களும் வாஹனங்களும் ஆயுதங்களும் அனந்தன் கருடன் முதலிய பரிவாரங்களும் ஆபரணங்களும், எங்களுடைய புத்தி இந்த்ரியம் மனம் ப்ராணன் இவற்றை எல்லா ஆபத்துக்களினின்றும் பாதுகாக்குமாக. சேதனுசேதனரூபமான ஜகத்தெல்லாம் வாஸ்தவத்தில் பகவத் ஸ்வரூபமே. இவ்விஷயத்தில் எனக்கு ஸந்தேஹம் இல்லை. இது உண்மையாயின், எங்களுடைய உபத்ரவங்களெல்லாம் நசித்துப்போமாக. பரமபுருஷன் சேதனுசேதன ரூபமான ஜகத்திற்கெல்லாம் தானெருவனே அந்தராத்மாவாயிருக்கும் ப்ரபாவத்தினுல் ப்ராக்ருதமான தேவ மனுஷ்யாதி நாமங்களும் உருவங்களும் அவற்றின் மூலமாய் வரும் பேதமுமின்றித் தன்ஸங்கல்பரூப ஜ்ஞானத்தினுல்தானுகவே ஆபரணங்களையும் ஆயுதங்களையும் ராம க்ருஷ்ணுதி உருவங்களையும் ராம க்ருஷ்ணுதி நாமங்களையும் தரிக்கின்றுன். இது உண்மையாயின், அவன் என் ப்ரார்த்தனையையும் உண்மையாக்கி ஸர்வதேசங்களிலும் ஸர்வகாலங்களிலும்

ஸர்வாவஸ்தைகளிலும் ஆயுதங்கள் முதலிய ஸர்வஸ்வ ரூபத்தினாலும் எங்களைப் பாதுகாப்பானாக. நரஸிம்ஹ ரூபியான பகவான் திக்குக்களிலும் விதிக்குக்களிலும் மேலும் கீழும் உள்ளும் புறமும் நாற்புறத்திலும் பாது காப்பானாக. அவன் மஹத்தான தனது அட்டஹாஸ கோஷத்தினால் தன் பக்தர்களின் பயத்தைப் போக்குந் தன்மையன்; மற்றும், தன் தேஜஸ்ஸினால் ஸூர்யன்முத லிய மற்ற தேஜஸ்ஸுக்களையெல்லாம் விழுங்குந் திறமை யுடையவன்' என்று நாராயண வர்மத்தை மொழிந்து, மீளவும் அவ்விஸ்வரூபன் தேவேந்த்ரனைப் பார்த்து 'ஓ தேவேந்த்ரனே! நாராயண வர்மத்தை இங்ஙனம் உனக்கு மொழிந்தேன். இக்கவசத்தை அணிந்து ஸுகமா கவே அஸுரக்கூட்டத் தலைவர்களையெல்லாம் வெல்லு வாய். இதை அநுஸந்திக்கும் புருஷன் எவனைக் கண்ணால் பார்க்கிறானோ காலால் தொடுகிறானோ அவன் உடனே எத்தகைய பாபத்தினின்றும் விடுபடுவான். இம்மந்த்ர வித்யையைத் தரிக்கும் புருஷனுக்கு ராஜாக்கள் திருடர் கள் க்ரஹங்கள் முதலியவற்றினின்றாவது எவ்விடத்தி லும் எவற்றினின்றும் பயம் உண்டாகாது. முன்பு ஒரு காலத்தில் கௌசிககோத்ரத்தில் பிறந்த ஒரு ப்ராஹ்ம ணன் இவ்வித்யையை உபதேசமூலமாய்ப் பெற்று மறவா மல் அநுஸந்தித்துக் கொண்டுவந்தான். அவன் யோக தாரணையால் தன் சரீரத்தை ஒருமருபூமியில் துறந்தான். ஒருகால் சித்ரரதனென்னும் கந்தர்வராஜன் ஸ்த்ரீகளு டன் விமானத்தின்மேல் ஏறிக்கொண்டு அந்த ப்ராஹ்ம ணன் விட்டசரீரத்திற்கு நேராக ஆகாயத்தில் சென்றான். அக்கந்தர்வராஜன் உடனே அந்த ப்ராஹ்மணன் சரீரத் தை விட்ட இடத்தில் விமானத்துடன் தலைகீழாக விழுந் தான். அவன் எழுந்து வாலகில்ய ரிஷியின் வசனத்தினால்

கௌசிக ப்ராஹ்மணனுடைய எலும்புகளை எடுத்துக் கொண்டுபோய் ப்ராசீஸரஸ்வதியென்னும் நதியில் போட்டு ஸ்நானம்செய்து இவ்வித்யையின் மஹிமைக்கு வியப்புற்றுத் தன்னிருப்பிடம் போய்ச் சேர்ந்தான். பயம் நேருங்காலத்தில் இந்நாராயண வர்மத்தைக் கேட்கிறவனும் இதை ப்ரீதியுடன்கேட்டு அனுஸந்திக்கிறவனும் எல்லாப் பயங்களினின்றும் விடுபடுவார்கள். கூஷ்மாண்டம் முதலிய பூதங்கள் எவையும் அவர்களைக் கண்ணெடுத்துப் பார்க்கமாட்டா என்று மொழிந்தான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—தேவேந்த்ரன் விஸ்வரூபனிடத்தினின்று இவ்வித்யையைப் பெற்று இதன் ப்ரபாவத்தினால் யுத்தத்தில் அஸுரர்களையெல்லாம் வென்று த்ரிலோகராஜ்ய லக்ஷ்மியைப் பெற்று அனுபவித்தான். எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

இந்த்ரன் விஸ்வரூபனை வதித்தலும், த்வஷ்டா வ்ருத்ராஸுரனைப் பிறப்பிக்க அவனிடத்தில் தேவதைகள் பயந்து ஸ்ரீமஹாவிஷ்ணுவை ஸ்தோத்ரம் செய்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—பரத வம்சாலங்காரனே! அவ்விஸ்வரூபனுக்கு ஸோமபீதமென்றும் ஸுராபீதமென்றும் அன்னாதமென்றும் மூன்று தலைகள் இருந்தனவென்றுவேதத்தில் கேட்டிருக்கிறோம். அவனுக்குத் தேவதைகள் தந்தைமுறையில் சேர்ந்தவர்கள். அவ்விஸ்வரூபன் தேவதைகளுக்கு ஹவிர்ப்பாகம் கொடுக்கும்பொழுது இந்த்ரனுக்கிதுவென்றும் அக்னிக்கிதுவென்றும் வணக்கத்துடன் ப்ரத்யக்ஷமாக உரக்க மொழிந்தான். அவனே மாதாவிடத்திலுள்ளஸ்னேஹத்தினால் மாமன்மார்களான அஸுரர்களுக்கும் தேவதைகளுக்குத் தெரியாதபடி ஏகாந்தமாகவே ஹவிர்ப்பாகங் கொடுத்து அதை அவர்க

ளுக்குச்சேர்ப்பித்தான். அவன் கபடமாகத் தேவதைகளை வஞ்சித்துச் செய்தகார்யத்தை இந்த்ரன் கண்டு இவன் இன்னம் என் செய்வானோ வென்று பயந்து சீக்ரமாக அவன் தலைகளை அறுத்தான். அவனுடைய ஸோமபீத மென்னும் தலை அறுப்புண்டு கபிஞ்சலமென்னும் பக்ஷியா யிற்று. ஸுராபீதமென்னும் தலை கலவிங்கமென்னும் பக்ஷியாயிற்று. அன்னதமென்னும் தலை தித்திரியென் னும் பக்ஷியாயிற்று. விஸ்வரூபன் ப்ராஹ்மணனாகையால் அவனைக் கொன்றமையால் ப்ரஹ்ம ஹத்யாரூபமான பா பம் உருவத்துடன் வந்து நிற்க, தேவேந்த்ரன் அதைப் போக்கிக் கொள்ளவல்லனாயினும் அஞ்சலியினால் அதை ஏற்றுக்கொண்டான். அவ்விந்த்ரன் ஸம்வத்ஸரம் வரை யில் அப்படியேயிருந்து அதன் பிறகு ஜனாபவாதம் தீரும் பொருட்டுத் தன் பாபத்தை நான்கு பாகங்களாகப் பிரி த்துப் பூமி ஜலம் வ்ருக்ஷம் ஸ்த்ரீகள் ஆகிய நான்கு இடங் களில் ஒவ்வொன்றில் ஒவ்வொரு பாகமாக வைத்தான். அவற்றில் பூமி பள்ளங்கள் தாமே மறையவேண்டுமென்று வரம்பெற்று ப்ரஹமத்யையின் நான்கிலொரு பாகத்தை ஏற்றுக்கொண்டது. அந்த ப்ரஹ்மஹத்யையே பூமியில் களர்நிலமாய்ப் புலப்படுகின்றது. வ்ருக்ஷங்கள் எத்தனை தரம் வெட்டினாலும் தளிர்க்கவேண்டுமென்னும் வரம் பெற்று அந்த ப்ரஹ்ம ஹத்யையில் ஒரு பாகத்தை ஏற்றுக்கொண்டன. அதுவே அந்த வ்ருக்ஷங்களில் பிசிட்ரூபமாய்ப் புலப்படுகின்றது. ஸ்த்ரீகள் ப்ரஸவம் வரையிலும் ஸம்போகிக்கையாகிற வரத்தைப்பெற்று ப்ரஹ்மஹத்யையின் பாகத்தை ஏற்றுக்கொண்டார்கள். அந்தப் பாபமே அவர்களிடத்தில் மாதந்தோறும் ரஜோரூபமாய்ப் புலப்படுகின்றது. ஜலம் தான் எங்கும் நிறைந்திருக்கையாகிற வரத்தைப் பெற்று ப்ரஹ்மஹத்

யையின் பாகத்தை ஏற்றுக்கொண்டது. அந்தப்பாபமே ஜலத்தில் நீர்க்குமிழியாகவும் நுரையாகவும் புலப்படுகின்றது. பின்பு த்வஷ்டா தன் புதல்வனாகிய விஸ்வரூபன் தேவேந்த்ரனால் மாண்டமையால் அவன் மேல் வைரங்கொண்டு 'இந்த்ரனுக்குச் சத்ருவாய் வளர்ந்து வருவாயாக. சீக்ரத்தில் சத்ருவாகிய இந்த்ரனை வதிப்பாயாக' என்று இந்த்ரனை ஒழிக்க விரும்பி ஹோமம் செய்தான். உடனே தக்ஷிணாக்னியினின்று பயங்கரமான காட்சியுடைய ஒரு அஸுரன் கிளம்பினான். அவன் உலகங்களெல்லாம் அழியும்படியான ப்ரளயகாலத்திலுள்ள ம்ருத்யுவைப் போன்றிருந்தான். அவன் தினந்தோறும் நாற்புறங்களிலும் ஒரு பாணத்தளவு வளர்ந்து வந்தான். அவன் எரிகின்ற பர்வதம்போலும் ஸந்த்யா காலத்துமேகம்போலும் பேரொளியுடன் திகழ்ந்தான். அவனுடைய தாடி மீசைகளின் நுனிகள் பழுக்கக் காய்ச்சின செம்பின் நிறமுடையவைகளாயிருந்தன. அவன் கண்கள் மத்யாஹ்ன காலத்து ஸூர்யன்போல் பயங்கரமாக ஜ்வலித்துக்கொண்டிருந்தன. அவன் மூன்று நுனிகளுடன் ஜ்வலிக்கின்ற சூலத்தில் ஆகாயத்திற்கும் பூமிக்கும் இடையிலுள்ள வஸ்துக்களையெல்லாம் கோத்துக்கொண்டு கூத்தாடுவதும் உரக்க அட்டஹாஸம் செய்வதும் பாதத்தினால் பூமியை நடுங்கச் செய்வதுமாயிருந்தான். மற்றும், அவனது முகம் மலைச் செறிவுபோல் அகன்று ஆழ்ந்து ஆகாயத்தைப் பருகுவது போலும் நாக்கினால் நக்ஷத்ரங்களை நக்குவது போலும் மூன்று லோகங்களையும் விழுங்குவதுபோலும் தோன்றிக் கோரைப்பற்கள் அமைந்து மிகவும் பயங்கரமாயிருந்தது. அத்தகைய முகத்துடன் அடிக்கடி கோட்டாவி விடுகின்ற அவ்வஸுரனைப் பார்த்து

உலகத்திலுள்ளவர் அனைவரும் பயந்து பத்துத்திசைகளிலும் ஓடிப்போயினர். த்வஷ்டாவின் தவமே அங்ஙனம் அஸுரனென்னும் உருவங்கொண்டு இவ்வுலகங்களெல்லாம் பரந்து நின்றது. ஆகையால் அவன் வ்ருத்ரனென்று பேர்பெற்றான். அவன் பாபிஷ்டன்; இந்த்ரன் முதலிய லோகபாலர்களுக்கெல்லாம் விரோதியாகி ஒருவர்க்கும் பொறுக்கமுடியாமல் மிகவும் கொடியனாயிருந்தான். இந்த்ரன் முதலிய தேவஸ்ரேஷ்டர்கள் அனைவரும் ஸைன்யங்களுடன் கூடித் தத்தமது திவ்யாயுதங்களாலும் திவ்யாஸ்த்ரங்களாலும அவனை அடித்தார்கள். அவர்கள் அவனிடத்தில் உபயோகப்படுத்தாத ஆயுதமாவது அஸ்த்ரமாவது எதுவுமே இல்லை. அவ்வஸுரன் அவற்றையெல்லாம் அப்படியே விழுங்கினான். அப்பால் அத்தேவர்கள் அனைவரும், ஆ! இதென்ன பலமென்று வியப்புற்று அவ்வஸுரனால் தமது தேஜஸ்ஸெல்லாம் பறியுண்டு வருந்தி, ஆத்மாக்களுக்கு அந்தராத்மாவாகிய ஆதிபுருஷனை மனவூக்கத்துடன் துதித்தார்கள். 'காற்று ஆகாயம் அக்னி ஜலம் பூமி இவைகளும் மூன்று லோகங்களிலுமுள்ள ப்ரஹ்மதேவன் முதலிய நாங்களனைவரும் எவனுடைய கட்டளைக்குட்பட்டுப் பயந்து எவனையே ஆராதிக்கின்றோமோ, ப்ரஸித்திபெற்ற ம்ருத்யுவும் எவனிடத்தினின்று பயப்படுகின்றானோ, அத்தகைய பரமபுருஷனைக் காட்டிலும் மற்ற எவன்தான் நமக்கு ரக்ஷகனாவான்? அவன் இயற்கையில் ஏற்பட்ட மஹிமையுடையவனாகையால் வியப்பற்றவன்; அவாப்த ஸமஸ்தகாமன்; மஹாநந்த ஸ்வரூபனாகிய தன்னைத் தான் அனுபவிக்குந் தன்மையன்; ராகம் முதலிய தோஷங்களற்றவன்; பசி தாஹம் முதலிய ஊர்மிகள் தீண்டப்பெறாதவன்; ஸர்வேஸ்வரன்; தன்னைப் பற்றினவர்களைப் பாதுகாக்கவல்

லவன். அத்தகையனுன பரமபுருஷனைத் தவிர மற்றொருவனைச் சரணம் அடைவானாயின். அவன் ஒன்றுமறியாத மூடனே; அவன் நாயின் வாலைப்பிடித்துக்கொண்டு ஸமுத்ரம் தாண்ட விரும்புகிறவனேடொப்பான். மத்ஸ்யத்தின் உருவங்கொண்ட அந்தப் பரமபுருஷனுடைய கொம்பில் பூமியாகிற ஓடத்தைக்கட்டி ஸத்யவ்ரதனென்னும் மனு ஸங்கடத்தைக் கடந்தான். அத்தகைய மத்ஸ்ய ரூபியான பகவான் தன்னைச் சரணம் அடைந்த நம்மையும் மஹத்தான வ்ருத்ராஸுர பயத்தினின்று ரக்ஷிப்பான். இது நிச்சயம். முன்பு ஜகத்ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் ப்ரஹ்மதேவனும் பயங்கரமாய் வீசுகின்ற காற்றின் வேகத்தினுல் கிளம்பும் அலைகளின் கோஷத்தினுல் மிகவும் பயங்கரமான ப்ரளய ஜலத்தில் நாபி கமலத்தினின்று விழும்படியான தசையில் அகப்பட்டு ஒருவரும் ஸஹாயமின்றித் தனியனுகிப் பயப்படுகையில், பகவானுல் அப்பயத்தைக் கடந்தான். அவனே நம்மையும் இப்பயத்தினின்று பாதுகாப்பானுக. பகவான் தனக்கு இணையும் எதிருமில்லாதவன். தனிப்பெருங் கடவுளாகிய அப்பரமபுருஷன் தன் ஸங்கல்ப ஜ்ஞானத்தினுல் நம்மைப் படைத்தான். மற்றும், நாம் இப்பகவானுல் அருள்புரியப்பெற்று ஜகத்தை யெல்லாம் படைத்தோம். அவன் நமது ஹ்ருதய குஹையில் இருந்துகொண்டு நம்மை நியமித்துக் கொண்டிருப்பினும் அவனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை நாம் காணமுடியாமலே யிருக்கிறோம். நாம் நம்மை அவனுக்குட்படாத ஸ்வதந்த்ர ப்ரபுக்களென்று அபிமானித்துக் கொண்டிருக்கிறோம். நம்மைக் காக்கும் பொருட்டு அவன் நம்மை எப்பொழுதும் தன்னுடையவர்களென்று அபிமானித்து நம்மைப் பாதுகாக்கும்பொருட்டு யுகங்கள் தோறும் தன் ஸங்கல்பத்தி

னுல் தேவர் திர்யக்கு மனுஷ்யர் முதலிய ஜாதிகளில் தன் ஸங்கல்பத்தினுல் திருவுருவங்களைக் கொண்டு அவ தரித்துச் சத்ருக்களால் மிகவும் பீடிக்கப்பட்டிருக்கின்ற நம்மைப் பாதுகாத்தான். அவன் தன் பக்தர்களிடத் தில் மிகுந்த வாத்ஸல்ய முடையவன்; நமக்குத் தெய்வம்; காரண தசையை அடைந்த ஸூக்ஷ்ம சேதனு சேதனங் களையும் கார்ய தசையை அடைந்த ஸ்தூல சேதனு சேதனங்களையும் சரீரமாகவுடையவன்; சேதனு சேத னங்களைக் காட்டிலும் விலக்ஷணமானவன்; அவன் பரன்; தன்னைப் பற்றினுர்களைப் பாதுகாக்கவல்லவன். தேவதைகளாகிய நாமெல்லோரும் அவனையே சரணம் அடைவோமாக. நாம் செய்யவேண்டியது இவ்வளவே. நம்மைத் தன்னுடையவர்களென்று அங்கீகரித்திருக்கிற அவன் நமது சத்ருக்களைப் போக்கி நமக்கு ஸுகத்தை விளைப்பான்; மஹானுபாவன்; தன் பக்தர்களைப் பாது காப்பதில் தீக்ஷித்துக்கொண்டிருப்பவன்' என்று துதித் தார்கள். மஹாராஜனே! இங்ஙனம் அத்தேவர்கள் துதித் துக்கொண்டிருக்கையில் மேற்குத்திக்கில் சங்கம் சக்கரம் கதை இவற்றைத் தரித்த பகவான் தோன்றினுன். அவன் அப்போதலர்ந்த செந்தாமரை மலர்போன்ற திருக்கண்க ளுடையவன். ஸுநந்தர் முதலிய பதினுறு புருஷர்கள் அவனைப் பணிந்து வந்தார்கள். அவர்கள் ஸ்ரீவத்ஸம் கௌஸ்துபம் தவிர மற்ற எல்லா விதத்திலும் பகவானே டொத்திருந்தார்கள். அத்தகைய பரமபுருஷனைக் கண்டு அவ்வாநந்தத்தினுல் தழதழத்து எல்லோரும் பூமியில் தண்டம்போல் விழுந்து நமஸ்கரித்து மெல்ல எழுந்து இங்ஙனம் ஸ்தோத்ரம் செய்தார்கள்.

தேவதைகள் சொல்லுகிறுர்கள்:—யஜ்ஞாதி ஸத்கர் மங்களெல்லாம் உன்னுடைய ஆராதன ரூபமாய்க் கொ

ண்டு பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தையும் விளக்கின்றன. யஜ்ஞமே உன்னுடைய ஸ்ருஷ்டிஸாமர்த்யம். நீயே யஜ்ஞாதி கர்மங்களை அனுஷ்டிப்பதற்குரிய ஆயுளைக் கொடுப்பவன். யஜ்ஞாதி பலன்களைக் கொடுத்து அனிஷ்டங்களைப் போக்கிப் பாதுகாப்பவன் நீயே. பக்தர்களைப் பாதுகாப்பதில் விளம்பத்தைப் பொறுக்க முடியாமல் ஸர்வகாலமும் ஸுதர்சன சக்ரத்தை ஏந்திக்கொண்டிருக்கின்றனை. உன் நாமம் நினைத்த மாத்ரத்தில் மஹத்தான பயத்தையும் போக்கும் திறமையுடையது, இத்தகைய உனக்கு நமஸ்காரம். நீ ஸ்வர்க்கம் மோக்ஷம் நரகமென்கிற மூன்று கதிகளுக்கும் நிர்வாஹகன். நீ ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணன். ஜகத்காரணன்! அத்தகைய உன் ஸ்வரூபத்தை உன் ஸ்ருஷ்டிக்கு உட்பட்டவனும் உன்னால் கொடுக்கப்பட்ட ஜ்ஞான சக்திகளையுடையவனுமாகிய என்னைப் போன்ற புருஷன் அறியவல்லனுகமாட்டான். ஓம். ஷாட்குண்ய பூர்ணு! நாராயணு! வாஸுதேவ! ஆதிபுருஷா! மஹாபுருஷா! மஹானுபாவா! பரம மங்கள! பரமகல்யாணு! பரமகாருணிகா! கேவல ஜகதாதாரா! லோகைகநாதா! ஸர்வேஸ்வரா! லக்ஷ்மீநாதா! பரமஹம்ஸ பரிவ்ராஜகர்கள் மேலான ஆத்மஸமாதி யோகத்தினுல் உன்னை ஆராய்கின்ருர்கள். தெளிந்த பக்தி யோகத்தினுல் அஜ்ஞானமாகிற கதவைத் திறந்து மனத்தைச் சுத்தி செய்து ஆத்மாவை ஸாக்ஷாத்கரித்தவர்களுக்கு அவ்வாத்மாவுக்கு அந்தர்யாமியும் மஹாநந்தஸ்வரூபனுமாய் நீ தோற்றுகின்றனை. இத்தகைய நீ உலகங்களைப் படைப்பதும் பாதுகாப்பதும் அழிப்பதுமாயிருக்கின்றனை. இது உனக்கு விளையாட்டேயன்றி வேறன்று. இந்த உன் வ்யாபாரம் உலகத்திலுள்ளவர் வ்யாபாரங்களைக் காட்டிலும் வில

க்ஷணமாயிருக்கையால் அறியமுடியாதிருக்கின்றது. நீ வேறொரு ஆதாரத்தையும் எங்களைப்போன்ற ஸஹாயத்தையும் எதிர் பாராமல் ஸத்வாதி குணங்கள் தீண்டப் பெறாமல் எவ்வகை விகாரங்களுக்கும் இடமாகாமல், பிரித்தறிய முடியாதபடி மறைந்திருக்கிற சேதனுசேதனங்களோடு கூடின உன்னை யொழிய வேறொரு சரணமில்லாத இவ்வுலகமாகப் படைப்பதும் பாதுகாப்பதும் அழிப்பதும் செய்கின்றனை; இங்ஙனம் செய்கின்ற நீ கர்மத்திற்குட்பட்ட ஸம்ஸாரி ஜீவனைப்போல் ஸத்வாதி குணங்களின் கார்யமான ப்ரபஞ்சத்தில் விழுந்து ஸாத்விகம் ராஜஸம் முதலிய கர்மங்களையும் அவற்றின் பலன்களையும் ஏற்றுக்கொள்கின்றனையா? அல்லது ஆத்ம ஸ்வரூபத்தின் உண்மையை உணர்ந்து அவ்வாத்மானுபவத்தில் நிலைநின்று அந்தந்த வஸ்துக்களின் நிலைமையை உள்ளபடி அறிந்த ஞானிபோல் உதாஸீனமாயிருக்கின்றனையா? என்று உன் நிலைமையை நாங்கள் எவ்விதத்திலும் அறியமுடியாதிருக்கிறோம். நீ ஸம்ஸாரி ஜீவனைப்போல் ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களைக் கர்மத்திற்குட்பட்டுச் செய்பவனல்லை. ஞானியைப்போல் கேவலம் உதாஸீனமா யிருப்பவனுமல்லை. உன்னிடத்தில் கர்த்ருத்வமும் உதாஸீனத்வமுமாகிய இரண்டும் இருக்கின்றன. ஆகையால் உன் நிலைமை விலக்ஷணமாயிருக்கின்றது. இவ்விரண்டு தன்மைகளும் ஒன்றோடொன்று சேராதவைகளேயாயினும், விரோதமில்லை. உன்னிடத்தில் இரண்டும் ஸம்பவிக்க இடமுண்டு. நீ ஷாட்குண்ய பூர்ணன்; கணக்கில்லாத கல்யாண குணகணங்களுடையவன்; ஸமஸ்த சேதனர்களுக்கும் அந்தர்யாமியாயிருந்து அவர்களை நியமிக்கின்றனை. நீ அச்சேதனர்களோடொக்க நினைக்க முடியாத மஹிமையுடையவன். உன்

னருளுக்கு இலக்காகாத பல வாதிகள் உன்னை அறியப் புகுந்து ஸந்தேஹித்து இப்படியோ அப்படியோ என்று தர்க்கித்து ஒருவாறு நிச்சயித்துச் சில ப்ரமாணபாஸங்களைக்கொண்டு அவரவர்க்கு அவ்வப்பொழுது தோன்றின படி எழுதுவித்த கள்ளப் பொய்நூல்களில் பழக்கத்தினால் மனம் கலங்கித் தாம் நிச்சயித்ததே பொருளென்று துராக்ரஹங்கொண்டு விவாதப்படுகிறார்கள். நீ ப்ராக்ருதமான தோஷங்கள் எவையும் தீண்டப்பெறாதவன். ப்ரளயதசையில் இந்த ப்ரபஞ்சத்தை உன்னிடத்தில் அடக்கிக்கொண்டு நீயொருவனே மிகுந்திருக்கின்றனை. நீ உன்மாயைக்கு உட்படாமல் மறைந்திருக்கின்றனை. இத்தகைய உன்னிடத்தில் எந்தப் பொருள்தான் சேராது? உன்னிடத்தில் பொருந்தாத இரண்டு தன்மைகள் எவையுமே இல்லை. கயிற்றைப்பார்த்து ஸர்ப்பமென்று நினைப்பவர்களின் நினைவை அக்கயிறு தடுக்காதிருப்பதுபோல், உன்னைப்பற்றி விவாதப்படுகிறவர்களின் அபிப்ராயத்தைத் தடுக்காமல் நீ வெறுமனேயிருக்கின்றனை. ஆகையால் உன்னுடைய பெருமையை அறியாமல் சிலர் உன்னிடதகில் சிலவற்றைச் சேராதவையாக நினைக்கிறார்களேயன்றி மற்றில்லை. நீ தேவர் முதலிய ஸமஸ்த வஸ்துக்களிலும் நிறைந்திருக்கின்றனை. ஆயினும் அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாமல் நிர்விகாரஸ்வரூபனாயிருக்கின்றனை. அசேதனத்தோடு கூடின ஸம்ஸத ஜீவாத்மாக்களும் உனக்குச் சரீரமாயிருக்கின்றனர். ஆகையால் விகாரங்களெல்லாம் அந்தச் சேதனசேதனங்களைச் சேர்ந்தவைகளேயன்றி உனக்குக் கிடையாது. நீ ஸர்வேஶ்வரன்; ஸர்வஜகத்காரணபூதன். நீயே சேதனசேதனரூபமான இந்த ப்ரபஞ்சமாகத் தோற்றுகின்றனை. இத்தகையன் நீயொருவனேயன்றி உனக்கு ஈடாவது

எதிராவது எதுவுமே இல்லை; ஓபகவானே! மதுஸூதனா! ஒரு ப்ரயோஜனத்தையும் எதிர் பாராமல் உன்னிடத்தில் பக்தி செய்யுந்தன்மையுடைய பெரியோர்கள் இத்தகைய ஞான உன் பாதாரவிந்தஸேவையை எங்ஙனம் துறப்பார்கள்? அவர்கள் புருஷார்த்தமின்னதென்று நிச்சயித்து அறியும் பண்டிதர்கள்; உன்னையே ப்ரீதிக்கிடமுள்ள நண்பனாகக் கொண்டவர்கள்; ராகத்வேஷாதி தோஷங்களின்றிப் பிறருடைய கார்யங்களை நிறைவேற்றுந் தன்மையுடையவர்கள். அவர்கள் உன்மஹிமையாகிற ஸமுத்ரத்தில் சிறுதுளியை ஒருகால் அனுபவித்து அவ்வளவில் தம்மனத்தில் மஹாநந்தம் பெருகப்பெற்று ஐஹிக ஸுகாபாஸங்களையும் ஆமுஷ்மிக ஸுகாபாஸங்களையும் உதறியிருப்பவர்கள்; ஸமஸ்த பூதங்களுக்கும் ப்ரியனும் நண்பனும் ஸர்வாந்தராத்மாவும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய உன்னிடத்தில் நிலைநின்று களிக்கின்றமனமுடையவர்கள். இத்தகைய பெரியோர்கள் மீளவும் இந்த ஸம்ஸாரத்தில் திரும்பவொட்டாமல் மோக்ஷத்தைக் கொடுக்கவல்ல உன் பாதாரவிந்தஸேவையை எங்ஙனம் துறப்பார்கள்? நீ மூன்று லோகங்களையும் உட்புகுந்து நியமிக்கின்றனை. அவற்றிற்கு ஆதாரமாயிருக்கின்றனை. நீ இவ்வுலகங்களையெல்லாம் மூன்று அடிகளால் அளந்தனை. சந்த்ரன் ஸூர்யன் அக்னி இம்மூவரும் உன்னுடைய கண்கள். உன் வைபவம் மூன்று லோகங்களின் மனத்தையும் பறிக்குமாறு மிகவும் அழகாயிருக்கின்றது. தைத்யர் தானவர் மனுஷ்யர் முதலியவர் அனைவரும் உன் விபூதிகளே. ஆகையால் அவர்களை நீ வதிக்க நினைப்பது யுக்தமன்று. ஆயினும் அவர்களுக்கு இது அபிவ்ருத்தி காலமன்றென்று நினைத்து, முன்பு உன் ஸங்கல்பத்தினால் தேவர் மனுஷ்யர் ஜலஜந்துக்கள் முதலிய ஜாதிகளில் அவதரித்துச் சத்ருக்

களை அவரவர்களுடைய அபராதத்திற்குத் தகுந்தபடி தண்டித்தனை. பகவானே! தப்பு வழியில் செல்பவர்களைத் தண்டிக்குந் தன்மையனே! உனக்குத் திருவுள்ளமாயின், இந்த த்வாஷ்ட்ரனையும் வதிப்பாயாக. அப்பனே! நாங்கள் உன்னுடையவர்கள். நீ உன் திவ்யமங்கள விக்ரஹத்தைக் காட்டி எங்களை அங்கீகரித்தனையல்லவா? உன்னிணையடிகளை த்யானிக்கையால் எங்கள் மனம் ஸ்வாதீனமாகி நாங்கள் வேறு விஷயங்களில் போகவேண்டுமென்றாலும் போகவொட்டாமல் விலங்குபோல் தடுக்கின்றது. அருள் நிறைந்து தெளிந்து அழகிய புன்னகையோடு கூடினகண்ணோக்கத்தினாலும் கருணையால்பெருகி வருகின்ற இனிய உரையாகிற அம்ருததாரையாலும் எங்கள் தாபத்தைப் போக்குவாயாக. பகவானே! நாங்கள் உனக்கு அறிவிக்கவேண்டிய ப்ரயோஜனம் என்னவிருக்கின்றது? அக்னிக்கு அதன் அனுக்கையால் ஆகவேண்டிய ப்ரயோஜனம் உண்டோ? உன் மாயை ஆச்சர்யமானது. இவ்வுலகங்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குரியபடி பரிணாமங்களை அடைகின்ற அம்மாயை உன் விநோதத்திற்கிடமாயிருக்கின்றது. நீ ஸமஸ்த ஜீவ ஸமூஹங்களுக்குள் ஹ்ருதயங்களில் ப்ரஹ்மமென்று சொல்லப்படுகிற ப்ரத்யகாத்மஸ்வரூபத்தினாலும் வெளியில் ப்ரக்ருதி ஸ்வரூபத்தினாலும் தேசம் காலம் தேஹம் அவஸ்தை இவற்றிற்குத் தகுந்தபடி ஸுகம் துக்கம் முதலிய ஸமஸ்த ஜ்ஞானங்களையும் விளைத்துக்கொண்டு நிறைந்திருக்கின்றனை. ஜீவாத்மாக்களுடைய மனோபாவங்களுக்கெல்லாம் நீஸாக்ஷியாயிருக்கின்றனை. நீ தஹராகாசத்தைச் சரீரமாகவுடையவன், ஸ்வயம்ப்ரகாசமும் எல்லாவற்றையும் விளக்குவதும் அபரிச்சின்னமுமான ஜ்ஞானமே வடிவமாகப் பெற்றவன். பரப்ரஹ்மமென்

னும் பேர் உனக்கே முக்யமானது. நீ மூன்றுலோகங்களை யும் உள் புகுந்து தரிக்கின்றனை. நாங்கள் உன்னுடைய ஸங்கல்பத்தினாலேற்பட்ட நிலைமையுடையவர்கள். எங்க ளால் உனக்கு ஆகவேண்டிய ப்ரயோஜனம் ஒன்றுமில்லை. ஆகையால் நாங்கள் எதற்காக வந்தோமோ அதை நீயே நிறைவேற்றுவாயாக. தைத்ய தானவாதிகளுக்கும் அந்த ராத்மாவாயிருந்து அவர்களுடைய நிலைமையை நீயே நடத்துகின்றனை. உனக்கு நாங்கள் எல்லோரும் ஸமானர் களே. ஆயினும் நாங்கள் பரம குருவாகிய உனது பா தாரவிந்தங்களின் நீழலைப்பற்றி யிருக்கிறோம். அந்நீழல் பலவகைப் பாபங்களால் விளையும் ஸம்ஸார பரிஶ்ரமங் களையெல்லாம் போக்குந் தன்மையுடையது. ஆகையால் நீ எங்கள் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும். ஓ ஜக தீசா! இந்த த்வஷ்டாவின் புதல்வனாகிய வ்ருத்ராஸுரன் மூன்று லோகங்களையும் விழுங்குகின்றான். க்ருஷ்ண! இவன் எங்கள் தேஜஸ்ஸுக்களையும் அஸ்த்ரங்களையும் ஆயுதங்களையும் விழுங்கினான். ஆகையால் இவனை வதிப் பாயாக. நீ ஸமஸ்த தோஷங்களும் தீண்டப்பெறாத பரி சுத்தன். ஹ்ருதய புண்டரீகத்தில் வாஸம் செய்கின்றனை; ஜீவாத்மாக்களுடைய சித்த வ்ருத்திகளுக்கு ஸாக்ஷியா யிருக்கின்றனை. ஆகையால் எங்கள் வருத்தம் உனக்கு நன்றாகத் தெரியும். நீ பூமியின் பாரத்தைப்போக்கி ஸுக த்தைக் கொடுப்பவன். உன் புகழ் பரிசுத்தமானது. நாங் கள் வேறு முயற்சிகளை யெல்லாம் துறந்து உன்னையே சரணம் அடைந்திருக்கிறோம். உன் கட்டளைப்படி நடப் பவர்களை நீ உன்னுடையவர்களாக அங்கீகரித்து அருள் புரியுந் தன்மையுடையவன்; ஸம்ஸார மார்க்கத்தில் திரி யும் வழிப்போக்கர்களுக்கு நிலைநின்ற ஆதாரமாயிருப் பவன்; (ஐஹிகஸுகத்தை மாத்ரமேயன்றி ஆமுஷ்மிக

ஸுகத்தையும் கொடுப்பவன்). மேன்மையான புருஷார்த்தம் நீயே. தன்னைப் பற்றினருடைய துக்கங்களைப் போக்குகையால் நீ ஹரியென்று பெயர் பெற்றனை. இத்தகைய உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! தேவதைகளால் ப்ரீதியுடன் துதிக்கப்பெற்ற பகவான் தன் துதியைக் கேட்டு ஸந்தோஷித்து அவர்களை நோக்கி இங்ஙனம் மொழிந்தான்.

பகவான் சொல்லுகிறான்:—ஓ தேவஸ்ரேஷ்டர்களே! நீங்கள் பண்ணின ஸ்தோத்ரமாகிற வித்யையால் நான் மிகவும் ஸந்தோஷம் அடைந்தேன். இந்த ஸ்தோத்ர வித்யையினால் புருஷர்கள் என்னிடத்தில் பக்தி உண்டாகப் பெற்றுத் தேஹத்தைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவின் ஐஸ்வர்யத்தையும் நினைப்பார்கள், தேவஸ்ரேஷ்டர்களே! நான் ஸந்தோஷம் அடைவேனாயின், எதுதான் துர்லபம்? ஆயினும் என்னிடத்தில் நிலைநின்ற மதியுடைய [1] தத்வஜ்ஞன் என்னை யொழிய மற்றொன்றையும் விரும்பமாட்டான். சப்தாதி விஷயங்களைப் புருஷார்த்தமாக நினைத்திருக்கும் புருஷன் இந்த்ரியங்களுக்குட்பட்டுத் தன்னுடைய நன்மையை அறியமாட்டான். அந்தச் சப்தாதி விஷயங்களை விரும்புகிறவனுக்கு ஒருவன் சிறந்த நன்மையை விளக்கவல்லவனா யிருந்தும் அவற்றையே கொடுப்பானாயின், அவனும் அவனைப் போன்ற ஒரு மந்தபுத்தியனேயாவான். மேலான புருஷார்த்த மின்னதென்பதையும் அதன் உபாயத்தையும் அறிந்தவன் அதை அறியாமல் கேவல கர்மத்திலேயே மனம் சென்று வருந்துகிறவனுக்கு அக்கர்மத்தையே செய்யும்படி சொல்லமாட்டான், சிறந்த வைத்யன், ரோகி

1. உண்மையை உணர்ந்தவன்.

அபத்யமான வஸ்துவை விரும்பினும், அதை அவனுக்குக் கொடுக்கமாட்டானல்லவா? ஆகையால் நீங்கள் என்னை அருள்புரிவித்துச் சத்ருக்களை ஜயிக்கவேண்டுமென்று விரும்புவது உங்கள் புத்திக்குறைவின் கார்யமே. மோக்ஷத்தைக் கொடுக்கவல்ல நானும் நீங்கள் விரும்பின படி செய்வது யுக்தமன்று. ஆயினும் உங்கள் கார்யம் நிறைவேறும் உபாயத்தைச் சொல்லுகிறேன், கேளுங்கள். ஓ தேவேந்த்ரன் முதலிய தேவஶ்ரேஷ்டர்களே! நீங்கள் ததீசிமஹர்ஷியிடம் போவீர்களாக. உங்கள் இஷ்டம் நிறைவேறும். நீங்கள் காலவிளம்பம் செய்யாமல் அம்மஹர்ஷியிடம் சென்று, பரமாத்மோபாஸனரூபமான வித்யையாலும் வ்ரதங்களாலும் தவங்களாலும் ஸாரமுள்ள அவரது சரீரத்தைக் கொடுக்கும்படி வேண்டுங்கள். அவர் பரிசுத்தமான ப்ரஹ்மவித்யையின் கரை அறிந்தவர். அவ்வித்யையை அவர் அஶ்விதேவதைகளுக்கு உபதேசித்தார். அவ்வித்யையே அஶ்வசிரஸ்ஸென்று ப்ரஸித்தி பெற்றது. அவ்வித்யோபதேசத்தினால் அஶ்விதேவதைகளுக்கு மரணமில்லாமையையும் விளைத்தார். அவர் தன் தந்தையாகிய அதர்வமுனிவரிடத்தினின்று என்னைத் தேவதையாகவுடையதும் அபேத்யமுமான நாராயண கவசத்தைத் தான் பெற்று அதை த்வஷ்டாவுக்கு உபதேசித்தார். த்வஷ்டா விஶ்வரூபனுக்கு உபதேசித்தான். அவ்விஶ்வரூபனிடத்தினின்று நீ பெற்றாய். அம்முனிவர் மஹானுபாவர். அவருடைய சரீரம் மிகவும் ஸாரமுடையது. அவர் தர்மத்தை உணர்ந்தவர். நீங்கள் யாசிப்பீர்களாயின், அவர் தனது அங்கங்களை அவஶ்யம் கொடுப்பார். அவற்றைக் கொண்டுவந்து விஶ்வகர்மாவினிடம் கொடுத்தால் அவன் அவற்றால் மேலான ஒரு ஆயுதத்தை இயற்றிக்

கொடுப்பான். இந்த்ரன் அவ்வாயுதத்தைக் கொண்டு என்னுடைய தேஜஸ்ஸினால் பலம் வளரப்பெற்று வ்ருத்ராஸுரனுடைய தலையை அறுப்பான். அங்ஙனம் அந்த வ்ருத்ராஸுரன் தொலைந்த பின்பு நீங்கள் தேஜஸ்ஸையும் அஸ்த்ரங்களையும் ஆயுதங்களையும் ஸம்பத்தையும் முன்போல மீளவும் பெறுவீர்கள். உங்களுக்கு க்ஷேமம் உண்டாகும். பயப்படவேண்டாம். என்னிடத்தில் மனப்பற்றுடையவர் எதற்கும் வருந்தமாட்டார்கள் அவர்களை எவரும் பாதிக்க மாட்டார்கள்? ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

இந்த்ரன் ததீசருடைய எலும்புகளால் வஜ்ராயுதத்தை இயற்றிக்கொண்டு வ்ருத்ராஸுரனோடு யுத்தம் செய்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ஜகத்ரக்ஷகனாகிய பகவான் இங்ஙனம் இந்த்ரனுக்குக் கட்டளையிட்டுத் தேவதைகள் பார்த்துக்கொண்டேயிருக்கையில் அவ்விடத்திலேயே மறைந்தான். பிறகு தேவதைகள் பகவான் மொழிந்தபடியே ததீச முனிவரிடம்போய் அவருடைய அங்கங்களைக் கொடுக்கும்படி வேண்டினார்கள். பாரதனே! அதர்வமுனிவருடைய புதல்வராகிய அந்தத் ததீசமுனிவர் மஹானுபாவர். அவர் செயல்களெல்லாம் தீர்ந்து ம்ருத்யுவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். ஆகையால் அவர் தேவதைகளின் வசனத்தைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்து புன்னகை செய்து 'ஓ தேவதைகளே! ப்ராணிகளுக்கு மரணகாலத்தில் பொறுக்கமுடியாத வருத்தம் உண்டாகுமென்றும், அக்காலத்தில் அவர்க்கு ப்ரஜ்ஞையும் தவறிப்போமென்றும் நீங்கள் அறியீர்களோ? ஜீவிக்கவேண்டுமென்று விரும்பும் ப்ராணிகளுக்குத் தே

ஹம் மிகவும் அன்பிற்கிடமாயிருக்குமல்லவா? அங்ஙனம் இஷ்டமான தேஹத்தை நேரே ஸ்ரீமஹாவிஷ்ணு வந்து யாசித்தாலும் எவன் தான் கொடுக்க உத்ஸாஹப் படுவான்? ஆகையால் நீங்கள் தான் என் தேஹத்தை வாய்கூசாமல் எப்படிக் கேட்கலாம்? நான்தான் எப்படி கொடுப்பேன்?' என்றார். அதைக்கேட்ட தேவதைகள் அம்முனிவரை நோக்கி 'ஓ அந்தணர்தலைவரே! உம்மைப்போன்ற பெரியோர்கள் ப்ராணிகளிடத்தில்மனஇரக்கமுடையவர்கள். அழகிய புகழுடைய அனைவராலும் உங்கள் நடத்தைகள் புகழத்தக்கவைகளாயிருக்கின்றன. உங்களுக்கு எது துறக்க முடியாதது? தன் ப்ரயோஜனத்தை எதிர்பார்க்கிறவன் பிறனுடைய ஸங்கடத்தை உணரமாட்டான். உணர்வானாயின் யாசிக்கவேமாட்டான். பிறர் தன்னை யாசிப்பார்களாயின், கொடுக்க வல்லவன் இல்லையென்று சொல்லவேமாட்டான்' என்றார்கள். அதைக்கேட்ட மஹர்ஷியும் 'தேவதைகளே? உங்களிடத்தில் தர்மத்தைக் கேட்கவிரும்பி நான் உங்களைத் திரஸ்கரித்தேனன்றி வேறில்லை. இத்தேஹம் தனக்குக் காரணமான ப்ராரப்தகர்மம் தீர்ந்தமையால் என்னை விட முயன்றிருக்கின்றது. உங்களுக்கு ப்ரியமான இத் தேஹத்தை நானும் அபிமானத்துடன் துறக்கிறேன். ஓ நாதர்களே! நிலையற்றதாகிய இச்சரீரத்தினால் ப்ராணிகளிடத்தில் தயை செய்து தர்மத்தையாவது புகழையாவது ஸாதிக்கமாட்டானாயின், அவனைப்பற்றி ஸ்தாவரங்களும் சோகிக்கும். ப்ராணிகளின் வருத்தங்கண்டு வருந்துவதும், ஸந்தோஷம் கண்டு ஸந்தோஷிப்பதுமாயிருக்கையாகிய இவ்வளவே அழிவற்ற தர்மமென்று புண்ய ஸ்லோகரான பெரியோர்கள் நிச்சயித்திருக்கிறார்கள். தேஹங்கள் நாய் நரி முதலியவற்றிற்கு ஆஹார

மாக வேண்டியவைகள்; பிறர்க்கு உபயோகப்பட வேண்டியவைகள்; நிலையற்றவைகள். அவற்றால் ஆத்மாவுக்கு ஆகவேண்டிய உபயோகம் எதுவுமே இல்லை. மனுஷ்யர்கள் அத்தகைய தேஹங்களாலும் பிள்ளை பெயரன் முதலிய பந்துக்களாலும் பிறர்க்கு உதவி செய்யார்களாயின், அதைக்காட்டிலும் வேறு வருத்தமே இல்லை. ஆ! இப்படியும் செய்வார்களோ?' என்றார். உண்மையை உணர்ந்த அம்முனிவர் இங்ஙனம் நிச்சயித்துக்கொண்டு இந்த்ரியங்களையும் மனத்தையும் புத்தியையும் அடக்கி ஆத்மாவைப் பரமாத்மாவினிடத்தில் ஸமர்ப்பித்துக்கர்மபந்தங்களெல்லாம் தீரப்பெற்றுமேலான யோகமார்க்கத்தில் இறங்கித் தன் தேஹத்தைத் துறந்தார். பிறகு அவர் தன்னை விட்டுப்போன தேஹத்தையும் அறியவில்லை. அப்பால் தேவேந்த்ரன் அம்முனிவருடைய தேஹத்திலுள்ள எலும்புகளைக்கொண்டு விஸ்வகர்மாவினால் வஜ்ராயுதம் செய்வித்து அதை எடுத்துக்கொண்டு பகவானுடைய தேஜஸ்ஸுடன் கூடி உத்ஸாஹம் வளரப்பெற்று ஸமஸ்த தேவகணங்களோடுங்கூடி ஐராவதத்தின்மேல் ஏறி விளங்கினான். பிறகு அத்தேவேந்த்ரன் முனி கணங்களால் துதிக்கப்பெற்று மூன்று லோகங்களையும் களிக்கச் செய்பவன் போன்று அஸுரஸைன்யங்களில் தலைமையுள்ள வீரர்களால் சூழப்பட்ட சத்ருவாகிய வ்ருத்ரன் மேல் எதிர்த்தோடினான். அப்பொழுது அவ்விந்த்ரன் ப்ரளய காலத்தில் கோபித்து யமன்மேல் எதிர்த்தோடுகிற ருத்ரன்போல விளங்கினான். ஓ மன்னவனே! அப்பால் முதல் சதுர்யுகத்தில் த்ரேதாயுகத்தின் ஆரம்பத்தில் நர்மதாநதிக்கரையில் தேவதைகளுக்கு அஸுரர்களோடு மிகவும் பயங்கரமான யுத்தம் நடந்தது. அப்பொழுது ஏகாதசருத்ரர்களும் அஷ்டவஸுக்களும்

த்வாதசாதித்யர்களும் அஶ்விதேவதைகளும் பித்ருக்க ளும் அக்னிகளும் மருத்துக்களும் ருபுக்களும் ஸாத்யர்க ளும் விஶ்வதேவரும் தேவதைகளும் இந்த்ரனைச் சூழ்ந் திருந்தார்கள். அங்ஙனம் தேவதைகளோடுகூடி வஜ்ரா யுதத்தை ஏந்தித் தன்னொளியுடன் விளங்குகின்ற தம் சத்ருவாகிய தேவேந்த்ரனைக் கண்டு வ்ருத்ரன் முதலிய அஸுரர்கள் பொறுக்க முடியாதிருந்தார்கள். நமுசி சம்பரன் அனர்வன் த்விமூர்த்தன் வ்ருஷபன் அம்பரன் ஹயக்ரீவன் சங்குசிரன் விப்ரசித்தி அயோமுகன் புலோமன் வ்ருஷபர்வன் ப்ரேஹதி உத்கடன் தூம்ர கேசன் விருபாக்ஷன் கபிலன் விபாவஸு இவர் களும் ஆயிரமாயிரமான தைத்யர்களும் தானவ ர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் இல்வலன் பல் வலன் தந்தசூகன் வ்ருஷத்வஜன் காலநாபன் மஹா நாபன் பூதஸந்தாபனன் வ்ருகன் இவர்களும் ஸு மாலி மாலி முதலியவர்களும் ஸ்வர்ணமயமான அலங் காரங்களை அணிந்து ம்ருத்யுவுக்கும் அணுக முடியாத இந்த்ரனுடைய ஸேனையின் முன் நின்று தடுத்துப் பர பரப்பின்றிக் கொடியமதமுடையவராகிப் பெரிய ஸிம்ஹ நாதத்துடன் எதிர்த்துக் கதை உழல்தடி பாணம் ஈட்டி இரும்புத்தடி தோமரம் சூலம் கோடாலி கத்தி சதக்னி முஸுண்டி முதலிய ஆயுதங்களாலும் அஸ்த்ரங்களா லும் தேவஶ்ரேஷ்டர்களை நாற்புறத்திலும் சூழ்ந்து அடித்தார்கள். தேவதைகள் அஸுரர்களால் ப்ரயோ கிக்கப்பட்டுப் புங்கானுபுங்கமாய் வந்து விழுகின்ற பா ணங்களால் நாற்புறத்திலும் மறைக்கப்பட்டு, ஆகாயத் தில் மேகங்களால் மறைக்கப்பட்ட நக்ஷத்ரங்கள்போல் கண்ணுக்குப் புலப்படாமலேயிருந்தார்கள். அங்ஙனம் அஸுரர்கள் மழை பெய்தாற்போல் பெய்த ஆயுதங்க

ளும் அஸ்த்ரங்களும் தேவஸேனுஜனங்களின்மேல் பட வேயில்லே. வெகுவேகமாய்ப் பாணப்ரயோகம் செய்ய வல்ல தேவதைகள் அவற்றை ஆகாயத்திலேயே ஆயி ரம் கண்டங்களாக அறுத்து விட்டார்கள். அனந்தரம் அஸுரர்கள் தாம் ப்ரயோகித்த அஸ்த்ரங்களும் சஸ்த் ரங்களும் அங்ஙனம் வீணுனமை கண்டு மலேச்சிக ரங்களேயும் மரங்களேயும் கற்களேயும் கொண்டுவந்து தேவ தைகளின் மேல் பெய்தார்கள். தேவதைகள் அவற்றை யும் முன் போலவே அறுத்தார்கள். பிறகு வ்ருத்ரனே நாதனுகவுடைய அஸுரர்கள் தாம் ப்ரயோகித்தபல வகை அஸ்த்ரங்களாலும் சஸ்த்ரங்களாலும் சிறிதும் அடிபடாமல் தேவதைகள் க்ஷேமமாயிருப்பதையும், மீள வும் தாம் ப்ரயோகித்த மரங்களும் கற்களும் மலேச்சிகரங் களும் அவர் மேல் படாமல் வீணுனவற்றையும் கண்டு எல்லோரும் பயந்தார்கள். ஸ்ரீக்ருஷ்ணனுக்கு அனுகூலர் களான பெரியோர்களின் மேல் புத்தியில்லாத மூடர்கள், பிதற்றுகிற வசைகளெல்லாம் வீணுவதுபோலத் தேவக் கூட்டங்களின் மேல் அஸுரர்கள் செய்த ப்ரயாஸங்க ளெல்லாம் வீணுயின. அவ்வஸுரர்கள் பகவானிடத்தில் பக்தியில்லாதவர்கள். ஆகையால் தேவதைகள் அவர்க ளுடைய பலத்தையெல்லாம் அனுயாஸமாகப் பறித்தார் கள். ஆதலால் அவ்வஸுரர்கள் யுத்தத்தில் தமக்குள்ள கொழுப்பெல்லாம் பாழாகப் பெற்றுத் தம்முடைய ப்ரயா ஸங்களெல்லாம் விணுனமை கண்டு ப்ரஸித்தி பெற்றவர்க ளாயினும் யுத்தாரம்பத்தில் தம் ப்ரபுவான வ்ருத்ராஸு ரனேத் துறந்து ஓடிப்போக மனங்கொண்டார்கள். மஹாவீரனும் ஆழ்ந்த மனமுடையவனும் கொடியனு மாகிய அந்த வ்ருத்ராஸுரன் தன் ப்ருத்யர்கள் ஓடுவதை யும் தன் பலத்தில் சிறிது அழிந்து போனதையும், மற்ற

வர்கள் பயந்து ஓடிப்போவதையும் கண்டு அக்காலத்திற் குரியதும் கம்பீரமனமுடைய வீரர்களுக்கு இனியதுமான வார்த்தையை மொழிந்தான். 'ஓ விப்ரசித்தீ? நமுசீ! புலோமா! மயனே! அனர்வா! சம்பரா! நீங்கள் என் வார்த்தையைக் கேளுங்கள். பிறந்தவர் அனைவரும் மரணம் அடைவார்களென்பது நிச்சயம். அந்த ம்ருத்யுவுக்கு எவ்விதத்திலும் ப்ரதீகாரமே ஏற்படவில்லை. ஆகையால் அதைத் தடுக்க முடியாது. ஓ ராக்ஷஸர்களே! அந்த மரணத்தினால் ஸ்வர்க்கலோகமும் யசஸ்ஸும் விளையுமாயின், அதை எவன்தான் விரும்பமாட்டான்? இவ்வுலகத்தில் இரண்டுவகையான மரணங்கள் கிடைக்க அரியவை யென்று பெரியோர்களால் புகழப்படுகின்றன. உள்ளிந்த்ரியத்தையும் வெளி யிந்த்ரியங்களையும் வென்று யோகத்தில் இழிந்து ப்ரஹ்மத்யானத்தினால் சரீரத்தைத் துறக்கை ஒன்று. வீரர்களின் படுக்கையாகிய யுத்தபூமியில் பின்வாங்காமல் சத்ருக்களால் அடியுண்டு சரீரத்தைத் துறக்கை மற்றொன்று. விவேகமுடையவர்கள் இவ்விரண்டு மரணங்களையும் உபேக்ஷிக்க மாட்டார்கள்.' பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

## வ்ருத்ராஸுரன் இந்த்ரனோடு ஸம்பாஷித்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ஓ மன்னவனே! இங்ஙனம் ஸேனையில் தலைவனாகிய வ்ருத்ரன் தர்மத்தினின்றும் நழுவாத வார்த்தையைச் சொல்லிக்கொண்டிருப்பினும், பயந்து மனநிலைமையற்று ஓடிப்போக முயன்றிருக்கிற அஸுரர்கள் அவனுடைய வசனத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. அப்பால் அஸுரஶ்ரேஷ்டனாகிய அந்த வ்ருத்

ராஸுரன் அஸுரஸைன்யமெல்லாம் காலம் அனுகூல மாயிருக்கப் பெற்ற தேவதைகளால் பீடிக்கப்பட்டு நாத னற்றதுபோலப் பயந்தோடுவதைக் கண்டு இந்த்ரசத்ரு வாகிய வ்ருத்ரன் அந்த வ்யஸனத்தைப் பொறுக்க முடி யாமல் மிகவும் கோபித்துத் தன் பலத்தினுல் ஸேனை யைத் தகைந்து விரட்டித் தேவதைகளை நோக்கி இங்ங னம் மொழிந்தான். 'யுத்தத்தில் முன் நிற்கமாட்டாமல் பயந்தோடிப் பின்புறத்தில் அடிபடுகின்ற இவ்வஸுரர் கள் மாதாவின் விஷ்டைபோல் ஒன்றுக்கும் உபயோகப் படாதவர்கள். இவர்களை வதிப்பதனுல் உங்களுக்கு என்ன ப்ரயோஜனம்? பயந்தவனை வதிப்பது சூரர்களால் புகழத் தகுந்ததன்று; ஸ்வர்க்கத்தையும் விளைக்காது. ஓ அற்பர்களே! ஆகையால், உங்கள் மனத்தில் சண்டை செய்யவேண்டுமென்னும் விருப்பமாவது தேஹபலமா வது உள்ளதாயின், சப்தாதிவிஷயங்களை அனுபவிக்க வேண்டுமென்னும் விருப்பமும் இல்லாதிருக்குமாயின், ஒரு க்ஷணகாலம் மாத்ரம் என்னெதிரில் நிற்பீர்களாக' என்ருன். மஹாபலமுடைய வ்ருத்ராஸுரன் கோபமுற் றுத் தேவக்கூட்டங்களைத் தன் தேஹத்தினுல் பயப்படுத் திக்கொண்டு பலமுள்ளளவும் ஸிம்ஹநாதம் செய்தான். அதனுல் ஜனங்களெல்லாரும் பயந்து மூர்ச்சித்தார்கள். அந்த வ்ருத்ராஸுரனுடைய கர்ஜனையைக் கேட்டுத் தே வக் கூட்டங்களெல்லாம் வஜ்ராயுதத்தினுல் அடிபட்டாற் போல் மூர்ச்சித்துப் பூமியில் விழுந்தன. யுத்தரங்கத்தில் தடுக்க முடியாத கொடிய மதமுடைய அந்த வ்ருத்ரா ஸுரன் சூலத்தைக் கையில் ஏந்திப் பூமியை நடுங்கச் செய்துகொண்டு நடந்து, மதங்கொண்ட மஹாகஜம் பனங்காட்டை மர்த்திப்பதுபோல், அங்ஙனம் மூர்ச்சித் துக் கண் மூடிக்கொண்டிருக்கிற தேவஸைன்யத்தைப்

பலமுள்ளவளவும் தன் பாதங்களால் மர்த்தித்தான். தே வேந்த்ரன் அது கண்டு கோபித்து அவன் மேல் பெரிய கதையை ப்ரயோகிக்க, அவ்வஸுரன் வருந்தியும் பொறு க்க முடியாத அக்கதை தன் மேல் வருவதைக் கண்டு அதை அவலீலையாகவே இடக்கையினல் பிடித்துக் கொண்டான். அவ்விந்த்ரசத்ரு பெருங்கோபத்துடன் விரைவாக 'அடியிட்டுச் சென்று உரக்க ஸிம்ஹநாதம் செய்து அக்கதையினல் இந்த்ரனுடைய வாஹனமாகிய ஐராவதத்தின் கும்பஸ்தலத்தை அடித்தான். யுத்தத் தைப் பார்க்க வந்தவர்கள் அனைவரும் அவன் செய்த கார்யத்தை வெகுமதித்தார்கள். அவ்வைராவதம் வ்ருத் ராஸுரன் ப்ரயோகித்த கதையால் அடியுண்டு வஜ்ராயு தத்தினல் பிளக்கப்பட்ட பர்வதம்போல் சுழன்று முகம் சிதறப்பெற்று மிகவும் வருந்தி ரக்தம் கக்கிக்கொண்டு இந்த்ரனுடன் ஏழு வில்லளவு தூரம் பின்னே நகர்ந்தது. அவ்வஸுரன் யுத்ததர்மத்தை உணர்ந்த மஹானுபா வன். ஆகையால் வாஹனம் வருந்தித் தானும் மனவரு த்த முற்றிருக்கிற அவ்விந்த்ரன்மேல் மீளவும் கதையை ப்ரயோகிக்காமல் வெறுமனே இருந்தான். இந்த்ரன் அம் ருதப் பெருக்குடைய தன் கையினல் ஐராவதத்தைத் தடவிக்கொடுத்து அதன் வருத்தமெல்லாம் தீரச்செய்து மீளவும் அவ்வஸுரன் மேல் எதிர்த்து நின்றான். மன்ன வர் தலைவனே! அவன் யுத்தம் செய்ய வேண்டுமென்னும் விருப்பத்துடன் முன்னே வந்து வஜ்ராயுதத்தை ஏந்திக் கொண்டு நிற்கின்றவனும் தன்ப்ராதாவான விஸ்வரூபனை வதித்தவனும் தன் சத்ருவுமாகிய இந்த்ரனைக் கண்டு அவன் செய்த பாபிஷ்டமான கொடுந் தொழிலையும் சோகத்தினல் நினைத்துப் பின்பு மோஹத்தினல் சிரித்து இங்ஙனம் மொழிந்தான். 'என் சத்ருவாகிய நீ தெய்வா

தீனமாய் என் முன்னே வந்து நின்றனை. நீ ப்ராஹ்மண னைக் கொன்றவனல்லவா? அதிலும் உனக்குக் குருவா கிய என் ப்ராதாவை வதித்தாய். அஸத்துக்களில் சிறந் தவனே! இரக்கமின்றிப் பாறைபோன்ற உன் ஹ்ருதயத் தை என் சூலத்தினால் பிளந்து இப்பொழுதே என் ப்ராதா வின் கடனைத் தீர்த்துக் கொள்கிறேன். தெய்வாதீனமாய் நீ எனக்கு நேர்பட்டனை. என் ப்ராதாவான விஸ்வ ரூபன் ப்ராஹ்மணன்; ப்ரஹ்மவித்து; உனக்கு ஆசார் யன்; யாகதீக்ஷைக்கு உட்பட்டிருந்தவன். நீ அவனை நம்பவைத்து, ஸ்வர்க்கத்தை விரும்பி யாகம் செய்பவன் யாக பசுவின் தலையை அறுப்பதுபோல், அறுத்தனை. இங்ஙனம் தகாத பாபிஷ்ட கார்யம் செய்தமையால், வெட் கம் செல்வம் பயம் புகழ் இவைகளெல்லாம் உன்னைத் துறந்தன. நீ செய்த பாபகர்மத்தினால் புருஷர்களைப் பிடுங்கித் தின்னும் தன்மையுள்ள பிசாசங்களாலும் நிந் திக்கத் தகுந்தவனாயிருக்கின்றனை. இப்பொழுது நான் உன் தேஹத்தை என் சூலத்தினால் பிளக்கையில் அக்னி ஸம்ஸ்காரம் செய்யப் பெறாத அத்தேஹத்தைக் கழுகு கள் தின்னப்போகின்றன. தேவதைகள் மதிகெட்டுக் கொடுந்தொழிலனான உன்னைத் தொடர்ந்து இந்த யுத்த த்தில் ஆயுதங்களை ஏந்தி என்னை அடிப்பார்களாயின், கூரான என் சூலத்தினால் அவர்களது கண்டங்களைச் சேதித்து அந்த ரக்தங்களால் பூதநாதர்களையும் அவர்க ளுடைய பரிவாரங்களையும் ஆராதிக்கிறேன். அல்லது, ஓ தேவேந்த்ரனே! வீர! இந்த யுத்தத்தில் நீயே என் தலை யை வஜ்ராயுதத்தினால் அறுப்பாயாயின், என் தேஹத்தி னால் பூதங்களுக்குப் பலி கொடுத்துக் கர்மபந்தங்களை யெல்லாம் துறந்து ஆழ்ந்த மனமுடைய ஞானிகளின் பாத தூளியால் பரிசுத்தமான கதியைப் பெறுகிறேன்.

ஓ தேவேந்த்ரனே! உன் சத்ருவாகிய நான் உன்னெதிரில் நின்றுகொண்டிருக்கையில், தடைபடாத உன்வஜ்ராயுதத்தை ஏன் ப்ரயோகிக்காதிருக்கின்றனே? 'முன் ப்ரயோகித்த கதை, லோபியிடத்தில் செய்த யாச்ஞைபோல் வீணாய்விட்டதே. அங்ஙனம் இதுவும் வீணாய்விடுமோ' என்று ஸந்தேஹிக்க வேண்டாம். இந்த வஜ்ராயுதம் அதைப்போல் வீணாகாது. ஓ இந்த்ர! உன் வஜ்ராயுதம் பகவானுடைய தேஜஸ்ஸினாலும் ததீசமஹர்ஷியின் தவத்தினாலும் தீக்ஷ்ணமாயிருக்கின்றது. ஸ்ரீவிஷ்ணுவும் உனக்குக் கட்டளையிட்டிருக்கிறான். ஆகையால் அந்த வஜ்ராயுதத்தினால் உன் சத்ருவாகிய என்னை வதிப்பாயாக. பகவான் எந்தப் பக்ஷத்தில் இருக்கிறானே அதே பக்ஷத்தில் தான் ராஜ்ய ஸம்பத்து ஜயம் ப்ரபுத்வம் முதலிய குணங்கள் உண்டாகும். நான் அஸுரனாயினும் நரகத்திற்குப் போகமாட்டேன். ஸங்கர்ஷண பகவான் சொன்னபடி அவனுடைய பாதாரவிந்தங்களில் மனத்தை நிலை நிறுத்தி, நீ வேகத்துடன் ப்ரயோகித்த உன் வஜ்ராயுதத்தினால் க்ராம்யங்களான சப்தாதி விஷயங்களில் விருப்பமாகிற பாசமும் அறுப்புண்டு ஸ்வர்க்காதி லோகங்களையெல்லாம் கடந்து முனிவர்களின் கதியான மோக்ஷத்தையே பெறப்போகிறேன். எங்கள் ப்ரபுவாகிய ஸங்கர்ஷண பகவான், வேறு ப்ரயோஜனங்களை விரும்பாமல் தன்னிடத்தில் பக்தி செய்யும் புருஷர்களுக்கு ஸ்வர்க்காதி லோகங்களிலும் பூமியிலும் அதலாதி லோகங்களிலும் உள்ள ஐஸ்வர்யங்களைக் கொடுக்கமாட்டான். ஏனென்றால் அவ்வைஸ்வர்யங்கள் த்வேஷம் பயம் மனோவ்யாதி மதம் கலஹம் வ்யஸனம் முதலிய ப்ரயாஸங்களைத் தவறாமல் உண்டாக்குகின்றனவல்லவா? எங்கள் ப்ரபுவாகிய ஸங்கர்ஷணபகவான் தன் பக்தர்களுக்குத்

தர்ம அர்த்த காமங்களைப்பற்றின ஆயாஸங்களைத் தடுத்து மோக்ஷத்தையே கொடுப்பான். எவனுக்கு அற்பங்களும் அஸ்திரங்களுமான தர்மார்த்த காமங்களைப்பற்றின ப்ரயாஸங்கள் நீங்குகின்றனவோ, அவனிடத்தில் பகவானுடைய அனுக்ரஹம் உண்டென்பதை ஊஹிக்கலாம். அவன் தன்னை யொழிய வேறு ப்ரயோஜனங்களை விரும்பாத ஏழையர்க்கே அருள் புரிவான். சப்தாதி விஷயங்களை விரும்பி அவற்றிற்காகப் பணிகிற உன்னைப்போன்றவர்களுக்கு அவனருள் கிடைப்பது அரிது. ஓ பகவானே! நான் உன் பாத மூலத்தையே அவலம்பமாகப்பற்றின உன் தாஸர்களுக்குத் தாஸனாகவே மீளவும் பிறப்பேனாக. என் மனம் என் ப்ராணநாதனாகிய உனது குணங்களையே நினைக்குமாக. என் வாக்கும் அவற்றையே கீர்த்தனம் செய்யுமாக. என் சரீரம் உனது ஆராதன ரூபமான கர்மத்தைச் செய்யுமாக. ஸமஸ்த ஸௌபாக்யங்களுக்கும் நிதிபோன்றவனே! நான் உனக்குத் தாஸனாயிருப்பதைத் தவிர ஸமஸ்த பூமண்டலத்திற்கும் ப்ரபுவாயிருக்கும் ஐஶ்வர்யத்தையாவது பாதாளம் முதலிய லோகங்களின் ஆதிபத்யத்தையாவது அணிமாதி யோக ஸித்திகளையாவது ப்ரஹ்மாவின் ஐஶ்வர்யத்தையாவது கைவல்யமென்கிற ஆத்மானுபவத்தையாவது வைகுண்ட லோகத்தையாவது விரும்பமாட்டேன். தாமரைக் கண்ணனே! இறகு முளைக்கப்பெறாத பறவைக்குட்டிகள் தாயைப்போலவும், பசியினால் வருந்தின சிறு குழந்தைகள் ஸ்தன்யத்தைப் போலவும், தேசாந்தரம் சென்ற காதலனை வருத்தமுற்ற காதலி போலவும், என் மனம் உன்னையே பார்க்க வேண்டுமென்று விரும்புகின்றது. நான் உன் மாயையினால் சரீரம் பிள்ளை பெண்டிர்வீடு முதலியவற்றில் மனம் சென்று என் கர்மங்

களால் ஸம்ஸார சக்ரத்தில் சுழன்றுகொண்டிருப்பினும் எனக்கு உத்தம ஸ்லோகனுன உன் பக்தர்களிடத்தில் ஸ்நேஹம் உண்டாகுமாக. அந்தச் சரீரம் முதலியவற்றில் எனக்கு மனப்பற்று நேராதிருக்குமாக. இங்ஙனம் நீ அருள் புரியவேண்டும்'. பதினொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

இந்த்ரனுக்கும் வ்ருத்ராஸுரனுக்கும் ஸம்பாஷணமும், இந்த்ரன் வருந்தி வ்ருத்ராஸுரனை வதித்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பரீக்ஷித்து மன்னவனே! தன் சரீரத்தைத் துறக்கவிரும்பி யுத்தத்தில் ஜயத்தைக் காட்டிலும் மரணத்தையே மேலாக நினைத்திருக்கின்ற அந்த வ்ருத்ராஸுரன் இங்ஙனம் பகவானைத் துதித்துச் சூலத்தை ஏந்திக்கொண்டு, ப்ரளய ஜலத்தில் கைடபனென்னும் அஸுரன் பரமபுருஷனை எதிர்த்தாற்போல், இந்த்ரன்மேல் எதிர்த்து வந்தான். வீரனாகிய அவ்வஸுரேந்த்ரன் ப்ரளய காலாக்னிபோலப் பொறுக்கமுடியாமல் ஜ்வலிக்கின்ற நுனிகளையுடைய சூலத்தைச் சுழற்றிக் கோபத்துடன் இந்த்ரன்மேல் எறிந்து ஸிம்ஹநாதம் செய்து 'பாபிஷ்டனே! மாண்டுபோவாய்' என்றான். பிறகு வஜ்ராயுதத்தை ஏந்திக்கொண்டிருக்கும் தேவேந்த்ரன் ஆகாயத்தில் சுழன்றுகொண்டு ஸூர்யன்போலவும் நெருப்புத் தணல்கள் போலவும் கண்ணெடுத்துப் பார்க்கமுடியாமல் எதிர்த்து வருகின்ற சூலத்தைக் கண்டு சிறிதும் தழதழப்பின்றி நூறுகணுக்களையுடைய தன் வஜ்ராயுதத்தினால் அச்சூலத்தையும் வாஸுகியின் உடல்போன்ற அவனது புஜத்தையும் எல்லோரும் ஆச்சரியப்படும்படி அறுத்தான். பிறகு வ்ருத்ராஸுரன் ஒரு புஜம் அறுப்புண்டு மிகவும்

கோபமுற்று வஜ்ராயுதத்தை ஏந்தின இந்த்ரனைக் கிட்டிப் பரிகத்தினால் அவ்விந்த்ரனைக் கன்னத்தில் அடித்துத் தெய்வக்கரியான ஐராவதத்தையும் அடித்தான். அங்ஙனம் அடியுண்ட இந்த்ரனுடைய ஹஸ்தத்தினின்று வஜ்ராயுதமும் கீழ் விழுந்தது. கூட்டங் கூட்டமாயிருக்கிற தேவதைகள் அஸுரர்கள் சாரணர்கள் ஸித்தர்கள் அனைவரும் அவ்வஸுரன் செய்த அற்புதமான செயலைக் கண்டு வெகுமதித்தார்கள். மற்றும், அவர்கள் இந்த்ரனுக்கு நேர்ந்த ஸங்கடத்தைக் கண்டு 'ஆ! ஆ!' என்று மிகவும் இரைச்சலிட்டார்கள். அப்பொழுது தேவேந்த்ரன் சத்ருவின் எதிரில் தன் கையினின்று வஜ்ராயுதம் நழுவினதற்கு லஜ்ஜித்து மீளவும் அதை எடுக்காதிருந்தான். அங்ஙனம் வஜ்ராயுதத்தை எடுக்காதிருக்கின்ற இந்த்ரனைப் பார்த்து வ்ருத்ராஸுரன் மொழிந்தான். "ஓ தேவேந்த்ரனே! நீ மீளவும் வ்ஜ்ராயுதத்தை எடுத்துக்கொண்டு உன் சத்ருவாகிய என்னை வதிப்பாயாக. இது சோகிப்பதற்கு ஸமயமன்று. சத்ருக்களை வதிக்க விரும்பி யுத்தம் செய்பவர்களுக்கு எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் ஜயமே உண்டாகுமென்கிற நியதி இல்லை. உலகத்திலுள்ள ப்ராணிகள் அனைவரும் பரமபுருஷனுக்கு உட்பட்டவர்கள். அவன் உட்புகுந்து கர்மங்களுக்குத் தகுந்தபடி அனைத்தையும் நியமித்துக்கொண்டிருக்கிறான். தேச கால கர்மங்களுக்குத் தகுந்தபடி ஸுகதுக்காதி பலன்களை அனுபவிக்கும்பொருட்டு ஜயம் அபஜயம் முதலியவற்றை ஈஸ்வரன் நடத்துகிறான். ஆகையால் தெய்வாதீனமாய் நேருகிற அபஜயாதிகளைப் பற்றி லஜ்ஜையையாவது சோகத்தையாவது ஏற்றுக்கொள்ளலாகாது. பரமபுருஷனொருவனுக்கு மாத்ரமே ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஜயமே உண்டாகுமன்றி

மற்றவர்களுக்கு அந்த நியதி கிடையாது.' அவன் ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்தும் ப்ரபு; எல்லா மறிந்தவன்; ஆதி புருஷன்; என்றும் அழியாதவன். ப்ரஹ்மதேவன் முதலிய லோகபாலர்களோடு கூடின இவ்வுலகங்களெல்லாம் கயிற்றால் கட்டுண்ட பறவைகள் போல் ஸ்வாதீனமின்றி அந்தப் பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தின்படி ஜீவிக்கின்றன. அவனே காலஸ்வரூபனாகி இவ்வுலகத்தில் ஜயம் அபஜயம் முதலியவற்றிற்குக் காரணமாயிருக்கிறான். செயல்களில் முயற்சி கொள்ளுந் திறமை வேகம் பலம் ஜீவனம் மோக்ஷம் ஸம்ஸாரம் ஆகிய இவற்றிற்கெல்லாம் அந்தப் பரமபுருஷனே காரணன். இவ்வுலகத்திலுள்ள ஜனங்கள் இதை அறியாமல் அவற்றிற்குத் தம்மையே காரணமாக நினைக்கின்றார்கள். ஆகையால் அவர்கள் ஒன்றுமறியாத மூடர்கள். மரத்தினால் செய்யப்பட்ட பொம்மையும் வலையில் அகப்பட்ட ம்ருகமும் புருஷனுக்கு உட்பட்டிருப்பதுபோல், ஸமஸ்த ப்ராணிகளும் பரமபுருஷனுக்கு உட்பட்டவைகள். ப்ரக்ருதி மஹத்தத்வம் அஹங்காரம் ஆகாசம் முதலிய பஞ்சபூதங்கள் இந்த்ரியங்கள் அந்தக்கரணம் இவையெல்லாம் இந்தப் பரமபுருஷனுடைய அனுக்ரஹமில்லாமல் ஸ்ருஷ்டிக்க வல்லவையாகமாட்டா. அங்ஙனமே நான்முகன் முதலிய ஜீவாத்மாக்களும் அவனுடைய அனுக்ரஹமில்லாமல் ஸ்ருஷ்டிக்க வல்லவர்களாகமாட்டார்கள். ஜனங்கள் தாங்கள் பரமபுருஷனுக்கு உட்பட்டவர்கள் என்பதையும் அவனுடைய அனுக்ரஹத்தையொழியத் தங்களுக்குத்தனியே திறமையில்லையென்பதையும் அறியாமல் தங்களை ஈஸ்வரர்களாக நினைக்கிறார்கள். ஈஸ்வரன் ப்ருதிவி முதலிய பூதங்களில் உட்புகுந்து தேவமனுஷ்யாதி பூதங்களைப் படைக்கின்றான்; அவற்றைக்கொண்

டே அவற்றை அழிக்கிறான். ஆயுள் செல்வம் புகழ் ஐஶ்வர்யம் மற்றும் பல விருப்பங்கள் இவையெல்லாம் கர்மாநுகுணமாக அவ்வவற்றிற்குரிய காலங்களில் தாமே உண்டாகின்றன. மரணம் ஏழ்மை முதலியவற்றை நாம் விரும்பாதிருப்பினும் அவை தாமே உண்டாகின்றனவல்லவா? அதற்குக் காரணம் நம்முடைய கர்மமேயல்லவா? அங்ஙனமே மற்றவையும் உண்டாகுமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆகையால் கீர்த்தி அபகீர்த்தி ஜயம் அபஜயம் மரணம் ஜீவனம் இவற்றில் எது நேரினும் அதற்காக ஸுகத்தையாவது துக்கத்தையாவது ஏற்றுக்கொள்ளலாகாது. எல்லாவற்றிலும் ஸமனாகவே யிருக்கவேண்டும். ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் ப்ரக்ருதியின் குணங்களேயன்றி ஆத்மாவின் குணங்களன்று. அந்த ஸத்வாதிகுணங்களின் பரிணாமமான தேஹத்தில் இருக்கிறஜீவன் கேவலம் ஸாக்ஷியேயன்றிச் செயல்களை செய்பவனன்றென்றும், அத்தன்மை ப்ரக்ருதியைச்சேர்ந்ததென்றும் நினைப்பவன் மீளவும் ஸம்ஸாரபந்தத்தை அடையமாட்டான். இந்த விஷயத்தில் நீ என்னையே த்ருஷ்டாந்தமாகக் காணலாம். நீ என் சூலாயுதத்தையும் என் புஜத்தையும் அறுத்தாய். நான் உன்னிடத்தில் தோற்றேன். ஆயினும் உன் ப்ராணன்களைப் பறிக்கவிரும்பி மீளவும் சக்தியுள்ளவளவு ப்ரயத்னம்செய்கிறேன். யுத்தமென்பது சூதாட்டம்போன்றது. ப்ராணன்களே இதற்குப் பந்தயம். யானை குதிரை தேர்முதலியவை ஆட்டக்காய்கள். பாணங்களே பாய்ச்சிகைகள். இதில் 'எவனுக்கு ஜயம்? எவனுக்குப் பராஜயம்?'' என்பது தெரியாது. நான் உலகத்திலுள்ள நிலைமையைச் சொன்னேன். ஆயினும் உனக்குப் பகவான் ஸஹாயமாயிருக்கின்றானாகையால் உனக்கே ஜயமென்பது நிச்சயம்'' என்றான். இந்த்ரன் நிஷ்கபடமாக வ்ருத்ராஸுரன் மோ

ழிந்தவசனத்தைக் கேட்டு அவனை வெகுமதித்து வஜ்ராயுதத்தை எடுத்துக்கொண்டு ஞானிகளுக்கு இந்நிலைமை உண்டாவது ஆச்சர்யமன்றென்று வியப்பின்றிச் சிரித்துக்கொண்டே அவனைக் குறித்து மேல்வருமாறு கூறினன். "ஓ அஸுரனே! நீ ஸித்தனுயிருக்கின்றனை. உனக்கு இத்தகைய மதி உண்டாயிருக்கிறதல்லவா? நீ ஜகதீஸ்வரனும் ஸர்வாந்தராத்மாவும் நண்பனுமாகிய பகவானையே எல்லாவிதத்தாலும் பணிந்திருக்கின்றனை. நீ அஸுரர்களின் தன்மையைத் துறந்து ஸத்வம் தலையெடுத்த பெரியோர்களின் ப்ரக்ருதியைப் பெற்றனையாகையால், ஜனங்களையெல்லாம் மதிமயக்கும்படியான ஸ்ரீமஹா விஷ்ணுவின் மாயையைக் கடந்தனை. ரஜோகுணத்தையே இயற்கையாகவுடைய உனக்கு ஸர்வாந்தராத்மாவும் ஷாட்குண்யபூர்ணனுமாகிய வாஸுதேவனிடத்தில் மாருத பக்தி உண்டாயிற்று. இது பெரிய ஆச்சர்யமல்லவா? பகவான் தன்னைப் பற்றினவர்களுக்கு ஸம்ஸாரபந்தத்தைப் போக்கிச் சிறந்த நன்மையான மோக்ஷத்தைக் கொடுப்பவன்; அம்ருத ஸாகரம்போன்று நித்யாநந்த மயனுயிருப்பவன். அத்தகைய பகவானிடத்தில் பக்தி உண்டாகப்பெற்று அவனிடத்தில் விளையாடிக்கொண்டிருக்கும் புருஷனுக்குக் குட்டைகள்போன்ற ஐஶ்வர்யம் கைவல்யம் முதலிய மற்ற அற்பஸுகங்களால் என்னுகவேண்டும்?" என்றான். யுத்தம் செய்பவர்களில் சிறந்த இந்த்ரன் வ்ருத்ரன் இவ்விருவரும் பகவத் தர்ம விசாரத்தை முன்னிட்டு ஒருவரோடொருவர் பேசிக்கொண்டே சண்டை செய்தார்கள். ராஜனே! சத்ருக்களை அழிக்கவல்ல வ்ருத்ராஸுரன் சிறந்த எஃகினுல் செய்யப்பட்டதும் பயங்கரமுமாகிய இரும்புத் தடியை இடக்கையால் சுழற்றி இந்த்ரன்மேல் எறிந்தான். அவ்



1449. இந்த்ரன் வ்ருத்ராஸுரனை வதித்தல்

விந்த்ரன் யானையின் துதிக்கைபோன்ற அவ்விரும்புத் தடியையும் அவனது இடக்கையையும் வஜ்ராயுதத்தினால் ஒரே தடவையில் சேதித்தான். இரண்டு கைகளும் அடியோடு அறுக்கப்பெற்று அவ்வஸுரன், இந்த்ரனால் இரண்டு சிறைகளும் சேதிக்கப்பெற்று ஆகாயத்தினின்று பூமியில் விழுந்து அடியுண்ட பர்வதம்போல் ப்ரகாசித்தான். அவன் மிகவும் உயர்ந்த பெரிய சரீரமுடையவன். மஹாபலிஷ்டன்; மஹா ப்ரபாவமுடையவன். அவன் நடக்கும்பொழுது பூமியெல்லாம் சூர்ணமாய் விடும். அவன் கீழுதட்டைப் பூமியிலும் மேலுதட்டை ஆகாயத்திலும் வைத்து ஆகாயம்போலாழ்ந்த வாயைத் திறந்து ஸர்ப்பம் போல் பயங்கரமான நாக்கை நீட்டி யமன்போன்ற கோரைப் பற்களால் மூன்று லோகங்களையும் விழுங்குகிறவன்போன்று பலத்தினால் பர்வதங்களையெல்லாம் நடுங்கச் செய்துகொண்டு பாதங்களால் நடந்துவரும் பர்வதம் போல நடந்து வந்து இந்த்ரனையும் அவனது வாஹனத்தையும் விழுங்கினான். ப்ரஹ்மதேவன் முதலிய தேவதைகளும் மஹர்ஷிகளும் இந்த்ரனை வ்ருத்ராஸுரன் விழுங்கினது கண்டு சிந்தையுற்று 'ஆ! ஆ!' என்று இறைச்சலிட்டனர். இந்த்ரன் அவ்வஸுர ஶ்ரேஷ்டனால் விழுங்கப்பெற்றும் மரணம் அடையவில்லை. அவனது வயிற்றில் சென்றும் பரமபுருஷனை அணைந்திருக்கிற நாராயண கவசம் தரித்தவனாகையால் அந்நாராயணனுடைய மாயாபலத்தினால் வளர்ந்துவருகின்ற தன்னுடைய யோகமாயாபலத்தினால் பாதுகாக்கப்பட்டு ஜீவித்திருந்தான். பலாஸுரனைவென்ற அத்தேவேந்த்ரன் ஸமர்த்தனாகையால் வஜ்ராயுதத்தினால் வ்ருத்ராஸுரனுடைய வயிற்றைப்பிளந்து அதினின்று வெளிவந்து சத்ருவாகிய அந்த வ்ருத்ராஸுரனுடைய பர்வதத்தின் சிகரத்தைப் போன்ற

தலையை அறுத்தான். கூரான நுனியுடைய வஜ்ராயுதம் நாற்புறத்திலும் சுழன்று அவ்வஸுரனுடைய கழுத்தை அறுக்கும்பொழுது ஒரு ஸம்வத்ஸரமாயிற்று. ஸம்வத்ஸரம் முன்னூற்றறுபது நாட்களும் வஜ்ராயுதத்திற்கு அதுவே கார்யமாயிருந்தது. அங்ஙனம் அவ்வஸுரன் தலையை அறுத்தபின்பு ஆகாயத்தில் துந்துபி வாத்யங்கள் முழங்கின. அப்பொழுது மஹர்ஷிகளும் கந்தர்வர்களும் ஸித்தர்களும் கூட்டங்கூட்டமாய் நின்று வ்ருத்ராஸுரனைக் கொன்ற வீர்யத்தை அறிவிக்கிற மந்த்ரங்களால் துதி செய்துகொண்டே இந்த்ரன்மேல் ஸந்தோஷத்துடன் புஷ்பவர்ஷங்களைப் பெய்தார்கள். சத்ருக்களை அழிப்பவனே! வ்ருத்ராஸுரனுடைய தேஹத்தினின்று வெளிக்கிளம்பின ஸ்வயம் ப்ரகாசனான ஜீவாத்மா ஸமஸ்தலோகங்களும் பார்த்துக் கொண்டிருக்கையில் ப்ராக்ருதலோகங்களைக்காட்டிலும் விலக்ஷணமான வைகுண்டலோகத்தை அடைந்தது. பன்னிரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ வ்ருத்ராஸுரனைக் கொன்ற ப்ரஹ்ம ஹத்யையால் வருந்தின தேவேந்த்ரன் ஸ்ரீமஹாவிஷ்ணுவால் பாதுகாக்கப்பெறுதல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—மஹானுபாவனே! இங்ஙனம் வ்ருத்ராஸுரன் முடிகையில் இந்த்ரனை யொழிய மூன்று லோகங்களும் லோகபாலர்களும் அந்த க்ஷணமே மனக்கவலை தீர்ந்து இந்த்ரியங்களெல்லாம் களிக்கப்பெற்றார்கள். பிறகு தேவதைகளும் ரிஷிகளும் பித்ருக்களும் பூதங்களும் தைத்யர்களும் தானவர்களும் தேவதைகளின் பரிவாரங்களும் ப்ரஹ்மதேவன் ருத்ரன் இந்த்ரன் இவர்களும் மற்றவரும் தத்தம் இருப்பிடம் சென்றார்கள்.

மன்னவன் சொல்லுகிறான்:— மாமுனிவரே! இந்த்ரனை யொழிய மற்ற அனைவரும் ஸந்தோஷம் அடைந்தார்களென்று மொழிந்தீர். இந்த்ரன் ஸந்தோஷம் அடையாமைக்குக் காரணம் என்னவோ அதைக் கேட்க விரும்புகிறேன். வ்ருத்ராஸுரனைக் கொன்றதே காரணமாயின், அதனால் தேவதைகளும் ஸந்தோஷம் அடையாதிருக்கவேண்டும். வ்ருத்ராஸுர வதத்தினால் தேவதைகள் அனைவரும் ஸந்தோஷித்திருக்க, அதே காரணத்தினால் இந்த்ரனுக்கு மாத்திரம் ஏன் துக்கம் உண்டாயிற்று?

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ஸமஸ்தமான தேவதைகளும் ரிஷிகளும் வ்ருத்ராஸுரனுடைய பராக்ரமத்திற்குப் பயந்து அவனை வதிக்கும்பொருட்டு இந்த்ரனை வேண்டினார்கள். இந்த்ரன் வேண்டப்பெற்றும் ப்ராஹ்மணவதம் என்று பயந்து அதற்கு இசையாமல் அவர்களை நோக்கி "நான் முன்பு விஸ்வரூபனைக் கொன்றேன். அதனால் எனக்கு மஹத்தான பாபம் நேரிட்டது. அதை ஸ்த்ரீகள் பூமி ஜலம் வ்ருக்ஷங்கள் ஆகிய இந்நால்வரும் என்னை அனுக்ரஹித்துப் பங்கிட்டு ஏற்றுக்கொண்டார்கள். இப்பொழுது வ்ருத்ராஸுரனை வதிப்பேனாயின், அந்தப் பாபத்தை எவ்விடத்தில் போக்கிக்கொள்வேன்? அதற்கு வழியே இல்லை. ஆகையால் அவனை நான் வதிக்கமாட்டேன்" என்றான். ரிஷிகள் அவ்விந்த்ரன் மொழிந்த வசனத்தைக் கேட்டு மஹேந்த்ரனை நோக்கி இங்ஙனம் மொழிந்தார்கள். "நாங்கள் உன்னைக்கொண்டு அஸ்வமேதயாகம் செய்விக்கிறோம். நீ பயப்படவேண்டாம். உனக்கு க்ஷேமமே உண்டாகும். நீ உலகங்களை யெல்லாம் வதித்தாலும் அஸ்வமேத யாகத்தினால் பரமபுருஷனை ஆராதிப்பாயாயின், அப்பாபத்தினின்று விடுபடுவாய். அவன் பரமாத்மா; ஸர்வேஸ்வரன்; அனைத்திலும் உட்புகுந்து நியமிக்குங்

தன்மையன்; தன் தேஜஸ்ஸினால் ப்ரகாசித்துக் கொண்டிருப்பவன்; நாராயணன். "அவனுடைய நாமத்திற்கு எவ்வளவு சக்தி உண்டோ அதற்குப் போதுமான பாபத்தைச் செய்ய ஜனங்கள் வல்லவராக மாட்டார்கள்" என்று சொல்லுகிறார்கள். இத்தகைய மஹாமஹிமைகள் அமைந்த பற்பல நாமங்களையுடைய பகவானை நேரே ஆராதிப்பதனால் பாபங்கள் தீருமென்பதில் ஸந்தேஹமென்ன? ஆகையால் தர்ம ப்ரதிபக்ஷனாகிய வ்ருத்ராஸுரனைக் கொன்ற பாபம் அஶ்வமேத யாகத்தினால் தீருமோவென்று நீ சங்கிக்க வேண்டாம். பகவானுடைய நாமத்தைச் சொன்ன மாத்ரத்தினால், ப்ராஹ்மணன் தாய் தந்தை பசு ஆசார்யன் இவர்களைக் கொன்ற பாபிஷ்டர்களும் மற்றும் பல பாபம் செய்தவர்களும் சண்டாளனும் அவனுக்கும் கீழ்ப்பட்ட பாபிஷ்டஜாதியனும் தம்முடைய பாபங்களினின்று விடுபடுவார்கள். அஶ்வமேதமென்னும் மஹாயாகத்தை எங்களைக்கொண்டு ஶ்ரத்தையுடன் அனுஷ்டித்துப் பரமபுருஷனை ஆராதிப்பாயாயின், அவனுக்குச் சரீரமாகிய ஜங்கம ஸ்தாவரரூபமான ஜகத்தையெல்லாம் வதித்தாலும் அந்தப் பாபம் உன்னைத் தீண்டாது. இனித் துஷ்டஸ்வபாவனான வ்ருத்ராஸுரனைக் கொன்ற பாபம் உன்னைத் தீண்டாதென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ?" என்றார்கள். இந்த்ரன் இங்ஙனம் ப்ராஹ்மணர்களால் தூண்டப்பட்டுச் சத்ருவாகிய வ்ருத்ரனைக் கொன்றான். பிறகு அவன் ப்ராஹ்மணனாகையால் இந்த்ரனை ப்ரஹ்மஹத்யை தொடர்ந்தது. அவன் அதனால் பெருந்தாபம் உண்டாகப்பெற்று அதைப் பொறுத்துக் கொண்டிருந்தான். ஆதலால் அவனுக்குச் சிறிதும் ஸுகமின்றித் துக்கமாகவேயிருந்தது. அவன் வெட்கமுடையவன். ப்ராஹ்மணனான வ்ருத்

ரனைக் கொன்றமையால் அவன் பழிக்கிடமானான். அத னால் வருத்தமுற்றிருக்கிற இந்த்ரனுக்குத் தைர்யம் முத லிய பல குணங்கள் இருப்பினும், அவனுக்கு ஸுகத்தை விளக்க வில்லை. அந்த ப்ரஹ்மஹத்யை கிழத்தனத்தி னால் அங்கங்களெல்லாம் நடுங்கப்பெற்றதும் க்ஷயரோ கத்தினால் பீடிக்கப்பட்டிருப்பதுமாகிய ஒரு பெண்ணு ருவங்கொண்டு சண்டாளியைப் போன்று தன்னைப் பின்பற்றி ஓடிவர இந்த்ரன் கண்டான். நரைத்திருக் கின்ற தலைமயிர்கள் விரிந்தலையப்பெற்ற அந்த ப்ரஹ்ம ஹத்யை மீன்நாற்றமுடைய மூச்சுக் காற்றின் துர் நாற்றத்தினால் வழியை யெல்லாம் தூஷித்துக்கொண்டு வந்து 'நில் நில்' என்றது. பிறகு தேவேந்த்ரன் ஆகாயம் முழுவதும் திசைகள் முழுவதும் திரிந்தும் எங்கும் தொடர்ந்து வருகையால் இளைப்பாற முடியாமல் வடகிழக்கு மூலையில் சென்று அங்கு மானஸமென்னும் தடாகத்திற்குள் நுழைந்தான். அவன் ஸூக்ஷ்ம உரு வத்துடன் அங்குத் தாமரைத் தண்டின் நூல்களுக்குள் மறைந்து ப்ரஹ்மஹத்யையினின்று தன்னை விடுவித்துக் கொள்ளும் உபாயத்தை ஆலோசித்துக்கொண்டு ஆயிர மாண்டுகள் ப்ரஹ்மஹத்யைக்குத் தெரியாமல் ஜலத்திற் குள் இருந்தான். யாகத்தில் தனக்கு ஏற்பட்ட ஹவிர்ப் பாகங்களைக் கொண்டு வந்து கொடுப்பவன் அக்னியே யாகையால் அவன் ஜலத்திற்குள் நுழையமாட்டானாகை யால் யஜ்ஞபாகங்கள் நேரப்பெறாமலே யிருந்தான். அப் பொழுது வித்யை தவம் யோகம் இவற்றால் மிகுந்த ப்ர பாவமுடைய நஹுஷனென்னும் மன்னவன் இந்த்ர பதம் பெற்று ஸ்வர்க்கத்தை ஆண்டு வந்தான். அவன் ஸம்பத் தின் மிகுதியாலும் இந்த்ரபதம் பெற்றோமென்கிற செருக்கினாலும் மதித்து விவேகமற்றுச் சசிதேவியால்

ஸர்ப்ப ஜன்மம் பெற்றான். மானஸதடத்தில் மறைந் திருக்குந் தேவேந்த்ரன் ப்ராஹ்மணர்களால் அழைக்கப் பெற்று வெளி வருகையில் நெடுநாள் பரமபுருஷனை த்யானித்துக் கொண்டிருந்தானாகையாலும் அப்பரம புருஷனது பத்னியும் அக்குளத்தில் வஸிக்குந் தேவதையு மாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மி அவனைப் பாதுகாத்துக் கொண் டிருந்தாளாகையாலும் ப்ரஹ்மஹத்யாரூபமான பாபம் தன் பலம் ஒடுங்கப்பெற்று அவனை முன்போல் பாதிக்க முடியாதிருந்தது. பாரதனே! அவ்விந்த்ரனிடம் ரிஷி கள் வந்து பரமபுருஷாராதனரூபமான அஶ்வமேத யாகத்தைச் செய்ய விதியின்படி தீக்ஷை செய்வித்தார் கள். பிறகு தேவேந்த்ரன் ப்ரஹ்மவாதிகளான ரிஷிகளை ருத்விக்குக்களாக ஏற்படுத்திக்கொண்டு அஶ்வமேத யாகத்தினால் ஸமஸ்த தேவதைகளுக்கும் அந்தராத்மா வான பரமபுருஷனை ஆராதித்தான். அதனால், வ்ருத்ரா ஸுரனைக் கொன்ற பாபம் மஹத்தாயினும் ஸூர்யனைக் கண்ட பனிபோல் சிறிதுமில்லாமல் சூன்யமாயிற்று. அவ் விந்த்ரன் மரீசி முதலிய மஹர்ரிஷிகளைக் கொண்டு சாஸ் த்ரங்களில் சொல்லியபடி அஶ்வமேத யாகத்தை அனுஷ் டித்து யஜ்ஞங்களால் ஆராதிக்கப்படும் பரமபுருஷனை ஆராதித்து வ்ருத்ராஸுரனைக்கொன்ற பாபத்தை யெல் லாம் உதறிச் சத்ருக்களெல்லாம் தொலைந்து ராஜ்ய ஸம் பத்தையும் பெற்று மிகுந்த மஹிமையுடையவனானன். மஹேந்த்ரன் ப்ரஹ்மஹத்யாரூபமான பாபத்தினின்று விடுபட்டதையும் அவனுடைய ஜயத்தையும் கூறுகின்ற இந்தப் பெரிய உபாக்யானம் பாபங்களை யெல்லாம் போக் கும்; புண்ய தீர்த்தமான கங்கைக்கு உத்பத்தி ஸ்தான மான பாதங்களையுடைய பரமபுருஷனுடைய கீர்த்திகள் உள்ளடங்கப் பெற்றது; பகவானிடத்தில் பக்தியை

வளர்க்கும். இது பக்தஜனங்களின் வ்ருத்தாந்தத்தைக் கூறுகின்றது. இதில் ஜீவாத்மாவின் உண்மையான ஸ்வரூபம் கூறப்பட்டிருக்கின்றது. இது பணத்தையும் புகழையும் விளக்கும்; ஸமஸ்த பாபங்களையும் தீர்க்கும்; சத்ருஜயத்தையும் மங்களத்தையும் கொடுக்கும்; ஆயுளை வளர்க்கும். ஆகையால் இந்த உபாக்யானத்தைப் பண்டிதர்கள் அனைவரும் எப்பொழுதும் படிக்க வேண்டும். பர்வங்கள் தோறும் இதைக் கேட்கவேண்டும். பதின்மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

வ்ருத்ராஸுரனுக்குத் தத்வஜ்ஞானம் உண்டானதின் காரணத்தைப் பரீக்ஷித்து வினவுதலும், ஸ்ரீசுகர் அவனுடைய பூர்வஜன்மத்தைக் கூறுதலும்,

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:— ப்ரஹ்மரிஷீ! வ்ருத்ராஸுரன் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையுமே இயற்கையாகவுடைய அஸுர குலத்தில் பிறந்தவன்; பாபங்களையே செய்யுந் தன்மையன். அவனுக்கு ஷாட்குண்ய பூர்ணனாகிய ஸ்ரீமந்நாராயணனிடத்தில் திடமான பக்தி எங்ஙனம் உண்டாயிற்று? ஸத்வகுணமே தலையெடுக்கப் பெற்றவரும் பரிசுத்தமான மனமுடையவருமான தேவதைகளுக்கும் மஹர்ஷிகளுக்குங்கூட முகுந்தனுடைய பாதாரவிந்தங்களில் பெரும்பாலும் பக்தி உண்டாகிறதில்லை. அப்படிப்பட்ட பக்தி இவ்வஸுரனுக்கு எப்படி உண்டாயிற்று? பூமியின் துகள் போல இப்பூமியிலுள்ள ஜந்துக்களும் கணக்கிட முடியாதவை. அவற்றில் மனுஷ்யர் முதலிய சிலரே சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட தர்மத்திற்கு அதிகாரிகள். ப்ராஹ்மண ஶ்ரேஷ்டரே! அவர்களில் சிலரே மோக்ஷத்தில் விருப்பங்கொள்பவர். அங்ஙனம் முயற்சி கொள்கிற

பலவாயிரம் பேர்களுக்குள் ஒருவனே ராகாதி தோஷங்களால் விடுபட்டு யோகஸித்தியைப் பெறுகிறான். மாமுனியே! ராகம் முதலிய தோஷங்கள் நீங்கி ஸித்தி பெற்ற கோடி பேர்களிலும் ஸ்ரீமந்நாராயணனையே முக்யமாகப் பற்றிப் பரிசுத்தமான மனமுடையவன் ஒருவனுங் கிடைப்பதரிது. அந்த வ்ருத்ராஸுரன் பாபிஷ்டன்; ஸமஸ்த லோகங்களுக்கும் துக்கத்தை விளைக்குந் தன்மையன். அவனுக்கு ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் நிலை நின்ற மதி எங்ஙனம் உண்டாயிற்று? க்ராம்யமான சப்தாதி விஷயங்களில் ப்ரீதி எப்படி உண்டாகாதிருந்தது? அவை எப்படிப்பட்டவனையும் இழுக்குந் தன்மையுடையவையல்லவா? ஆகையால் இவ்விஷயத்தில் எனக்குப் பெரிய ஸந்தேஹம் உண்டாயிருக்கின்றது. அவன் இந்திரனிடத்தில் பயந்து ஸ்ரீக்ருஷ்ணனைச் சரணம் அடைந்தானென்று சொல்லவும் இடம் இல்லை அந்த வ்ருத்ராஸுரன் தன் பௌருஷத்தினால் தேவேந்த்ரனை ஸந்தோஷப்படுத்தினனென்று மொழிந்தீர். ஆகையால் அதன் காரணத்தைக் கேட்கவேண்டுமென்று எனக்குப் பெரிய குதூஹலமா யிருக்கின்றது.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! நான் ஒரு உபாக்யானம் சொல்லுகிறேன், கேட்பாயாக. இதை நான் வ்யாஸரிடத்திலும் நாரதரிடத்திலும் தேவலரிடத்திலும் கேட்டேன். இந்த வ்ருத்ராஸுரன் முன் ஜன்மத்தில் சூரஸேனதேசங்களில் பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவாகிய சித்ரகேதுவென்னும் மன்னவனாயிருந்தான். அவனுக்குப் பூமி விரும்பினவற்றை யெல்லாம் கறந்தது. அவனுக்குக் கோடி பார்யைகள் இருந்தார்கள். அவன் ஸந்ததியைப் பெறச் சக்தியுடையவனாயினும் அவர்களிடத்தில் ஸந்ததியைப் பெறவில்லை. ரூபம் ஔ

தார்யம் வயது நற்குலப் பிறப்பு வித்யை ஐஸ்வர்யம் செல்வம் இவை முதலிய குணங்களெல்லாம் அமைந்த அம்மன்னவனுடைய பார்யைகள் அனைவரும் மலடி களாகவே யிருந்தார்கள். அவனுக்குப் பிள்ளையில்லையே யென்று பெரிய சிந்தை உண்டாயிற்று. ஸமஸ்தமான ஸம்பத்துக்கள் அழகான கண்ணுடைய பட்ட மஹிஷி கள் ஸமஸ்தமான இப்பூமண்டலம் இவையெல்லாம் அவ னுக்கு ஸந்தோஷத்தை விளைக்க வல்லவை யாகவில்லை. அம்மன்னவன் இங்ஙனம் பிள்ளையைப்பற்றிச் சிந்தை யுற்று மனக்களிப் பற்றிருக்கையில் தவத்தில் ஸித்தி பெற்ற மஹானுபாவரான அங்கிரஸமஹர்ஷி ஒருகால் தெய்வாதீனமாய் அவனுடைய வீட்டிற்கு வந்தார். அம்மன்னவன் விதிப்படி எழுந்தெதிர்கொண்டு அர்க்யம் பாத்யம் முதலியவற்றால் பூஜித்து அவருக்கு விருந்த ளித்து அவர் ஸுகமாக உட்கார்ந்திருக்கையில், மனஅடக் கத்துடன் அவருடைய அருகாமையில் வந்துட்கார்ந் தான். வணக்கத்துடன் அருகிலிருக்கின்ற அம்மன்ன வனை அம்மஹர்ஷி வெகுமதித்து "மன்னவனே உனக்கு ஆரோக்யமா? உன் ப்ரக்ருதிகள் அனைவரும் க்ஷேம மாயிருக்கின்றார்களா? ஜீவன், மஹத்து அஹங்காரம் பஞ்சதன்மாத்ரங்கள் ஆகிய இவ்வேழு தத்வங்களால் பாதுகாக்கப்பட்டு ஸுகத்தை அனுபவிப்பதுபோல், மன்னவனும் ப்ரக்ருதிகளிடத்தில் தன்னை ஒப்புவித்து அவர்களால் பாதுகாக்கப்பெற்று ஸுகத்தை அனுப விப்பான். ப்ரக்ருதிகளும் மன்னவனால் பாதுகாக்கப்பெற் றுத் தமது இஷ்டங்களைப் பெறுவார்கள்; அனிஷ்டங் களையும் போக்கிக் கொள்வார்கள். உன் பார்யைகளும் ப்ரஜைகளும் கார்ய ஸஹாயமான மந்த்ரிகளும் நண் பர்களும் தாம்பூலங் கொடுப்பவர் முதலிய பரிசாரகர்

களும் மந்த்ராலோசனைக்கு ஸஹாயமான மந்த்ரிகளும் பட்டணத்து ஜனங்களும் தேசாந்தரத்து ராஜாக்களும் பிள்ளைகளும் உன் வசப்பட்டு நடக்கின்றார்களா? மனத்தைச் சப்தாதி விஷயங்களில் போகவொட்டாமல் அடக்கியாளுந் திறமையுடையவனுக்குப் பார்யை முதலிய இவர்கள் அனைவரும் வசப்பட்டிருப்பார்கள். அவனுக்கு லோக பாலர்களும் ஸமஸ்தமான லோகங்களும் கப்பங்கொடுத்துப் பணிவார்கள். உன் மனம் ஸந்தோஷமற்றிருக்கின்றதே. இது ஸ்வயமாகவேயா? அல்லது வேறு காரணத்தைப் பற்றியா? நீ மனவிருப்பம் ஈடேறப் பெறுதவன் போல் தோற்றுகின்றனை. உன் முகம் சிந்தையினால் ஒளியற்றிருக்கின்றது. இதற்குக் காரணம் என்ன?'' என்றார். மன்னவனே! அம்முனிவர் அரசனுடைய கருத்தை அறிந்தவராயினும் இங்ஙனம் வினவினார். ஸந்ததியை விரும்புகின்ற அவ்வரசன் வணக்கத்துடன் அம்முனிவரை நோக்கி ''மஹானுபாவரான மஹர்ஷியே! தவம் ஜ்ஞானம் ஸமாதி இவற்றால் பாப கர்மங்களெல்லாம் தொலையப் பெற்ற உம்மைப்போன்ற யோகிகளுக்கு ப்ராணிகளின் மனத்திலும் வெளியிலுமுள்ள எவை தான் தெரியாது? எல்லாம் தெரியும். ப்ரஹ்மர்ஷீ! ஆயினும் நீர் என்னை வினவுகின்றபடியினால் என் மனக்கருத்தைச் சொல்லுகிறேன். பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவாயிருக்கையாகிற ஐஸ்வர்யம் அதனால் விளையும் ஸம்பத்து இவையெல்லாம் இந்த்ரன் முதலிய லோகபாலர்களாலும் ஆசைப்படத் தகுந்தவை. ஆயினும், பசி தாஹங்களால் வருந்தினவனுக்கு மற்ற போகங்களெல்லாம் மனக்களிப்பை விளைக்கமாட்டாதவைபோல், ஸந்ததியற்றிருக்கிற எனக்கு அவையெல்லாம் சிறிதும் களிப்பை விளைக்கவில்லை, மஹானுபா

வரே! ஆகையால் நான் என் தந்தை முதலிய பெரியோர்களுடன் கடக்க முடியாத நரகத்தில் விழ ஸித்தமாயிருக்கிறேன். எனக்கு ஸந்ததியைக் கொடுத்து நாங்கள் அந்நரகத்தைக் கடக்கும்படி அருள்புரிவீராக" என்றான். அங்கிரஸமுனிவர் ப்ரஹ்மாவின் புதல்வர்; ஸமர்த்தர்; மனஇரக்கமுடையவர். அவர் அம்மன்னவனால் வேண்டப்பெற்று த்வஷ்டாவைத் தேவதையாகவுடைய சருவைப் பக்வம் செய்வித்து மன்னவனைக்கொண்டு அதனால் அந்த த்வஷ்டாவை ஆராதித்தார் பாரதனே! பிறகு யாகத்தில் மிகுந்த சருவை அம்மன்னவனுடைய பார்யைகளில் முதன்மையானவளும் சிறப்புடையவளுமாகிய க்ருதத்யுதி யென்பவளுக்குக் கொடுத்தார். அம்முனிவர் மீளவும் மன்னவனை நோக்கி "ராஜனே! சித்ரகேது! உனக்கு ஒரு பிள்ளை பிறப்பான். அவன் தனது பிறவியால் உனக்கு ஸந்தோஷத்தையும் மரணத்தினால் சோகத்தையும் கொடுப்பான்" என்று மொழிந்து அவர் புறப்பட்டுப்போனார். பிறகு க்ருத்திகை அக்னியிடத்தினின்று கர்ப்பந்தரித்தாற்போல, அந்த க்ருதத்யுதி அந்த ஹவிஸ்ஸைப் புசித்த மாத்ரத்தினால் சித்ரகேதுவினிடத்தினின்று கர்ப்பம் தரித்தாள். அவளிடத்தில் சித்ரகேதுவின் வீர்யத்தினால் ஏற்பட்ட கர்ப்பம் சுக்லபக்ஷத்து சந்தரன்போலத் தினந்தோறும் மெல்லமெல்ல வளர்ந்தது. பிறகு சிறிது காலம் சென்ற பின்பு சித்ரகேதுவுக்குப் பிள்ளை பிறந்தான். அதைக் கேட்டுச் சூரஸேன தேசத்திலுள்ளவர் அனைவரும் மிகுந்த ஸந்தோஷம் அடைந்தார்கள். அப்பால் சித்ரகேது மன்னவன் ஸந்தோஷமுற்று உடனே ஸ்நானம் செய்து பரிசுத்தனாகி அலங்கரித்துக்கொண்டு புதல்வனுக்கு ப்ராஹ்மணர்களால் ஆசீர்வாதம் செய்வித்து

ஜாதகர்மம் நடத்தினன். அனந்தரம் அந்த ப்ராஹ்மணர்களுக்குப் பொன் வெள்ளிகளையும் ஆடையாபரணங்களையும் க்ராமபூமிகளையும் யானைகுதிரைகளையும் ஆறு அர்ப்புதம் பசுக்களையும் கொடுத்தான். தனத்தையும் புகழையும் பிள்ளைக்கு ஆயுளையும் வளர்க்குமாறு மற்றப்ராணிகளுக்கும் மேகம் மழை பெய்வதுபோல் விருப்பங்களையெல்லாம் கறந்தான். பணமில்லாதவனுக்கு மிகவும் வருந்திச் சம்பாதித்த பணத்தில் ப்ரீதி வளர்வதுபோல், மிகவும் ப்ரயாஸப்பட்டுக் கிடைத்த அப்புதல்வனிடத்தில் ராஜர்ஷியாகிய சித்ரகேதுவுக்கு ஸ்நேஹம் வளர்ந்துவந்தது. அங்ஙனமே மாதாவான க்ருத்யுதிக்கும் அப்புதல்வனிடத்தில் மோஹத்தினால் பெரிய ஸ்நேஹம் வளர்ந்து வந்தது. அவளுடைய சக்களத்திகள் அனைவரும் நமக்குப் பிள்ளையில்லையேயென்று மனக்கவலை யுற்றிருந்தார்கள். தினந்தோறும் அப்புதல்வனைச் சீராட்டிக் கொண்டிருக்கிற சித்ரகேதுவுக்குப் பிள்ளையைப்பெற்ற பார்யையாகிய க்ருதத்யுதியிடத்தில்போல் மற்றவர்களிடத்தில் ப்ரீதி உண்டாகவில்லை. பிறகு க்ருதத்யுதியின் சக்களத்திகள் எல்லாரும் மன்னவன் தங்களை ஆதரிக்காமையாலும் தங்களுக்குப் பிள்ளை இல்லாமையாலும் துக்கித்து அவளிடத்தில் அஸூயைகொண்டு 'பிள்ளையில்லாமல் பாபிஷ்டர்களான எங்கள்போன்ற பெண்களைச் சுடவேண்டும். பிள்ளையில்லாதவளைக் கணவன் வீட்டில் இருக்கவுங்கூட ஸம்மதிக்கிறதில்லை. நற்பிள்ளையைப் பெற்ற சக்களத்திகள் அவளைத் தாஸியைப்போல் அவமதிக்கிறார்கள். இப்படிப்பட்ட பாபிஷ்டர்கள் ஜீவித்திருந்து என்ன உபயோகம்? மற்றும், ராஜனுடைய தாஸிகளும் தம்ப்ரபுவுக்குப் பணிவிடைசெய்து அவனிடத்தினின்று அடிக்கடி விருப்பங்களைப் பெறுகிறார்

கள், நாங்கள் தாஸிக்கும் தாஸியைப்போல் மிகவும் பாக்யமற்றவர்கள்' என்று வெறுத்துப் பரிதபித்தார்கள். இங்ஙனம் சக்களத்திக்குப் பிள்ளை பிறந்த பெருமையைப் பொருமல் பரிதபிக்கின்றவர்களும் ராஜனுக்கு இஷ்டமற்றவர்களுமாகிய அம்மன்னவனது பார்யைகள் அனைவரும் பெரிய த்வேஷங்கொண்டார்கள். அவர்கள் த்வேஷத்தினல் மதிகெட்டு இயற்கையாகவே கொடிய மனமுடையவர்களாகையால் மன்னவனைப் பொருள்செய்யாமல் அப்புதல்வனுக்கு விஷங்கொடுத்தார்கள். க்ருதத்யுதி சக்களத்திகள் செய்த மஹத்தான அந்தப் பாபகார்யத்தை அறியாமையால் குழந்தை தூங்குகிருனென்றே நினைத்து வீட்டில் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தாள். பிறகு தாய் 'குழந்தை வெகு நேரமாய் உறங்கிக் கொண்டிருக்கிருனே. இன்னம் எழுந்திருக்கவில்லையே' என்று நினைத்துப் பிள்ளையைச் சீராட்டுவதில் விருப்பமுடையவளாகையால் பால்கொடுக்கும் வேலைக்காரியை அழைத்து 'அடி பத்ரே! என் குழந்தையை எடுத்துக்கொண்டு வா' என்ருள். அவள் குழந்தை படுத்துக் கொண்டிருக்கு மிடம் சென்று கண்களில் கருவிழிகள் மேலிட்டிருப்பதையும் ப்ராணன் இந்த்ரியம் ஜீவன் இவையெல்லாமின்றிக் கட்டையாயிருப்பதையும் கண்டு 'ஐயோ! முடிந்தேனே' என்று கதறிப் பூமியில் விழுந்தாள். ராஜ மஹிஷியான க்ருதத்யுதி, கைகளால் மார்பில் அடித்துக்கொண்டு உரக்கக் கதறுகிற அத்தாஸியின் துக்கத்வனியைக்கேட்டு விரைவுடன் பிள்ளையினருகே சென்று அவன் உண்மையாகவே மரணம் அடைந்திருக்கக் கண்டாள். உடனே பூமியில் விழுந்தாள்; சோகவேகத்தினல் தலைமயிர்களும் ஆடையும் அவிழ்ந்தலையப் பெற்று மூர்ச்சித்தாள். பிறகு

ராஜனது அந்தப் புரத்திலுள்ள ஆண் பெண்கள் அனை வரும் அவ்வழு குரலைக்கேட்டு அவ்விடம் வந்து மன்னவ னோடு ஒருமிக்க மனவருத்த முற்றார்கள். விஷங் கொடுத்து அபராதப்பட்ட சக்களத்திகளும் ஓடிவந்து மெய்போலவே கண்ணீர் பெருக்கினார்கள். மன்னவன் தன் புதல்வனுடைய மரணத்தைக் கேட்டு அதற்குக் காரணம் ஏற்படாமல் அப்புதல்வனிடத்தில் மிகுந்த ஸ்நேஹமுடையவனாகையால் மஹத்தான சோகத்தினால் பீடிக்கப்பட்டுக் கண் தெரியாமல் கீழ்விழுவதும் கால் தடுக்கப் பெறுவதும் மூர்ச்சிப்பதுமாகி மந்த்ரிமுதலிய வர்களோடும் ப்ராஹ்மணர்களோடும் அவ்விடம் வந்து தலை மயிர்களும் அரையாடையும் அவிழ்ந்தலையப்பெற் றுப் பெருமூச் செறிந்துகொண்டு கண்ணீர்களால் கண் டம் தடுக்கப்பெற்று ஒன்றும் பேசமுடியாமல் அப்புதல் வனுடைய பாதங்களில் வந்து விழுந்தான். அப்பொ ழுது பதிவ்ரதையான க்ருத த்யுதி தன் கணவன் பெ ருஞ் சோகத்திலாழ்ந்திருப்பதையும், ஒரே ஸந்ததி யாகிய தன் சிறுவன் மரணம் அடைந்திருப்பதையும் கண்டு அங்குள்ள ஜனங்களுக்கும் மன்னவனுக்கும் மந்த்ரி முதலானவர்களுக்கும் மனவருத்தத்தை விளைத் துக்கொண்டு பலவாறு புலம்பினாள். அவள் குங்குமம் கலந்த சந்தனம் அணிந்த கொங்கைகளிரண்டையும் மையோடுகூடின கண்ணீர்த் துளிகளால் நனைத்துப் புஷ்பங்கள் உதிரப்பெற்ற தலை மயிர்களை விரித்து இனிய குரலுடன் அழுகுரல் பக்ஷிபோல் புதல்வனைக் குறித்து மேல்வருமாறு சோகித்தாள். "ஆ தெய்வமே! நீ மூர்க்கன். உனக்கு மன இரக்கமில்லை. நீ உன்னுடைய ஸ்ருஷ்டிக்ரமத்திற்கு விபரீதமாக நடத்துகின்றனை. முன் பிறந்த தந்தை முதலியவர் ஜீவித்துக்கொண்டிருக்கை

யில் பின்பிறந்த பிள்ளைமுதலியவர்க்கு மரணத்தை விளைக்கின்றனை. இது தகுமா? இதை மாற்றி நடத்துவாயாயின் நீமேன்மையுடையவனுவாய். நிச்சயம். பெரும்பாலும் நீ அங்ஙனம் செய்கிறதில்லையாகையால் மூர்க்கனென்றே உன்னை நிச்சயிக்கிறேன். இந்த ப்ரக்ருதி மண்டலத்தில் ப்ராணிகளின் உத்பத்தி மரணங்களுக்கு க்ரமம் இல்லையாயின், பிறத்தல் சாதல் முதலியவை அனைத்தும் அவரவர் கர்மத்தின்படி நடக்கட்டும். ஈஶ்வரனென்று பேரிட்டுக் கொண்டிருக்கிற உன்னால் ஆகவேண்டிய கார்யம் என்னவிருக்கிறது? 'நான் அவரவர் கர்மத்தின்படி பலன்களைக் கொடுக்கிறேன்' என்றால், உன்னுடைய ஸ்ருஷ்டியின் அபிவ்ருத்திக்காக நீ பிள்ளைமுதலியவர்களிடத்தில் ஏற்படுத்தியிருக்கிற ஸ்நேஹமாகிற பாசத்தை நீயே அறுப்பாயாக. அப்பா! குழந்தாய்! நாதனற்று வருந்திக் கொண்டிருக்கிற என்னை நீ துறக்கலாகாது. உன் தந்தை உன்னைப் பற்றின சோகத்தினால் பரிதபிப்பதைக் காண்பாயாக. பிள்ளையில்லாத வருத்தம் ஒருவாறு பொறுக்கக்கூடியது. இந்த வருத்தமோ எவ்விதத்திலும் கடக்கமுடியாதது. ஆகையால் அதைக் காட்டிலும் இதுமேற்பட்டது. நீ கண் திறந்து பார்ப்பாயாயின், அந்தகாரம்போன்ற இச்சோகத்தை நாங்கள் கடப்போம். நீ பார்க்கமாட்டாயாயின், மனஇரக்கமின்றி உன்னைக்கொண்டுபோன யமனுடன் சொல்லி என்னையும் வெகுதூரமான அவ்விடம் கொண்டுபோய்ச் சேர்ப்பாயாக. அப்பனே! ராஜகுமாரா! உன்னோடொத்த வயதுடைய இச்சிறுவர்கள் உன்னுடன் விளையாட உன்னை அழைக்கின்றார்கள். மற்றும் நீ உறங்கப் படுத்து வெகுநேரமாயிற்று. உனக்குப் பசிக்குமல்லவா? ஆகையால் ஸ்தன்யம் பருக எழுந்திருப்பாயாக. உன்னைச் சேர்ந்த எங்கள் சோகம்

களையெல்லாம் போக்குவாயாக. குழந்தாய்! அழகிய புன்னகையும் அசைகின்ற இமைமயிர்களோடுகூடின கண்களும் அமைந்த உன் முககமலத்தை நான் பார்க்கவில்லை. பாக்யமற்ற நான் இனியவைகளான உன் பேச்சுக்களை இன்னம் கேட்கவில்லை. இதற்குள்ளாகவே திரும்பி வாராதபடி உன்னை மனஇரக்கமற்ற தெய்வம் லோகாந்தரத்திற்குக் கொண்டுபோயிற்று. நீ இப்படி என்னைத் துறந்து போகக்கூடாது?'' என்று புலம்பினுள். இங்ஙனம் மரணம் அடைந்த புதல்வனைப் பற்றிப் பலவாறு புலம்புகின்ற க்ருதத்யுதியின் புலம்பல்களைக்கேட்ட சித்ரகேதுமன்னவன் சோகத்தினுல் பரிதபித்துக் குரல்பாய்ச்சிப் புலம்பினுன். அந்த ராஜனும் ராஜபத்னியுமாகிய இருவரும் புலம்பிக்கொண்டிருப்பது கண்டு அவர்களைத் தொடர்ந்த ஆண் பெண்கள் அனைவரும் கண்ணீர் பெருக்கி அழுதார்கள். மற்றஜனங்களெல்லோரும் சித்ரத்தில் எழுதின ப்ரதிமைகள்போல மதியற்றிருந்தார்கள். இவ்வாறு அம்மன்னவனும் அவனைச் சேர்ந்தவர்களும் ஆகிய அனைவரும் பெருந்துக்கத்தில் ஆழ்ந்து ப்ரஜ்ஞையற்று உண்மையை உரைத்துத் தேற்றுவோர் எவருமின்றியிருப்பதை அறிந்து அங்கிரஸமுனிவர் நாரதருடன் அவ்விடம் வந்தார். பதினன்காவது அத்யாயம் முற்றிற்று

---

நாரதரும் அங்கிரஸமுனிவரும் சித்ரகேதுவுக்குத் தத்வோபதேசம் செய்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:–அங்கிரஸமுனிவர் நாரதமுனிவர் ஆகிய அவர்களிருவரும் மரணம் அடைந்த பிள்ளையின் அருகில் விழுந்து சோகத்தினுல் மதிமயங்கிமாணம் அடைந்தாற்போலிருக்கிற சித்ரகேதுமன்னவனைநோக்கி ப்ரக்ருதி புருஷன் ஈஶ்வரன் இவர்களின் உண்மையை

அறிவிக்கிற இனிய உரைகளால் அவனுக்கு விவேகத்தை விளைத்துக்கொண்டு மொழிந்தார்கள். 'மன்னவனே! நீ எவனைப்பற்றிச் சோகிக்கின்றனையோ அத்தகைய இவன் ப்ரவாஹம்போன்ற ஸ்ருஷ்டியில் நடந்த காலத்திலாவது நிகழ்காலத்திலாவது வருங்காலத்திலாவது உனக்கு என்னாகவேண்டும்? நீயும் இவனுக்கு என்னாகவேண்டும்? நீ ஜீவாத்மாவைக் குறித்துச் சோகிப்பாயாயின் சோகிக்கப் படுகிற இந்த ஜீவனுக்கும் உனக்கும் என்ன ஸம்பந்தம்? மூன்று காலங்களிலும் இவனோடு உனக்கு ஒரு விதமான ஸம்பந்தமும் கிடையாது. தேஹத்தைப்பற்றின பிதா புத்ர ஸம்பந்தத்தைப்பற்றிச் சோகிப்பாயாயின், அதுவும் அழகன்று. மணல்கள் ப்ரவாஹவேகத்தினால் ஓரிடத்தில் குன்றாய்ச் சேருகின்றன. ஓரிடத்தில் குன்றாயிருந்த மணல்கள் பிரிந்துபோகின்றன. அங்ஙனமே ப்ராணிகள் மற்றவர்களோடு காலத்தினால் சேருவதும் பிரிவதுமாயிருக்கிறார்கள். விதைகள் முளைத்துக் காய்காய்த்துத் தம்மைப்போன்ற வேறு விதைகளை விளைக்கின்றன. காலக்கிரமத்தில் அழிந்துபோகின்றன. அங்ஙனமே ப்ராணிகளிடத்தினின்று ஈஶ்வரனுடைய மாயையால் தூண்டப்பெற்று வேறு ப்ராணிகள் உண்டாகிறார்கள். கால க்ரமத்தில் மரணம் அடைகிறார்கள். ஆகையால் ஈஶ்வரனுடைய மாயையின் மஹிமையை ஆராய்ந்து இவ்விஷயத்தில் சோகிக்கலாகாது. நாங்களும் நீயும் இதோ புலப்படுகின்றவர்களும் இக்காலத்திலுள்ள மற்ற ஜங்கம ஸ்தாவரங்களும் ஆகிய எல்லாம் பிறந்ததற்கு முன்பு இல்லவேயில்லை; மரணம் அடைந்ததற்குப் பின்பும் இருக்கப்போகிறதில்லை. மன்னவனே! அங்ஙனமே இத்தேஹமும் இப்பொழுது கலைந்துபோக ஆரம்பித்தது. இனி இருக்கப்போகிறதில்லை. ஆகையால் இத்தேஹத்

தைப்பற்றியும் சோகிக்கலாகாது: ப்ராணிகளுக்குள் புகுந்து நியமிக்கிற ஸர்வேஸ்வரன் தன்னால் படைக்கப் பட்டவைகளும் தனக்குட்பட்டு ஸ்வாதீன மற்றவைகளு மான ப்ராணிகளைக்கொண்டு ப்ராணிகளைப் படைப்பதும் காப்பதும் அழிப்பதும் செய்கிறான். அவன் கர்மத்தி னால் விளையும் பிறவியற்றவன்; அவாப்தஸமஸ்தகாமன். உலகத்தில் ஒருவன் ஒரு கார்யம் செய்யும்பொழுது தன் ப்ரயோஜனத்தையாவது பிறர்ப்ரயோஜனத்தையா வது கருதிச் செய்கிறான். ஈஸ்வரன் ஸ்ருஷ்டி முத லிய கார்யங்களைச் செய்வது தன் ப்ரயோஜனத்திற்காக வென்று சொல்லலாகாது. அவன் விருப்பங்களெல்லாம் கைகூடப் பெற்றவனாகையால் அவனுக்கு இவற்றால் ஆகவேண்டிய ப்ரயோஜனம் ஒன்றும் இல்லை. பிறர் ப்ரயோஜனத்திற்காகச் செய்கிறானென்று சொல்லவேண் டும். அதற்குப் பிறரிடத்திலுள்ள அருளே காரணமாக வேண்டும். கர்ப்பம் ஜன்மம் ஜரை மரணம் நரகம் முதலிய பலவகையான துக்கங்களுக்கிடமான ஜகத்தை மன இரக்கமுடையவன் எவனும் படைக்கமாட்டான். எவ னும் ப்ரயோஜனத்தை எதிர்பாராமல் ஒருகார்யத்தைச் செய்யமாட்டான் என்றால், ஈஸ்வரன் அவாப்த ஸமஸ்த காமனென்பது வாஸ்தவம். அவன் தன் ப்ரயோஜனத்திற் காக ஸ்ருஷ்டிக்கிறானென்பதில்லை. ஸம்ஸாரம் பலதுக்கங் களுக்கிடமாகையால் பிறர் ப்ரயோஜனத்திற்காக ஸ்ருஷ் டிக்கிறானென்பதும் இல்லை. ஆயினும் பாலர்கள் விளையா டுவதுபோல் ஈஸ்வரன் வேறு ப்ரயோஜனத்தை எதிர் பாராமலே ஸ்ருஷ்டிக்கிறான். ஈஸ்வரனுடைய ஸ்ருஷ்டி முதலியகார்யங்களுக்கு விளையாட்டே ப்ரயோஜனம். ஆயி னும் ப்ராணிகளை மேன்மையும் தாழ்மையுமாகப் படைக் கிறானாகையால் அவனுக்குப் பக்ஷபாதமும், பலவகைத்

துக்கங்களை விளக்கிருனுகையால் மனஇரக்கமில்லாமையும் நேருமேயென்று சங்கிக்கவேண்டாம். அவன் ஜீவாத்மாக்களுடைய கர்மங்களை அனுஸரித்து மேன்மை தாழ்மைகளையும் ஸுகதுக்கங்களையும் விளக்கிருனுகையால் அவனுக்குப் பக்ஷபாதமாவது மனஇரக்கமில்லாமையாவது உண்டாகாது. மன்னவனே! பூமியில் நட்ட விதையினின்று வேறுவிதைகள் உண்டாவதுபோல, ஜீவனுடைய தேஹம் தந்தையின் தேஹத்தினுல் மாதாவின் தேஹத்தில் உண்டாகின்றது. அக்னிக்கு உஷ்ணம் போலவும், ஜலத்திற்குக் குளிர்ச்சிபோலவும், தேஹத்திற்கு மரணம் அடைவது ஸ்வபாவம். ஆகையால் அதைப்பற்றிச் சிந்திக்கலாகாது. ஜீவன் என்றும் ஒருவாருயிருப்பவன்; நித்யாநந்தஸ்வரூபன்; ஆகையால் புருஷர்களால் ஆசைப்படத் தகுந்தவன். அத்தகையனுன ஜீவனுக்குத் தேஹஸம்பந்தம் அநாதியான அவிவேகத்தினுல் ஏற்பட்டதேயன்றி ஸ்வாபாவிகமன்று. முத்துச்சிப்பியைப் பார்த்து இது வெள்ளியென்று ப்ரமிப்பதுபோல், தேஹத்தை ஆத்மாவென்றும் தன்னை ஸ்வதந்த்ரனென்றும் ப்ரமிக்கின்றுன். முத்துச்சிப்பியில் வெள்ளியென்னும் ஜாதி உருவம் இவற்றின் பிரிவுகள் ப்ரமத்தினுல் கற்பிக்கப்படுவதுபோல் 'இத்தேஹம் இந்த ஜீவனுடையது; இந்த ஜீவன் இத்தேஹமுடையவன்' என்னும் பிரிவு அவிவேகத்தினுல் கற்பிக்கப்படுகின்றது. ஆகையால் ஜீவனுக்குத் தேஹஸம்பந்தம் வந்தேறியேயன்றி நித்யமன்று'' என்று மன்னவனுக்கு ஹிதம் உபதேசித்தார்கள். இங்ஙனம் அந்த ப்ராஹ்மணர்களின் உரைகளால் ஸமாதானம் செய்யப்பெற்ற சித்ரகேது மன்னவன் புத்ரசோகத்தினுல் வாடின முகத்தைக் கையால் துடைத்துக்கொண்டு அவர்களை நோக்கி "நீங்கள் மஹாஜ்ஞானிகளாயிருக்கிறீர்

கள்; மேன்மையுடைய பெரியோர்களுக்கும் பெரியோர் களாயிருக்கிறீர்கள். நீங்கள் அற்பவேஷத்துடன் இங்கு வந்திருக்கிறீர்கள். நீங்கள் யார்? பகவானுக்கு அன்பர்களான ப்ராஹ்மணர்கள் பித்தம் பிடித்தவர் போல் வேஷம்பூண்டு என்னைப்போன்ற மூடர்களுக்கு ஜ்ஞானோபதேசம் செய்யும்பொருட்டு இப்பூமியில் திரி கிறார்கள். அவர்களில் நீங்கள் யாவரோ தெரியவில்லை. ஸனத்குமாரர், நாரதர், ருபு, அங்கிரஸ்ஸு, தேவ லர், அஸிதர், அபாந்தரதமஸ்ஸு, வ்யாஸர், மார்க்கண் டேயர், கௌதமர், வஸிஷ்டர். பரசுராமர், கபிலர், ஸ்ரீசுகர், துர்வாஸர், யாஜ்ஞவல்க்யர், ஜாதுகர்ணி, ஆருணி, ரோமசர், ச்யவனர், தத்தாத்ரேயர், ஆஸுரி, பதஞ்ஜலி, பராசார், மைத்ரேயர், பாரத்வாஜர், வாருணி, வேதசிரர், ஆங்கிரஸர், பஞ்சசிகர், ஹிரண்யநாபர், கௌ ஸல்யர், ஶ்ருததேவர், ருதத்வஜர் இம்முனிவர்களும் மற் றும் பல முனிவர்களும் மூடர்களுக்கு ஜ்ஞானோபதேசத் தின்பொருட்டு இப்பூமண்டலத்தில் ஸஞ்சரிக்கிறார்கள். அவர்கள் தபஸ்ஸித்தி பெற்றவர்களில் சிறந்தவர்கள். ஜ்ஞானத்தையே செல்வமாக வுடையவர்கள். அவர்களில் நீங்கள் யாவரோ தெரியவில்லை. நீங்கள் யாராயிருந்தா லும், இருப்பீர்களாக. என்னைப் போன்ற மூடனுக்கு ஜ்ஞானோபதேசம் செய்யவல்லராயிருக்கிறீர்கள். நான் அஜ்ஞானமாகிற அந்தகாரத்தில் ஆழ்ந்திருக்கிறேன்; மூடபுத்தியுடையவன். மனுஷ்யனைப்போல் தோற்றுகிறே னேயன்றிப் பசுவின் தன்மையே எனக்குள்ளது. ஆஹா ரம் நித்ரை பயம் மைதுனம் இவையொழிய மற்றொன்றும் அறியேன். பசுக்களைக்காட்டிலும் மனுஷ்யர்களுக்கு ஜ்ஞானமன்றோ விசேஷம்? அது எனக்கு முதலே கிடை யாது. ஆகையால் இத்தகைய எனக்கு நீங்கள் ஜ்ஞா

னச்சுடர்விளக்கை ஏற்றிக் கொடுப்பீர்களாக" என்றான்; அதைக் கேட்டு அங்கிரமஹர்ஷி மன்னவனை நோக்கி "ஓ ராஜனே! நீ பிள்ளை வேண்டுமென்று விரும்பிக் கொண்டிருக்கையில் உனக்குப் பிள்ளையைக் கொடுத்த அங்கிரஸமுனிவன் நான். இவர் ஒன்றான ப்ரஹ்மதேவனது புதல்வராகிய நாரதமஹர்ஷி; மஹானுபாவர். நீ இங்ஙனம் புத்ரசோகத்தினால் கடக்க முடியாத அஜ்ஞானத்தில் ஆழ்ந்திருப்பதையும், நீ அதற்குத் தகாதவனென்பதையும், பெரியோர்களால் அனுக்ரஹிக்கத் தகுந்தவனென்பதையும் ஆராய்ந்து உன்னை அனுக்ரஹிக்கும் பொருட்டு நாங்கள் இவ்விடம் வந்தோம். ப்ரபூ! ப்ராஹ்மண குலத்திற்கு க்ஷேமம் செய்பவனும் பகவானிடத்தில் பக்தியுடையவனுமாகிய உன்னைப்போன்றவன் துக்கிப்பதற்கு உரியவனல்லன். முன்பு வந்தாற்போல் உன் க்ருஹத்திற்கு வந்திருக்கிற நான் உனக்கு ஜ்ஞானத்தை உபதேசிக்கிறேன். நீ முன்பு பிள்ளைவேண்டுமென்று வேறு விஷயத்தில் போராவலுற்றிருந்தனையாகையால் அதை அறிந்து நான் அப்பொழுது உனக்கு பிள்ளையைக் கொடுத்தேன். மன்னவனே! பிள்ளை பெற்றவர்களுக்கு நேரும் பரிதாபத்தை நீயே நேரில் அனுபவிக்கின்றனை. இங்ஙனமே மனைவி மனை பணம் பலவகையான ஐஸ்வர்யப் பெருக்குகள் சப்தாதி விஷயங்கள் ராஜ்யபோகங்கள் இவையெல்லாம் நிலையற்றவைகள். ராஜனே! பூமண்டலத்திற்கெல்லாம் ப்ரபுவாயிருக்கை, யானை குதிரை முதலிய சதுரங்க பலம் கருவூலம் ப்ருத்யர்கள் மந்த்ரிகள் நண்பர்கள் இவையெல்லாம் கந்தர்வநகரம் போலவும் ஸ்வப்னத்தில் காண்கிற ஆச்சர்யமான மனோரதங்கள் போலவும் நிலையற்றவைகள். அவை சோகம் மோஹம் பயம் இவற்றைக் கறக்கும். அவை புலப்படுங்

காலத்திலும் பரமபுருஷார்த்தமான ஆநந்தத்திற்கிடமல்லாமலே புலப்படும்; அழிந்த பின்பு மீளவும் எக்காலத்திலும் புலப்படமாட்டா. ஸ்வப்னத்தில் காண்கிற வஸ்துக்கள் போல நாம் விழித்துக்கொண்டிருக்கும் பொழுது அனுபவிக்கும் வஸ்துக்களும் மனத்தினின்றே உண்டாகின்றன. அதெப்படியென்றால், நாம் அனுபவிக்கும் வஸ்துக்களெல்லாம் ஜன்மாந்தரத்தில் செய்த கர்மங்களின் பலனாகவே ஏற்பட்டவை. அநாதி கர்மவாஸனையால் ஜீவன் கர்மங்களையே நினைத்துக்கொண்டிருக்கிறான். அம்மனத்தினால் தூண்டப்பட்டு மீளவும் கர்மங்களைச் செய்கிறான். ஆகையால் அக்கர்மங்களின்பலனாக ஏற்படும் வஸ்துக்கள் மனத்தினின்று உண்டானவைகளே. ப்ருதிவி முதலியபஞ்சபூதங்கள்ஜ்ஞானேந்த்ரியகர்மேந்த்ரியங்கள் இவற்றின் ஸமுதாய ரூபமான தேஹம் ஜீவனுக்கு ஜன்மாந்தரத்தில்செய்தகர்மங்களின்பலனான பலவகை வருத்தங்களை அனுபவிப்பதற்காகவே ஏற்படுகின்றதென்று சொல்லுகிறார்கள். (முதலில் அநாதிவாஸனையோடு கூடின மனத்தினால் சப்தாதிவிஷயங்களைச் சிந்திக்கிறான். அச்சிந்தையால் அவற்றைப் பெறுதற்குரிய புண்ய பாப கர்மங்களைச் செய்கிறான். அக்கர்மங்களால் ஸுகதுக்கங்களை அனுபவிப்பதற்கிடமான தேஹத்தைப் பெறுகிறான். அத்தேஹத்தினால் 'முன் ஜன்மத்தில் செய்த கர்ம பலன்களை அனுபவித்துக்கொண்டே மீளவும் சப்தாதி விஷயங்களைச் சிந்திக்கிறான். அச்சிந்தையால் மீளவும் கர்மங்களைச் செய்கிறான். ஆகையால் ஜீவன் அனுபவிக்கும் வஸ்துக்களெல்லாம் மனத்திலுண்டானவைகளே). இங்ஙனம் பிள்ளை பெண்டிர் முதலியவை அனைத்தும் ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்களைப்போல நிலையற்றவையாகையால் மனக்கலக்கமின்றித் தேஹாதிகளைக் காட்டி

னும் விலக்ஷணனும் ஜ்ஞானைகந்த ஸ்வரூபனுமாகிய ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிந்து தேஹத்தில் ஆத்மாபிமானத்தைத் துறந்து வைராக்யத்தை ஏற்றுக்கொள்வாயாக' என்றார். இங்ஙனம் அங்கிரஸமுனிவரால் விவேகம் உண்டாகும்படி உரைக்கப்பெற்ற சித்ரகேதுமன்னவனைப் பார்த்து நாரதமுனிவர் மொழிந்தார். "மன்னவனே! நான் ரஹஸ்யமான மந்த்ரத்தை உபதேசிக்கிறேன். இதை நீ மனவூக்கத்துடன் பெற்றுக் கொள்வாயாக. இதை மறவாமல் த்யானிப்பாயாயின், ஏழுநாளைக்குமேல் ப்ரபுவான ஸங்கர்ஷண பகவானைக் காண்பாய். மன்னவனே! அவருடைய பாதமூலத்தைப் பணிந்து ருத்ரன் முதலிய பெரியோர்கள் இரண்டு வகையான ப்ரமத்தையும் துறந்து அப்பொழுதே இணையெதிரில்லாத அவருடைய மஹிமையைப் பெற்றார்கள். நீயும் சீக்ரத்தில் மேலான அம்மஹிமையைப் பெறுவாய்" என்றார். பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ நாரதமுனிவர் மரணம் அடைந்த பிள்ளையின் வார்த்தைகளால் அம்மன்னவனைத் தெளிவித்து அவனுக்கு வித்யோபதேசம் செய்தல். }

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—மன்னவனே! தேவர்ஷியாகிய அந்நாரதர், மரணம் அடைந்த ராஜகுமாரனை, அவனைப் பற்றிச்சோகிக்கிற அவனது பந்துக்களுக்குக் காட்டி இங்ஙனம் மொழிந்தார்.

நாரதர் சொல்லுகிறார்:—"ஓ ஜீவாத்மனே! உனக்கு க்ஷேமம் உண்டாகுக சரீரத்தில் புகுந்திருக்கிற உனக்கு இச்சரீரத்தைப் பற்றி ஏற்பட்ட தாய் தந்தை நண்பர் பந்துக்கள் அனைவரும் உன்னைப்பற்றி வருந்துகிறார்கள்; காண்பாயாக. மிகுந்த வாழ்நாளும் நீ இச்சரீரத்தில்

புகுந்து நண்பர்களால் சூழப்பட்டு ராஜஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்து உன் தந்தை கொடுத்த போகங்களை அனுபவிப்பாயாக.

ஜீவன் சொல்லுகிறான்:—நான் என் கர்மங்களுக்குரியபடி தேவர் திர்யக்கு மனுஷ்யர் முதலிய பல யோனிகளில் மாறிமாறிப் பிறந்து சுழன்று கொண்டிருக்கிறேன். அவற்றுள் எந்த ஜன்மத்தில் இவர்கள் எனக்குத் தந்தையும் தாயுமாகவேண்டும்? ஜீவாத்மாக்கள் அனைவரும் பற்பல ஜன்மங்களைப் பெறுகின்றார்களாகையால் அவற்றில் ஒருவர்க்கொருவர் பந்துக்களும் ஜ்ஞாதிகளும் சத்ருக்களும் மத்யஸ்தரும் நண்பர்களும் உதாஸீனர்களும் த்வேஷிகளுமாகின்றார்கள். பொன் வெள்ளி முதலியவற்றால் செய்யப்பட்ட வளை மோதிரம் முதலிய வஸ்துக்கள் மனுஷ்யர்களிடத்தில் மாறிமாறி வருவதுபோல, ஜீவாத்மாக்கள் தேவமனுஷ்யாதி சரீரங்களில் மாறிமாறித் திரிகின்றார்கள். பசுமுதலிய வஸ்துக்களை ஒருவன் விலைக்கு வாங்கினானாயின், அதை அவனிடத்திலிருக்கும் வரையில் இன்னானுடையதென்று சொல்லுகிறோம் அவனிடத்தினின்று அதை மற்றொருவன் விலைக்கு வாங்கிவிட்டால் அதற்கு அவனுடைய ஸம்பந்தம் மாறி மற்றொருவனுடைய ஸம்பந்தம் உண்டாகின்றது. எந்த வஸ்துவோடு எவனுக்கு எது வரையில் க்ரயாதி ஸம்பந்தம் உள்ளதோ அது வரையிலுமே அதை அவனுடையதென்று உலகத்தில் வழங்கிவருகிறார்கள். அதுவும் ஜீவித்துக் கொண்டிருக்கும் பொழுதே. அப்பசு முதலியவை மரணம் அடையுமாயின் அவற்றிற்கு எவரோடும் ஸம்பந்தமில்லை. ஜீவன் இயற்கையில் தேஹாத்மாபிமான மற்றவன்; நித்யன் அவன் கர்மத்தினால் தேவமனுஷ்யாதி தேஹங்களில் ப்ரவேசித்து அவற்றை

எதுவரையில் விடாதிருக்கிருனே அது வரையிலுமே அவனுக்கு அத்தேஹங்களோடு ஸம்பந்தமும் அத்தேஹங்களைத் தொடர்ந்த தந்தை முதலியவர்களோடு ஸம்பந்தமும் உள்ளது. அத்தேஹங்களை விடுவானுயின், அவற்ருேடு ஸம்பந்தமே இல்லாதிருக்க அவற்றைத்தொடர்ந்த மற்றவரொடு ஸம்பந்தம் எங்ஙனம் உண்டாகப்போகிறது? இந்த ஜீவன் ஆதியந்தமற்றவன்; அழிவில்லாதவன்; மிகவும் ஸூக்ஷ்மன்; ஜ்ஞானத்தையே முக்யமான ஆதாரமாகவுடையவன்; புத்தி இந்த்ரியம் மனம் ப்ராணன் முதலிய அனைத்திற்கும் ஆதாரமாயிருப்பவன்; ஸ்வயம்ப்ரகாசன். இத்தகைய ஜீவாத்மாக்களைப் பரமபுருஷன் தன் மாயையின் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களால் தேவமனுஷ்யாதியான இந்த ப்ரபஞ்ச ரூபமாகப் படைக்கிருன். இப்பரமபுருஷனுக்கு மிகவும் அன்பிற்கிடமானவன் எவனும் கிடையாது; ப்ரீதிக்கிடமாகாதவனும் கிடையாது; இவனுக்குத் தன்னுடையவனென்றும் பிறனென்றும் பேதம் கிடையாது. எல்லோரையும் இவன் ஸமமாகப் பார்க்குந்தன்மையன். புண்ய பாபங்களைச் செய்கின்ற ஜீவாத்மாக்களுடைய மனோவ்ருத்திகளை யெல்லாம் தானொருவனே ஸாக்ஷாத்கரிக்கிருன். ஆகையால் அவர்களுடைய புண்யபாபங்களுக்குத் தகுந்தபடி மேன்மையும் தாழ்மையுமான பலவகைச் சரீரங்களையும் ஸுகதுக்கங்களையும் அவரவர்க்குக் கொடுக்கின்றுனன்றிப் பக்ஷபாதத்தினாலன்று. பரமபுருஷன் புண்யபாபங்களைத் தன் மேல் ஏற்றுக்கொள்கிறதில்லை. அவற்றின் பலங்களான ஸுகதுக்கங்களையும் ஏற்றுக்கொள்கிறதில்லை. ஜீவாத்மாக்களுக்கு அந்தர்யாமியாயினும் அவன் உதாஸீனன் போலிருக்கிருன். “ஜீவனுக்கும் புண்யபாபங்களைச்

செய்யுந்தன்மை இயற்கையில் கிடையாது. அவன் செயலற்றவன். தேஹத்திற்கே அத்தன்மை உள்ளது. அத்தேஹத்தை நியமிக்கையே ஜீவனுக்கு உள்ளது. அந்த ஜீவனை ஈஸ்வரன் நியமித்துக் கொண்டிருக்கிறுன். ஆகையால் ஜீவாத்ம பரமாத்மாக்களிருவர்க்கும் புண்ய பாபங்களில் நேரே முயற்சி கிடையாது. அப்படியிருக்க ஜீவன் மாத்ரம் அப்புண்யபாபங்களின் பலனை அனுபவிப்பதும் ஈஸ்வரன் அதை அனுபவியாததும் எங்ஙனம் பொருந்தும்?" என்றால், ஈஸ்வரன் ஜீவனையும் தேஹாதிகளையும் நியமித்துக்கொண்டு ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணமான தன் ஸ்வரூபத்தையும் தனக்கு உட்பட்ட ஜீவனுடைய ஸ்வரூபத்தையும் ப்ரக்ருதி ஸ்வரூபத்தையும் உள்ளபடி அறிகிறுன். ஜீவனோவென்றால் கர்மத்தினால் தன் ஸ்வபாவம் மறையப்பெற்றுத் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்து அதன் தன்மையைத் தன்னிடத்தில் ஏற்றுக்கொள்கிறுன். ஆகையால் அவன் புண்ய பாபங்களின் பலனை அனுபவிக்கிறுன். ஈஸ்வரனுக்கு அத்தன்மை இல்லாமையால் அவன் அதனால் தீண்டப்படுகிறதில்லை.

ஸ்ரீசுகர் சொல்லுகிறுர்:—அந்த ஜீவன் இங்ஙனம் மொழிந்து அச்சரீரத்தினின்று புறப்பட்டுப் போனுன். அப்பால் அங்குள்ள அவனுடைய பந்துக்கள் அனைவரும் வியப்புற்றுத் தமக்கு அவனிடத்திலுள்ள ஸ்நேஹமாகிற சங்கிலியை அறுத்துக்கொண்டு சோகத்தைத் துறந்தார்கள். பிறகு பந்துக்கள் அப்புதல்வனுடைய தேஹத்தைக் கொண்டுபோய்ச் சிதையில் இட்டு அக்னி ஸமஸ்காரம் செய்து மற்றும் செய்யவேண்டிய கடன்களை யெல்லாம் முடித்துத் துறக்க முடியாததும் சோகம் மோஹம் பயம் பீடை இவற்றைக் கொடுப்பது

மாகிய ஸ்நேஹத்தைத் துறந்தார்கள். மஹாராஜனே! விஷங்கொடுத்து அப்பாலனைக் கொன்றவர்கள் அனைவரும் பாலனைக் கொன்ற பாபத்தினால் ஒளி மழுங்கப் பெற்று அங்கிரஸமுனிவர் சொன்ன வார்த்தையை நினைத்து வெட்கித்து அப்பாபத்தைப் போக்கும்பொருட்டு ப்ராஹ்மணர்களால் நிரூபிக்கப்பட்ட வ்ரதத்தை யமுனைக் கரையில் அனுஷ்டித்தார்கள். அப்பால் அச்சித்ரகேது மன்னவன் அங்கிரஸமுனிவருடைய சொற்களாலும் ஜீவனைக்கொண்டு சொல்வித்த நாரதருடைய சொற்களாலும் விவேகம் உண்டாகப்பெற்றுக் குளத்தின் சேற்றினின்று யானை கரையேறுவதுபோல, இல்லறவாழ்க்கையாகிற பாழ்ங்கிணற்றினின்று கரையேறினான். அவன் யமுனையில் ஸ்னானம் செய்து அங்கதியின் பரிசுத்தமான ஜலத்தில் தர்ப்பணாதிகளைச் செய்து பரமாத்மஸ்வரூபத்தை ஆராய்ந்தறிவதற்காக இந்த்ரியங்களை யெல்லாம் அடக்கி மௌன வ்ரதத்தையும் ஏற்றுக்கொண்டு ப்ரஹ்மாவின் புதல்வராகிய ஸ்ரீநாரத முனிவரைத் தெண்டனிட்டான். குருவைப் பணியவேண்டும் விதிப்படி பணித்து குருபக்தியும் சொன்னதைக் கேட்டுத் தரிக்கும்படியான மனத்தூய்மையும் அமைந்திருக்கிற அம்மன்னவனைக் கண்டு நாரதமுனிவர் ஸந்தோஷம் அடைந்து அவனுக்கு ரஹஸ்யமான இம்மந்த்ர வித்யையை உபதேசித்தார்.

ஸ்ரீநாரதர் சொல்லுகிறார்:— பகவானே! வாஸுதேவன் ப்ரத்யும்னன் அநிருத்தன் ஸங்கர்ஷணன் என்று நான்கு வ்யூஹஸ்வரூபியான உனக்கு நமஸ்காரம். இப்படிப்பட்ட உன்னை த்யானிப்போமாக. நீ ஜ்ஞானானந்த ஸ்வரூபன்; அப்படிப்பட்ட ஸ்வரூபத்தை அனுபவிக்கையால் என்றும் ஸந்தோஷ முற்றிருப்பவன்; ராகம் முத

லிய தோஷங்களற்றவன். தேவன் மனுஷ்யன் முதலிய ஜாதியும் சிறுமை பெருமை முதலிய பேதங்களும் தீண்டப் பெறாதவன். ஆநந்தஸ்வரூபனான தன்னைத் தான் அநுபவிக்கையால் பசி தாஹம் முதலிய ஊர்மிகள் தொலையப் பெற்றவன். இத்தகைய உனக்கு நமஸ்காரம். இந்த்ரியங்களுக்கும் அவற்றில் அபிமானிதேவதைகளுக்கும் நீ நியாமகன். ஸ்வரூபத்தினாலும் குணங்களாலும் அளவற்றவன். உன் சக்திகள் ஆச்சர்யமானவை. மற்றும் எல்லையில்லாதவை. உனக்கு நமஸ்காரம். மனமும் வாக்கும் உன் குணத்தை அளவிடப் புகுந்து முடியாமல் திரும்பிவிட்டன. நீ ஜ்ஞானத்தையே வடிவாகவுடையவன். இணை எதிரில்லாதவன். கர்மத்தினால் வரும் நாமரூபங்களற்றவன். சேதன அசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணமானவன். இத்தகைய பரமபுருஷன் நம்மைப் பாதுகாப்பானாக. இந்த ப்ரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணமான பரப்ரஹ்மம் நீயே. மண்ணால் இயற்றப்பட்ட குடம் முதலியவற்றில் மண் ஜாதி விட்டுப் பிரியாதிருப்பதுபோல் இந்த ப்ரபஞ்சமெல்லாம் உன்னிடத்தில் பிரியாதிருக்கின்றது. உனக்கு நமஸ்காரம். நீ இந்த ப்ரபஞ்சத்தில் உள்ளும் புறமும் வ்யாபித்திருப்பவன். அத்தகைய அந்த ப்ரபஞ்சத்தைச்சரீரமாகவுடையவன். உன்னைக்கர்மேந்த்ரியங்களும் ப்ராணன்களும் தொடவல்லவையல்ல. மனமும் புத்தியும் ஜ்ஞானேந்த்ரியங்களும் உன்னை அறிய வல்லவையல்ல. அத்தகைய உன்னை வணங்கினேன். நெருப்பில் காய்ச்சின இரும்பு மற்றொன்றைத் தஹிப்பதுபோல் தேஹம் இந்த்ரியங்கள் ப்ராணன்கள் மனம் புத்தி இவையெல்லாம் உன்னுடைய ஜ்ஞானம் க்ரியை முதலிய சக்திலேசத்தினால் தொடரப்பெற்றுத் தத்தமது செயல்களில் முயல்

கின்றன. இல்லாத பக்ஷத்தில் அவற்றிற்கு அச்சக்தியே உண்டாகாது. ஜீவனுக்கும் உன்னுடைய ஸங்கல்பத்தினுல்தான் ஜ்ஞானவிகாஸம் உண்டாகின்றது. நீ ஷாட்குண்ய பூர்ணன். புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட மஹாபுருஷன் நீயே. நீ மஹானுபாவன். நித்யவிபூதியென்றும் லீலாவிபூதியென்றும் மஹத்தான இரண்டு விபூதிகளுடையவன். மேன்மையுடைய பாகவதர்கள் அனைவரும் தாமரை மலர்போன்ற தமது கரங்களால் உன் பாதாரவிந்தங்களைப் பிடிக்கின்ருர்கள். பரமனே! உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிருர்:—மன்னவனே! நாரதமுனிவர் பக்தியுடன் தன்னைச் சரணம் அடைந்த சித்ரகேதுவுக்கு இங்ஙனம் இம்மந்த்ரவித்யையை உபதேசித்து அங்கிரஸமுனிவருடன் ஸத்யலோகம் போய்ச் சேர்ந்தார். சித்ரகேதுமன்னவன், நாரதர் உபதேசித்த வித்யையை விதிப்படி மனவூக்கத்துடன் ஜலத்தையே ஆஹாரமாகக் கொண்டு ஏழுநாள் வரையில் ஜபித்தான். அம்மன்னவன் ஏழுநாள் கழிந்த பின்பு அம்மந்த்ர வித்யையின் மஹிமையால் வித்யாதரர்களுக்கு ப்ரபுக்களாயிருக்குந் தன்மையைப் பெற்ருன். பிறகு சில நாட்களில் அவித்யையின் ப்ரபாவத்தினுல் நினைத்தபடி செல்லுந்திறமை வளரப்பெற்றுப் பாதாளத்தின் அடியிலிருக்கிற தேவதேவனுகிய ஸங்கர்ஷண பகவானுடைய பாதாரவிந்தங்களின் அருகுக்குச் சென்ருன். அங்குத் தாமரைத் தண்டின் நூல்போல் வெளுத்துக் கறுத்த வஸ்த்ரம் தரித்துக் கிரீடம் தோள்வளை அரைநாண் கைவளை இவை அணிந்து தெளிந்த முகமும் சிவந்தகண்களும் அமைந்து ஸித்தேஸ்வரர்களின் கூட்டங்களால் சூழப்பட்டிருக்கும் ப்ரபுவாகிய ஸங்கர்ஷண தேவனை அம்மன்னவன் கண்டான். அவன்

அவரைக் கண்ட மாத்ரத்தில் பாபங்களெல்லாம் தொலைந்து தூயமனத்தனாகி மிகுந்த பக்தியும் வளர்ந்து கண்களில் ஆநந்த பாஷ்பமும் பெருகி உடம்பில் மயிர்க்கூச்சலும் உண்டாகப் பெற்றுப் புராண புருஷனாகிய அவரை அடிக்கடி ப்ரதக்ஷிணம்செய்து நமஸ்கரித்தான். அப்பால் அச்சித்ரகேது புண்யச்லோகனான அந்த ஸங்கர்ஷண பகவானுடைய பாதபீடத்தை ஆநந்த நீர்த்துளிகளால் அடிக்கடி நனைத்து ஸந்தோஷத்தின் மிகுதியால் எழுத்துக்களை உச்சரிக்க முடியாமல் தடுக்கப்பெற்று அந்தப் பகவானை ஸ்தோத்ரம் பண்ணவேண்டுமென்று விரும்பியும் நெடுநேரம் வரையில் முடியாமலேயிருந்தான். பிறகு அம்மன்னவன் அம்ருதம் போன்ற வார்த்தைகள் நேரப் பெற்று இந்த்ரியங்களை யெல்லாம் வேறு விஷயங்களில் போகவொட்டாமல் தடுத்துப் பஞ்சராத்ர சாஸ்த்ரங்களால் நிரூபிக்கப்பட்ட திவ்யமங்கள விக்ரஹத்தையுடைய ஜகத்குருவான அப்பகவானை இங்ஙனம் துதித்தான்.

சித்ரகேது சொல்லுகிறான்:— பகவானே! நீ பிறரால் வெல்ல முடியாதவனாயினும், மனத்தை வென்று ஜகத்தெல்லாம் பரப்ரஹ்மஸ்வரூபமேயென்று பாவிக்குந்தன்மையுடைய ஸாதுக்களால் வெல்லப்பட்டிருப்பவன். வேறு ப்ரயோஜனங்களை எதிர்பாராமல் உன்னைப் பணியும் பெரியோர்களுக்கு நீ உன்னையும் கொடுக்குந் தன்மையன். அந்த ஸாதுக்களும் உன்னுடைய வாத்ஸல்ய குணத்திற்குத் தோற்று உனக்கு வசப்பட்டிருக்கின்றனர். ஷாட்குண்ய பூர்ணனே! ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாராதிகள் உன்னுடைய ஐச்வர்யம். உனக்கு மேற்பட்டவன் எவனுமே இல்லை. ப்ரஹ்மதேவன் முதலியவர் உன்னுடைய அம்சங்களே. ஆயினும் அவர்கள் அஜ்ஞானத்தினால் தாம் ஸ்வதந்த்ர

ப்ரபுக்களென்றுவிஞாகவேகர்வப்படுகிருர்களன்றி அஃது உண்மையன்று. மிகவும் ஸூக்ஷ்மமான வஸ்துவுக்கும் மிகவும் பெரிய வஸ்துவுக்கும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் ஆகிய மூன்று தசைகளிலும் நீ அந்தர்யாமியாயிருக்கின்றனே. உனக்கு ஆதி நடு அந்தம் என்னும் இவை மூன்றும் கிடையாது. கார்யவஸ்துக்களின் ஆதியிலும் அந்தத்திலும் எது நிலே நின்றிருக்கின்றதோ அதைச் சேர்ந்தது தான் அவ்வஸ்துக்களின் நடு நிலேமையும் நீ இந்த ப்ரபஞ்சத்தின் ஆதியிலும் அந்தத்திலும் நிலே நின்றிருப்பவனுகையால் அதன் நடு நிலேமையும் உன்னேச் சேர்ந்ததேயன்றி அந்த ப்ரபஞ்சத்தின் இடையிலுண்டான ப்ரஹ்மதேவன் முதலியவர்களேச் சேர்ந்ததன்று. இதோ புலப்படுகின்ற அண்டகோசம் ஒன்றைவிட ஒன்று பத்து மடங்கதிகமான ஏழு ஆவரணங்களால் சூழப்பட்டிருக்கின்றது. இதைப் போன்ற அண்டகோசங்கள் கோடி கோடியாக இதனுடன் இருக்கின்றன. இவை யெல்லாம் உன்னிடத்தில் அணுபோல் சுழல்கின்றன. ஆகையால் நீ அனந்தனென்று பேர்பெற்றனே. ஈசனே! சப்தாதி விஷயங்களில் விருப்பமுற்றுப் பசுக்களேப்போன்ற சில மூடர்கள் உனது விபூதிகளான இந்த்ரன் முதலிய தேவதைகளே உபாஸிக்கிருர்கள்; அனேவர்க்கும் மேலான உன்னே உபாஸிக்கிறதில்லே. அவர்கள் அவ்விந்த்ராதி தேவதைகளிடத்தினின்று பெறுகிற ஸ்வர்க்கம் முதலிய புருஷார்த்தங்களெல்லாம் அவ்விந்த்ராதி தேவதைகளோடுகூடவே அழிந்து போகின்றன. ராஜகுலத்தில் ஊழியம் செய்பவர்களின் பெருமையெல்லாம் அந்த ராஜகுலம் அழியும்போது அழிந்துபோமல்லவா? பரமனே! உன்னேயே ப்ரயோஜனமாகக் கொண்டு உன்னிடத்தில் செய்யும் உபாஸனங்களெல்லாம் ஜன்ம ஜரா மர

ஞாதி துக்கங்களுக்கிடமான ஸம்ஸாரத்தை விளைக்கமாட்டா. வறுத்த விதைகள் மீளவும் முளைக்கமாட்டாவல்லவா? ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற ப்ரக்ருதியின் குணங்களால் விளையும் விகாரங்கள் உன்னைத் தீண்டவல்லவையன்று. நீ அபரிச்சின்ன ஜ்ஞானஸ்வரூபன். மற்ற தேவதைகள் அத்தன்மையரல்லர். ஆகையால் அவர்களைப் பற்றின உபாஸனங்கள் அழிந்துபோகின்றன. ப்ரஹ்மதேவன் முதல் பூச்சி புழு வரையிலுமுள்ள ஸமஸ்த ஜீவாத்மாக்களும் ப்ரக்ருதியின் குணங்களால் உண்டாகும் ஸுகதுக்கங்களை அனுபவிப்பவர்களே. ஆகையால் மனிதர்கள் புத்தியின்றித் தம்மைப்போல் கர்ம வஶ்யர்களான தேவதைகளைப் பணிவார்களாயின் எங்ஙனம் அனிஷ்டங்கள் கழியப்பெற்று இஷ்டங்களைப் பெறுவார்கள் ? பரமனே ! நீ எல்லாவற்றையும் உனக்கு உட்படுத்திக்கொண்டு அவற்றைக்காட்டிலும் மேற்பட்டிருக்கின்றனையாகையால் அஜிதனென்று பேர்பெற்றனை. பஞ்சராத்ரம் கீதை முதலியவற்றில் நீ மொழிந்த உனது ஆராதன ரூபமான தர்மமும் உன்னைப்போலவே மேன்மையுடையது. எவ்வித தோஷத்திற்கும் இடமில்லாதது. வேறு ப்ரயோஜனங்களை விரும்பாமல் பரமாத்மாவான உன் குணங்களை அனுபவிக்குந் தன்மையுடைய பெரியோர்கள் நீ மொழிந்த தர்மத்தை மோக்ஷத்தின் பொருட்டு அனுஷ்டிக்கிறார்கள். ப்ராணிகளுக்கு வேறு விஷயங்களில் நீ நான் என்னுடையது உன்னுடையதென்று விளைகிற விஷமபுத்தி நீ மொழிந்த தர்மத்தில் உண்டாகிறதில்லை. அஹங்கார மமகாரரூபமான விஷம புத்தியுடன் தேவதாந்தரங்களைக் குறித்த ஆராதன ரூபமான மற்ற தர்மங்கள் ராக த்வேஷாதிகளை உட்கொண்டிருக்குமாகையால் அபரிசுத்தமானவை; சத்ருமாரணாதி

ரூபமான பலன்களை உட்கொண்டிருக்குமாகையால் அதர்மங்கள் தலை யெடுத்திருக்கும். தேவதாந் தரங்களை ஆராதிக்கையாகிற தர்மம் மிகவும் தேஹஸ்ரமத்தை விளைக்கின்றமையாலும் கடைசியில் ஸம்ஸாரமாகிற பெரிய அனர்த்தத்தையே வளர்க்கின்றமையாலும் தன்னை அனுஷ்டிக்கிறவனுக்கு த்ரோஹம் செய்கிறதென்பதில் ஸந்தேஹமில்லை. சத்ருஹிம்ஸை முதலியவற்றை விரும்பிச் செய்கிறுகையால் பிறனுக்கும் த்ரோஹம் செய்கின்றது. அத்தகைய தர்மத்தினல் தனக்காவது பிறனுக்காவது என்ன க்ஷேமம் உண்டாகும்? சத்ரு ஹிம்ஸையை உத்தேசித்துச் செய்யுந்தர்மத்தினல் பிறனுக்கு மரணமே நேருமாகையால் அவனுக்கு க்ஷேமம் இல்லையென்பது நிச்சயம். அங்ஙனமே அதை அனுஷ்டிக்கிறவனுக்கும் க்ஷேமம் உண்டாகாது. ஒருகால் தற்காலத்தில் தனக்கு ஒருவிதமான க்ஷேமம் உண்டாயினும், அது எவ்வளவு புருஷார்த்தம்? அத்யல்பமல்லவா? மற்றும் இவன் தனக்குத் தானே த்ரோஹம் செய்கிறுகையால் பிறனுக்கு த்ரோஹம் செய்ய அஞ்சமாட்டானென்று நீயும் அவன்மேல் கோபித்துக்கொள்கின்றனை. ஒருகால் உனக்குக் கோபம் உண்டாகாமற் போயினும் பிறனைப் பீடிக்கிறுகையால் அதர்மம் உண்டாகாமற்போகாது. நாதனே! ஸமஸ்த கர்மங்களையும் என்னிடத்தில் அர்ப்பணம் செய்து மனவூக்கத்துடன் என்னை உபாஸிக்கிறவர்களை நான் சீக்ரத்தில் ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தினின்று கரையேற்றுகிறேனென்ற உன் ஸங்கல்பம் ஒருகாலும் பொய்யாகாது. நீ அந்த ஸங்கல்பத்தினல் உன்னுடைய ஆராதனரூபமான தர்மத்தைப் பஞ்சராத்ரம் முதலிய சாஸ்த்ரங்களின் மூலமாய் மொழிந்தனை. பெரியோர்கள் உன் ஸங்கல்பத்தை அறிந்து ஜங்கம ஸ்தாவரரூபமான

ஸமஸ்த ப்ராணி ஸமூஹங்களையும் உன்னுடைய உருவங்களாகவும் உன்னை அவற்றிற்கு அந்தராத்மாவாகவும் அவற்றையெல்லாம் நீயாகவும் பாவித்து நீ மொழிந்த தர்மத்தை அனுஷ்டித்துக்கொண்டு மோக்ஷத்திற்காக உன்னை உபாஸிக்கிறார்கள். பகவானே! ப்ராணிகளுக்கு உன்னுடைய தர்சனம் நேருமாயின், அவர்கள் ஸமஸ்த பாபங்களும் க்ஷீணிக்கப் பெறுவார்கள். இது சேராததன்று. யுக்தமே. ஏனென்றால், சண்டாள சண்டாளனாயினும் உன்னுடைய நாமத்தை ஒருகால் கேட்பானாயின் ஸம்ஸார பந்தத்தினின்று விடுபடுகிறான். இனி நேரே உன்னுடைய காட்சியின் மஹிமையைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? பகவானே! இப்பொழுது நான் உன்னுடைய தர்சனத்தினால் மனமலங்களெல்லாம் கழியப்பெற்றேன். உனது அன்பரும் தேவர்ஷியுமாகிய நாரதர் எனக்கு உபதேசித்த மந்த்ரத்தின் மஹிமையால் நான் உன்னைக் காணப்பெற்றேன். ஆசார்யானுக்ரஹம் இல்லையாயின் எனக்கு இது எப்படி நேரும்? ஓ அனந்தனே! இவ்வுலகத்தில் ஜனங்கள் செய்வதெல்லாம் அவர்களுக்கு அந்தராத்மாவாகிய உனக்கு நன்றாகத் தெரியும். ஆகையால் என்னைப் போன்றவர் உனக்குச் சொல்லவேண்டியது என்னிருக்கின்றது? ஒளிப்பெருக்கனாகிய ஸூர்யனுக்கு மின்மினிப் பூச்சிகளால் ஆகவேண்டியது உண்டோ? நீ தேசகால வஸ்து பரிச்சேத மற்றவன். இவ்வுலகத்திலுள்ள ஜனங்கள் அனைவரும் உன்னால் கொடுக்கப்பட்ட ஜ்ஞான சக்திகளையுடையவர்கள். அத்தகையநான் உன்குணங்களை எவ்வளவு துதிக்கவல்லனோ, அது உனக்கே தெரியும். சொல்லவேண்டியதில்லை. நீ ஷாட்குண்ய பூர்ணன்; தோஷங்கள் எவையும் தீண்டப்பெறாதவன்; ஸமஸ்தமான ஜகத்தினுடை.. ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களையும் நடத்

துகின்றனே. குத்ஸிதயோகிகள் உனக்குட்படாத ஸ்வதந்த்ர வஸ்துக்கள் உண்டென்னும் பேதபுத்தியுடையவர்களாகையால்உன் ஸ்வரூப ஸ்வபாவங்களை அறியமாட்டார்கள். நீ மிகவும் பரிசுத்த ஸ்வரூபன். இத்தகைய உனக்கு நமஸ்காரம். நீ 'நான் பலவாய் விரியவேண்டும்' என்று ஸங்கல்பித்துக்கொண்டு விரிகையில், ப்ரஹ்மதேவன் முதலிய மற்ற ஸ்ருஷ்டி கர்த்தாக்கள் அனைவரும் உன்னைத் தொடர்ந்து ஸத்தைப்பெற்று ஸ்ருஷ்டிக்கிறார்கள். எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்கின்ற உன்னைத் தொடர்ந்து சித்தவ்ருத்திகளெல்லாம் விஷயங்களைத் தொடுகின்றன. இப்பூமண்டலமெல்லாம் உன் தலையில் கடுகுபோல் இருக்கின்றது. ஆயிரந் தலைகளுடையவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய அத்தகைய உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—குருவம்சாலங்காரனே! இங்ஙனம் துதி செய்யப் பெற்ற ஸங்கர்ஷண பகவான் மனக்களிப்புற்று வித்யாதரர்களுக்குப்ரபுவாகிய அச்சித்ரகேதுவைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான். 'நாரத முனிவரும் அங்கிரமுனிவரும் உனக்கு ப்ரக்ருதி புருஷ ஈச்வரர்களின் ஸ்வரூபத்தை விவரித்து மொழிந்தார்களே, அது என்னுடைய கட்டளையே. அந்தராத்மாவாகிய என்னால் தூண்டப்பட்டே அவர்கள் உனக்கு அங்ஙனம் உபதேசித்தார்கள். மன்னவனே! அந்த நாரதர் உபதேசித்த வித்யையாலும் என்னுடைய தர்சனத்தினாலும் நீ ஸித்திபெற்றனை. உலகத்திலுள்ள ஸமஸ்த பூதங்களுக்கும் நான் அந்தராத்மாவா யிருந்து நியமித்துக்கொண்டு அவற்றைச் சரீரமாகக் கொண்டிருக்கிறேனாகையால் அவையெல்லாம் நானே. தேவ மனுஷ்யாதிபூதங்களையெல்லாம் நானே என்னிடத்தினின்று படைக்கிறேன். உலகத்திலுள்ள சப்தங்களும்அவற்றால் அறியப்

படும் பொருள்களுமாகிய இரண்டும் என்னுடைய ஶாஶ்வதமான சரீரங்கள். தேவ மனுஷ்யாதி சரீரங்களாய் விரிந்திருக்கிற ப்ரக்ருதியின் பரிணாமமான இந்த ப்ரபஞ்சத்தில் அந்தந்த சரீரங்களில் புகுந்து அவற்றைத் தரித்துக்கொண்டிருக்கிற ஜீவாத்மாக்கள் ஜீவாத்மாக்களால் தரிக்கப்பட்டிருக்கிற ப்ரபஞ்சம் ஆகிய இரண்டிலும் நான் உட்புகுந்து தரித்துக் கொண்டிருக்கிறேன்; அவ்விரண்டும் என்னிடத்தில் நிலைநின்றிருக்கின்றன. ஸ்வப்னம் காண்கிறவன் அந்த ஸ்வப்னாவஸ்தையில் தன்னொருவனிடத்தில் பல சரீரங்களைக் காண்கிறான். உறங்கியெழுந்த பின்பு தன்னை ஓரிடத்தில் படுத்திருக்கிற சரீரத்தில் இருப்பதாகவே நினைக்கிறான். அந்த ஸ்வப்னாவஸ்தை ஜீவனுடைய ஸ்வரூபத்தினால் ஏற்பட்டதன்று. அவனுடைய புண்ய பாபகர்மங்களுக்குத் தகுந்தபடி ஈஶ்வரன் அந்தந்த வஸ்துக்களைப் படைத்துக் காட்டுகிறான். அந்த ஸ்வப்னாவஸ்தையைப்போல ஜாக்ரதவஸ்தை முதலிய மற்ற அவஸ்தைகளும் ஜீவனுடைய கர்மத்தின்படி ஈஶ்வரனால் தூண்டப்பட்ட ப்ரக்ருதியின் பரிணாமங்களே. அசேதனமான ப்ரக்ருதிக்கு அந்த ஸ்வப்னாதி அவஸ்தைகளைக் காணுந்தன்மை இல்லாமையால் ப்ரக்ருதியின் பரிணாமமான சரீரங்களில் ஜீவன் உட்புகுந்து அவற்றைத் தரித்துக்கொண்டு அந்த அவஸ்தைகளை அனுபவிக்கிறானென்றும், ஒரு சரீரத்திலுள்ள ஆத்மாவின் அனுபவம் மற்றொரு சரீரத்திலுள்ள ஆத்மாவுக்கு இல்லையாகையால் சரீரங்கள்தோறும் தனித்தனியே ஜீவாத்மாக்கள் இருக்கிறார்களென்றும், 'விழித்துக்கொண்டவன் நான் இங்ஙனம் ஸ்வப்னங்கண்டேன்' என்று நினைக்கிறானாகையால் ஸ்வப்னங்கண்டவனும் விழித்துக்கொண்டிருக்கிறவனும் ஒருவனேயென்றும் ஒப்புக்கொள்ளவேண்டும். ஸ்வப்ன

வஸ்தையைப் போல ஜாக்ரதாதி அவஸ்தைகளும் பரமாத்மாவினுடைய மாயையால் ஏற்பட்டவைகளேயன்றி ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைப் பற்றினவைகளன்றென்று விவேகித்து அந்த அவஸ்தைகளுக்கு ஸாக்ஷியும் ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணனுமாகிய ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை இங்ஙனம் ஸூக்ஷ்ம புத்தியால் ஆராய்ந்தறியவேண்டும். ஜீவன் எவனிடத்தில் சேர்ந்து ஸுஷுப்தியையும் ஸுகத்தையும் அனுபவிக்கிறானோ, அவன் நானேயென்று என்னை உணர்வாயாக. நான் கெட்ட குணங்கள் தீண்டப்பெறாதவன். என்னையே பரப்ரஹ்மமென்று ஶ்ருதிகள் சொல்லுகின்றன. உறக்கத்தையும் விழித்தலையும் அனுபவிக்கின்ற ஜீவனுடைய ஜ்ஞானமயமான ஸ்வரூபம் ஒரு அவஸ்தையோடு ஸம்பந்தித்திருக்கும்பொழுது மற்றொரு அவஸ்தையால் விடுபட்டிருக்கும் ஜீவாத்மாவின்ஸ்வரூபம் ஒன்றே எல்லாஅவஸ்தைகளிலும் தொடர்ந்து வருகின்றது. அத்தகைய ஜீவாத்மாவைக் காட்டிலும் நான் விலக்ஷணமாயிருப்பவன். நான் எல்லா அவஸ்தைகளிலும் அந்த ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாகி அவர்களை நியமித்துக் கொண்டு தொடர்ந்திருப்பவன். ஆயினும் அந்தந்த அவஸ்தைகளைப் பற்றின ஸுகதுக்கங்கள் என்னைத் தீண்டமாட்டா. ஜீவாத்ம ஸ்வரூபத்திற்கு எல்லா அவஸ்தைகளிலும் தொடர்ந்திருக்கையும் ஜ்ஞானானந்தாதி ரூபமாயிருக்கையும் நானென்று தோற்றுகையும் இயற்கையாயிருப்பதுபோலப் பரப்ரஹ்மமாகிய எனக்குச் சரீரமாயிருக்கையும் அதற்கு இயற்கையென்று உணரவேண்டும், ஜீவன், எனக்குச் சரீரமாயிருக்கையாகிற தன் ஸ்வரூபத்தை மறந்து தன்னை ஸ்வதந்த்ரனாக நினைப்பானாயின், ஒரு தேஹத்தை விட்டபின்பு மற்றொரு தேஹம் பெறு

கையும், மரணம் அடைந்தபின்பு மீளவும் மரணம் அடைகையுமாகிற ஸம்ஸாரம் இவனுக்கு மாறுமலேயிருக்கும். இவ்வுலகத்தில் இந்த ஜீவன் சாஸ்த்ராப்யாஸத்தினுல் விளையும் ஜ்ஞானத்திற்கும் விவேகம் வைராக்யம் முதலியவற்ருல் உதவிசெய்யப்பெற்ற உபாஸன ரூப ஜ்ஞானத்திற்கும் விளை நிலமாகிய மனுஷ்ய ஜன்மத்தைப் பெற்றும் அத்தகைய ஆத்மஸ்வரூபத்தை அறியானுயின், அவன் மற்ற எந்த ஜன்மத்திலும் க்ஷேமம் பெறமாட்டான். ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறிந்த பண்டிதன், சப்தாதி விஷயங்களை விரும்பி அவற்றைப் பெறுதற்காகச் செய்யும் செயலாகிற ப்ரவ்ருத்தி தர்மத்தில் சரீராயாஸம் முதலிய வருத்தம் உண்டாவதையும் வருந்திச் செய்தாலும் தாம் விரும்பினதற்கு விபரீதமான துக்கமே விளைவதையும், சப்தாதி விஷயங்களை விரும்பாமல்[1] அனன்ய ப்ரயோஜனமாகப் பகவானை ஆராதிக்கையாகிற ப்ரவ்ருத்தி தர்மத்தில் எவ்விதத்திலும் பயத்திற் கிடமாகாத மோக்ஷம் நேருவதையும் ஆலோசித்து அந்த ப்ரவ்ருத்தி தர்மத்தினின்று மீளவேண்டும். இல்லற வாழ்க்கையிலிருக்கின்ற .ஆண் பெண்களிருவரும் ஸுகம் பெறுதற்காகவும் துக்கம் நீங்குவதற்காகவும் அவற்றிற்குரிய செயல்களைச் செய்கின்ருர்கள். ஆயினும் அச்செயல்களால் அவர்களுக்குத் துக்கமும் நீங்குகிறதில்லை. ஸுகமும் உண்டாகிறதில்லை. நினைத்ததற்கு நேர்விபரீதமாகத் தேஹஶ்ரமம் பணச்சிலவு முதலியவற்ருல் வருத்தமே உண்டாகின்றது. 'நாம் ப்வ்ரருக்தி தர்மத்தை அனுஷ்டிப்பதில் வல்லவர்' என்று அபிமானித்திருக்கும் ப்ராணிகளுக்கு இங்ஙனம் அச்செயல்களால் விபரீத பலமே உண்டாவதை ஆராய்ந்து ஜாகரம் ஸ்வப்னம்

1. வேறு ப்ரயோஜனங்களை விரும்பாமல்.

ஸுஷுப்தி என்னும் மூன்று அவஸ்தைகளைக் கடந்திருப்பதும் கேவல சப்தாதி விஷயங்களில் விருப்பமுடைய மூடர்களால் அறியமுடியாததுமான ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை அறிந்து, இந்தலோகத்திலும் பரலோகத்திலும் உள்ள பலவகையான விஷய ஸுகங்களிலும் விவேகபலத்தினுல் விருப்பத்தை அறுத்துக்கொண்டு சாஸ்த்ர ஜ்ஞானத்தினுல் உதவிசெய்யப்பெற்ற பகவதுபாஸனரூபஜ்ஞானத்தினுல் ஸந்தோஷமுற்று எனக்கு மிகவும் அன்பனுவான். பரமாத்மோபாஸனத்தில் தேர்ந்தமதியுடைய மனிதர்கள், பரமாத்வாவுக்கும் தமக்கும் உள்ள ஐக்ய ஸம்பந்தத்தை உள்ளபடி ஆராய்ந்தறிவார்களாயின், அவர்கள் ஸர்வப்ரகாரத்தாலும் அறியவேண்டிய பொருள் இவ்வளவேயன்றி இதற்குமேல் மற்றொன்றும் இல்லை. ஓ மன்னவனே! நீ மனவூக்கமுற்று ஶ்ரத்தையுடன் ஜ்ஞானவிஜ்ஞானங்களின்பெருமையை விளக்கவல்ல என்வசனத்தை நெஞ்சில் நிறுத்திக்கொண்டு ஆத்ம பரமாக்களுக்குள்ள நித்யஸம்பந்தத்தை அநுஸந்தித்து எல்லாம் பரப்ரஹ்ம ஸ்வரூபமே யென்று பாவித்துக்கொண்டிருப்பாயாயின், சீக்ரத்தில் மோக்ஷஸித்தியைப் பெறுவாய்' என்று மொழிந்தான். ஜகத்குருவும் ப்ரபஞ்சத்திற்கெல்லாம் அந்தராத்மாவுமாகிய ஸங்கர்ஷண பகவான் சித்ரகேது மன்னவனை இங்ஙனம் ஆஶ்வாஸப்படுத்தி, அவன் பார்த்துக்கொண்டிருக்கையில் அவ்விடத்திலேயே அந்தர்த்தானம் அடைந்தான். பதினாறுவது அத்யாயம் முற்றிற்று.

---

## சித்ரகேது மன்னவன்ருத்ரனைப பரிஹஸித்துப் பார்வதியின் சாபத்தினால் வ்ருத்ராஸுரனாகப் பிறத்தல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— வித்யாதரர் தன்மையைப் பெற்ற சித்ரகேது மன்னவன், அந்தஸங்கர்ஷணபகவான் எந்தத்திக்கில் மறைந்தானோ அந்தத்திக்குக்கு நமஸ்காரம் செய்து வித்யாதரர்களுடன் ஆகாயத்தில் திரிந்து கொண்டிருந்தான். அச்சித்ரகேது மன்னவன் பலமும் இந்த்ரியங்களும் இம்மியும் தடைபடாதிருக்கப்பெற்று லக்ஷம் லக்ஷவர்ஷங்கள் வரையில் முனிவர்களாலும் ஸித்தர்களாலும் துதி செய்யப்பெற்று நினைத்தபடி விளைகின்ற பலவகையான போக்ய போகோபகரண ஸித்திகளையுடைய மேருமுதலிய குலபர்வதங்களில் சாரல்களில் வித்யாதரஸ்த்ரீகளைக்கொண்டு ஸ்ரீபகவானுடைய புகழைப் பாடுவித்துக்கொண்டு மனக்களிப்புற்றிருந்தான். அச்சித்ரகேது மன்னவன் தான் நினைத்தபடி பகவானால் கொடுக்கப்பட்டதும் ஜ்வலித்துக் கொண்டிருப்பதுமாகிய விமானத்தில் ஏறிக்கொண்டு ஒருகால் ஆங்காங்கு ஸஞ்சரித்துக்கொண்டிருக்கையில் ஸித்தர்களாலும் யோகிகளாலும் சூழப்பட்டிருக்கிற ருத்ரனைக் கண்டான். அவன் மடியில் பார்வதியை உட்காரவைத்துப் புஜத்தினால் அணைத்துக்கொண்டு முனிவர்களின் ஸபையில் இருந்தான். அம்மன்னவன் அந்த ருத்ரனைக் கண்டு பார்வதி கேட்டுக் கொண்டிருக்கையில், அருகாமையில் உரக்கச் சிரித்து இங்ஙனம் மொழிந்தான். 'இந்த ருத்ரன் உலகங்களுக்கெல்லாம் நேரே ஹிதோபதேசம் செய்பவன். ப்ராணிகளுக்கு தர்மத்தை உரைப்பவன்; அவர்களில் ப்ரதானன். இத்தகைய இவன் ஸபையில் பார்யையுடன் இணைந்திருக்கிறான். மற்றும், இவன் ஜடைகளைத்

தரித்திருக்கிறான். கொடுந்தவமுடையவன்; ப்ரஹ்மஜ்ஞானோபதேசம் செய்பவன், ஸபைக்கு ப்ரபு. இத்தகையனாயினும் ஒன்றுமறியாத மூடன்போல், வெட்கமின்றி மடியில் மடந்தையை உட்காரவைத்துக் கொண்டிருக்கிறான். மற்றும், உலகத்திலுள்ள ஒன்றுமறியாத மூடர்களும் ஏகாந்தத்திலேயே மடந்தையர்களை மடியில் உட்காரவைத்துக் கொள்கிறார்கள். இவன் பெரிய வ்ரதங்களை அனுஷ்டிப்பவனாயினும், ஸபையில் மடந்தையை மடியில் உட்கார வைத்துக்கொண்டிருக்கிறான். இது பெரிய விபரீதமாயிருக்கின்றதே' என்றான். பிறகு பகவானாகிய ருத்ரன் சித்ரகேதுவின் வசனத்தைக் கேட்டும் ஆழ்ந்த மதியுடையவனாகையால் சிரித்து ஒன்றும் பேசாமல் வெறுமனே யிருந்தான். அவனைத் தொடர்ந்த ஸபிகர்களும் பேசாமலே யிருந்தார்கள். சித்ரகேது மன்னவன் அந்த ருத்ரனுடைய மஹிமையை அறியாமல் ப்ரஹ்மஸ்வரூபனாகிய அச்சிவபெருமானைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருக்கையில், [1] அம்பிகாதேவி, ஜிதேந்த்ரியனென்று தன்னை அபிமானித்துக் கொண்டிருப்பவனும் துஷ்டஸ்வபாவனுமாகிய அச்சிரகேதுவின் மேல் கோபமுற்று இங்ஙனம் மொழிந்தாள். 'இவன் இப்பொழுது உலகத்தில் விவேகமற்று வெட்கங்கெட்ட எங்களைப்போன்ற துஷ்டர்களுக்கு நன்மை தீமைகளை அறிவிக்க ஏற்பட்டிருக்கிறானே என்ன? கட்டளையைக் கடந்தால் தண்டிப்பான் போலும் தண்டிக்க வல்லவனாயிருக்கிறான். ப்ரஹ்மதேவனுக்கும் அவனது புதல்வர்களான ப்ருகு நாரதர் முதலியவர்களுக்கும் ஸனத்குமாரர் கபிலமுனி இவர்களுக்கும் தர்மம் தெரியாது போலும். தெரியுமாயின், தர்ம மர்யாதையைக் கடக்கின்ற இந்த ருத்ரனைத் தடுக்கமாட்டார்களா?

1. பார்வதி.

இச்சிவபெருமான் அந்த ப்ரஹ்மாதிகளுக்கும் த்யானிக்கத் தகுந்த பாதாரவிந்தங்களை யுடையவன். உலகங்களுக்கு ஹிதோபதேசம் செய்பவன்; மங்களங்களுக்கும் மங்களன். இத்தகைய சிவபெருமானையும் ஞானிகளான ரிஷிகளையும் அவமதித்து அவர்களைச் சிக்ஷிக்கத் தொடங்குகிறுன. ஆகையால் துர்ப்புத்தியாகிய இந்த க்ஷத்ரியாதமன் தண்டிக்கத்தகுந்தவனே. ஸாதுக்களால் பணியப்பெற்ற பகவானுடைய பாதமூலத்தை அணுகுவதற்கு இவன் உரியனல்லன். இவன் தன்னைத் தானே மேன்மைக்கிடமாகஅபிமானித்துக் கொண்டிருப்பவன். செருக்குற்றவன்' என்று மொழிந்து அவனைக் குறித்து 'துஷ்டபுத்தியுடையவனே! நீ பகவானைப் பணிதற்கு உரியவனல்லை. பிள்ளாய்! மீளவும் இவ்வாறு பெரியோர்களிடத்தில் அபராதப்படாதிருக்கும்படி பாபிஷ்டமான அஸுரஜன்மத்தைப் பெறுவாயாக' என்று சபித்தாள். பாரதனே! இங்ஙனம் சபிக்கப்பெற்ற அச்சித்ரகேது மன்னவன் விமானத்தினின்று இறங்கித் தலை வணங்கிப் பார்வதியை அருள்புரியும்படி வேண்டினுன். 'அம்பிகே! நீ கொடுத்த சாபத்தை நான் கை குவித்துப் பெற்றுக் கொள்கிறேன். நீ கொடுத்த சாபம் எனக்கு அனுக்ரஹமேயன்றி நிக்ரஹமன்று. தேவதைகள் சொல்லுவதெல்லாம் ப்ரீதியையே முன்னிட்டுக் கொண்டிருக்கும். அது அவனுடைய ஜன்மாந்தர கர்மத்தினுல் ஏற்பட்டதேயன்றி வேறன்று.மோக்ஷத்தைத் தடுக்கின்ற ஜன்மாந்தர கர்மங்களால் இந்த ஸம்ஸாரத்தில் உழன்றுகொண்டிருக்கிற நான் உன் சாபத்தை அனுபவிக்கையால் அக் கர்மங்களெல்லாம் தீரப்பெற்றுச் சீக்ரத்தில் பகவானைப் பெறுவேனல்லவா? சக்ரம்போல் சுழல்கின்ற கர்ப்ப ஜன்ம ஜராமரண[illegible]நுபமான இந்த ஸம்ஸாரத்தில் ஜீவன் அனு

தியான புண்ய பாபரூப கர்மத்தினுல் மதிமயங்கித் தேஹ த்தையே ஆத்மாவாக அபிமானித்துத் திரிந்துகொண்டு ஜன்மாந்தர வாஸனையால் தூண்டப்பெற்று மேன்மேல் ஸுக துக்கங்களை விளைக்கும்படியான கர்மங்களைச்செய்து கொண்டே பூர்வகர்மங்களின் பலனுன ஸுகதுக்கங்களை அநுபவித்துக்கொண்டிருக்கிருன். ஸம்ஸாரத்தினின்று நீங்காதிருக்கும் வரையில் இந்த விஷயம், நான் நீ மற்ற வர் ஆகிய அனைவர்க்கும் துல்யமே. ஸுகதுக்கங்களை விளைக்கிறவன் தானுமல்லன்; பிறனுமல்லன். அவற்றிற்கு அவரவர்களுடைய கர்மமே காரணம். புண்யபாபங்களின் உண்மையை அறிந்தவன் பரமாத்மாவையே அவற்றிற்குக் காரணமாக நினைக்கின்ருன். புண்யபாபங்களாவன பர மாத்மாவின் நிக்ரஹாநுக்ரஹங்களே. ஶ்ருதி ஸ்ம்ருதி முதலிய சாஸ்த்ரங்களில் சொன்னபடி அநுஷ்டிக்கிறவ னிடத்தில் பரமபுருஷனுக்கு அநுக்ரஹம் உண்டாகின் றது. அதுவே புண்யம். அதைக் கடந்து நடக்கிறவனிட த்தில் அவனுடைய நிக்ரஹம் உண்டாகின்றது. அதுவே பாபம். இப்புண்ய பாபங்களே கர்மமென்று கூறப்படுகின் றன. ஸுகதுக்கங்கள் இவற்றின் பலனே. ஆகையால் ஜீவனுடைய ஸுகதுக்கங்களுக்குக் கர்மமே காரண மென்பதில் விரோதமில்லை. நிக்ரஹாநுக்ரஹங்களைச் செய்கிறவன் பரமபுருஷனேயாகையால் அவனே ஸுக துக்கங்களுக்குக் காரணமென்று அறிஞர் நினைக்கிருர் கள். இதுவரையில் ஸம்ஸாரஸுகங்களைப் புரு ஷார்த்தமாகவும் ஸம்ஸார துக்கங்களை அபுருஷார்த் தங்களாகவும் ஒப்புக்கொண்டு மொழிந்தேன். உண்மை யை ஆராய்ந்தால் அது பொருளல்ல. ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் பரிணுமரூபமான இந்த ப்ரக்ருதி மண் டலத்தில் சாபமாவதென்ன? அநுக்ரஹமாவதென்ன?

அவற்றின் ஸ்வரூபத்தைத் தனித்தனியே விவரித்துச் செல்ல முடியாது. இரண்டும் துல்யமே 'அனுக்ரஹம் ஸ்வர்க்கத்திற்குக் காரணம். நிக்ரஹம் நரகத்திற்குக் காரணம்' என்று அவற்றின் ஸ்வரூபத்தை விவரித்துச்சொல்லலாமே யென்னில், ஸ்வர்க்கமாவதென்? நரகமாவதென்? அவற்றையும் விவரித்துச் சொல்ல முடியாது. 'ஸ்வர்க்கமாவது ஸுகம் நரகமாவது துக்கம்' என்று விவரிக்கலாமே யென்னில், ஸுகமாவதென்? துக்கமாவதென்? அவற்றை நிரூபிக்க முடியாது. ஸம்ஸாரத்தில் விளையும் ஸுகதுக்கங்களிரண்டும் துல்மாகவேயிருக்கும். ஸ்வர்க்கம் ஸுகரூபமாயிருக்குமாயின், அது துக்கத்தை உட்கொண்டிருக்கலாகாது. நரகம் துக்க ரூபமாயின், அது ஸுகத்தை உட்கொண்டிருக்கலாகாது. ஸ்வர்க்கமும் கடைசியில் துக்கத்திற்கிடமாகின்றது. நாகமும் கடைசியில் சிறிது ஸுகத்திற்கிடமாகின்றது. இங்ஙனம் ஸுகதுக்கங்களிரண்டும் துக்க ஸுகங்களை உட்கொண்டிருக்கின்றனவாகையால் அவற்றின் ஸ்வரூபத்தை நிர்ணயிக்க முடியாது. சாப நரக துக்கங்கள் எங்ஙனம் புருஷார்த்தமாக மாட்டாவோ அங்ஙனமே அனுக்ரஹம் ஸ்வர்க்கம் ஸுகம் இவைகள் புருஷார்த்தமாகமாட்டா. தோஷங்கள் தீண்டப்பெறுதவனும் ஷாட்குண்ய பூர்ணனுமாகிய பரமபுருஷன் தானொருவனே தன்மாயையால் ப்ரஹ்மதேவன் முதல் பூச்சி புழு வரையிலுமுள்ள ஸமஸ்த பூதங்களையும் படைக்கின்றான். அவன் கர்மத்தினால் விளையும் சரீரமற்றவன். அவனே அப்பூதங்களின் கர்மங்களுக்குத் தகுந்தபடி பந்தம் மோக்ஷம் ஸுகம் துக்கம் இவைகளைப் படைக்கின்றான். அவன் பக்ஷபாதத்தினால் ஒருவனுக்கு ஸுகத்தையும்ஒருவனுக்குத் துக்கத்தையும் விளைக்கிறதில்லை. வாஸ்தவத்தில் ஜீவாத்மாக்களில் ஒருவனுக்கு

மற்ருெருவன் இஷ்டனுமல்லன்; த்வேஷியுமல்லன்; ஜ்ஞா தியுமல்லன்; பந்துவுமல்லன்; பிறனுமல்லன்; தன்னுடைய வனுமல்லன். அவ்வாத்மாக்கள். தேவமனுஷ்யாதி சரீரங் களெல்லாவற்றிலும் ஜ்ஞாநாநந்தஸ்வரூபர்களாகி ஒருவா ருகவே இருக்கின்றனர். ஒருவரோடொருவர்க்குத் தார தம்யம் உண்டாகிலன்ருே இஷ்டன் அனிஷ்டனென்னும் பிரிவு நேரிடும். அந்தப் பிரிவு அவர்களுக்கு ஸ்வரூபத் தைப் பற்றினதன்று.தேஹங்களால் பலவாருகத்தோற்றி னும் அப்பேதங்களெல்லாம் கேவலதேஹங்களைப் பற்றி னவைகளேயன்றி ஆத்மாக்களைச் சேர்ந்தவையன்று. ஜ்ஞாநாநந்த ஸ்வருபர்களாகையால் அவர்களுக்குச் சப் தாதி விஷயங்களால் விளையும் ஸுகத்தில் விருப்பம் கிடையாது. ஆகையால் அந்த ஸுகத்தைப் பெறு தற்குத் தடைசெய்பவரிடத்தில் கோபம் உண்டாவதற்கு ப்ரஸக்தியே இல்லை. ஆயினும் அந்த ஜீவாத்மாக்களு க்கு அநாதிவாஸனையால் மேன்மேல் விளையும் கர்மமே ஸுகம் துக்கம் நன்மை தீமை சரீரஸம்பந்தரூபமான ஜனனம், மரணம் இவைஅடங்கின ஸம்ஸாரத்திற்கும் மோ க்ஷத்திற்கும் காரணமாகின்றது.ப்ரளயகாலத்தில் ஜீவாத் மாக்கள் ஈஶ்வரனிடத்தில் மறையும்பொழுதும் அவர்க ளுக்குக் கர்மவாஸனை மாத்ரம் மாறுகிறதில்லை. மீளவும் கல்பாதியில் மன இரக்கமுடைய ஸர்வேஶ்வரன் 'இவர்கள் நம்மை ஆராதித்துக் கரையேறட்டும்' என்று அவ்வாத் மாக்களுக்குக் கரணகளேபரங்களையும் நன்மை தீமைகளை அறிவிக்கும்படியான சாஸ்த்ரத்தையும் கொடுக்கிருன். அவர்கள் பூர்வவாஸனையால், சப்தாதி விஷயங்களையே விரும்பி அவற்றைப் பெறுதற்குரிய கர்மங்களைச் செய்து அவற்றின் பலன்களை அனுபவித்துக்கொண்டு மேன்மே லும் ஸம்ஸாரத்தையே வளர்த்திக்கொள்கிருர்கள். இப்

படியிருக்கிகையில் திடீரென்று யாத்ருச்சிகம் ப்ராஸங்கி கம் முதலிய புண்யகர்மத்தினால் மோக்ஷமார்க்கத்தில் இறங்குவார்கள். மடக்தையர்மணீ! உண்மை இதுவா கையால் சாபத்தை மாற்றிக்கொள்ளும்பொருட்டு நான் உன்னை வேண்டவில்லை. நான் சொன்னது தப்பெ ன்று நினைக்கின்றாயே, அதைப் பொறுக்க வேண்டு மென்று உன்னை நான் வேண்டிக்கொள்கிறேன்' என்றான். ஓ பரீக்ஷித்துமன்னவனே! இங்ஙனம் அச்சித்ரகேது பார்வதியை அருள்புரிவித்துக் கொண்டு பார்வதி பர மேஶ்வரன் இருவரும் வியப்புடன் பார்த்துக் கொண்டி ருக்கையில் விமானத்தின்மேல் ஏறி நடந்தான். பிறகு மஹானுபாவனாகிய ருத்ரன் தேவர்ஷிகளும் தைத்யர்க ளும் ஸித்தர்களும் தன் பரிவாரங்களும் கேட்டுக் கொண் டிருக்கையில் பார்வதியைப் பார்த்து இங்ஙனம் மொழிந் தான். 'அழகிய நிதம்பங்களுடையவளே! பார்வதி! பரம புருஷன் ஸ்ரீஹரி ஆச்சர்யமான செயலுடையவன். அவ னுடைய பக்தர்கள் சப்தாதி விஷய ஸுகங்களை விரும்ப மாட்டார்கள்; தமக்கு அபகாரஞ் செய்பவர்களுக்கும் உபகாரத்தையே தேடுந்தன்மையர்; ஸுகம் துக்கம் இவையிரண்டையும் துல்யமாகவே நினைப்பார்கள். அத் தகைய ஹரிபக்தர்களின் மஹிமையை நீ நேரில் கண்டனு பவித்தாயல்லவா? ஸ்ரீமந்நாராயணனையே பரதத்வமாக நம்பியிருக்கும் நல்லோர்கள் அனைவரும் இங்ஙனமே எதற் கும் பயப்படமாட்டாரகள். அவர்கள் ஸ்வர்க்கம் நர கம் மோக்ஷம் இவை யெல்லாவற்றையும் துல்யமாகவே நினைப்பார்கள். ஜீவாத்மாக்களுக்கு ஈஶ்வரனுடைய லீலா ரூபமான ஜகத் ஸ்ருஷ்டியாலேற்பட்ட தேஹ ஸம் பந்தமே ஸுக துக்கங்களுக்கும் ஜன்ம மரணங்களுக்கும் சாப அனுக்ரஹங்களுக்கும் காரணம். ஆத்மாக்கள்

அனைவரும் ஜ்ஞானத்தை வடிவாக வுடையவர்கள். அவர்களுக்குத் தேவமனுஷ்யாதி பேதம் கிடையாது. அஜ்ஞானத்தினால் அவர்களிடத்தில் அந்தப் பேதத்தை ஏறிடுகிறார்களேயன்றி, அது உண்மையன்று. அங்ஙனமே 'ஸுகம் ஜன்மம் அனுக்ரஹம் இவை குணங்கள்' துக்கம் மரணம் சாபம் இவை தோஷங்கள்' என்னும் பிரிவும் ஸ்வப்னத்திலுள்ள பேதம்போல் அஜ்ஞானத்தினால் கற்பிக்கப்பட்டதே. சாஸ்த்ராப்யாஸத்தினால் ப்ரக்ருதி புருஷ ஈஶ்வரர்களின் உண்மையை அறிந்து சப்தாதி விஷயங்களில் விருப்பமின்றி மஹாநந்தஸ்வரூபனான பகவானிடத்தில் பக்தி செய்யுந் தன்மையுடைய மனிதர்களுக்கு எவ்விதத்திலும் பேதபுத்தி உண்டாகாது. இனி அவர்களுக்கு அவற்றைப் பற்றின பயம் எப்படி உண்டாகும்? ருத்ரனென்று ப்ரஸித்தி பெற்ற நான் ப்ரஹ்மதேவன் ஸனத்குமாரர் நாரதர் ப்ரஹ்மாவின் புத்ரர்களான மரீசி முதலிய முனிவர்கள் இந்த்ரன் முதலிய தேவஶ்ரேஷ்டர்கள் ஆகிய நாங்கள் அனைவரும் அந்த ஸ்ரீமந்நாராயணனுடைய செயலையாவது ஸ்வரூபத்தையாவது அறியவல்லரல்லோம். நாங்களெல்லோரும் அவனால் கொடுக்கப்பட்ட ஜ்ஞானசக்திகளையுடையவர்கள். அந்த ஜ்ஞான சக்திகளும் ஸூர்யனுக்கெதிரில் மின்மினிப் பூச்சி போலவே. அவ்வளவைக் கொண்டே நாங்கள் ஸ்வதந்த்ரப்ரபுக்களென்று அபிமானித்துக்கொண்டிருக்கிறோம். ஆகையால் நீ என்னை ஈஶ்வரனாக ப்ரமிக்கவேண்டாம். அந்த ஸர்வேஶ்வரனுக்கு மிகுந்த அன்பனாவது த்வேஷியாவது எவனுமே கிடையாது. அவன் ஸமஸ்தப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாகையால் அனைவர்க்கும் அன்பனே. அவன் தன்னைப் பற்றினவர்களுடைய வருத்தங்களைப்போக்கி இஷ்டங்களைக்கொடுக்குந்தன்மையன். எவர்

கள் தமக்கும் பரமாத்வாகிய அந்தப் பகவானுக்குமுள்ள சரீராத்மபாவ ஸம்பந்தத்தை அறிந்து அவனைத் தொடர்கின்றார்களோ, அவர்களிடத்தில் அவனுக்கு அனுக்ரஹம் உண்டு. மற்றவர்களிடத்தில் அது கிடையாது. இவ்வளவு மாத்ரத்தினால் அவனுக்குப் பக்ஷபாதம் உண்டென்று சொல்லலாகாது. இந்தச் சித்ரகேது மன்னவன் நல்லவிவேகி; எல்லாவற்றையும் ஸமமாகப் பார்க்குந்தன்மையன்; ராகாதி தோஷங்களற்றவன்; அந்த ஸ்ரீமந்நாராயணனுடைய பக்தன்; அவனுக்கு மிகுந்த அன்பன். இவனைப்போலவே நானும் அவனிடத்தில் பக்தியுடையவன்; அவனுக்கு நண்பன். இவ்வளவேயன்றி நான் ப்ரபுவல்லேன். ஆகையால் ப்ரக்ருதி புருஷ ஈஶ்வரர்களின் உண்மையை அறிந்தவர்களும் ஸமதர்சிகளும் சாந்தர்களுமான அந்த மஹாபுருஷனுடைய பக்தர்களிடத்தில் நம்முடைய மேன்மையைக் காண்பிக்கலாகாது. நாம் அவர்கள் விஷயத்தில் கர்வப்படுவதும் யுக்தமன்று' என்றான். பார்வதியும் இங்ஙனம் மொழிந்த சிவபெருமானுடைய வார்த்தையைக் கேட்டுக் கர்வமின்றி மதிதெளியப்பெற்றாள். பகவத் பக்தனாகிய சித்ரகேது பார்வதிக்கு ப்ரதிசாபங் கொடுக்க வல்லவனாயினும் அவளுடைய சாபத்தைச் சிரத்தினால் அங்கீகரித்தான். அபகாரம் செய்பவர்களுக்கும் உபகாரம் செய்கையாகிற இவ்வளவே ஸாதுக்களின் லக்ஷணம். இச்சித்ரகேதுமன்னவனே த்வஷ்டாவின் ஸங்கல்பத்தினால் தக்ஷிணாக்னியில் பிறந்தான். அவனே அஸுரர்களின் இயற்கையைப் பெற்று வ்ருத்ரனென்று பேர் பூண்டு ப்ரஸித்தனாயிருந்தான். அவன் முன் ஜன்மத்தில் பகவத்பக்தனாயிருந்தானாகையால் இந்த ஜன்மத்தில் அவன் ஜ்ஞானமும் விஜ்ஞானமும் அமைந்திருந்தான். அஸுரஜாதியான வ்ருத்ராஸுரனுக்குப் பகவத்

பக்தி உண்டானதின் காரணத்தைப்பற்றி வினவினையல்லவா? அதன் காரணத்தை யெல்லாம் இங்ஙனம் உனக்கு விரிவாகக் கூறினேன். மஹானுபாவனாகிய சித்ரகேதுவைப் பற்றின இவ்விதிஹாஸம் புண்யமானது. இதில் விஷ்ணு பக்தர்களின் மஹிமை அமைந்திருக்கின்றது. இதைக்கேட்பவன் ஸம்ஸாரபந்தத்தினின்று விடுபடுவான். விடியற்காலத்தில் எழுந்து ஒருவரோடும் பேசாமல் ஶ்ரத்தையுடன் பகவானை நினைத்துக்கொண்டு இந்த இதிஹாஸத்தைப் படிப்பானாயின், மேலானகதியைப் பெறுவான். பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

## திதியிடத்தினின்று மருத்துக்கள் உண்டான விதம் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— ஸவிதாவின் பத்னியாகிய ப்ருஶ்னியென்பவள், ஸாவித்ரி மூன்று வ்யாஹ்ருதிகள் அக்னிஹோத்ரம் பசுயாகம் ஸோமயாகம் சாதுர்மாஸ்யம் பஞ்சமஹாயஜ்ஞங்கள் ஆகிய இவற்றின் அபிமானிதேவதைகளைப் பெற்றாள். பகவானுடைய பார்யையாகிய ஸித்தியென்பவள், அங்கன் மஹிமன் விபு ப்ரபு என்னும் நான்குபிள்ளையும், ஸாச்சிஸ்ஸென்னும் அழகிய ஓர் புதல்வியையும்பெற்றாள். தாதாவின் பத்னிகள் நால்வரில் குஹூவென்பவள்ஸாயனையும், ஸினீவாலியென்பவள் தர்சனையும், ராகையென்பவள் ப்ராதனையும், அநுமதி யென்பவள் பூர்ணமாஸனையும் பெற்றார்கள். விதாதாவென்பவன் க்ரியை யென்னும் தன் பத்னியிடத்தில் புரீஷ்யர்களென்னும் அக்னிகளைப் பெற்றான். வருணனுடைய பத்னி கர்ஷணி யென்பவள். முதலில் ப்ராஹ்மாவுக்குப் பிள்ளையாகப் பிறந்த ப்ருகு இவளிடத்தில் மீளவும் பிறந்தார். மஹாயோகியான வால்மீகியும் வருணனுக்கு

வல்மீகத்தில் பிறந்தவர். மித்ரன் ரேவதி யென்னும் தன் பார்யையிடத்தில் உத்ஸர்க்கன் அரிஷ்டன் பிப்பலன் என்று மூன்று பிள்ளைகளைப் பெற்றான். ஒருகால் இந்த மித்ரன் வருணன் இவர்களிருவரும் பூர்வை யென்னும் அப்ஸரஸ்த்ரீயின் அருகாமையில் திடீரென்று நழுவின ரேதஸ்ஸை ஒருகுடத்தில் விட்டார்கள். அக்குடத்தில் அகஸ்த்யர் வஸிஷ்டர் இவ்விருவரும் பிறந்தார்கள். ஆகையால் இந்த அகஸ்த்ய வஸிஷ்டர்களிருவரும் மித்ராவருணர்களின் புதல்வர்கள். அப்பனே! ஸமர்த்தனாகிய தேவேந்த்ரன் புலோமாது புத்ரியாகிய சசீதேவியிடத்தில் ஜயந்தன் ருஷபன் மீட்வான் என்று மூன்று பிள்ளைகளைப் பெற்றானென்று எங்களுக்குக் கேள்வி. தன் ஸங்கல்பத்தினால் வாமனரூபியாய் அவதரித்து மூன்றடிகளால் உலகங்களை யெல்லாம் அளந்த பகவானுக்குத் தன் பத்னியாகிய கீர்த்தியென்பவளிடத்தில் ப்ருஹச்ச்லோகனென்னும் பிள்ளை பிறந்தான். அவனுக்கு ஸௌபகன் முதலியவர்கள் பிறந்தார்கள். கச்யபருக்கு அதிதியிடத்தில் வாமன ரூபியாய்ப் பிறந்த பகவானுடைய செயல்களையும் குணங்களையும் வீர்யங்களையும் அதிதியிடத்தில் அவன் பிறந்த விதத்தையும் மேல் சொல்லப்போகிறேன். இப்பொழுது, கச்யபரது புதல்வர்களுக்குச் சத்ருக்களான திதியின் பிள்ளைகளை உனக்குச் சொல்லுகிறேன். கேட்பாயாக. இந்தத்திதியின் வம்சத்தில் மஹாபாகவதனும் குணங்கள் நிறைந்தவனுமாகிய ப்ரஹ்லாதனும் பலிசக்ரவர்த்தியும் பிறந்தார்கள். திதிக்கு இரண்டே புதல்வர்கள். அவர்களில் ஒருவன் ஹிரண்யகசிபுவென்பவன். மற்றொருவன் ஹிரண்யாக்ஷன். அவ்விருவரும் தைத்யர்களாலும் தானவர்களாலும் பூஜிக்கப்பட்டிருந்தார்கள். ஹிரண்யகசிபுவின் பார்யை தனுவம்சத்தில் பிறந்த ஜம்ப

னுடைய புதல்வி, கயாதுவென்பவள். அவள் ப்ரஹ்லாதன் அனுஹ்லாதன் ஸம்ஹ்லாதன் ஹ்லாதன் என்று நான்கு பிள்ளைகளையும் ஸிம்ஹிகையென்ற ஓர் பெண்ணையும் பெற்றாள். அந்த ஸிம்ஹிகை விப்ரசித்தியை மணம் புரிந்து அவனிடத்தினின்று ராஹுவைப் பிள்ளையாகப் பெற்றாள். அந்த ராஹு அம்ருதத்தைப் பருகும்பொழுது பகவான் சக்ராயுதத்தினால் அவன் தலையை அறுத்தான். ஸம்ஹ்லாதனுடைய பார்யை மதியென்பவள். அவள் பஞ்சஜனனென்னும் பிள்ளையைப் பெற்றாள். ஹ்லாதனுடைய பார்யை தமனியென்பவள். அவள் வாதாபி இல்வலன் என்று இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். அவர்களில் இல்வலன் அகஸ்த்யரை விருந்துண்ண அழைத்து மேஷத்தினுருவங்கொண்ட வாதாபியைச் சமைத்தான். அனுஹ்லாதனுடைய பார்யை ஸூர்ம்யை யென்பவள் அவள் பாஸ்கரன் மஹிஷன் என்று இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். ப்ரஹ்லாதனுடைய பார்யை துதியென்பவள். அவனுக்கு அவளிடத்தில் விரோசனன் பிறந்தான். அவனுக்குப் பலி சக்ரவர்த்தி பிறந்தான். அவன் சமனையென்னும் தன் பார்யையிடத்தில் பாணன் முதலிய நூறுபிள்ளைகளைப் பெற்றான். அந்த ப்ரஹ்லாதன் பலி இவர்களின் ப்ரபாவம் மிகவும் புகழத் தகுந்தது. அதை மேல் சொல்லப் போகிறேன். பாணன் ருத்ரனை ஆராதித்து அவனுடைய பரிவாரங்களில் தலைமையைப் பெற்றான். மஹானுபாவனாகிய அந்த ருத்ரன் இப்பொழுதும் அவன் பட்டணத்தைப் பாதுகாத்துக்கொண்டு அவன் பக்கத்திலேயே இருக்கின்றான். நாற்பத்தொன்பது மருத்கணங்களும் திதியின் பிள்ளைகளே. அவர்களுக்கு ஸந்ததி கிடையாது. அவர்களெல்லோரும் இந்த்ரனால் தேவத்தன்மையைப் பெற்றார்கள். [illegible]கையால்

மருத்துக்கள் திதியின் பிள்ளையாயினும் அவர்களுக்கும் தேவதைகளுக்கும் விரோதம் கிடையாது.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—அஜ்ஞான மாகிற இருளைப்போக்குந் திறமை யமைந்தவரே! மருத்துக்கள் இந்த்ரனால் தேவத்தன்மையைப் பெற்றார்களென்று மொழிந்தீர். அவர்கள் ஜன்மஸித்தமான அஸுரத் தன்மையைத் துறந்து எங்ஙனம் தேவத்தன்மையைப் பெற்றார்கள்? அவர்கள் இந்த்ரனுக்கு அப்படிப்பட்ட உபகாரம் என்ன செய்தார்கள்? இந்த விஷயத்தைக் கேட்கவேண்டுமென்னும் விருப்பம் எனக்கு மாத்ரமேயன்று. இந்த ரிஷிகளுங்கூட இதை அறியவேண்டுமென்னும் ஶ்ரத்தையுடன் இருக்கிறார்கள். மஹானுபாவரே! ஆகையால் இதை எங்களுக்கு மொழியவேண்டும்.

ஸூதர் சொல்லுகிறார்:— ஶௌனகரே! ஸ்ரீசுகர் சொல் மிதமாகவும் பொருள் கனமாகவும் மொழிந்த விஷ்ணுராதனுடைய வசனத்தை ஆவலுடன் கேட்டு மனப்பூர்த்தியாக அம்மன்னவனைப் புகழ்ந்து சொல்லத் தொடங்கினர்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! இந்த்ரனைத் தன் பக்ஷத்தில் கொண்டு பாதுகாக்கின்ற ஸ்ரீமஹாவிஷ்ணுவால் ஹிரண்யாக்ஷன் ஹிரண்யகசிபு ஆகிய தன் புதல்வர்களிருவரும் மாளப் பெற்ற திதி சோகத்தினால் கோபம் கிளர்ந்தெழப் பெற்றுப் பரிதபித்துச் சிந்தித்தாள். 'இந்த்ரன் விஷயஸுகங்களில் மனம் சென்று கொடுந்தன்மை பூண்டு மன இரக்கமற்றுத் தன் ப்ராதாக்களான என் புதல்வர்களை விஷ்ணுவின் மூலமாய்க் கொல்வித்தான், பாபிஷ்டனாகிய அவ்விந்த்ரனைக் கொல்வித்து நான் எப்பொழுது ஸுகமாகத் தூங்குவேன்? ஒருவன்

தன்னைத் தான் ப்ரபுவாக அபிமானித்திருப்பினும் அவன் மரணம் அடைந்த பின்பு அவனது சரீரத்தைக் கொளுத்தாத பக்ஷத்தில் புழுவென்றும், நாய் முதலிய வை பக்ஷிக்குமாயின் விஷ்டையென்றும், கொளுத்து வார்களாயின் பஸ்மமென்றும் பெயர்கள் விளைகின்றன. அத்தகைய தேஹத்தின் ஸுகத்திற்காக ப்ராணிகளுக்கு த்ரோஹம் செய்பவன் தன் புருஷார்த்தத்தை அறிவானோ? அறியமாட்டான். அறிவானாயின் அப்படி ப்ராணி த்ரோஹம் செய்யமாட்டான். அந்த ப்ராணி த்ரோஹத்தினால் நரகமேயன்றோ பலிக்கும்? இந்தச் சரீரத்தையே ஆத்மாவாக அபிமானித்துச் செருக்குற்றிருக்கிற இந்த்ரனது கொழுப்பை அடக்கும்படியான புதல்வன் எனக்கு எந்த உபாயத்தினால் உண்டாவனோ அந்த உபாயத்தை நான் அனுஷ்டிக்கவேண்டும்' என்று சிந்தித்தாள். மன்னவனே! அந்தத் திதி இங்ஙனம் அபிப்ராயங்கொண்டு சுச்ரூஷை ஸ்னேஹம் வணக்கம் இந்த்ரிய நிக்ரஹம் இவற்றால் தன் பர்த்தாவான கச்யபர்க்கு ஸர்வகாலமும் ப்ரியத்தை ஆசரித்து வந்தாள். மனக்கருத்தை அறியுந்திறமையுடைய திதி மிகுந்த பக்தியினாலும் இனிய உரைகளாலும் புன்னகையோடு கூடின கடைக்கண்ணோக்கத்தினாலும் கச்யபருடைய மனத்தை வசப்படுத்திக்கொண்டாள். அக்கச்யப ப்ரஜாபதி அறிஞராயினும் புருஷர்களை வஞ்சிக்குந் திறமையமைந்த பெண்மணியாகிய திதியால் மதிமயங்கும்படி வஞ்சிக்கப்பட்டு மெய்ம்மறந்து அப்படியே ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டார். மடந்தையர் தாமே மேல் விழுந்து விரும்பும்பொழுது புருஷன் உட்படுவது ஆச்சர்யமன்றல்லவா? அந்தக் கச்யப ப்ரஜாபதி முதலில் ஆண் பெண்கள் ஒருவரோடொருவர் ஒரே வஸ்துபோல் கலந்திருப்பதை ஆலோசித்துத் தானும் தன் பத்னியா

கிய அத்திதியைத் தன் சரீரத்தில் பாதியாகப் பண்ணிக் கொண்டார். ஸ்த்ரீகளால் புருஷர்களின் புத்தி பறிக்கப் படுகின்றதல்லவா? அப்பனே! கஸ்யபர் தன் பத்னியாகிய திதியால் இங்ஙனம் ஸம்போகங் கொடுத்து உபசாரம் செய்யப்பெற்று மிகுந்த ஸந்தோஷம் அடைந்து அவளுடைய புணர்ச்சியின் திறமையைக் கொண்டாடிச் சிரித்து அவளை நோக்கி 'அழகிய துடைகளுடையவளே! நிந்தைக்கிடமில்லாதவளே? உனக்கு இஷ்டமான வரத்தை வேண்டிக் கொள்வாயாக. கணவன் நன்கு ஸந்தோஷமுறுவானாயின் பெண்டிர்களுக்கு எந்த விருப்பந்தான் கைகூடாது போம்? எல்லாம் கைகூடுமல்லவா? ஸ்த்ரீகளுக்குப் பதியன்றோ மேலான தெய்வம். ஸமஸ்த ப்ராணிகளின் மனத்திற்கு ஸாக்ஷியும் ஸர்வாந்தராத்மாவும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வல்லபனுமாகிய ஸர்வேஸ்வரன் நாமங்களாலும் உருவங்களாலும் வெவ்வேறாயிருக்கிற அக்னி இந்த்ரன் முதலிய தேவதைகளாகிற தன் சரீரங்கள் மூலமாய் ஆராதிக்கப் படுவதுபோல், அந்த ஸர்வேஸ்வரன் பதியின் உருவங்கொண்டு ஸ்த்ரீகளால் ஆராதிக்கப்படுகிறான். ஸ்த்ரீகளுக்கு அவரவரது கணவர்கள் விருப்பங்களை நிறைவேற்றிக் கொடுக்குந்திறமையற்றவர்களேயாயினும் அவர்களைச் சரீரமாகக் கொண்ட ஸர்வேஸ்வரன் அவர்கள் செய்யும் பதிசுஸ்ருஷைகளைத் தானே பெற்று ஸந்தோஷம் அடைந்து அவர்க்ள் விருப்பங்களை நிறைவேற்றிக் கொடுக்கிறான். அழகிய இடையையுடையவளே! பதிவ்ரதைகளான பெண்கள் நன்மையை விரும்பி மாறாத கருத்துடன் ஸர்வேஸ்வரஸ்வரூபியான கணவனையே ஆராதிக்கிறார்கள். மங்கள ஸ்வபாவமுடையவளே! நீ என்னை இத்தகைய கருத்தினால் பக்தியுடன் நன்கு ஆராதித்தனை. ...கையால், உன்னுடைய விருப்பத்தை நான்

ஸித்தமாய் நிறைவேற்றிக்கொடுக்கிறேன். உன்னைப் போன்ற பதிவ்ரதைகளைத் தவிர மற்றவர்களுக்கு இங்ஙனம் விருப்பங்கள் நிறைவேறமாட்டா. உனக்கு என்ன விருப்பமோ அதைச் சொல்வாயாக' என்றார். திதியும் கஶ்யபரை நோக்கி 'ப்ராஹ்மண ஶ்ரேஷ்டரே! எனக்கு வரங்கொடுக்க விருப்பமிருந்தால் தேவதைகளால் பிள்ளைகள் அடியோடு மாளப்பெற்ற நான் இந்த்ரனை வதிக்கும்படியான பிள்ளையை வேண்டுகிறேன். இந்த்ரனன்றோ பகவானைக் கொண்டு என் புதல்வர்களைக் கொன்றான்' என்றாள். அவ்வந்தணர் அவளது வசனத்தைக் கேட்டு மிகவும் வருந்தி 'இப்போது எனக்குப் பெரிய அதர்மம் நேர்ந்தது. ஆ! என்ன வருத்தம்! ஆ! நான் இவ்வதர்மத்தினால் நரகத்தில் விழுவேன். இது நிச்சயம். நான் இந்த்ரிய ஸுகங்களில் மனம் தாழ்ந்து மடந்தையாகிற பகவானுடைய மாயையால் மனம் பறியுண்டு மனக்களிப்பற்று வருந்துகிறேன். தனக்கு ஏற்பட்ட இயற்கையை அனுஸரித்து நடக்கிற மடந்தைக்கு எது தான் தோஷம்? எதுவும் தோஷமன்று. தன் ப்ரயோஜனத்தை அறியாத என்னையே நிந்திக்கவேண்டும். ஏனென்றால், நான் இந்த்ரியங்களைப் பாராட்டி அவற்றின் வழியே நடந்தேனல்லவா? ஆ! ஸ்த்ரீகளின் முகம் சரத்காலத்து சந்த்ரனோடொத்தது. பேச்சும் செவிகளுக்கு அம்ருதம்போன்றது. மனமோ வென்றால் தீட்டின கத்திபோன்றது. ஆகையால் அவர்களுடைய நடத்தையை எவன்தான் அறியவல்லவன். ஸ்த்ரீகளுக்கு மனப்பூர்த்தியாக ஒருவனும் அன்பனல்லன். அவர்கள் தமது விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்வதில் மாத்ரமே மனவூக்கமுடையவர்கள். தங்கள் விருப்பத்திற்காகக் கணவனையும் பிள்ளையையும் உடன்பிறந்தவனையும் கூடக் கொல்லுவார்கள்! அன்றிக் கொல்விப்பார்கள்.

கொடுக்கிறேனென்று ப்ரதிஜ்ஞைசெய்தவார்த்தை பொய் யாகக்கூடாது. ப்ரதிஜ்ஞை செய்தபடி கொடுப்பேனாயின், இந்த்ரனைக் கொல்ல வேண்டியதாயிருக்கிறது. இந்த்ர னையும் வதிக்கலாகாது. நான் இத்தகைய ஸங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டேன். ஆனால் இவ்விஷயத்தில் இப் படிச் செய்யவேண்டும்' என்று தனக்குள் சிந்தித்துக்கொ ண்டு மஹானுபாவராகிய அக்காஸ்யபர் சிறிது கோபமுற் றுத் தன்னைத்தானே பழித்துக்கொண்டு அவளை நோக்கி 'நல்லியற்கையுடையவளே! உனக்கு நான் ஒரு வ்ரதம் சொல்லுகிறேன். இதை நீ ஓராண்டு நிரம்பும் வரையில் தவ றாமல் நன்கு நடத்துவாயாயின், உனக்கு இந்த்ரனை வதிக் கும்படியான புதல்வன் பிறப்பான். இல்லையாயின் அவன் தேவதைகளுக்குப் பந்துவாய் விடுவான்' என்றார். அதைக் கேட்ட திதியும் 'அந்தணர்தலைவரே! அப்படியே நீர் சொல்லும் வ்ரதத்தை அனுஷ்டிக்கிறேன். அதற்காக நான் செய்யவேண்டிய கார்யங்களையும், வ்ரதத்திற்கு ப்ரதிகூலங்களையும் அனுகூலங்களையும் எனக்குச் சொல்ல வேண்டும்' என்றாள். கஸ்யபரும் 'ப்ராணி ஸமூஹங்களை ஹிம்ஸிக்கலாகாது. எப்படிப்பட்ட கஷ்டம் நேரினும் சபிக்கலாகாது. பொய் பேசலாகாது. நகங்களையும் மயிர் களையும் சேதிக்கலாகாது. அமங்கள வஸ்துக்களைத் தொடலாகாது. ஜலத்தில் இறங்கி ஸ்நானம் செய்யலா காது. எவரிடத்திலும் கோபங் கூடாது. துஷ்டர்க ளோடு பேசலாகாது. அசுத்தமான வஸ்த்ரத்தை உடுத் தலாகாது. சூடிகளைந்த பூமாலையை மீளவும் சூடலா காது. எச்சிலான அன்னம், பத்ரகாளிக்கு நிவேதனம் செய்த அன்னம், எறும்பு முதலியவை தீண்டின அன்னம் சூத்ரன் கொண்டு வந்த அன்னம், ரஜஸ்வலை பார்த்த அன்னம் இவை[illegible]வந்த அன்னங்களையும் புசிக்கலாகாது.

அஞ்சலியால் ஜலம் பருகலாகாது. திட்டுப் பட்டால் ஸ்நானம் செய்யாதிருக்கலாகாது. காலை மாலைகளில் தலைமயிர்களை விரித்து அலங்காரம் செய்து கொள்ளாதிருக்கலாகாது. மௌநவ்ரதம் தவறலாகாது. போர்வையின்றி வெளியில் திரியலாகாது. கால்களை அலம்பாமலும் மன ஊக்கமில்லாமலும் படுக்கலாகாது. காலீரத்துடனும் படுக்கலாகாது. வடக்கேயாவது, மேற்கேயாவது தலை வைத்துப் படுக்கலாகாது. பிறரோடு படுக்கலாகாது. காலை மாலைகளில் படுக்கலாகாது. சுத்தமான வஸ்த்ரம் தரித்து எப்பொழுதும் பரிசுத்தையாகி மஞ்சள் சந்தனம் முதலிய மங்களத்ரவ்யங்களை யெல்லாம் அணிந்து காலையில் ஆஹாரம் புசிப்பதற்கு முன்னமே ஸ்ரீமஹாலக்ஷ்மியையும் ஸ்ரீ மஹா விஷ்ணுவையும் பூஜிக்கவேண்டும். பிள்ளை யுடையவர்களும் ஸுமங்கலிகளுமான பெண்டிர்களைப் புஷ்பம் சந்தனம் உபஹாரம் ஆபரணம் முதலியவற்றால் பூஜிக்க வேண்டும். பர்த்தாவையும் பூஜித்து அவனுடைய அருகில் இருக்கவேண்டும். தன் கணவனே தன் வயிற்றில் இருப்பதாக த்யானிக்க வேண்டும். இத்தகைய அங்கங்களோடு கூடின இந்த வ்ரதத்திற்குப் பும்ஸவனமென்று பெயர். ஒரு வர்ஷம் வரையில் இந்த வ்ரதத்தைச் சிறிதும் தவறாமல் அனுஷ்டிப்பாயாயின், உனக்கு இந்த்ரனை வதிக்கும்படியான புதல்வன் உண்டாவான்' என்றார். மன்னவனே! இங்ஙனம் சொல்லப்பட்ட திதி அப்படியே ஆகட்டுமென்று அங்கீகரித்து, அந்த வ்ரதத்தில் மனம் செல்லப் பெற்றுக் கஶ்யபரிடத்தினின்றும் கர்ப்பத்தைத்தரித்து வ்ரதத்தையும் ஊக்கத்துடன் அனுஷ்டித்து வந்தாள். பிறகுதேவேந்த்ரன் அறிஞனாகையால் தன் தாய்க்குஉடன் பிறந்தவளாகிய திதியின் அபிப்பிராயத்தை அறிந்து கஶ்யபருடைய ஆஶ்ரமத்தில் வ்ரதத்தை அனுஷ்டித்துக்

கொண்டிருக்கிற திதிக்குச் சுஶ்ரூஷை செய்து வந்தான். அவன் தினந்தோறும் வனத்தினின்று புஷ்பங்களையும் பழங்களையும் வேர்களையும் கிழங்குகளையும் ஸமித்துக்களையும் தர்ப்பங்களையும் இலைகளையும் தளிர்களையும் அறுகம் புல்முளைகளையும் மண்ணையும் ஜலத்தையும் வேண்டிய காலங்களில் கொண்டுவந்து கொடுத்தான். இங்ஙனம் அந்தத் திதி வ்ரதத்தில் நிலைநின்றிருக்கையில், தேவேந்த்ரன் 'வ்ரதத்தில் ஏதேனும் கெடுதி நேருமா? இவள் கர்ப்பத்தை நான் ஸமயம் பார்த்து அழித்து விடுவேனா?'' என்று ஸமயம் பார்த்துக்கொண்டே, வேடன் மான் தோலை மூடிக்கொண்டு மான்களைத் தொடர்வதுபோல் கெட்ட எண்ணத்துடன் அவளுக்குச் சுஶ்ரூஷை செய்து வந்தான். மன்னவனே! அவ்விந்த்ரன் வ்ரதத்தின்[1] சித்ரத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தும் அவனுக்கு அது புலப்படவில்லை. அதற்குமேல் அவன் 'எந்த விதத்தில் எனக்கு க்ஷேமம் உண்டாகும்?'' என்று கொடுஞ் சிந்தையுற்றிருந்தான். ஒரு சமயம் அந்தத் திதி வ்ரதத்தினால் இளைத்து அசக்தியினால் ஆசமனம் செய்யாமலும் கால்களை அலம்பிக்கொள்ளாமலும் அசுசியாகி ஸாயங்கால ஸந்த்யையில் தெய்வாதீனமாய் மதி மயங்கிப் படுத்து உறங்கினாள். யோகஸாமர்த்யமுடைய தேவேந்த்ரன் அந்த ஸமயம் பார்த்துஉறக்கத்தினால் மதிமயங்கியிருக்கிற திதியின் வயிற்றில் யோகமாயையால் புகுந்தான். அவன் உள்ளே புகுந்து பொன் நிறமுடைய அவள் கர்ப்பத்தை வஜ்ராயுதத்தினால் ஏழு பாகங்களாகப் பிளந்தான். அழுகின்ற அக்கர்ப்பத்தின் ஒவ்வொரு பாகத்தையும் அழ வேண்டாமென்று சொல்லிக்கொண்டே ஏழுபாகங்களாகப் பிளந்தான். அங்ஙனம் அறுப்புண்ட கர்ப்பத்தின்

1. கெடுதியை

கண்டங்கள் அவயவங்களெல்லாம் பிரிக்திருக்கப்பெற்றுக் கைகளைக் குவித்துக்கொண்டு இந்த்ரனை நோக்கி 'ஓ இந்த்ரனே! நாங்கள் உன் ப்ராதாக்கள்; மருத்துக்களென்னும் பேருடையவர்கள். எங்களை ஏன் வதிக்கப் பார்க்கிறாய்' என்றன. அதைக் கேட்ட இந்த்ரனும் 'நீங்கள் எனக்கு ப்ராதாக்களாயின், பயப்படவேண்டாம்' என்றான். அவர்கள் இந்த்ரனுக்குப் பரிவாரங்களானார்கள். அவர்கள் அவ்விந்த்ரனையே ஸ்வாமியாக நினைத்து அக்கருத்து மாறாதிருந்தார்கள்; மருத் கணங்களென்று பேர் பெற்றார்கள். மன்னவனே! அஶ்வத்தாமாவின் அஸ்த்ரத்தினால் கொளுத்தப்பட்ட உன்னைப்போல், திதியின் கர்ப்பம் வஜ்ராயுதத்தினால் பலவாறு சேதிக்கப்பட்டும் பகவானுடைய அனுக்ரஹத்தினால் மரணம் அடையாதிருந்தது. ஒருவன் ஒருகால் ஆதிபுருஷனை பகவானை ஆராதிப்பானாயின் அவனோடு ஸாயுஜ்யத்தை அடைகிறான். அவனை ஒருவன் அடிக்கடி ஆராதித்துக்கொண்டு வருவானாயின், அவன் அவனுக்கு உதவும் விஷயத்தில் சொல்லவேண்டுமோ? திதியினால் சிறிது குறைவாக ஒரு வர்ஷம் வரையில் ஆராதிக்கப்பட்ட பகவான் அவ்விந்த்ரனோடு கூடவேயிருந்து அவளுடைய கர்ப்பத்தைப் பாதுகாத்தான். அந்தக் கர்ப்பத்தின் கண்டங்கள் நாற்பத்தொன்பதும் மருத்கணங்களாயின. அம்மருத்துக்கள் மாதாவின் ஸம்பந்தத்தினால் நேர்ந்த அஸுரத்தன்மையாகிற தோஷத்தைத் துறந்து தேவதைகளானார்கள். இந்த்ரன் அவர்களை யஜ்ஞபாகத்திற் குரியவர்களாகச் செய்தான். பிறகு திதி உறக்கந்தெளிந்தெழுந்து இந்த்ரனோடு கூடி அக்னிபோல் ஜ்வலிக்கின்ற குமாரர்களைக் கண்டாள். வாஸ்தவத்தில் நல்லியற்கையுடையவளாகையால் நிந்தைக்கிடமில்லாத அந்தத் தி[illegible] அவர்களைக்

கண்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்தாள். பிறகு அவள் தேவேந்த்ரனைப் பார்த்து 'தேவேந்த்ர! அதிதியின் புதல்வர்களான உங்களுக்குப் பயத்தை விளைக்கும் படியான ஒரு புதல்வனை விரும்பி நான் ஒருவராலும் அனுஷ்டிக்க முடியாத பும்ஸவனமென்கிற இந்த வ்ர தத்தை அனுஷ்டித்தேன். நான் ஒரே புதல்வன் வேண்டுமென்று ஸங்கல்பித்திருந்தேன். நாற்பத்தொன்பது பேர்கள் எப்படிப் பிறந்தார்கள்? இது உனக்குத் தெரியுமாயின், பிள்ளாய்! உண்மையைச் சொல்வாயாக. பொய் சொல்லாதே' என்றாள். இந்த்ரனும் அதைக் கேட்டு 'அம்மா! நான் உன் அபிப்ராயத்தை நிச்சயித்துக் கொண்டே உன்னருகில் வந்து சுஶ்ரூஷை செய்து வந்தேன். நான் ஸமயம் நேரப்பெற்று உன் கர்ப்பத்தைச் சேதித்தேன். நான் சப்தாதி விஷயங்களை அனுபவிப்பதில் மனம் செல்லப் பெற்றவன்; தர்மத்தை அறிந்தவனல்லேன். ஆகையால் நான் உன்வயிற்றில் புகுந்து உன் கர்ப்பத்தை ஏழு துண்டங்களாகப் பிளந்தேன். அந்த ஏழு துண்டங்களும் ஏழு குமாரர்களானார்கள். மீளவும் நான் ஒவ்வொரு துண்டத்தையும் ஏழு துண்டங்களாகப் பிளந்தேன். அவையும் மரணம் அடையவில்லை. பிறகு நான் இந்த ஆச்சர்யத்தைக் கண்டு இங்ஙனம் நிச்சயித்தேன். அது என்னவென்றால், ஒருவன் ஒரு ப்ரயோஜனத்தை உத்தேசித்துப் பரமபுருஷனை ஆராதிப்பானாயின், அந்த ஆராதனம் பரிபூர்ணமாக நிறைவேறுவதற்கு முன் அவன் விரும்பின பலன் கூடாது. அது நிறைவேறுவிடின் விபரீத பலனையே கொடுக்கும். அம்மா! ஆகையால் ஒரு பலனையும் விரும்பாமல் பகவானை ஆராதிப்பவர் பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தையும் விரும்பமாட்டார்கள். அவர்களே [illegible]ான புருஷார்த்தத்தை நிறைவேற்றிக்

கொள்ளவல்லவர்கள். இங்ஙனமே பெரியோர்கள் நிர்ண யித்திருக்கிறூர்கள் .பலனே விரும்பாமல் பகவானை ஆரா திக்கிறவனுடைய வ்ரதம் நிறைவேறுவிடினும் அவனுக்கு விபரீதம் உண்டாகாது. அவ்வளவில் அவனுக்குப் பக வான் மோக்ஷத்தையுங்கூடக் கொடுப்பான். தாயே! நான் இவ்வாறு நிச்சயித்தேன். விரும்பினவர்களுக்குப் பரம புருஷார்த்தமான தன்னையுங்கொடுக்க வல்லவனும் அந்தராத்மாவும் மிகுந்த அன்பனும் ஸர்வேஶ்வரனுமா கிய பகவானை ஆராதித்து, விவேகமுடையவனுயிருப்பா னுயின், எந்தப் புருஷன் தான் நரகத்திலும் ஸம்பவிக்கக் கூடிய சப்தாதி விஷயங்களின் அனுபவத்தை விரும்பு வான்? மேன்மையுடையவளே! மூர்க்கனுகிய நான் செய்த இந்த அபராதத்தைப் பொறுப்பாயாக. இது துர் ஜனங்கள் செய்யும் வ்யாபாரம். ஆயினும், நீ எனக்குத் தாயாகையால் உனக்குப் பொறுக்க முடியாத அபராதம் எதுவுமேயில்லை. உன் கர்ப்பம் மரணம் அடைந்தும் தெய் வாதீனமாய்ப் பிழைத்தது' என்றூன். திதியும் இந்த்ரன் கபடமில்லாமல் உள்ளதை உள்ளபடியே மொழிந்தமை க்கு ஸந்தோஷமுற்றுள். இந்த்ரனும் அவளால் அனுமதி செய்யப்பெற்று அவ்ளை நமஸ்கரித்து மருத்துக்களுடன் ஸ்வர்க்கம் போய்ச் சேர்ந்தான். நீ மருத்துக்களைப் பற்றி வினவினேயே, அதை யெல்லாம் உனக்கு விரிவாகச் சொன்னேன்; இந்த மருத்துக்களின் ஜன்ம வ்ருத்தாந்தம் மங்களமானது. உனக்கு இன்னம் ஏதே னும் கேட்கவேண்டுமாயின், அதையும் சொல்லுகிறேன்.

பதினெட்டாவது அத்யாயம் முற்றிற்று.



## கஸ்யபர் திதிக்குச் சொன்ன வ்ரதத்தை விவரித்துக் கூறுதல்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான்:—ப்ராஹ்மண ஸ்ரேஷ்டரே! பும்ஸவனமென்னும் வ்ரதம் மொழிந்திரே, அதை விரிவாகக் கேட்க விரும்புகிறேன். அந்த வ்ரதத்தினால் பகவான் ஸந்தோஷம் அடைவானல்லவா? ஆகையால் அதை எனக்கு விவரித்து மொழிய வேண்டும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— மன்னவனே! மார்கழி மாதத்தில் சுக்லபக்ஷத்தில் சுபமான திதியில் பர்த்தாவின் அனுமதியினால் மடந்தை விருப்பங்களை யெல்லாம் நிறைவேற்ற வல்ல பும்ஸவன மென்கிற இந்த வ்ரதத்தை ஆரம்பிக்க வேண்டும். முதலில் மருத்துக்களின் உத்பத்தியைக் கேட்டு ப்ராஹ்மணர்களால் அனுமதி கொடுக்கப் பெற்றுப் பற்களை வெளுக்கத் தேய்த்து ஸ்நானம் செய்து புதிய வெள்ளை வஸ்த்ரங்களை உடுத்துக் காலைப்போஜனத்திற்கு முன்பு ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன் பகவானை ஆராதிக்க வேண்டும். 'பகவானே! உனக்கு எல்லாம் நிறைந்திருக்கின்றது. உனக்கு எதனாலும் ஆகவேண்டிய கார்யமில்லை. நீ அவாப்த ஸமஸ்தகாமன். ஆகையால் உனக்கு எதிலும் அபேக்ஷை இல்லை. இத்தகைய உனக்கு நமஸ்காரம். நீ நித்யவிபூதியென்கிற பரமபதத்திற்கும் லீலாவிபூதி யென்கிற ப்ரஹ்மாண்ட ஸமூஹரூபமான ப்ரக்ருதி மண்டலத்திற்கும் ப்ரபு. எல்லா ஸித்திகளும் உனக்குக் கைமேல் இருக்கின்றன. உனக்கு நமஸ்காரம். ஜகதீசா! நீ தயை ஐஸ்வர்யம் தேஜஸ்ஸு மஹிமை ஓஜஸ்ஸு ஸர்வஜ்ஞத்வம் ஸர்வசக்தித்வம் முதலிய குணங்களெல்லாம் நிறைந்தவனாகையால் பகவானென்றும்ப்ரபுவென்றும்கூறப்படுகின்றனை' என்று பகவானைத் துதித்து

ஸ்ரீமஹா விஷ்ணுவின் பத்னியே! மிகவும் ஆச்சர்யமான பல சக்திகளுடையவளே! பரமபுருஷனுக்கு அஸாதாரண மான அடையாளமாயிருப்பவளே! அம்மஹாபுருஷனு டைய அன்பிற்கிடமானவளே! ஸம்பத்துக்களுக்கெல்லாம் இருப்பிடமே! உலகங்களுக்கெல்லாம் தாயே! உனக்கு நமஸ்காரம்'என்று ஸ்ரீமஹாலக்ஷ்மியையும் துதிக்கவேண் டும். பிறகு 'ஓம். ஷாட்குண்ய பூர்ணனும் புருஷஸூக்தத் தில் ஓதப்படும் மஹாபுருஷனும் மஹானுபாவனும் ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்குப் பதியும் பரிவாரங்களால் சூழப்பெற்ற வனுமாகிய உனக்கு அர்க்யம் முதலியவற்றை ஸமர்ப்பிக்கி றேன்' என்ற மந்த்ரத்தைச் சொல்லித் தினந்தோறும் ஸ்ரீமஹாவிஷ்ணுவுக்கு ஆவாஹனம் ஆஸனம் அர்க்யம் பாத்யம் ஆசமனம் ஸ்நானம் வஸ்த்ரம் யஜ்ஞோபவீதம் ஆபரணம் சந்தனம் புஷ்பம் தூபம் தீபம் உபஹாரம் முத லிய உபசாரங்களை மனவூக்கத்துடன் ஸமர்ப்பிக்க வேண் டும். பகவானுக்கு நிவேதனம் செய்த ஹவிஸ்ஸினால் 'ஓம் மஹாபுருஷனும் மஹாவிபூதியுடையவனுமாகிய பக வானுக்கு நமஸ்காரம்' என்ற இம்மந்த்ரத்தைச் சொல்லி அக்னியில் பன்னிரண்டு ஆஹுதிகள் ஹோமம் செய்யவேண்டும். எல்லா ஸம்பத்துக்களையும் விரும்பு வார்களாயின், விருப்பங்களையெல்லாம் கொடுக்க வல்ல வர்களும் ஜகத்திற்கு மாதா பிதாக்களுமாகிய ஸ்ரீமஹா லக்ஷ்மி ஸ்ரீமஹாவிஷ்ணு இவ்விருவர்களையும் பக்தியுடன் தினந்தோறும் பூஜிக்கவேண்டும். பக்தியினால் வணக்க முற்ற மனத்துடன் பூமியில் தண்டம் போல் விழுந்து நமஸ்காரம் செய்யவேண்டும். அம்மந்த்ரத்தைப் பத்துத் தடவைகள் ஜபிக்கவேண்டும். பிறகு இந்த ஸ்தோத்ரத் தைப் படிக்கவேண்டும். 'நீங்கள் ஜகத்திற்கெல்லாம் ப்ரபுக்கள். நீங்களே ஜகத்திற்கு மேலான [illegible]ணம். பரம

புருஷனே! ப்ரக்ருதி,காரண தசையில் ஸூக்ஷ்மமாயிருக்கும். அதன் ஸ்வரூபத்தை ஒருவராலும் அறியமுடியாது. அது ஆச்சர்யமாயிருக்கும். அது உன்னுடைய சக்தியே. உன்னைச் சரணம் அடையாதவர்களால் அதைக் கடக்க முடியாது. அத்தகைய ப்ரக்ருதி இந்த ஸ்ரீமஹாலக்ஷ்மியே. புருஷோத்தமனே! அந்தப்ரக்ருதிக்கு நேரே ப்ரபு நீயொருவனே.யஜ்ஞங்களெல்லாம் நீ. அதன் அங்கங்களான தீக்ஷனீயேஷ்டி முதலிய இஜ்யைகளெல்லாம் இந்த ஸ்ரீமஹாலக்ஷ்மி. ஸ்ம்ருதிகளில் விதித்த செயல்களெல்லாம் இவள். அவற்றை அனுஷ்டிக்கும் புருஷர்களெல்லாரும் நீ. வஸ்துக்களிலுள்ள குணங்களின் தோற்றங்களெல்லாம் இவள். குணங்களையுடைய வஸ்துக்களெல்லாம் நீ. ஸமஸ்த ப்ராணிகளுடைய ஆத்மாக்களும் நீ. அந்த ப்ராணிகளுடைய புத்திகளெல்லாம் இவள். நாமரூபங்களெல்லாம் இவள். அவற்றிற்கு ஆதாரமும் அவற்றை நிர்வஹிக்கிறவனும் நீ. நீங்கள் வரங்களைக் கொடுக்க வல்லவர்களாயிருப்பதும் பரம பதத்தில் மேன்மையுடன் வீற்றிருப்பதும் உண்மையாயிருப்பதுபோல, உத்தம ஶ்லோகனே! என் ப்ரார்த்தனைகளும் உண்மையாகப் பலிக்கவேண்டும்' என்ற இந்த ஸ்தோத்ரத்தினால் ஸ்ரீமஹாலக்ஷ்மியையும் வரதனாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவையும் துதித்து மிருந்த பூஜாத்ரவ்யங்களை யெல்லாம் அப்புறத்தில் போகட்டும், பகவானுக்கு ஆசமனீயம் ஸமர்ப்பித்து மீளவும் நன்றாக ஆராதிக்கவேண்டும். பிறகு மீளவும் ஸ்தோத்ரத்தினால் பரமபுருஷனைத் துதித்துக் கொண்டே பக்தியால் வணக்கமுற்ற மனத்துடன் பகவானுக்கு நிவேதனம் செய்து மிகுந்த ஹவிஸ்ஸை மோந்து மீளவும் பகவானை ஆராதிக்கவேண்டும். பிறகு மஹாபுருஷனை, பகவானேயென்னும் புத்தியுடன் மிகுந்த

பக்தியுடையவளாகி ப்ரியமான பல வகை வஸ்துக்களால் பர்த்தாவை ஆராதிக்க வேண்டும். பர்த்தாவும் பார்யை யிடத்தில் ப்ரேமமுடையவனாகி அவளுடைய கார்யங்க ளுக்கு உதவி செய்ய வேண்டும். இங்ஙனம் ஒருவரோ டொருவர் மன ஒற்றுமையுள்ள தம்பதிகளில் ஒருவர் ஒரு நல்ல கர்மத்தைச் செய்யினும் அது இருவர்க்கும் துல்யமாகவே பலனைக் கொடுக்கும். ஆகையால் பார்யை அசுத்தையாயிருக்கும் பொழுதும் உரிமை தப்பியிருக் கும் பொழுதும் பர்த்தாவே அந்த வ்ரதத்தை மனவூக் கத்துடன் நடத்தவேண்டும். இந்த விஷ்ணுவ்ரதத் தைத் தொடங்கின பின்பு இடையில் எந்தக் காரணத் தைப் பற்றியும் கைவிடலாகாது. இந்த வ்ரதத்தை அனுஷ்டிக்கும் புருஷன், ப்ராஹ்மணர்களையும் ஸு மங்கலிகளையும் பூமாலை சந்தனம் உபஹாரம் ஆபரணம் முதலியவற்றால் தினந்தோறும் இங்ஙனம் பூஜிக்கவேண் டும். பிறகு பகவானை யதாஸ்தானத்தில் ஸுகமாக எழுந்தருளப் பண்ணி அவனுக்கு நிவேதனம் செய்த ஹவிஸ்ஸை ஆத்மசுத்திக்காகவும் தன் விருப்பங்கள் நிறைவேறுவதற்காகவும் முதலில் புசிக்கவேண்டும். இங் ஙனம் சொன்ன பூஜாவிதியின்படி பன்னிரண்டு மாதங் கள் அடங்கின ஒரு ஸம்வத்ஸரம் நடத்திக் கார்த்திக மாதத்தின் கடைசி தினத்தினன்று வ்ரதத்தை அனுஷ் டிக்கும் பதிவ்ரதை வ்ரதத்தின் முடிவுக்கு அங்கமாகப் பகவானுக்கு விசேஷ உபசாரங்கள் செய்யவேண்டும். மற்றை நாள் காலையில் ஸ்நானம் செய்து முன்போலவே பகவானை ஆராதித்துப் பாலில் பக்வம் செய்த சருவுடன் நெய்யைக் கலந்து பன்னிரண்டு ஆஹுதிகள் பர்த்தா வைக் கொண்டு ஹோமம் செய்விக்கவேண்டும். ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறிந்து நல்ல அன்னங்

களால் பன்னிரண்டு ப்ராஹ்மணர்களைப் பகவானாகவே நினைத்துப் புசிப்பிக்கவேண்டும். அந்த ப்ராஹ்மணர்களுக்கு ஜலம் நிறைந்த பாத்ரங்களையும் வெல்லம் எள்ளு பொரி இவைகளையும் கொடுத்து, மனக்களிப்புற்ற அந்த ப்ராஹ்மணர்கள் மொழியும் ஆசீர்வாதங்களைச் சிரத்தினால் அங்கீகரித்துப் பக்தியுடன் அவர்களை நமஸ்கரித்து அவர்களுடைய அனுமதியின்மேல் புசிக்கவேண்டும். பிறகு அம்மடந்தையின் கணவன் பந்துக்களுடன் ஆசார்யனை முன்னே உட்காரவைத்துக்கொண்டு மௌனத்துடன், நற்புதல்வனையும் ஸௌபாக்யத்தையும் கொடுக்கவல்ல சருவின் மிகுதியைத் தன் பார்யையைப் புசிக்கச் செய்யவேண்டும். இங்ஙனம் பரமாத்மாவின் ஆராதன ரூபமான இந்த வ்ரதத்தை விதியின்படி அனுஷ்டிக்கும் புருஷன் இவ்வுலகத்தில் விருப்பங்களை யெல்லாம் பெறுவான். இதை அனுஷ்டிக்கும் மாது ஸௌபாக்யம் ஸம்பத்து ஸந்ததி நெடுநாள்ஸுமங்கலியாயிருத்தல்புகழ் வீடு முதலிய பலன்களை யெல்லாம் பெறுவாள். தனக்குரிய கணவன் நேரப்பெறாத கன்னிகை இந்தவ்ரதத்தை அனுஷ்டிப்பாளாயின் அழகிய பலலக்ஷணங்கள் அமைந்த கணவனைப் பெறுவாள். விதவை அனுஷ்டிப்பாளாயின் பாபங்களெல்லாம்தீர்ந்து ஸத்கதியைப்பெறுவாள். பிள்ளை மரணம் அடைந்து வருந்தும் மடந்தை இதை அனுஷ்டிப்பாளாயின் நீண்ட வாழ்நாளுடைய பிள்ளையைப் பெறுவாள் ஸௌபாக்யமில்லாதவள் ஸௌபாக்யத்தையும், அழகில்லாதவள் சிறந்த அழகையும். இதனால் பெறுவார்கள். ரோகமுடையவன் இந்த வ்ரதத்தை அனுஷ்டித்துப் பலவகை ரோகங்களினின்று விடுபட்டுத் திடமான இந்த்ரியங்கள் அமைந்த மேலான தேஹத்தைப் பெறுவான். இந்த வ்ரதத்தை அனுஷ்டிக்கும் ப்ரகாரத்தை

அறிவிக்கிற இவ்வத்யாயத்தை[1] அப்யுத்யகர்மத்தில் படிப்பானுயின், அவனுடைய பித்ருக்களுக்கும் தேவதைகளுக்கும் பெருக்த்ருப்தி உண்டாகும். அவர்கள் அவனுக்கு எல்லாவிருப்பங்களேயும் கொடுப்பார்கள். பித்ருஹோமத்தின் முடிவிலும் தேவஹோமத்தின் முடிவிலும் பகவானும் ஸ்ரீமஹா லக்ஷ்மியும் ஹோமம் செய்த ஹவிஸ்ஸைப் புசித்து அருள்புரிவார்கள். மன்னவனே! மருத்துக்களின் புண்யமான ஜன்மத்தையும் திதி அநுஷ்டித்த மஹத்தான வ்ரதத்தையும் உனக்கு மொழிந்தேன். பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

ஷஷ்ட ஸ்கந்தம் முற்றுப் பெற்றது.

ஸ்ரீக்ருஷ்ணுய நம:.




1. க்ஷேமத்தை விரும்பிச் செய்யுங் கார்யத்தில்.